இதுவுமது.

கத்தபத்தின் பாற்குக் கரிய செரக்திய றுஞ்
சித்தப் பிரமைபித்தக் தீருங்காண்-தக்திவரும்
ஐயமொழியு மதிக மதூரமு மாஞ்
செய்ய மடமயிலே செப்பு.

(இ-ள்.) அழகு மிளமையும் பொருந்திய மயிலனையபெண்ணே! கழுதைபால் மிகுமதூரதமையுடையது இதுவாதரோய் காப்பன்புண் கழுதளரோகம் உள்விக்திரிதிக்கட்டி ஒட்டுசெரந்தி கிழ்ப்பிரமேகம் சொறி சிரங்கு அற்புதவிரணம் சித்தப்ரமை பித்ததோஷம் கபரோய் இவைகளைப்போக்கும் என்க. 101

பாத்திரபேதத்தி லுண்டாகிய பாற்குணம்.

செம்பிலிடும் பால்வாத சீதமொழிக்கும் பொன்மண்
கும்பத் தடுபால்போக் குமபித்தை யம்புவியுள்
வெள்ளி யறைபிரும்பில் விட்டுக்காய்ச் சும்பாலாற்
றுள்ளி யுறையைமருஞ் சொல்.

(இ-ள்.) செப்புப்பாத்திரத்தில் காய்ச்சியபால் வாதசிலேத்மத்தையும் பொன் மண் பாத்திரங்களில் காய்ச்சியபால் பித்ததோஷத்தையும் வெள்ளி வெண்கலம் இரும்பு பாத்திரங்களிற் காய்ச்சியபால் காசரோகத்தையும் போக்குமென்க. 102

ஆடையெடுத்த பாற்குணம்.

ஆடை யெடுக்கும்பா லக்கினிமங் தப்படுமே
வாடைநலலாய் சீரணமாம் வாதமறுங்-கோடையிடி
போனுமெழுந்த பித்தம் போகுமே கூரியசீர்
வேலனைய கண்ணாய் விதி.

(இ-ள்.)கூரியவேலையுடைய கண்களையுடையபெண்ணே! ஏடு நீக்கியபாலால் அக்கினிமந்தமும் சப்ததாதுக்களின்சீரணமும் உண்டாம் வாதபித்த கபதோஷங்கள் நீங்குமென்க. 103

காய்ச்சும்பாலுக்கு நீரளவைகூறல்.

ஆடுபசும் பால்காய்ச்சி லஷ்டபா கம்புனலாம்
நீடெருமை செம்மறிக்கு நேர்நோக்-கூறிய
சுக்குசிறு காஞ்சொறிவேர் கூட்டிச் சுவரியபா
லொக்கும்வெள் ளாட்டுப்பாற் குறை.

(இ-ள்.) வெள்ளாடு பசு இவைகளின் பாற்கு எட்டிலொருபங்கும் எருமை செம்மறியாடு இவைகளின்பாற்குச் சரிப்பங்கும் ஜலம்விட்டுக் காய்ச்சவேண்டும். எவ்வித பால்களுக்கும் சுக்கு சிறுகாஞ்சொறிவேர் சேர்த்துக்காய்ச்சல் அவைகள் வெள்ளாட்டுப் பாலுக்குநேராமென்க.

பாலேட்டின் குணம்.

பாலேட்டாற் பித்தமறும் பாழ்த்தகொடும் வாந்தியும்போம்
மாலாட்டு மூர்ச்சையும்போம் வன்பலமா-மேலாலே
தாதுமிகுந் தீபனமாந் தானேயிளைத் தவருக்குக்
கோதுமறு மாமயிலே கூறு.

(இ-ள்.) பாலிலுண்டாகும் ஏட்டினால் பயித்தியநோயும் கொடிய வாந்தியும் மூர்ச்சையும் நீங்கும் மிகுபலமும் சுக்கிலமும் ஜாடராக்கினியும் விருத்தியாம் இதைத் துர்ப்பலதேகிகளுண்டாகுங் குற்றமில்லை.

தேங்காய்ப்பாற்குணம்.

வாதமாம் பித்தமுறும் வன்கரப்ப னும்படருந்
தாதுவும் விருத்தியாந் தார்குழலே-யோதாதல்ல
அன்ன மிறங்கு மதியுரிசை யுண்டாகுந்
தென்னங்காய்ப் பாலாற் றெளி.

(இ-ள்.) தாழ்ந்த கூந்தலையுடைய பெண்ணே! மிகுமதூரத்தால் உணவை யுட்செலுத்துகின்ற தெங்கின்பாலால் வாதவிகாரம் பித்தாதிக்கம் கரப்பான் சுக்கிலவிருத்தியும் ஆம் என்க. 107

ஆலம்பாற்குணம்.

ஆலம்பால் மேகமறுத் தசையும் பல்லிறுக்குங்
கோல முடிக்குவெகு குளிர்ச்சிதரும்-ஞாலமதில்
மெத்தவுமே சுக்கிலத்தை விர்த்திசெய்யுந் தப்பாமற்
சுத்தமதி முகத்தாய் சொல்.

(இ-ள்.) களங்கமற்ற பூரணச்சந்திரனை நிகர்த்தமுகத்தினையுடைய பெண்ணே! ஆலம்பால் பிரமேகத்தை நீக்கும், ஆடும்பற்களையிறுக்கும், சிரசுக்குக்குளிர்ச்சியையும் தாதுபுஷ்டியையும் தருமென்க.

அத்திப்பாற் குணம்.

காரமோ டெட்டினமாங் காறுகின் றபித்தத்தை
நீரிழிவைச் சூலைகளை நீடிரத்தஞ்-சேருங்
கிரிச்சரத் தைப்போக்குங் கிளர்கோளி யென்னும்
மரச்சருமப் பாலதனை வாங்கு.

(இ-ள்.) காரமும் உஷ்ணமுமுள்ள அத்திப்பால் பித்தம் சீரிழிவு சூலை ரத்தமூத்திர கிரிச்சரம் இவைகளை நீக்கும் கோளரி=அத்திமரம்.

பேயத்திப்பாலின் குணம்.

வெடிப்பை மேகப்படையை வீறிவரு குட்டத்
தடிப்பைமூல ரணத்தைச் சாடும்-படிக்குண்மயி
லென்னவொளிர் மாதரசே யெங்குஞ் சுணைகறை
மன்னமுறு பேயத்திப் பால்

(இ-ள்.) மயிலென்ன விளங்குகின்ற பெண்களுளரசியே! சுணைகளை யுடைய பேயத்திப்பால் பாதபேதரோகம் மேகசசோறி குஷ்டரோகத்தடிப்பு மூலவிரணம் இவற்றை விலக்குமென்க. 109

மட்டிப்பாற் குணம்.

தலைவலி நீரேற்றந் தனித்த வுடல்வாத
மலைவுறு மேல்வாந்தி யரோசி-நிலைகுலையும்
வட்டிப்பால் வஞ்சம்வைத்த மாமூலைமாதே மணக்கு
மட்டிப் பாலிற்கு மருண்டு.

(இ-ள்.) சூதாடுகருவியை வெற்றிகொள்ளும் வஞ்சம் பொருந்திய தனங்களையுடையபெண்ணே! வாசனையையுடையமட்டிப்பாலினால்தலைவலி சலதோஷம் பாதகேஷபகவாதம் கபவாந்தி அருசி இவைபோம்.

காட்டுப்பிராய், ஈழத்தலரி இவைகளின் பாற்குணம்.

காட்டுப் பிராய்ப்பாலோ காணுகின்ற பல்வலியை
நாட்டில்வைக்கா தோட்டிவிடு நங்கையே-கோட்டாரும்
ஈழத்தலரிப் பாலேறுபுரைப் புண் தொடையின்
வாழைப் புற்றும்போக்கு மால்.

(இ-ள்.) காட்டுப்பிராய் மரப்பால் தந்தரோகத்தை நீக்கும், ஈழத்தலரிப்பால் புரைவிரணத்தையும் தொடைவாழைப்புற்றையும் விலக்கும்.

சங்கன் முட்செடி புங்கமரம் இவைகளின் பாற்குணம்.

சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கு நீர்வடிக்கு
மங்குசுர வெப்பகற்று மையமிலை-கொங்குலவு
புங்கம்பால் புண்ணாற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போன் மெய்யளிக்குந் தான்.

(இ-ள்.) முட்சங்கன்வேர்க்கட்டையை மெல்லியதாய் சீவிப்பிழிந்த பால் சோபையையும் நீரேற்றத்தையும் சுரவேகத்தையும் நீக்கும்

முன்போல்பிழிந்த புனகம்பால் விரணத்தையும் நீக்கும் தேகத்தில் பொன் ஒளியுண்டாகு மென்க. 112

### தில்லைமரத்தின்பாற் குணம்.

*பாரிசவா தஞ்சன்னி பாதச்சூலங் குஷ்டஞ்*
*சேருமுட வாதம்வலி சில்விஷமபோம்-பேருரைக்க*
*இல்லையில்லை யென்றோடு மெண்பது வாத முமே*
*தில்லைமரப் பாலாற் றெளி.*

(இ-ள்.) தில்லைமரப்பாலால் பக்ஷபாதவாதம் சன்னிபாதம் சூலை குஷ்டரோகம் முடவாதம் அமரகண்டன் முதலிய ஐவகைவலிகள் சில விஷம் 80-விதவாதரோகங்கள் ஆகிய இவைபோமென்க. 113

### திருகுகள்ளிப்பாற் குணம்.

*வாத முடக்கலும் வன்கிரந்தி குட்டம்போஞ்*
*சீத மொழியுங்கிருமி சேராவாம்-மாதே*
*பருபக்க நோயுடனே பாழ்ங்கரப் பான்றீரு*
*திருகுகள்ளிப் பாலாற் றெளி.*

(இ-ள்.) திருகுகள்ளிப்பாலினால் ஈஞ்சவாதம் கிரந்திபெருவியாதி சீதக்கட்டு கிருமிரோகம் பக்கசூலை கரப்பான் இவைபோமென்க. 114

### சதிரக்கள்ளிப்பாற் குணம்.

*குட்டங் கடிசூலை குன்மமே கம்வாயு*
*துட்டக் கிருமியொடு தாறுபுண்ணு-முட்ட*
*முதிரக் கரப்பனும்போ மெய்குழலே நாளுஞ்*
*சதுரக் கள் ளிப்பார்க்குத் தான்.*

(இ-ள்.) நெருங்கிய கூந்தலையுடைய பெண்ணே! சதிரக்கள்ளிப் பாலால் குட்டம். கடி சூலை வாதப்பிரமேகம் வாதாதிக்கம் கிருமிநெளி கின்ற துட்டவிரணம் கரப்பான் இவைகள் விலகுமென்க. 115

### மான்செவிகள்ளிப்பாற் குணம்.

*மான்செவிக் கள்ளிப்பாற்கு மாறா விரணங்கள்*
*ஊன்கிளைக்கு நன்மல மிறங்குங்காண்-ஊண்சேர்*
*விரிகிரந்தி நீங்கா வறட்சி சொறியோடு*
*பொரிகிரந்தி யும்போம் பொரிந்து.*

(இ-ள்.) மான்செவிக்கள்ளிப்பாலால் ஆறாதபுண்கள் மாமிசத்தை பற்றிய வரிக்கிரந்தி தேகவறட்சி படை பொரிகிரந்தி இவை நீங்கும் தோஷமற்றமலமுஞ் சாருமென்க. 166

இலைக்கள்ளிப் பாற்குணம் இதுவே மூயற்செவிக்கள்ளி.

*செய்ய கரப்பான் செவிநோய்வா தமபோக்கும்*
*மையவருஞ் சூலைதனைப் பாழாக்கு-வெய்யின்மிக*
*ஊது கிரந்தியோ டெட்புண்ணை யாற்றிவிடு*
*மேதுமிலைக் கள்ளிப்பா லோர்.*

(இ-ள்.) இலைக்கள்ளிப்பால் செங்கரப்பான் செவிநோய் வாத விகாரம சூலை விசர்ப்பிககிரநதி உள்விரணம இவைகளை நீககும். 117

கொடிக்கள்ளிப்பாற் குணம்.

*துய்ய கரப்பான் சொறிசிரங்கும் புண்ணுமபோஞ்*
*செய்ய கடிகுஷ்டநோய் சேருமே-மெய்யி*
*லடிக்கடி யாங்குன்மவலி யத்தனையுந் தீரும்*
*கொடிக் கள்ளிப்பா லுக்குக் கூறு.*

(இ-ள்.) கொடிக்கள்ளிப்பாலால் கரப்பான் சொறிசிரங்கு பெருவிரணம அக்கினி கிடைக்கடி குஷ்டம் அடிக்கடி வலிக்குங் குன்மம் இவைகள்போம் என்க. 118

எருக்கம்பாற் குணம்.

*எருக்கம்பாற் கட்டிகளை யேகரைக்கும் வாய்வைத்*
*திருக்கறவே கொன்றுவிடுந் தீராச்-செருக்கான*
*சன்னிவலி தீர்க்குஞ் சார்ந்தபல சிந்தூர*
*முன்ன முடிக்குமெண் ணோர்.*

(இ-ள்.) எருக்கம்பால் வாதக்கட்டிகளைக் கரைப்பதன்றி வாத நோய் சன்னிபாதம ஐவகைவலி ஆகிய இவைகளைப்போக்கும் பற்பல சரக்குகளைச் சிந்தூரஞ்செய்ய நினைககில் முடிப்பிக்கும் 119

வெள்ளெருக்கம்பாற் குணம்.

*வலியின் வலிசுளுக்கு மாவாதஞ் சன்னி*
*யெலியின் விஷஞ்சுரங்க ளெல்லா-வலியற்றுக்*
*காலைத் தொழுதே கடற்புற்கும் வெள்ளெருக்கம்*
*பாலைத் தொடுவாரைப் பார்.*

(இ-ள்.) வெள்ளெருக்கம்பாலால் ஐவகைவலியும் சுளுக்கும் மகா வாதம் சன்னிபாதம யெலிவிஷம் குளிர்ச்சுரம் இவைபோம். 120

*வீழாமக் கட்டோடு வெப்பிருமற் சுட்டநீர்*
*ஆழாக்குட் கொள்ளவரும்.* [இங்கு கவனிக்க.
48-ம் பக்கத்தில் வெந்நீரின் குணத்தில் விட்டிருக்கும் இவ் 2-அடியை

**காட்டாமணக்கின்பாற் குணம்.**

விழுமேக வெள்ளைகுன்ம மேல்விர ணங்தோலி
விழுமேருக் கட்டியிவை யெல்லாந்-தொழுதோடும்
கூட்டா மணக்குழுமைக் கொண்டவணக் கொங்கையின்னே
காட்டா மணக்கட்பாற் கண்டு.

(இ-ள்.) கலவைச்சாந்தணிந்த கொங்கைகளையுடைய பெண்ணே! காட்டாமணக்கம்பாலால் மூத்திரத்தோடு விழுகின்ற மேக வெள்ளை வயிற்றுவலி குறிவிரணம் சருமக்கட்டி இவைநீங்குமென்க. 121

**எலியாமணக்கம்பாற் குணம்.**

எலியா மணக்கோ வெலிவிடம் விந்துப்பற்
பலவிடமு நீக்கிவிடும் பாரில்-வலுபேதி
யுண்டாகச் செய்யு முயிர்பிலீ கங்குன்ம
மண்டாம லோட்டுமி யாய்.

(இ-ள்.) எலியாமணக்கின்பால் எலிவிஷம் பீஜவீக்கம் வண்டுகடி முதலிய பற்பல விஷம் பிலிகநோய் வயிற்றுவலி ஆகிய இவைகளை நீக்குவதுமன்றி அதிக விரோசனத்தை யுண்டாக்குமென்க. 122

**பிரமதண்டின் பாற்குணம்.**

கண்கூசல் கண்ணருகல் கண்ணொழுதல்
கண்சிவத்த லெல்லாங் கடிதேகுந்-திண்ணச்
சரமதன் றனைப்பிளக்குஞ் சாயகக்கண் மாதே
பிறமதண் டன்பாற்குப் பேர்க்கு.

(இ-ள்.) பலம்பொருந்திய மன்மதனையும வருத்துஞ் சாயல்போலுங் கண்களையுடைய பெண்ணே! பிரமதண்டின் பாலால் கண் கூசுதல் கண்ணுறுகல் கண்ணீர்வடிதல் கண்வலி கண்சிவப்பு ஆகிய இவைகள் போமென்க. 123

---

## தயிர் வகை

**பசுவின்தயிர்க் குணம்.**

பசுவின் றயிராற் பசியிகவு முண்டாகு
மிசிவுறும் சீரணமே யேகும்-பசையகன்ற
தாக மிளைப்பிருமல் தாங்கொணு மெய்யெரிவு
மேகு முலகி லியம்பு.

(இ-ள்.) பசுவின் தயிரால் பசியுண்டாகும். இஃது சீரணரோகம் தாகம் ஆயாசம் காசம் சரீர எரிச்சல் இவை நீங்கும். 125

ஆடையெடுத்த தயிர்க்குணம்.

ஆடை யெடுத்த தயிர்கப மீளைப்பறுக்கும்
நாடு கிரிச்சரத்தை நாடவொட்டா-தாடொவியா
அண்டாங் கிராணியுறை மேகம் போக்கிவிடுந்
தாண்டார் குழலணங்கே சாற்று.

(இ-ள்.) குளிர்ந்த மாலையணிந்த கூந்தலையுடைய பெண்ணே! எடு நீக்கிய தயிரானது சிலேஷ்மரோகம் ஆயாசம் மூத்திரக்கிரிச்சரம் வாதகிராணி குஷ்டரோகம் இவைகளை நீக்குமென்க. 125

எருமைத்தயிர் குணம்.

எருமைத் தயிருக் கெவுரி பித்தம்போம்
வருமைச் கரப்பனொடு வாதம்-பெருமிகஞ்சேர்
தூல வுடலுமாந் தூயறிவு மந்தமுறுங்
கோலவிழி குளிருங் கூறு.

(இ-ள்.) எருமைத் தயிருக்கு யெரிச்சலும் பித்தநோயும்போகும் கபத்தைப்பற்றிய கரப்பான் வாதரோகம் அதிதூலரோகம் புத்தி மந்தங் கண்ணுக்கு குளிர்ச்சி ஆகிய இவைகள் உண்டாகு மென்க.

வெள்ளாட்டின் தயிர் மோர் இவைகளின் குணம்.

வெள்ளாட்டின் வெண்டயிரோ மிக்கனல மாகுமதற்
குள்ளாடை யான்மந்த முண்டென்பார்-வெள்ளாட்டின்
மேரோ மேகத்தை மூநிரா தடித்துவிடும
பாரோ ரறியப் பகர்.

(இ-ள்.) வெள்ளாட்டின் தயிரால் அதிஉஷ்ணமும் அதன் ஏடால் மந்தமும் விளையும். மோரானது பிரமேகரோகத்தைப் போக்கும்.

செம்மறியாட்டுத் தயிர்குணம்.

செம்மறியின் றன்தயிரைத் தின்ன மதுரமிகுங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கேள்-அம்ம
கரப்பான் சொறியுங் கடுப்பிரத்த வாய்வு
முரப்பா முடக்கெடுமென் றோர்.

(இ-ள்.) இளமைபொருந்திய தனங்களையுடைய மாதரசே! மதுர முள்ள செம்மறியாட்டின் தயிரை உண்டால் கரப்பான் சொறி மூலக்

கடுப்பு ரத்தமூலம் வாதரோகம் ஆகிய இவைகள் பலப்படுவதுமன்றிச் சரீரத்திற்குத் துன்பமுண்டாகுமென்க. 128

ஒட்டைத்தயிர் குணம்.

தீபனமு முண்டாஞ் சிறுகரப்பான் புண்ணுமாற்
பூபதி பொன்மேனி புளகிக்கும்-தாபதமாம்
ஒட்டைத் தயிர்நித மு முண்ணவதி தாகம்போந்
துட்டக் கிறுமியறுஞ் சொல்.

(இ-ள்.) ஒட்டைத்தயிரைக் குடித்தால் ஜடராக்கி கிறுகரப்பான் விரணம் சரீரமேனி இவை உண்டாகும், தாகமும் மலக்கிரிமி ரோகமும் நீங்குமென்க. 129

## மோர்வகை

பசுமோர் குணம்.

வீக்க மகோதரமுள் வீறுகுன்மம் பாண்டுபித்தந்
தாக்கு மருந்திட்டதந் சாரமொடு-கூக்குரலே
மாறுந் திரிதோஷ மந்தமனற் றூகம்போம்
வீறுவின் மோருக்கு மெய்.

(இ-ள்.) பசுவின்மோருக்கு வீக்கம் மகோதரம் வயிற்றுவலிபாண்டுரோகம் பித்தகோபம் இடுமருந்தால் வரும்நோய்கள் பேதிதிரிதோஷம் அக்கினிமந்தம் வெப்பம் இவைகள்போமென்க. 130

எருமைமோர்க் குணம்.

தாகங் கிராணி சலங்கழிச்சல் காமாலை
ஆகங் குடைபுழுவு மற்றுப்போ-மோகமுறுந்
தேவா மிருதமுமாஞ் சீர்மானி டர்தமக்கு
மூவா மருக்கெருமை மோர்.

(இ-ள்.) எருமைமோரினால் தாகம் கிராணிரோகம் சலக்கழிச்சல் காமாலை கிருமி ஆகிய இவைகள் நீங்கும் போகவிருப்பமாம், சிறந்த மானிடர்களுக்கு கெடாத வமுதமாகுமென்க. 131

ஒட்டை மோர் குணம்.

ஒட்டைமோர் மெத்தவன லோங்கியவா தந்தணிக்குங்
கிட்டுமந்த செய்ப்பெருமை கேட்பீரால்-நெட்டுலகின்
மந்தஞ் செய்தாலும் வலிவிந்து வைப்பெருக்கு
மந்தஞ்சேர் கண்ணு யறி.

(இ-ள்.) ஒட்டைமோரானது பித்தவாத தொந்தத்தைச் சாந்தி செய்யும் அதன் நெய்யானது அக்கினிமந்தஞ் செய்வதா யிருந்தாலும் சுக்கிலதாதுவை விருத்திசெய்யு மென்க.

---

## வெண்ணெய் வகை

### முலைப்பால் வெண்ணெய் குணம்.

கண்ணெரிவுங் கையெரிவுங் காலெரிவு நாசிகளி
லண்ணெரிவு மண்ணி லகன் றிடுங்காண்-தண்ணு
ரலைப்பால் மாண்பது கணிசெய்யு மாதர்
முலைப்பால் வெண்ணெய்க்கு முரிந்து.

(இ-ள்.) சிறந்தமாதர் முலைப்பால் வெண்ணெய்க்கு கண், கை, கால், நாசி, இவ்விடங்களில் உண்டாகும் எரிச்சல் நீங்கும்.

### பசுவெண்ணெய்க் குணம்.

கண்ணி லெழுநோயுங் கண்ணெரிவும் பீலையும்போ
மெண்ணும் பசியு மெழும்புங்காண்-நண்ணரிய
ஆவினறும் வெண்ணெய்க் ககலும்வன் மேகமெல்லாம்
பூவினர்க் கெல்லாம் புகல்.

(இ-ள்.) பசுவின் வெண்ணெய்க்குக் கண்ணோய் கண்ணெரிச்சல் பீலை சாரல் பிரமேகம் இவைபோம், பசியுண்டாம்.

### எருமைவெண்ணெய்க் குணம்.

எருமைவெண் ணெய்க்கில் லெரிநீ ரிழிவு
பருவமயிலே கேளிப் பாரிற்-கிறுமியுறும்
மந்தமாம் வாதமிகு மாரக்கபங் கரப்பான்
றொந்தமா நோயருடஞ் சொல்.

(இ-ள்.) பருவமயில்போலுஞ் சாயலையுடைய பெண்ணே! எருமை வெண்ணெயினால் பித்த மூத்திரகிரிச்சரம் நீங்கும் மலாசயக் கிரிமி அக்கினிமந்தம் வாதரோகம் கபாதிக்கம் கரப்பான் தொந்த ரோகம் ஆகிய இவைகள் உண்டாமென்க.

### வெள்ளாட்டுவெண்ணெய்க் குணம்.

வெள்ளாட்டு வெண்ணெயது வீறுசுரந் தான்போக்குந்
தள்ளாடு பித்தந் தணிக்குங்காண்-தெள்ளுமொழி

மானே பசியெழுப்பும் வன்கரப்பனைக்கடற்குட்
டானே நூத்திவிடுஞ் சாற்று.

(இ-ள்.) வெள்ளிய மொழியையுடைய பெண்ணே! வெள்ளாட்டு வெண்ணெய் சுரரோகம் பித்தநோய் கரப்பான் ஆகிய இவைகளை நீக்கும் பசியை உண்டாக்குமென்க.

ஒட்டைவெண்ணெய்க் குணம்.

சுட்டழகு செய்யுநற் காரிகையீர் கேண்மின்கள்
ஒட்டைவெண் ணெய்மந்த மொடுவாதம்-கிட்டவைக்கும்
சீரழிவுக் கேற்கு நிறைபித்தம் போக்கிவிடும்
பாறறியச் சொன்னோம் பகுத்து.

(இ-ள்.) ஒட்டைவெண்ணெயானது நல்ல அழகையும் மந்தத்தையும் வாதரோகத்தையும் உண்டாக்கும் சீரிழிவையும் பித்தகோபத்தையும் நீக்குமென்க.

---

# நெய்வகை

பசுவின்நெய்க் குணம்.

தாகமுழ லைசுட்சம் வாந்திபித்தம் வாயுபிர
மேகம்வயிற்றெரிவு விக்கலழல்-மாகாசங்
குன்மம் வறட்சி குடற்புரட்ட லஸ்திசுட்டஞ்
சொன்மூலம் போக்குநிறைத் துப்பு.

(இ-ள்.) பசுவினது நெய்யானது தாகம் உழலைப்பிணி அஸ்திசுட்க ரோகம் வாந்தி பித்தாதிக்கம் வாதவிஷம் விரணப்பிரமேகம் வயிற்றி லெரிவு பித்தவிக்கல் இருமல் வயிற்றுவலி சிணைப்பு குடல்செளிதல் அஸ் திசோம்பல் மூலரோகம் ஆகிய இவைகளை நீக்குமென்க. துப்பு-நெய்.

காராம்பசுநெய்க் குணம்.

காராம் பசுநெய்யாற் கண்ணுக் கொளியுண்டாம்
சீரார் விழிபுருவ நெற்றிசிரச்-சூரொழியும்
மெய்யிற் குழைவு மினர்பொன் னிறமும்வரும்
நெய்யா லிதுமேலா நிகழ்த்து.

(இ-ள்.) காராம்பசு நெய்யால் நேத்திரத்திற் கொளிவும் சரீர புஷ்டியும் பொற்சாயலும் உண்டாகும். கண் புருவம் நெற்றி சிரசு இவைகளைப்பற்றிய நோய்கள் விலகுமென்க.

எருமைநெய்க் குணம்.

புத்திகெடு மெய்யழகு போதக் கெடுநயனம்
மெத்தவொளி மாறிவிடு மேதினியிற்-சத்தியமா
முறுவாத மொடுபித்த மாறுக் கரப்பானுங்
கோதெருமை நெய்யருந்திற் கூறு.

(இ-ள்.) எருமைநெய்யால் அறிவு அழகு கண்ணொளி இவைகள் மத்திபமாம். வாதபித்ததோஷம் கரப்பான் இவையுண்டாமென்க.

வெள்ளாட்டுநெய்க்குணம்.

ஐயைப்போக் கும்வாதத் தாற்மையைக் கெடுத்துவிடு
மெய்யை வளர்க்கும்விழி யைத்துலக்கும்.வையகத்திற்
பத்தியத்திற் காகும பயமிலேவெள் ளாட்டினனெய்
நித்தியங் கொண்டாலுங் கொண்ணீ.

(இ-ள்.) வெள்ளாட்டின்நெய்யையுண்ணில் அதுசிலேஷ்மாதிக் கத்தையும் வாதகோபத்தையும்போக்கும், சரீரத்தைவளர்ப்பது மன்றிக் கண்ணுக்கொளியை யுண்டாக்கும், பத்தியத்திற்குதவுமென்க.

செம்மறியாடு பள்ளையாடு இவைகளின் நெய்க்குணம்.

செம்மறியி நெய்தனைத் தின்ன மதூரமுமாங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கேளம்முறுங்காண்
பள்ளையின்னெய் பித்தொழிக்கும் பாருலகி லெல்லாருங்
கொள்ளத்தான் மந்தமருங் கூறு.

(இ-ள்.)இளமைபொருந்திய தனங்களையுடைய பெண்ணே! மதுரமுள்ள செம்மறியாட்டு நெய்யால் கபகோபதிகரிக்கும் பள்ளையாட்டு நெய் பித்தரோகை யொழிக்கும் மந்தமாமென்க. 142

கலப்புநெய்க் குணம்.

நெய்யுட் பலநெய்க்கு நீள்சுக்கி லம்பெருகும்
வெய்யபசி யுண்டாம் விடும்பித்த-மெய்யனலா
லுள்ளபித்த வெக்கைபோ மோங்குயிருந் தாளிலக்குங்
கொள்ளத் தெரியுங் குணம்.

(இ-ள்.) எருமைநெய்முதலிய கலப்புநெய்யால் சுக்கிலம்பெருகும் தீபனமும் உண்டாம். பித்ததோஷமும் தேகக்கொதிப் பாலாகிய பித்த சுரமும்போம் உயிரைத்தாங்குகின்ற உடலும் பலக்குமென்க.

### பன்றி-உடும்பு-காக்கை இவைகளின் நெய்க்குணம்.

பன்றிநெய் நீர்க்கடுப்பு பாயுமூலத் திரத்தங்
கன்றியாவாதக் கடுப்புமுதற்-றுன்றியநோய்
போக்கு முடும்பின்னெய் போமிரத்தம் போக்கிவிடுங்
காக்கைநெய் காமாலைக்காங் காண்.

(இ-ள்.) பன்றிநெய்யானது மூத்திரக்கடுத்தலையும் ரத்தமூலக்கிராணியையும் வாதக்கடுப்புமுதலிய பிணிகளையுநீக்கும், உடும்பின்நெய் ரத்தக்கிராணியை நீக்கும், காக்கைநெய் காமாலைக்குதவும்.

### ஆமை-ஓணன்-கரடி-இவைகளின் நெய்க்குணம்.

ஊணுமை நெய்மூல மோட்டும் ஓணநெய்க்குக்
காணுப் புறவலிநோய் காணுவரும்-பூணர்
முலையாய் கரடிநெய்க்கு முன்வாத மோடும
புலையாருங் கால்வெடிப்பும போம்.

(இ-ள்.) ஆபரணங்களையணிந்த தனங்களையுடைய பெண்ணே! ஆமைநெய் ரத்தமூலம்நீக்கும். ஓணன் நெய்யால் பிளணிசிவுதீரும் கரடிநெய்யால் வாதவேதமும் பாதவெடிப்பும் நீங்குமென்க.

### ஆமணக்கு நெய்க்குணம்.

ஆமணக்கு நெய்ரா னலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே-வாய்யுணக்கக்
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறு
முள்ளில்வரு குன்மம்போ மோர்.

### இதுவுமது.

அம்பொனிற மும்விந்து மாங்குடலி னேற்றமறு
மைம்பொறிச் சூடேறிவு மாறுங்காண்-அம்புவிபிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய் கலந்தெரிக்க
ஆமணக்கின் நெய்யுண் டறு.

(இ-ள்.) புட்பங்கள் பரிமளிக்காநின்ற அழகுபொருந்திய கட்டப்பட்டகூந்தலையும் இனியமொழியையுமுடைய பெண்ணே! உஷ்ணதிக்கமுள்ள முத்துக்கொட்டை நெய்யை முறைமைப்படிக்குக் குடித்தால் விரோசனமாம். இதனால் கோரவாதம் குன்மம் குடலேற்றம் தேகம் கண் மூக்கு செவி வாய் இவைகளி லுண்டாகிற யெரிச்சலும் நீங்கும், பொன்னிறமும் தாதுவிருத்தியு முண்டாகும்.

#### சிற்றுமணக்குநெய்க் குணம்.

*மருந்தி னழலும் வளியான் மூலத்துட்*
*பொருந்து மழலுமறப் போக்குங்-குருத்திற்கு*
*நற்றா யெனவளர்க்கு நாளுமழலைத் தணிக்குஞ்*
*சிற்றா மணக்கினெய் தான் றேர்.*

(இ-ள்.) *சிற்றாமணக்குநெய் பற்பல ஔஷதங்களின் வெப்பங்களையும் வாயுவினால் மூலத்திலுண்டாகின்ற உஷ்ணங்களையும் நீக்கும், சிசுக்களை தாய் வளர்ப்பதுபோல உடலை வளர்ப்பிக்குமென்க.*

#### எள்ளின்நெய் குணம்.

*புத்தி நயனக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புகளுஞ்*
*சத்துவங் காந்தி தனியிளமை-மெத்தவுண்டாங்*
*கண்ணோய் செவிநோய் கபால அழல் காசநோய்*
*புண்ணோய்போ மெண்ணெய்யாற் போற்று.*

(இ-ள்.) எள்ளினது நெய்யால் புத்திக்குத் தெளிவு விழிக்குக் குளிர்ச்சி மனமகிழ்ச்சி தேகபுஷ்டி பலம் தேஜசு வாலிபத்தன்மை இவைகள் உண்டாகும். நேத்திரநோய் கானரோகம் கபால உஷ்ணம் காசம் விரணம ஆகிய இவைகள் நீங்குமென்க.

#### வாதுமைநெய்க் குணம்.

*அழலெல்லா மாற்று மகிய வுடம்பி*
*லழலோடு விந்துவை யுண்டாக்கும்-வழுவழுப்பைப்*
*பூண்ட கபம்போக்கும் பொறிகட் கொளிசெய்யு*
*நீண்ட அப்பம்விதை நெய்.*

(இ-ள்.) *வாதுமைநெய் ஔஷதங்களினாலும் உழைப்பினாலும் இளைத்த வெப்பங்களையும் கபதோஷத்தையும் நீக்கும், சமோஷ்ணஞ் சுக்கிலம் பஞ்சேந்திரிகளுக் கொளிவு இவைகளை உண்டாக்குமென்க.*

#### வேப்பநெய் குணம்.

*வாதம்போம் பித்தமிகு மாறாக் கிரந்தியொடு*
*மேதுகரப் பான்சிரங்கு முன்னிசவும்-ஓதுடலின்*
*நாப்ப ணுறுசுரமு நாடுசுகவியுந் தொலையும்*
*வேப்பநெய் யென்றொருகால் விள்.*

(இ-ள்.) *வேப்பின்நெய்க்கு மகாவாதம் கிரந்தி கரப்பான் சிரங்கு ஆகிருஷ்ணஸ்தம்பனவாதம் சுரம் சதத்தி நீங்கும். பித்தமாம்.*

#### இலுப்பைநெய்க் குணம்.

*கரப்பானடருங் கடிசிரங்கு புண்ணு*
*முரப்பா மிடிப்புல்லி யோடு-கரப்பான்*

பாகுமொழி மாதே பலமுண்டாந் துர்பலம்
பேகுமிலுப் பையிநெய்க் கே.

(இ-ள்.) கற்கண்டனைய மொழிக்காரிகையே! இலுப்பைநெய்யால் கரப்பான் கடிவிஷம சிரங்கு விரணம் வன்மை இவை உண்டாம் சகன வாதமும் துர்பலமும நீங்குமென்க.

புன்னைநெய்க் குணம்.

புன்னையினுண் டாநெய்யாற் பொங்குசந்தி பாதமுதன்
மன்னியலைக் குங்கொடிய வாயுவுமுன்-பின்னிசிவும்
பொல்லா வலியினமும புண்கிருமி யுநதொலையு
மல்லார் குழலே யறி.

(இ-ள்.) இருண்ட கூந்தலையுடைய பெண்ணே! புன்னை நெய்யால் சந்நிபாதம் மகாவாதரோகம் முன்னிசுவும் பின்னிசுவும் ஐவகைவலி விரணம கிருமி ஆகிய இவைகள் நீங்குமென்க.

புங்கின்நெய் குணம்.

அங்கமழ கிடும்வெதற்பாம் புங்கினெய் தனக்குத்
தங்கமபோற் காந்தியது தானுண்டாந்-திங்கண்முக
மானே கரப்பான்போம் வன்சொறி யுஞ்சிரங்குந்
தானே விலகுமெனச் சாற்று.

(இ-ள்.) சந்திரனையொத்த முகத்தையும் மானையொத்த கண்களையுமுடைய பெண்ணே! மலைப்புங்கின் பருப்புநெய்க்கு அழகும் ஒளிவும் உண்டாம்; கரப்பானும் சொறி சிரங்கு ஒழியும்.

தேங்காயின்நெய் குணம்.

தேக்காயி நெய்யதனுற் றீயால் வருபுண்போம
பாங்காகக் கூந்தர் படர்தேமல்-நீங்காத
பல்லடியின் னேயும் படர்தா மரைசிரங்கு
மல்லறப் போமென் றறி.

(இ-ள்.) தேங்காய்நெய்யினல் தீயால் வருவிரணம் தந்தமூல ரோகபடர்தாமரை சிரங்கு ஆகிய இவைகள்போம் தலைமயிர் வளரும்.

கடுகுநெய்க் குணம்.

கொஷ்டநோய் பித்தாத்தங் குஷ்ட மடல்வாதம்
விட்டு சுபமூல விரணமதும்-மூட்டின்
முடிகி யெழுசூலையொடு மொத்தநோ யேகுங்
கடுகின் னெய்யாலனலாங் காண்.

(இ-ள்.) சூடுள்ள கடுகுநெய்யால் குன்மம் ரத்தபித்தம் குஷ்டம் மகாவாதம் க்ஷயம் மூளை மூலவிரணம் சூலை முதலிய பிணிகள் நீங்கு மென்க. கோஷ்டு=வயிறு.

நீரடிமுத்து நெய்க்குணம்.

பூசுகுடி வாதகுணம் பொங்கு கிரந்திபுடை
வீசுகுட்டஞ் சூலையிவை விட்டேகும்-தேகஞ்சச்
சீரடியை யொததடைத் தெய்வ மடமயிலே
நீரடி முத்தின்னெய்யை நீ.

(இ-ள்.) அழகுபொருந்திய அன்னத்தையொத்த நடையையும் தெய்வத்தன்மை பொருந்திய மயில்போலுஞ் சாயலையுடையபெண்ணே! நீரடிமுத்துநெய்மேலிற்பூசினும் உள்ளுக்குக் குடிக்கினும் வாத குட்டம் கிரந்து சொறி பெருவியாதி சூலை இவை நீக்குமென்க.

செங்கொட்டை நெய்க்குணம்.

தாதுவும் புருணமுமாந் தத்தரு பரங்கிப்புண்
கோறிபுரி யிருமைக் குட்டிணங்கன்-காணுங்
கரிமுகி யூரர் கரப்பான் றிமிர்போ
மெரிமுகி நெய்யாலென் றறி.

(இ-ள்.) எரிமுகியென்னுஞ் செங்கொட்டை நெய்யால் தடிப்பு பரங்கிப்புண் கருங்குட்டம் வெண்குட்டம் முதலிய குட்டரோகங்கள் கருஞ்சொறி கரப்பான் திமிர்வாதம் ஆகிய இவைகள்போம் சுக்கில விருத்தியும் கருப்போற்பத்தியும் உண்டாகும் புருணம்-கருப்பம்.

முக்கூட்டுநெய் சேர்க்கும் விதி.

வெண்ணெ யண்டமெண் முத் தாமுத்தா வெண்ணெய்
மூவெண் கலாதி முறையேகேள்-மேவுநெறி
யொன்றிரண்டு மூன்றுகு மொன்றிரண்டு மூன்றுகு
மொன்றிரண்டு மூன்றுகு மூற்று.

(இ-ள்.) வாதமுதலிய மூன்று தோஷங்களுக்குக் கூட்டவேண்டிய முறைமை வாததேகிகளுக்குப் பசுவின்னெய் 3-பங்கு, எண்ணெய் 2-பங்கு, ஆமணக்குநெய் 3-பங்கு, பித்த தேகிகளுக்கு வெண்ணெய் 1-பங்கு ஆமணக்குநெய் 2-பங்கு, பசுவின்நெய் 3-பங்கு, சிலேத்தும தேகிகளுக்கு ஆமணக்குநெய் 1-பங்கு, பசுவின்நெய் 2-பங்கு யெண்ணெய் மூணுபங்கு இவ்வாறு கூட்டவேண்டுமென்க.

முக்கூட்டுநெய்க் குணம்.

நாவுநெய்க் கைய நாவலா மெய்க்குப் பித்தம்
மேவுமுத்து நெய்க்கனிலம் வீறுவாம் பூவுலகில்

மூன்று மளவாய்க்காய்ச்சி மூழ்கிலந்தப் பிணியா
ஆன்றுநோ யியாவும்போ மோர்.

(இ-ள்.)எள்ளின்நெய் பசுநெய் ஆமணக்குநெய் இவைக்கு முறையே கற்பித்தவாத கோபங்கள்மீறுமல் பித்தம்நிலையிற் பொருந்துவனவாம், ஆதலால் அம் மூவித நெய்களையும் கிரமப்படிக் கூட்டிக்காய்ச்சி ஸ்நானஞ்செய்யில் திரிதோஷங்களால் வருஞ்சகல ரோகமும் நீங்கும்

ஐங்கூட்டு நெய்க்குணம்.

அஞ்செண் ணெய்க்காணி லாவித்த பின்னிசிவுந்
தஞ்சுமென வாய்வுந் தணியுங்காண்-பஞ்சாய்ப்
பறக்குமே சந்நிசுரம் பாரிலையைச் சேஷ்டை
யிறக்குமே நன்று யியம்பு.

(இ-ள்.) ஆமணக்கு வெள்ளு வேம்பு புன்னை புங்கு இவற்றின் நெய்களை கலந்து தயிலமாகச்செய்து உபயோகிக்கில் பின்னிசுவு மகாவாதம் சந்நிபாதசுரம கபதோஷம் ஆகிய இவை நீங்குமென்க.

---

## சாணவகை

---

பசுவினது சாணத்தின் குணம்.

ஆவினது சாண மடிபடுவீக் கம்முதிரந்
தாவிவரு கிருமி சார்ந்தகப-மேவுகரந்
தங்குந தாகம்போக்குஞ் சாற்றின்மெய்ச் சுத்தியப்பால்
தெங்கின் பாலுக்கொக்குந தேர்.

(இ-ள்.) பசுஞ்சாணம் கல் முதலியவைகளால் அடிப்பட்ட வீக்கம் ஒழுகுகின்ற உதிரம் கிருமிரோகம் கபகரதாகம் இவைகளை நீக்கும் தேகசுத்தியுண்டாகும் இது தெங்கின்பாலை ஒக்குமென்க.

எருமைச் சாணத்தின் குணம்.

வயிற்றுப் பிரமித்த வாந்தி காமாலை
நியமித்த பெரும்பாடு புண்ணீங்கும்-வியத்த
கருமைச் சாரங்கவிழிக் காரிகையே நாளும்
யெருமைச் சாணத்தி னியல்பு.

(இ-ள்.)மான்போலுங் கண்களையுடைய மையணிந்த பெண்ணே! எருமைசாணத்தால் வயற்றுப்பெருமல் ரத்தவாந்தி காமாலை பெரும்பாடு புண் இவைகள் நீங்கு.

வெள்ளாட்டுப்புழுக்கையின் குணம்.

உருக்கை நீருக்கு முதரநோய் போக்குந்
திருக்கான வாதநோய் நீக்கு-நெருக்கான
தோட்டுக் குழையணங்கே தொல்புவியோர் சொல்லிடுவெள்
ளாட்டுப் புழுக்கை யது.

(இ-ள்.) காயாபரணத்தை யணிந்த வரமகளிரைபொத்த பெண்ணே! வெள்ளாட்டுப்புழுக்கை உருக்கை அல்லது எஃகு என்னும் லோகத்தைபஸ்மிக்கும் மகோதரத்தையும வாதரோகத்தையும் நீக்கும்.

## மூத்திரவகை

சிறுநீரின் குணம்.

காணுக் கடியோங் கதித்தெழுந்த வீக்கமறு
காணுது காயசித்தி கைக்குளநல்-பூணே
பதித்த கொங்கைமாதே பகர்மாக தருக்கு
ளுதித்த சிறுநீருக்கென் றேர்.

இதுவுமது விருத்தம்.

அங்கியுவ ருரைசிறுநீர் வாசம்போக்கு
மதைப்பருகி லுருமலிரைப் பாத்தநோயு
பொங்கிவரு மேகவிகாரங் கிரந்திப்
புண்களும்போ மதைநசியம புரியிற்சூடுங்
தங்கியதோர் பஸ்மாரஞ் சந்நியாசஞ்
சருவவிடம் விடசுரமுந் தவறுண்டோடும்
மிங்கதனைத் தொட்டலம்பிற் கண்முகங்கா
திவ்விடத்து ளெழும்விரண மிரியுங்காணே.

(இ-ள்.) மாந்தர்களின் ஜடராக்கினி யவர்ச்சுவையையுடைய சிறுநீரினால் காணுக்கடிவிஷமும் சோபையும் வாததோஷமுநீங்கும் அதை முறைப்படிப்பருகில் இருமல் சுவாசம் அசிர்க்காம மேகமூத்திரம் கிரந்திவிரணம் ஆகியவைகள்போம் நசியஞ்செய்தால் சுரம் அபஸ்மாரம் சந்நிபாசம் சர்வவிஷம் விஷசுரம் ஆகியவைகள் நீங்கும் அந்த நீரால் கழுவினால் விழி முகம் செவி இவிடங்களில் பிறக்கின்ற கட்டிகள் விலகும் அன்றியும் காயசித்திக்கு உதவுமென்க. 164

பசு மூத்திரக்குணம் வெண்பா.

விடபாண்டு சோபைபல வீக்கஞ் சகல
விடமுதிர மாலையென மெத்தப்-புடவிதனிற்

*பேசலக்க ணோடுதக்கப் பிணையு மகன் றிடுமே*
*கோசலத்தா லாரணங்கே கூறு.*

(இ-ள்.) கோசலத்தால் விஷபாண்டு சோபை பற்பல வீக்கம் சகல விஷம் அசிர்க்கு காமாலை பன்னோய் முதலிய பிணிகள்போமென்க.

**எருமைமூத்திரக் குணம்.**

*உதரநோய் பாண்டோ டிரதத காமாலை*
*விதிரவரு சோபை மேகம்-முதிர்க்கிருமி*
*யாகியவே கோ யேகு மடமெருமை மூத்திரத்தால்*
*மீதிலன லுண்டாகு மே.*

(இ-ள்.) எருமைமூத்திரத்தால் பெருவயிறு பாண்டு காமாலை பிரமேகம் சோபை கிருமி முதலிய நோய்களும்போம் இதிற்றுண்டாம்.

**வெள்ளாட்டுமூத்திரக் குணம்.**

*சோபையொடு பாண்டுவைத் தூரத்தும் பலவீக்க*
*தாகமற்றும் முதிரத்தைப் போக்கும்-கோபமுடன்*
*உள்ளாட்டுத் தூர்ச்சதை டோங்குதர நோயகற்றும்*
*வெள்ளாட்டு மூத்திரம் விரைந்து.*

(இ-ள்.) வெள்ளாட்டுமூத்திரஞ் சோபை பாண்டு பற்பலவீக்கத்தினெரிச்சல் ரத்தபோக்கு தூர்மாமிசம் மகோதரம் இவைகளை நீக்கும்.

**யானைமூத்திரக் குணம்.**

*அதிதூலஞ் சோபை யனிலங் கிருமி*
*பெதிர்விடங் கருங்கரப்பா னேகும்-அதிராத*
*யானையெனப் பலமு மங்கபுஷ்டியுங் கொடுக்கும்*
*யானைவிடு மூத்திரமென் றோது.*

(இ-ள்.) யானை மூத்திரத்தால் அதிதூலநோய் சோபை வாய்வு கிருமிவிஷம் கருங்கரப்பான் இவைகள்போம் ஆனையைப்போன்று வன்மையும் சரீரபுஷ்டியும் உண்டாமென்க. 168

**குதிரைமூத்திரக் குணம்.**

*பாதவன் மீகம் படர்தடிப்பு நீர்கிருமி*
*வாதமொடு சபமு மாறுங்கா-ணேவரிய*
*பொற்குவட்டை யொததமுலைப் பூவையரே சூடுடைய*
*நற்குதிரை மூததிரத்தி னால்.*

(இ-ள்.) பொன்மலையையொத்த கொங்கைகளையுடைய மாதே சூடுள்ள குதிரைமூத்திரத்தால் பாதப்புற்று கண்டுகண்டாகத் தடித்தல் கிருமிரோகம வாதரோய் கபதோஷம் இவைகள்போம். 169

ஒட்டைமூத்திரக் குணம்.

மேலையூருந் தடிப்பு வீசியெழுஞ் சந்தி
சூலையுதா வர்த்தந் தொடர்குன்மஞ்-சீலநனை
மண்டலகுஷ் டேகும் வருமொட்டை மூத்திரத்தா
லுண்ட லைமாதே யுரை.

(இ-ள்.) வெப்பத்தையுடைய ஒட்டை மூத்திரத்தினால் சரீரத்தி லோடிப்புடைக்கின்ற தடிப்பு சந்நிபாதம் சூலை பிடிப்பு உதாவர்த்த வாதம் வயிற்றுவலி மண்டலகுஷ்டம இவைநீங்குமென்க. 170

கழுதை மூத்திரக் குணம்.

வேசரி நீரால்வெப்பம வீரியநஷ்டங் குஷ்டங்
காசமிரைப்பு விஷங் காற்கிருமி-வீசிடுபுண்
மேகம பஸ்மாரம் வெடியச் சுரங்கிரந்தி
போகுமின்னுஞ் செய்ப்பிணியும் போம்.

(இ-ள்.) கழுதை மூத்திரத்தால் உஷ்ணம் தாதுநஷ்டம் அவதம் பாகுஷ்டம் காசம இரைப்பு சில்விஷம் கால்களுள்ளகிருமி விரணம் தந்திமேகம் அபஸ்மாரம் ஜிக்வாகண்டகரோகம் கிரந்தி பாலரோகங் கள் இவைபோம். வேசரி-கழுதை. 171

---

## மதுரவகை

செங்கரும்பு, ரசதாளிக்கரும்பு புல்லகண்ட கரும்பு இவைகளின் குணம் விருத்தம்.

செங்கரும் பதனற் சாறு தீர்த்திடும் பித்தமெல்லாம்
அங்குறு மிரசதாளிக் ககன்றிடுந் தாகவேகம்
மங்குறுப் புல்லகண்டம் வாதகோபத்தைப் போக்கும்
கங்குல்வார் குழலினாளே காரிய மறிந்துகூறே.

(இ-ள்.) இருண்டு நீட்சியுற்ற கூந்தலையுடைய பெண்ணே! செங் கரும்பின்ரசம் பித்ததோஷத்தை நீக்கும், ரசதாளிக் கரும்பினது சாற்றினால் தாகவெப்பம் போம், புல்லகண்டம் என்கிற கரும்புசா றுனது வாததோஷத்தை நீக்குமென்க. 172

நாணற்கரும்பின் குணம் வேண்பா.

வாயுபித்தம் வாந்திநீர் மாறுமதி தூல
நோயுளைமும் வயிற்றி னோய்கலங்கு-மோயாத
ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கு
நாளுநாணற்கரும்பி னால்.

(இ-ள்.) நாணற்கரும்பின் ரசத்தினால் வாதபாவித்திபம் வமனம் அருசி அதிதூலம் வயிற்றிலெழுநோய் இரைப்பு பாண்டு இவைமீறாமற் சாந்தமாம். 173

கரும்பின்சாறு, வெல்லம் இவைகளின் மிதாமித குணம்.

கருப்பிரச மெத்தவுண்டாற் காணுங் கபநோய்
விருமபிவெல்ல மெத்தவுண்டால் மேகங்-தருமதுநீ
ருண்டா மவைமிதமா யுண்டால் மேகபித்தம்
மிண்டாமற் சாந்தமுறும் விள்.

(இ-ள்.) கரும்பின் ரசததை மிகவுங்குடிக்கில் சிலேஷ்மநோயுண்டாம் வெல்லத்தை யதிகமாகத்தின்றால் மதுமேகங்காணும், மிதமாகப்புசித்தால் பிரமேகம் பித்தகோபம இவைமீறாமல் அடங்கும்.

தேன்பாகின் குணம்.

அனலா லெழுந்த வருசிசர்த்தி தாழும்
புனலாருங் கோழையது போங்குங்-கனலாரும்
தேன்பாகுக் கென்றுமதைச் சேரோ ஷதியதனால்
கான்பாவ நோய்க்கூட்டங் காண்.

(இ-ள்.) தேன்பாகினால் பித்த அரோசகம் வாந்திநீங்கும், நெஞ்சிற் கோழைகட்டுண்டாம இதை ஔஷதிகளிற்சேர்தது உபயோகித்தால் கபதோஷ முதலியநோய்கள் விலகுமென்க. 175

மணப்பாகின் குணம்.

பித்த வருசிகெடும் பேசிலற்ப வாதமறுந்
தத்தனலம் மெள்ளவுள்ளே தாவிவரு-மெத்த
வணப்பாகை யொத்த மொழிமாதே முறுகா
மணப்பாகுக் கென்றே மதி.

(இ-ள்.) பாகைநிகர்த்த மொழியையுடையபெண்ணே! மணப்பாகினால் பயித்திய அரோசகமும் அற்பவாதமும நீங்கும். அன்றியும் சரீரத்தில் உஷ்ணரம்பமாமென்க. 176

முதிர்ந்தபாகு, பழயவெல்லப்பாகு இவைகளின் குணம்.

முதிர்பாகு வயிற்றெரிவு மூத்திரக் கட்டோடோ
யதிர்வாத மாதிய நோயாகுந் ஆதிபழைய
வெல்லப்பா குக்கருசி வீறுபித்தம் பேதிவாய்
வில்லையப்பா மாதே யினி.

(இ-ள்.) முறுகியவெல்லப்பாகினால் வயிற்றெரிச்சலும் வாதகுண்டலிமூத்திரமும் கம்பவாதமும் உண்டாம் பழைய வெல்லப்பாகுக்கு அரோசிகம் பித்தாதிக்கம் அதிசாரம வாதகோபம் இவை நீங்கும்.

### நல்லவெல்லத்தின் குணம்.

*குன்மபித்தம் போக்குமதி கோழைதனை யுண்டாக்குந்*
*துன்மலத்துட் கீடத்தைத் தோன்றுவிக்கும்-நன்மைபோல்*
*வெல்ல மதுநீரை விளைக்கு மாமதுர*
*வெல்லமென நாளும் விளம்பு.*

(இ-ள்) நல்லவெல்லம் பித்தகுன்மத்தை நீக்கும், நெஞ்சிற் கபக் கட்டு மலாசயக்கிருமி மதுமேகம் இவை யுண்டாமென்க. 178

### உண்டை வெல்லத்தின் குணம்.

*சூலைமேகங் குன்ம முட்குலை விந்துவுமாங்*
*காலடர் குமட்டல்பித்தங் காசமும்போம்-நீலவரிக்*
*கெண்டை விழியாய் கெழுமிய நாணற்கன்ன*
*லுண்டைவெல்ல மிக்குண்பார்க் கோது.*

(இ-ள்.) கருத்து செவ்வரிபொருந்திய மகரநோக்கியே! நாணற் கருப்பஞ் சாற்றுலாகிய உண்டைவெல்லத்துக்கு மூலமுளை மதுரப்பிர மேகம் வயிற்றுநோய் பக்கநோய சுக்கிலவிருத்தி இவையுண்டாம் வாதரோகமும் பித்தமும் இருமலும்போம் என்க. 197

### தேங்கின்வெல்லம் பனைவெல்லம் இவைகளின் குணம்.

*தெங்கின் வெல்லத்தாற் செரியாச் குணஞ்சோபை*
*யங்கமுறு நீரு மதிகரிக்குந-தங்குபனை*
*வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சந்நிநோய்*
*வல்லருசி குன்மமறு மால்,*

(இ-ள்.) தெங்கின் வெல்லத்தால் செரியாமாந்தம் வீக்கம் நீரேற் றம் இவை யதிகரிக்கும், பனைவெல்லத்தால் வாத பித்த தொந்தம் சிலேத்மதோஷம் சந்நிபாதம் அரோசகம் வாதகுன்மம் இவைதீரும்.

### ஈச்சம் வெல்லத்தின் குணம்.

*நீடுமே ரீச்சினியர் நின்மலப் புத்திக்குமந்த*
*மோடுகப வாத முட்சீத-மாடுபித்தி*
*பித்தமுடனே பெருந் திமிர்நோய் வியாதிகளை*
*யித்தரையி லுண்டாக்கு மென்.*

(இ-ள்.) பேரீச்சம்வெல்லம் புத்திமந்தம் சிலேத்மவாதம் உள் ளிற் சீதளம் பித்தகோபம திமிர்வாயு உண்டாகும் அயிர்-வெல்லம்.

### சருக்கரையின் குணம்.

*அருந்து மருந்திற் கனுபான மாகப்*
*பொருந்துமடய் வாதபித்தம் போக்கும்-வந்தருசி*
*நீக்கு மதிகபத்தை நின்றுமகிழ்ச் சியையுண்*
*டாக்கு நவுஞ் சருக்கரை.*

(இ-ள்.) சருக்கரையானது மருந்துகளுக்கு அனுபானமாயிருப்பதுந் தவிர வாந்தி பித்தம் அரோசகத்தையும் போக்கும் கெட்டிப் பட்ட கபத்தையிளக்கி மகிழ்ச்சியைத்தரு மென்க. 182

### சீனிச்சருக்கரையின் குணம்.

சீனிச் சருக்கரைக்குத் தீராத வன்சுரமுங்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவு-மேனிற்கு
வாந்தி யொடுகிருமி மாறாத விக்கலுமே
போந் திசையைவிட்டுப் புரண்டு.

(இ-ள்.) சீனிச்சருக்கரைக்குத் வாதசுரம் வக்கிரிக்கின்ற வாத நோய்கள் வாந்தி கிருமிரோகம நீங்காதவிக்கல் இவைபோமென்க.

### கற்கண்டின் குணம்.

ஈறின் தடிப்பு மிருமலும்பல் வாந்திகளுஞ்
சீறுகப முட்டினமுஞ் சோரதே-தேறியநற்
சொற்கண் டிளங்குயில்கள் சூழு மடவனமே
கற்கண் டெனவுரைக்குங் கால்.

(இ-ள்.) இனிய சொற்கேட்டிளங் குயில்கள் சூழும் இளமைதங் கிய அன்னத்தை நிகர்த்த நடையையுடையமாதே! கற்கண்டினல்பல் லரணை காசம் பற்பலவாந்தி அதிகரித்த சிலேத்மதோஷம் வெப்பம் ஆகிய இவைகள் தீருமென்க. 184

### தேங்கின் கற்கண்டின் குணம்.

நெஞ்சிற் றிமிருஞ்செந் நீரிலழுக் கும்படையு
மஞ்சுகப வாதமொடு வாதமுமே-விஞ்சுமிளைத்
தொங்கின தேர்க்கயாவுந் தூயபுத்தி மந்தமுமாந்
தெங்கினது கண்டாற் றெளி.

(இ-ள்.) தெங்கின் கற்கண்டினல் தொண்டைக்குள் திமிர் உதிரத் தில் அழுக்கு சொறிமேகம் சிலேத்ம வாத தொந்தம் வாதம் இளைத்த தேகிகளுக்கு ஆயாசம மந்தபுத்தி ஆகிய இவை யுண்டாமென்க. 185

### பனங்கற்கண்டின் குணம்.

மேக வனலு மிகவீசும் சூரிகையா
லாகமுறு கனலு மாறுங்காண்-மோகனத்திற்
றங்கிவரு நீர்ச்சுருக்குந் தாகவெப்ப முந்தணியு
மிங்குபனங் கண்கண்டுக் கே.

(இ-ள்.) பனங்கற்கண்டுக்கு மேகசுரம் சூரிகையின் வெப்பம் தங்கிவரும் நீர்ச்சுருக்கு உஷ்ண தாகம் இவை நீக்குமென்க. 186

ஈச்சங்கற்கண்டின் குணம்.

அரிய மருந்தையெலா மன்றே முறிக்குந்
திரிவித கபத்தைவரச் செய்யுந்-தெரிவரிய
பன்னோய் விளைக்குமப கரநிலைவை மங்குவிக்கு
மன்னோய் வீச்சங்கண் டிசை.

(இ-ள்.) ஈச்சங்கற்கண்டு அவுஷதங்களேயும் அறிவையுங் கெடுக்கும் மூன்றுவித கூயங்களேயும் காணாக் கரிய பலபிணிகளேயுந்தரும்.

தேனில் உண்டாகுங் கற்கண்டின் குணம்.

தேனிற் பிறந்த செழுங்கண்டாற் கண்விழிக்கு
ளூனிற் படர்படல மோடிடுங்காண்-கானத்திற்
காகுஞ் சுரமாகு மண்டும பகிகபங்கா
ணேகுஞ் சுரமேகு மெண்.

(இ-ள்.) தேனிலுண்டாகுங் கற்கண்டினுல் கண்ணிற்படருகின்ற ஊர்மாமிசபடலம் உதராக்கினி கபநோய் வாதநோய் சுரரோகம இவை நீங்கும். இசைப்பாட்டுக்குரிய குரற்றெனி யுண்டாகும். 188

---

## மதுவின் வகை

தேங்கின்மதுக் குணம்.

நாதவிந் தூறு நாளிர்பாண் டொடுசோபை
வாதபித்தங்கிராணி வன்கரப்பான-பேதியிவை
பொங்கி யதிகரிக்கும் புத்திகொடு மேகமுண்டாந்
தெங்கின் மதுவிற்கென்றே செப்பு.

(இ-ள்.) தெங்கின்கள்ளுக்குச்சோணித சுக்கிலப்பெருக்கம் பாண்டுரோகஞ் சோபை வாதபித்ததொந்தம் ரத்தக்கழிச்சல் கரப்பான பேதி பிரமேகம இவைகள் உண்டாகும் அறிவுங்கெடுமென்க. 189

பனையின்மதுக்குணம்.

விந்துதிர மூறுமதி வெப்புடனே தாகம்போம்
பந்தமாந் தாதுவுமோ பாரிக்கு-முந்தபித்த
தோன்றும் பாஷாணங்கள் சுத்தியுமாந் தோகைமின்னே
யேன்ற பனைமதுவிற் கே.

(இ-ள்.) மயில்போலுஞ் சாயலேயுடையபெண்ணே! பனங்கள்ளுக் குசுக்கில சோணிதவிருத்தி சப்ததாதுக்களும் உறுதி பித்தாதிக்கம்

இவையுண்டாகும்: தேகஉஷ்ணமும் விதாகமும்நீக்கும், இதில்பாஷாணவகைகள் சுத்தியாகுமென்க. 190

### ஈச்சமதுக் குணம்.

வெப்பகனு மெய்குளிரு மோகங் கிரிச்சரம்போந்
செப்பருகி போம்பித்தஞ் சேருங்கா-ணைப்படியும
பூச்ச நிமிருண்டாம பொங்கறிவுங் கெட்டிடுமே
ஈச்ச மதுவதனுக் கே.

(இ-ள்.) ஈச்சங்கள் உள்அழலை பிரமோகம் மூத்திரக்கிரிச்சரம் அரோசகம் புத்திஆகிய இவைநீங்கும், சரீரத்தில் குளிர்ச்சி பித்த கோபம் வீக்கம் திமிர்வாயுவு ஆகிய இவைகள் உண்டாமென்க. 191

### முந்திரிகையின் மதுக்குணம்.

மூந்திரிகைக் கள்ளுக்கு மூடுதிரி தோஷம்போம்
விந்துறு மிரத்தமுறும் வெப்பகனும்-இந்தவகைக்
கள்ளெல்லாங் காமமுறுங் காமமற்ற ருண்டாக்கால்
விள்ளரி தோஷமில்லை மெய்.

(இ-ள்.) முந்திரிகை மதுவென்கிற திராட்சப்பழச் சாராயத்திற்குவாதபித்த கபதோஷங்களும் தேக அழற்சியும்நீங்கும். விந்துவும். ரத்தத்தாதுவும் விருத்தியாம், இந்தமது வருககங்களெல்லாம் காமத்தையுண்டாக்கும், ஆதலால் காமமற்ற பெரியோர் அருந்தில் குற்றமில்லை என்க. 192

### அரிசி வேலம்பட்டை தெங்கு இவைகளின் மதுக்குணம்.

சாலிமது வாததகாற் சளிநீருண் டாக்கும்
வேலின்மது பித்தமழைக்கும் வேண்டாவாஞ்-சாலவுயர்
தெங்கின்மதுசீதந் திரிதோஷ முண்டாக்கு
மங்குவிடு கள்குலையே யாம்.

(இ-ள்.) அரிசியிலிறக்கிய சாராயம்விருத்தி வாதகபத்தையும் நீரேற்றத்தையும் உண்டாக்கும். வேலம்பட்டைச் சாராயம் பித்த கோபத்தை வருவிக்கும் உயர்ந்த தென்னங்கள்ளானது குளிர்ச்சியையும் வாதபித்த கபதோஷங்களையும் உண்டாக்கும் என்க. 193

### அத்திமரத்தின் மதுக்குணம்.

அத்திமே கஞ்சு டதிமயக்கந் தாகமும்போ
மத்திமர வேரிலுண் டாமதுவில்-நித்தியமுஞ்

சீனியெனும் பேயன் செங்கனியே னுங்கலந்தே
பானுவுதயங் குடித்துப் பார்.

(இ-ள்.) அத்திமரவேரிலிரங்கிய கள்ளில் சீனிச்சருக்கரையாவது பேயன்வாழைக்கனியாவது கலந்து தினமும் சூரியோதய காலத்தி லுண்டுவர அஸ்திமேகம் உட்சூடு மூர்ச்சை தாகம் இவை நீங்கும்.

---

## தேன்வகை

### மலைத்தேனின் குணம்.

ஐயிருமல் விக்க லக்கிப்புண் வெப்புடல்நோய்
பையவொழியும் பசியுமுறும்-வையகத்தி
லெண்ணுமிசை யாமருந்திற் கேற்ற வனுபான
நண்ணு மலைத்தே னென்றினல்.

(இ-ள்.) மலையிலிருக்குங் குறிஞ்சித்தேனினல் சிலேஷ்மகாசம் சுவாசம விக்கல் கண்விரணம் சுரம தேகக்கடுப்பு இவை நீங்கும் தீபனமும் நல்லதொனியுமுண்டாம் இதுஔஷத அனுபானங்களுக்குதவும்.

### கொம்புத்தேனின் குணம்.

வாதபித்த வையகத்தை மாற்றுமுள மாங்கைதனைக்
காதமென வோடக் கடியுங்காண்-பூதரமாம்
வம்பு முலைமாதே வருமருசி நீக்கிவிடுங்
கொம்புத்தே னன்றுருகுங் கூறு.

(இ-ள்.) வாரிறுக்கிய மலையனைய கொங்கைகளையுடைய பெண்ணே! மாமரம் முதலிய மரக்கொம்புகளிற் கட்டுகின்ற தேன் திரிதோஷங்களையும் உளமாந்தையும் அரோசகத்தையும் நீக்குமென்க.

### மரப்பொந்துத்தேனின் குணம்.

பசிவெப்பாம் வாந்திமந்தம் பல்விக்கல் வெய்ய
ருசிமுக் கபந்தூல ரோகங்-கசிவகலாக்
கொந்துத்தேன் பாடுங் குழலணங்கே காவின்மரப்
பொந்துத்தே னுண்டாயிற் போம்.

(இ-ள்.) அன்பு நீங்காத வாசனைபொருந்திய வண்டுகள் பாடுங் கூந்தலையுடைய பெண்ணே மரப்பொந்துத்தேனினல் ஜடராக்கினியும் உஷ்ணமும் உண்டாம். வமனம் மந்தாக்கினி பலவிதவிக்கல் ரோகம் அரோசகம் இருமல் சுவாசம் க்ஷயம் அதிதூலரோகம் ஆகிய இவைகள் போமென்க. 197

புற்றுத்தேனின் குணம்.

கொப்பணியு மாதே குவலயத்து ளெல்லார்க்கு
மொப்பகின்ற வைய மொழிக்குங்காண்-கொப்பளிக்குங்
காச்சுவாசம் வாந்தி கண்ணிலெழு நோய்களறும்
வீசுபுற்றுத் தேனுக்கு மெய்.

(இ-ள்.) கொப்பென்னுங் காதணியையுடைய பெண்ணே! புற்றில் கட்டுகின்ற தேனுக்கு கபதோஷம் இருமல் ஈளை வாந்தி நேத்திரரோகம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 198

மனைத்தேனின் குணம்.

புண்ணும் புரையும்போம் போகாக் கரப்பானது
மெண்ணரிய தீபனமா மேந்திழையே-கண்ணுகளிற்
பூச்சிபுழு வெட்டுகபம் பொல்லா விருமலறும்
பேச்சின் மனைத்தேனுக்குப் பேசு.

(இ-ள்.) வீடுகளிற்கட்டுகின்ற தேனுக்கு விரணம் புரையோடல் கரப்பான் நேத்திர விரணக்கிரமி புழுவெட்டு சிலேஷ்மகோபம் காசம் ஆகிய இவைகள் நீங்கும், ஜடராக்கினி யுண்டாமென்க. 199

புதியதேனின் குணம்.

ஆயுளுட னட்டின மரோசிய கக்கபமு
மேயவழகும் வளர்ந் தேறுங்-காய்துய
மதியமெனும் வதன மாதரசே நாளும்
புதியநறுந் தேனாற் புகல்.

(இ-ள்.) பூரணசந்திரனென்றுரைக்கும் வதனத்தையுடைய மாதரசே! புதுத்தேனினால் நிறைந்த ஆயுளும் சரீரவெப்பமும் தேஜசும் உண்டாம். மிகவுஞ்சேர்ந்தால் அருசியுஞ் நெஞ்சிற்கபமும் விளையும்.

பழையதேனின் குணம்.

வாதம் பெருக்கை வயிற்றெறிவைத் தந்துறையைச்
சேதப் படுத்துமின்னுஞ் செப்பவோ-மாதரசே
சத்திப் புறுமாசந் தன்னைத்தூண்டும் புளிப்புத்
தித்திப் புறும்பழைய தேன்.

(இ-ள்.) பெண்களுக்குள் நாயகம்போல்பவளே! புளிப்பும் இனிப்புங்கலந்த சுவையையுடைய பழையதேனானது வாதரோகக் கூட்டத்தையும் வயிற்றெறிச்சலையும் வாதமூலரோகத்தையும் விளைக்கும். மருந்தினது நற்குணங்களைக் கெடுக்குமென்க. 201

# மரவகை

### சந்தனமரத்தின் குணம்.

நற்சந் தனமரத்தா னல்லறிவு மின்பமெழிற்
பொற் செந்திருவருளும பூமிதத்துண்-மெச்சுஞ்
சருமவழகுந் தனிமோ கமுமாம்
மிருமூகோ யேகும் பிறழ்ந்து.

(இ-ள்.) சாதிச்சந்தனமரக்கட்டையைக் கிரமப்படி யனுபவிப்ப வர்கட்கு நல்லவிவேகமும மனமகிழ்ச்சியும லட்சுமிவிலாசமும் சரும தாது ஒளியும மோகரிச்சையுமுண்டாம். கிழ்ப்பிரமியம நீக்கும். 202

### தேவதாருவின் குணம் இது தேவதாரம் என மருவியது.

தேவதருக் குணந்தான் சேர்ததுவளர் பீசுசத்தை
காவகத்தி லோட்டுங் காப்பலவே-பாவலர்கள்
சொல்லும் புராண சுரமொடுசீ ரேற்றத்தை
வெல்லு மணற்றணிக்கும் விள்.

(இ-ள்.) தேவதாருக்கட்டை நாசிரோகம் பழையசுரம் சலதோ ஷம் சீரலெப்பம் ஆகிய இவைகளை நீக்குமென்க. 203

### சரளதேவதாருவின் குணம்.

சரளமெனுந் தேவ தாருவினுற் கண்ணீர்
விரளமா குங்கபமும் வீடுங்-தரளமொயிற்
றுமயஞ் சுவாசம்வலி யண்ணுதம் வாதம்
போவயஞ் சுரத்துரமும் போம்.

(இ-ள்.) சரளதேவதாருக்கட்டையினுல் கபஸ்ராவரோகம் சிலே ஷ்மதோஷம் தந்தநோய் இரைப்பு ஐவகைவலி கர்ணநாதரோகம் நடுக்குவாதம் கபச்சுரம் இவைகள் நீங்குமென்க. அள்-காது. 204

### அகில்மரத்தின் குணம்.

தளர்ந்த விருத்தருக்காந் தக்க மணத்தா
னுளைந்த சுரமுழுது மோடும்-வளர்ந்திகழு
மானே யகிற்புகைக்கு வாந்தியுரோ சகமபோந்
தானே தளர்ச்சியறுஞ் சாற்று.

(இ-ள்.) வண்மைதிகழும் பெண்ணே! அகில்கட்டை (சந்தனம்) விருத்தர்களுடைய தளர்ந்ததேகத்தையும் இறுக்கும். இதன்வாசனை யால் சிற்சிலசுரம் நீங்கும். புகையால் வாந்தியும் அருசியும் அயர்ச்சி யும் நீங்குமென்க. 205

### அகரு மரத்தின் குணம்.

நாசி யடைப்பு கவிரவிடி தாளுநோய்
வீச்நமைப் புடைகள் விட்டேகும்-பேசிற்
சுகரு மயங்குந் துணைமுலையாய் நல்ல
அகரு மரத்தா லறி.

(இ-ள்.) சுகரும்மயக்குந் தனங்களையுடைய பெண்ணே! அகருக் கட்டையினால் பீநசம் தலைக்குத்து வாதம தினவுள்ள புடைகள் ஆகிய இவைகள் போகுமென்க. 206

### சரக்கொன்றை மரத்தின் குணம்.

குட்டங் கிருமி கொடுக்குஞ்சூலை வாதமையந்
துட்ட மலமருசி தூரப்போந-தட்டிச்
சுரக்கின்ற பேதியுண்டாந துய்யத் துவர்க்குஞ்
சரக்கொன்றைக் காரணங்கே சாற்று.

(இ-ள்.) தெய்வமகளிரனையதெரிவைவே! சரக்கொன்றைமரத்தால் பெருவியாதி கிருமிரோகம் சூலை வாத கபதொந்தம் விஷமலம் அரோசகம் ஆகிய இவைபோம் இதில் துவர்ப்புஉண்டு விரோசனம் ஆமென்க

### சிறுகொன்றை மரத்தின் குணம்.

சிறுகொன்றை நற்கசப்பாஞ் சென்னி யனலா
லுறுகின்ற கண்களி னோயோடே-பெருமுடலி
லுட்டினமுன் மூலமிலை யோடு மதியலமுங்
கட்டழகு முண்டதனாற் காண்.

(இ-ள்.) மிகுந்த கசப்பையுடைய சிறுகொன்றைமரத்தால் கபாலச் சூட்டினால் உதித்த நேத்திரரோகங்களும் தேகஉஷ்ணமும் உள் மூலமும் நீங்கும்-சரீரவலிமையும அழகும் உண்டாகும். 208

### நரிக்கொன்றை மரத்தின் குணம்.

பையவே யூறிப் படருமியா னைச்சொரியு
நொய்ய கிருமிகொண்ட துண்புடையு-மெய்யி
லரிக்கின்ற வன்புடைய மாழிபுகு மாதே
நரிக்கொன்றை தன்னை நவில்.

(இ-ள்.) நரிக்கொன்றை மரத்திற்கு யானைச்சொறியும் தவிட்டுக் கிருமிப்புடையும் தினவுள்ள விரணப்புடையும் நீங்கும். 209

### மைக்கொன்றை மரத்தின் குணம்.

குடல் வாதஞ்சூலை கொடுமேக மெல்லா
மடைவாகப் போக்க வலேங்தே-படிமீது

ஈக்கொன்றைத் தேடிநெஞ்சி லெண்ணமிடு வானேன்
மைக்கொன்றை யீங்கிருந்து மால்.

(இ-ள்.) மைக்கொன்றைமரம் குடல் விருத்திவாயுவையும் சூலை மேகரோகங்களையும் போக்குமென்க. 210

### மருதமரத்தின் குணம்.

ஓதமெனு நீரிழிவை யோட்டும் பிரமேகங்
காதமெனை வோடக் கடத்துங்காண்-போத
மயக்க மொடுதாக மாறுஞ் சுரத்தின்
தயக்க மறுக்குமருதந் தான்.

### இதுவுமது.

குட்ட ரோகங்கிருமி கோர வயிற்றுவலி
துட்ட வரட்சூலை கொல்லையுங்காண்-கிட்டிப்
பொருதம் பாமென்னும்விழிப் பூவையரே நாளு
மருதம்பா ரென்றளவில் மாய்ந்து.

(இ-ள்.) போர்புரியும் அம்பாயென்னும் கண்களையுடைய பெண்ணே! மருதமரமானது வெகுமூத்திரம் பிரமிபம மயக்கம்விதாகம் நீங்காத சுரத்திலவரும் ஆயாசம் பெருவியாதி கிருமிரோகம் உதரநோய் வறட்சூலை இவைகளைப் போக்கும் என்க. 211

### வேங்கைமரத்தின் குணம்.

குற்றிருமல் வெட்டையொடு கூறுமுள மாக்கதையிவை
யெத்திரையும் வாராதிசையுங் காண்-சத்தியமாய்ப்
புண்ணிருமல் சிழொழுகல் போகுமல மிறங்குங்
கண்ணொளிரும வேங்கைக்குக் காண்.

(இ-ள்.) வேங்கைமரத்தில் குற்றிருமல் வெள்ளை வீழல் உள் மாக்கதவிரணம் காசம் சீழ்ப்பிரமேகம் ஆகிய இவைகள் நீங்கும். கண்ணுக்கு ஒளியும் மலவிரோசனமும் உண்டாமென்க 212

### வன்னிமரத்தின் குணம்.

வாதசன்னி தோஷமறு மாறுத் தழலுளதென்
றோதுவரிவ் வன்னிகரு வமையுண்டோ-பூதலத்திற்
காணார் விஷமுங் கபமுஞ் சொறியும்போந்
தேனே யிதையறிந்து செப்பு.

(இ-ள்.) தேன்போன்ற மொழியினையுடைய பெண்ணே! வெப்பத்தையுடைய வன்னிமரத்திற்கு வாதசன்னி பாதம் திரிதோஷம் சிலேஷ்மகோபம் புடை இவைநீங்கும். 213

### புரசமரத்தின் குணம்-இதுவே பலாசு.

புரசவா தம்பித்தம் பொங்குகபங் குன்மங்
கிருமி யுடனே கிராணி-பெருவலிநோ
யோட்டி மதிதீபனத்தை யுண்டாக்கு மப்பொழுதே
தீட்டியவேற் கண்ணாய் தெளி.

(இ-ள்.) தீட்டிய வேல்போன்ற கண்களையுடைய பெண்ணே புரசமரமானது வாதாதிக்கம் பித்தகோபம் சிலேஷ்மதோஷம் வயிற்றுநோய் மலக்கிருமி கிராணிரோகம் தேகக்குடைச்சல் ஆகிய இவைகளை நீக்கும். உதராக்கினியை யுண்டாக்குமென்க. 214

### இருவாட்சி மரத்தின் குணம்.

கண்ணொளிவு மெய்யிற் கமழ்மணமு நீடழுகு
நண்ணும் வலிமூர்ச்சை நாசமாம்-பண்ணளியுங்
கங்குலும் வாழ்வார்குழலே காரமொடு வெப்புமிகத்
தங்குமிரு வாட்சிமரத் தால்.

(இ-ள்.) இசையையுடைய வண்டுகளும் கங்குலும் வாழ்கின்ற நீண்ட கூந்தலையுடையபெண்ணே! உஷ்ணமும் கார்ப்புச்சுவையுமுள்ள இருவாட்சிமரத்தால் நேத்திரபிரகாசமும் தேகத்தில் சுபாவவாசனையும் வனப்புமுண்டாம், தேகக்குத்தலும் மூர்ச்சாரோகமும் நீங்கும்.

### காட்டாத்தின் குணம்.

அதிசார மந்தமிக வாலித்த காசம்
விதிராம் விஷமும் விலகு-மெதிரொருவர்
மூட்டாத்தீ யென்றுரைத்த மோகந் தருமணங்கே
காட்டாத்திக் கென்றுள்ளத் திற் காண்.

(இ-ள்.) மூட்டாத அக்கினியென்னும் அதிமோகந்தரும் பெண்ணே! காட்டாமரத்திற்கு அதிசாரபேதி அக்கினிமாந்தம் இருமல் தாவரசங்கம விஷம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 216

### பெருங்குமிழ மரத்தின் குணம்.

பெரிய குமிழின்பேரைப் பேசின் மேகத்தி
னெரிவு சுக்கிலக்கடுப்பு மேகும்-பிரியாத
வல்ல வனற்சுரமும் வாதசுரமும் தணியும்
மெல்லெனமுத் தோஷப்போம் விள்.

(இ-ள்.) பெருங்குமிழ மரத்தினால் மதுமேக எரிச்சல் வெள்ளைவிழல் நீர்க்கடுத்தல் பித்தசுரம் வாதசுரம் திரிதோஷமிவைகள்போம்.

### மாவிலங்கமரத்தின் குணம்.

சுரங் கடியின்றோஷ தொலையாத வாத
முரம்பெறு விஷங்க ளொழியும்-அரவுஞ்
சருமா வடுவேலுங் கண்டஞ்சுங் கண்ணு
யொருமா விலங்குக் குரை.

(இ-ள்.) அரவும் மாவடுவும் வேலும் கண்டு பின்னிடையும் கண்களையுடையபெண்ணே! மாவிலங்கமரத்திற்கு சுரம் கடிகளின் தோஷம் மகாவாதரோகங்கள் சர்ப்ப விஷம் ஆகிய இவைபோகுமென்க.

### அழிஞ்சில்மரத்தின் குணம்.

அழிஞ்சிலது மாருதத்தை மையத்தைத் தாழ்த்து
மொழிஞ்ச பித்தத்தை யுயர்த்து-விழுஞ்சிழாங்
குட்டமெனு நோயகற்றுங் கூறுமருந் தெய்திடில்
திட்டமென வறிந்து தேர்.

(இ-ள்.) அழிஞ்சில்மரமானது வாதகோபம் கபதோஷம் சீழ்வடியும் பெருநோய் இவற்றை நீக்கும். பித்தாதிக்கத்தைச் செய்யும். 219

### கடலழிஞ்சில்மரத்தின் குணம்.

தீதில் கடலழிஞ்சில் செய்யுங் குணங்களா
யோது மதுமேக மொழிப்பதன்றி-வாதத்தில்
வந்தசலம் பித்தசல மாகபச் சலந்தாகத்
தொந்த சலமும்போக்குஞ் சொல்.

இதுவுமது.

கமல விரணங் கசிதீ ரகற்றும
நிமல சுரம்விலக்கு நேரே-கமலமுக
மாதே கடலழிஞ்சில் வன்பட்டை பேதிகட்டுஞ்
சீதமேகம் போக்குந் தேர்.

(இ-ள்.) கடலழிஞ்சில் மரமானது மதுநீர்வாதாதி மூன்றுநீர் தாகத்தைத் தாரநின்ற தொந்தமூத்திரம் படர்தாமரை சொட்டுமூத்திரம் தனிச்சுரம் அதிசாரம் சீதமேகம் இவைகளைப் போக்குமென்க.

### மோதகவல்லிமரத்தின் குணம்-இதுவே கொழக்கட்டைமரம்.

பொங்கிவரு வள்ளைப் புனவினவினசிர்க் குங்காலா
லங்கியுந்த வீழுமிரத் தாமயநோய்-தாங்கவே
போதகத் தாச்சியெனப் பூரித்த மாமுலையாய்
மோதக பூருகத்தை முன்.

(இ-ள்.) யானை மத்தகத்தை நிகர்த்து பூரித்து நெருங்கிய தனங்களையுடையபெண்ணே! மோதகவல்லிமரத்தினால் அசிர்க்காரமும் வாதத்தால் மூலாக்கினிதள்ள வீழாநின்ற ரத்தகசிதமும் நீங்கும். புருகம்-மரம்.

பூதமரத்தின் குணம்

பூததரு ரூட்சையது போக்கும் பலவிஷத்தை
வாதமென்ற நோயனைத்து மாற்றுங்காண்-நீதுபுரி
சன்னிகளைத் தப்பாது சண்ணிவிடும் பூதலத்து
ளுண்ணி மகிழ்வா யுரை.

(இ-ள்.) பூதவிருட்சம் என்கிற ஆலமரம் கறம் பற்பலவிஷம் வாதரோகங்கள் சன்னிபாதங்கள் ஆகிய இவைகளை நீக்குமென்க.

வாகைமரத்தின் குணம்.

வாகை காரங்கசப்பை வைத்திருக்கு முள்ளபடி
யோகை யுறப்பசியை யுண்டாக்குந்-தோகையரே
தீரா விஷத்தோடு சில்விஷத்வத யுந்தீர்க்கு
சூரநாய்த் தோன்று மறி.

இதுவுமது.

வாகை யணல்விரணம் வாதை வரட்சியுடன்
தாக சுரமுந் தணிக்குங்கா-ஞூகமதி
வக்கர மெல்லா மகற்றிவிடும் பூவனமே
யக்கணத்தி லென்றே யறி.

(இ-ள்.) கார்ப்பும் கைப்புமுள்ள வாகைமரம் ஜடராக்கினியை விருத்திசெய்யும், சர்ப்ப விஷங்கள் பித்தவிரணம் வாதச்சொறி தாக சுரம் கந்ததாளிரோகங்கள் ஆகிய இவைகளை நீக்குமென்க. 223

கருவாகைமரத்தின் குணம்.

விரணமோ டெட்டினமுன் வீறுகின்ற வாய்வுந்
திரண மெனுங்கிருமிச் சேர்வு-மரணமுறச்
செய்யுங் கபத்தின் செயலுங்குடி விலகும்
வெய்ய கருவாகைக்கு விள்.

(இ-ள்.) கருவாகைமரத்திற்கு புண் வெப்பம் விரதகோபம் சன்னக்கிருமி மரணமுறச்செய்யும் க்ஷயரோகம் நீங்கும். 224

இலவமரத்தின் குணம்.

நீர்க்கடுப்பு நீரெரிவு நீண்டொழுகு மேகமும்போ
மார்க்கும் விந்தடைக்கு மாண்மையுரும்-பார்க்குள்

நிலவு மதிவதன நேரிழையே யொப்பா
மிலவு மரத்தா லியம்பு.

(இ-ள்.) விளங்குகின்ற சந்திரனையொத்த முகத்தினையுடைய பெண்ணே! உஷ்ணமுள்ள இலவுமரத்தினால் வாதகிரிச்சுரம் எரிமூத்திரம் தந்துமேகம் இவைபோம் சுக்கிலமும் ரசதாதுவும் பலப்படும்.

முள்ளிலவமரத்தின் குணம்.

தந்துமேகஞ் சிறுநீர்த் தாரைவெப்பம் வாய்
வுந்தவரு பேதியிவை யோட்டுங்காண்-முந்திக்
கிளர்வெள்ளை பாயும் வரிக்கெண்டை விழியாய்
வளர் முள்ளிலவ மரம்.

(இ-ள்.) விளங்குகின்ற வள்ளைபை நிகர்த்த காதுகளைத் தாவுங் கொண்டையையொத்த கண்களையுடைய பெண்ணே! முள்ளிலவமரம் பஞ்சிநூலைப்போல வீழ்கின்ற தந்துமேகத்தையும் மூத்திரதாளச் சூட்டையும் வாதாதிசாரத்தையும் போக்குமென்க. 226

விளாமரத்தின் குணம்.

காச சுவாசங் கதித்த வருசிமுதற்
பேசரிய காசமிவை பேசுங்காண்-வீசு
தபித்தலைச் செய்பித்தந் தரிக்குமோ பூவிற்
கபித்த மரமிருக்குங் கால்.

(இ-ள்.) கபித்தம் என்கிற விளாமரத்தினால் இருமல் இரைப்பு கதித்த அரோசகம சொலற்கரிதாகிய தாகம் தபித்தலைச்செய் பித்தகபரோகம ஆகிய இவைகள் நீங்குமென்க. 227

கருநெல்லிமரத்தின் குணம்.

பதினெந் தெனுஞ் சன்னிபாதந் தயக்கம்
மதினைந் திடச்செய் வினைமாறும்-பதியிற்
சனித்த கருவுருவந் தானும் வேறுருங்
கனித்த கருநெல்லிமரத் தால்.

(இ-ள்.) கருநெல்லிமரத்தினால் பதினைந்துவகை சன்னிபாதங்களும் மயக்கமும் மனோவியாதியும் நீங்கும் காயசித்தியாமென்க. 228

அருள்மரத்தின் குணம்.

வாத மகனும் வளருகின்ற மந்தமறுஞ்
சீதரத் தஞ்சோபை சுரந்திடுங்காண்-ஓதும்

இருளாருங் கூந்தலெழி லணங்கே முந்த
அருளென்னும் நன்மரத்தா லாய்.

(இ-ள்.) கருநிறம்பொருந்திய கூந்தலையும் அழகையுமுடைய பெண்ணே! அருள்யென்கிற முதிர்ந்த மாதுமரத்தினால் வாதகோபம் மந்தாக்கினி சீத ரத்தபேதி சுரவீக்கமாகிய இவைகள் போமென்க.

### வேப்பமரத்தின் குணம்.

ஓதரிய வேம்பை யுரைக்கிற் சுரமுடனே
வாதமர மூலகண மந்தம்போந்-தீதா
யுதிரு மெரிபூச்சி குன்ம மொழியுஞ்
சிதறுமலம் போகுமெனத் தேர்.

(இ-ள்.) வேப்பமரத்திற்கு சுரம் வாதகோபம் மூலகணமாந்தம் எரிகிருமி வயிற்றுநோய் சிதறுகின்ற மலப்பேதி இவைநீங்குமென்க.

### மலைவேப்பமரத்தின் குணம்.

மலட்டுப் புழுவும் வயிற்றின் வலியு
மலட்டு வாய்வும் போமடங்கிக்-கொலட்டு
மூலைவேஞ்சின வேற்கண் ணேதிலமே கேளாய்
மலைவேம்பின் பேரை வழுத்து.

(இ-ள்.) கருமானுலையிற்காய்ச்சிய சினவேலனைய கண்களையுடைய அன்னமே! மலைவேப்பமரத்திற்கு மலட்டுக்கிருமி ரத்தகுன்மரோகம் ஓடிஓடிக் குத்துகின்ற வாதம் ஆகிய இவைகள் விலகுமென்க. 231

### சருக்கரை வேப்பமரத்தின் குணம்.

காயசித்தி யாகுங் கடிய சிலேத்மமறுந்
தூயவிந்து நாதமிவை சுத்தியுமாந்-தூயவருக்
கெந்திக் குங்கிட்டு மிலையருந்தில் வாயெல்லாந்
தித்திக்கும் வேம்புதற்குத் தேர்.

(இ-ள்.) தூயவர்களுக் கெந்திக்கிலுங் கட்டுகின்ற இலையில் மதுரமுள்ள சருக்கரை வேம்பினால் காயசித்தியும் சுக்கில சோணிதசுத்தியும் உண்டாம் கபரோகம் நீங்குமென்க. 232

### பாலைமரத்தின் குணம்.

வாதப் பெருக்குபித்த மாருச் சுவாசமுத
லோதுசர்வ தோஷமும்விட் டோடுங்காண்-தீதுபுரி
வேலைப் பொருவுவிழி மெல்லியலே காட்டிலுறை
பாலைக்கென வுன்னிப் பார்,

(இ-ள்.) வேலனையகண்களேயுடைய பெண்ணே! பாலமரத்திற்கு வாதநோய்க் கூட்டங்கள் பித்தரோகம் தமகசுவாசம் திரிதோஷம் ஆகிய இவைகள் ஒழியுமென்க. 233

வெட்பாலைமரத்தின் குணம்.

அக்கினியை வைத்திருக்கு மந்தவாதம் போக்குந்
திக்குள் திரி தோஷத்தைத் தீர்த்துவிடுஞ்-சொவிக்கவிரு
கட்பாலைக் கூற்றைவைத்த கான மடமயிலே
வெட்பாலை நன்மருந்தாம் விள்.

(இ-ள்.) மயங்கும்படியாக விருகண்ணிடத்திலிய மனைவைத்த பெண்ணே! அக்கினிக்குணத்தையுடைய வெட்பாலை மரமானது வாத வலியையும் திரிதோஷகோபத்தையும் நீக்குமென்க. 234

தீம்பாலைமரத்தின் குணம்.

மேகவெட்டை சன்னி விஷபாக நேத்திரநோய்
தாகமுத் தோஷஞ்சர்த்தி சாரனலம்-வேகமோ
டேறுசலம் பீனசமி ரத்தமூக்தீம் பாலையெனுந்
தூறுவா திக்ககலுஞ் சொல்.

(இ-ள்.) தித்தீப்புப்பாலைமரத்திற்கு மேகஉஷ்ணவெள்ளைசன்னி விஷபாகம் கண்ணோய் தாகம் திரிதோஷம் வாந்தி பித்தகோபம் நீரேற்றம் நாசிநோய் ரத்தக்கிராணி இவைநீங்கும். தூறுவாதி-தீம் பாலை. 235

மலைப்பாலைமரத்தின் குணம்.

விக்கல்வலி வாந்தி குன்ம மீறுபக்கச் சூலையொடு
மைக்கரப்பான் மந்தமிவை மாறுங்காண்-மைக்கண்
நிரைப்பாலை யொத்தமொழி நேரிழையே கேளாய்
வரைப்பாலையை யுண்ட வர்க்கு.

(இ-ள்.) மையணிந்தகண்களேயும் பாலன்னமொழியையுமுடைய நேரிழையே கேட்பாயாக, மலைப்பாலைமரத்திற்கு விக்கல் ஐவகைவலி வாந்தி வயிற்றுவலி விலாக்குத்தல் கருங்கரப்பான் மந்தாகினி இவை நீங்குமென்க. 236

குடசப்பாலைமரத்தின் குணம்.

வாதமறும் பேதிகட்டு மாறுத நீரிழிவும்
காதம்போ மேகங் கடக்குங்காண்-தீதடரப்
பொங்கு கரப்பானும் போகா விரணமும்போ
மிங்கு குடசப்பாலைக் கெண்.

(இ-ள்.) சூடசப்பாலைமரத்திற்கு வாதநோய் அதிசாரம் சீரிழிவு தந்திப் பிரமேகம் மிகக்கொடிதாகப்பொங்கும் கரப்பான் சிரங்கு ஆகிய இவைபோமென்க. 237

## குளப்பாலைமரத்தின் குணம்.

சுவாச காசம்பக்கச் சூலை யதிசார
மவாச வியர்ப்போ டனலந்-தவாத
கரப்பா னிவைவிலகுங் காரிகையே நாளு
முரப்பாங் குளப்பாலை யுண்.

(இ-ள்.) பலமுள்ள குளப்பாலை மரத்தினால் சுவாசகாசம் பக்கச்சூலை அதிசாரவியர்வை சுரம் கரப்பான் இவைபோமென்க. 238

## முள்முருக்கமரத்தின் குணம். இது கல்யாணமுருக்கு

முள்ளு முருக்கதுதான் மோதுகின்ற சாதகிருன்மங்
கள்ளமறத் தீர்க்குக் கனற்சுரமும்-விள்ளரிய
அக்கரமும் போக்கு மனல்வாய் வேக்காடகற்று
மிக்கவலி கொடுக்கும் விள்.

(இ-ள்.) முள்முறுக்கமரம் வாந்தி வயிற்றுவலி பித்தசுரம் அக்கரம் அனல் வாய்வேக்காடு ஆகிய இவற்றைநீக்கி மிகுவன்மையையுண்டாக்குமென்க. 239

## ஊழலாற்றிமரத்தின் குணம்.

அடவி வதிரூழ லாற்றி யெனுமூலி
படவிரணம் புண்கொறுக்கை பாமை-கடிதட்டத்தால்
வந்தவரை யாப்புவெள்ளை வாதப் பிடிப்புகுட்ட
மிந்தவகை நோயகலு மெண்.

(இ-ள்.) காட்டில்வளர்கின்ற ஊழலாற்றிமரத்தால் மேகவிரணம் ஒட்டுப்புண் ஆண்குறிவிரணம் பாமைபெனகிறசிரங்கு போகத்தால் வந்த அரையாப்பு வெள்ளை சீல்வாதம் பெருநோய் ஆகிய இவைகள் நீங்கு மென்க. 240

## வெள்வேல்மரத்தின் குணம்.

பித்த மயக்கமறும் பேருலகின் மானிடருக்
குற்ற சுரவாத மோடுங்காண்-குத்துகின்ற
சந்துக் குடைச்சல்விடுஞ் சர்வாங்க வாதம்போங்
கொந்துலவும் வெள்வே லுக்கு.

(இ-ள்.) வெள்வேல்மரத்திற்கு பித்தமயக்கம் வாதசுரம் சந்துக்குடைச்சல் சர்வாங்க வாதரோகம் ஆகிய இவைகள் நீங்குமென்க.

### மூங்கில்மரத்தின் குணம்.

சூதக வாய்வினது சோணிதக் தங்கா துவரு
மாதே சுரந்தணியும் வாதம்போம்-பூதரமே
லோங்கி வளர்ந்திழையு மோங்கலெனு மூங்கிலுக்கு
வாங்குஞ் சுவாசம்போ மாய்ந்து.

(இ-ள்.) மலையிலோங்கி வளர்ந்திழைகின்ற மூங்கில்மரத்திற்கு மாதாந்தருதுச் சோணிதக்கட்டு சுரம் வாதநோய் இரைப்பு இவைகள் போமென்க. 242

---

## செடி வகை

### ஆவாரையின் குணம்.

சொல்லுதற்கு மட்டோ தொலையாத மேகநீ
ரெல்லா மொழிக்கு மெரிவகற்று-மெல்லவச
மாவாரைப் பம்பரம்போ லாட்டுந் தொழிலணங்கே
யாவரை மூலி யது.

(இ-ள்.) நிதானமாய் வசமாவாரைப் பம்பரம்போ லாட்டுகின்ற தொழிலையுடையமாதே! ஆவாரைச்செடியானது சர்வபிரமேக மூத்திரரோகங்களையும் ஆண்குறி எரிவந்தத்தையும் கொடுக்கு மென்க.

### பொன்னாவாரையின் குணம்.

வெடிப்பு துவக்குதிரல் மேகப் புடைகள்
தடிப்பு தினவுதடி தங்கா-அடிக்கடியிங்
கென்னாவறைய விசையா லெழிலணங்கே
பொன்னா வரையதனைப் போற்று.

(இ-ள்.) என்னாவினாற் சொல்லமுடியாத வழகினையுடைய மாதே! பொன்னாவரைச் செடியினால் சருமவெடிப்பு சொறிந்தால் சருமத்துள் சிந்துதல் மேகப்புடைகள கண்டுகண்டாகத் தடித்தல் நமைச்சல கரணாக்கடி ஆகிய இவைகள் போமென்க. 244

### நீர்ப்பூலாவின் குணம்.

மாந்தங் கனம்பொருமல மாறுச் சலததுடனே
சேர்ந்த சொறிசிரங்குந் தீருங்காண்-ஏந்தெழிலைச்
சேர்ப்பாகக் கொண்ட செழுந்திருவே பூவிலுறை
நீர்ப்பூலாப் பூண்டை நினை.

(இ-ள்.) ஏந்து எழிலை தேசமாகக் கொண்டவிலக்கு மனைய பெண்ணே! நீர்ப்பூலாச்செடியால் மாந்தம் கெனச்சூடு வயிறிரைச்சல் சொறி சிரங்கு அதிமூத்திரம் ஆகிய இவை யொழியுமென்க. 245

பேய்மிரட்டியின் குணம் இதுவே வெதும்படக்கி.

*மாந்த கணங்கழிச்சல் மாறு வயிற்றுவலி*
*சேர்ந்து வருங்கரப்பான் தீச்சுரமும்-பேர்ந்துவிடுமே*
*வேய்மிரட்டுந் தோளுடைய மெல்லியலே ராசியமாய்ப்*
*பேய்மிரட்டி யென்றொருகாற் பேசு.*

(இ-ள்.) மூங்கிலைமிரட்டுந் தோள்களையுடைய பெண்ணே! பேய்மிரட்டி கணமாந்தம் பேதி வயிற்றுநோய் கரப்பான் கோரசுரம் ஆகிய இவைகள் போமென்க. 246

குன்மக் குடோரியின் குணம்.

*சூலையோ டீளைகொலை யாதகாசங் கயநோய்*
*காலனென்ற குன்மங் கலங்காண்-ஞாலமிசை*
*நன்மைக் குரியகுண நல்குவமென் றூற்றிலுறுங்*
*குன்மக் குடோரி தனக்கு.*

(இ-ள்.) ஆற்றோரங்களிலிருக்கும் குன்ம குடோரிச் செடியால் சூலை சுவாசம் இருமல் க்ஷயம் குன்மரோகம் இவை நீங்குமென்க.

விடத்தேரின் குணம்.

*முளையைவரு விக்கின்ற மூலரோ கத்தை*
*யனையு முதிரத்தை யடங்கா-துளைதாக*
*வேகத்தைப் போக்கிவிடும் வெய்யவிடத் தேர்சக்ர*
*வாகத்தைக் காய்முலையாய் வாழ்த்து.*

(இ-ள்.) வெப்பத்தையுடைய விடத்தேரின் செடிக்கு முளையை வருவிக்கின்ற மூலம் வயிற்றுப்பிடுங்கலையுடை ரத்தகிராணி அதிதாகம் இவை போமென்க. 248

தகரையின் குணம்.

*தகரை படர்தா மரையைச் சொறியைத்*
*தகர வடிக்குமந்தக் கண்ணே-டிகலான*
*அத்திசுரத்தையு மகஞ்செய்யு மிம்மூலி*
*யுத்தமா மென்றே யுரை.*

(இ-ள்.) தகரைச்செடியானது படர்தாமரை சொறி அக்கினிமந்தம் அஸ்தாது சுரம் ஆகிய இவைகளை நீக்குமென்க. 249

நின்றல்சிணுங்கி நிலம்புரண்டி இவைகளின் குணம்.

நின்றாற் சிணுங்கியது நிலவிஷம் போக்குமினுங்
குன்றாந் தனத்தியரைக் கூட்டுவிக்கு-மென்று
மலம்புரண்ட நோயகற்று மாள்வசிய மாக்கும்
நிலம் புறண்டிமூலி நினை.

(இ-ள்.) நின்றாற்சிணுங்கிச் செடியானது சர்ப்பவிஷத்தை நீக்கும் ஸ்திரீவசியத்திற்காகும் நிலம்புரண்டிச்செடியானது அற்ப விஷ ரோகங்களை யொழிக்கும் புருஷவசியத்திற்குதவும் என்க. 250

உரலாமணக்கின் குணம்.

உரலா மணக்குக் குரத்த வலிசூலை
விரைவான குன்மமும்போம் விள்ளப்-பிரிவாம்
மூளைமூல மோடிரத்தம் முன்கால் விரணங்
கொளுமேக மெல்லாம்போங் கூறு.

இதுவுமது.

எலியா மணக்கோ எலிவிஷமுஞ் சேர்ந்த
பலவிஷமு மோட்டிவிடும பாரில்-வனுபேதி
யுண்டாக்கு விக்கு முரத்தகுன் மம்பீலிக
மண்டாம லோட்டிவிடு மால்.

(இ-ள்.) உரலாமணக்கஞ்செடிக்கு சரீரநோவு குத்தல் குன்மம் மூளைமூலம் கழல்வாதவிரணம் ரத்தமேகமுதலிய சிலமேகங்கள் எலிவிஷம் சில்விஷம் வயிற்றுவலி பீலிகரோகம் ஆகிய இவைகள் நீங்கும் இது விரோசனத்தை யுடையது என்க. 251

சணப்பின் குணம்.

கைப்பும் உரைப்புங் கலந்திருக்குந் தின்றக்கால்
மெய்ப்புள்ள யுத்த விலக்குங்காண்-நெய்ப்பாங்
கருப்பங்க ளெல்லாங் கரைந்து விழுமே
உருப்பங்க மாஞ்சணப்புக் கோ,

(இ-ள்.) கசப்புங்காரமுமுள்ள சணப்புச்செடிக்கு பித்தகோபமும் சில வாதரோகங்களும் நீங்கும் இளங்கருப்பங்கள் கரையும்.

மாமாலையின் குணம்.

பாண்டுடனே மெய்யிற் படர்சோகை யைத்தூரத்துந்
தூண்டுநீராம்பலெனுந் துன்பொழிக்கும்-பூண்டதோர
நீரை யிறக்குங்கெடுந்துயர மாற்றிவிடு
நாறியரே மாமாலை என்று.

(இ-ள்.) மாமாலைச்செடியானது பாண்டுரோகம் சரீரத்திறி படர் சோகை நீராம்பல்ரோகம் ஆகிய இவைகளை நீக்கும் அதிகமாக நீரை யிறக்குமென்க. 253

கோடகசாலையின் குணம்.

கோடகசா லைக்குக்கொடிய அனல் மேகமொடு
போடகங் கிரந்திகுஷ்டம் புண்ணுறும்-நாடக்ஞ்செய்
யப்பித்த வாய்வு மலர்வரம் விரணமும்போம்
பொற்புற்ற பொன்னே புகல்.

(இ-ள்.) அழகுபொருந்திய திருவனையபெண்ணே! கோடகசாலை செடிக்கு சுரம் வாதப்பிரமேகம விஷ்டபோகரோகம் சிரங்கு குஷ்டம் விரணம் பித்தவாததொந்தம் ஜிக்வாகண்டகரோகம் ஆகிய இவைகள் விலகுமென்க. 254

வட்டக்கிலுகிலுப்பையின் குணம்.

வட்டக் கிலுகிலுப்பை மாறுச் சொறிகிரந்தி
துட்டகண்ட மாலைபல சோபைகோ-வட்டமுலை
மானே விரணவகை மாந்தமுத ஞேயெல்லாந்
தானே யகற்றுமெனச் சாற்று.

(இ-ள்.) வட்டமாய் பருந்தமுலைகளையுடைய பெண்ணே! வட்டக் கிலுப்பைச்செடி சொறிகிரந்தி கண்டமாலை பற்பல சோகை விரணங்கள் அக்கினிமாந்தம் இவற்றை நீக்கும. 255

வெள்ளைக்கிலுகிலுப்பையின் குணம்.

விடவினங் களைப்பிடித்து விண்ணேற்றும் வந்த
விடசன்னி தோஷை விரட்டுங்-தடமாரும்
வெள்ளைக் கிலுகிலுப்பை மென்பூண்டது புவிக்குட்
கிள்ளைக் குதலைமின்னே கேள்.

(இ-ள்.) கிளிபோன்ற குதலைமொழியையுடைய மின்போல் பவளை மலையில் முளைத்தவெள்ளைக் கிலுகிலுப்பை தாவரசங்கம் விஷங்களையும் விச்சன்னிபாதரோகத்தையும் நீக்குமென்க. 556

சந்திரகாந்தி சூரியகாந்தி இவைகளின் குணம்.

சந்திரகாந் திக்குத் தழலெரிச்சல் நீர்க்கடுப்பும்
உந்தவலி யாவு மொடுங்குங்காண்-சந்திலுறும்
பாரிய வாதம்பருகு நீரேற்ற மும்போஞ்
சூரிய காந்திக்குச் சொல்.

(இ-ள்.) சந்திரகாந்திச்செடிக்குப் பித்த எரிவும் நீர்க்கடுப்பும் தொப்புள்வலியும் நீங்கும். சூரியகாந்திச்செடிக்கு சகளுவர்த்த வாத ரோகமும் சலதோஷமும் நீங்குமென்க. 257

### பேயகத்தியின் குணம் இதுவே சீமையகத்தியாம்.

தம்மைக் கண்டாலிரத தாதுவிலாம் பொருட்களும்
வெம்மைப் புடைகளையும் வீறுநெய்-யம்மையுறுந்
தூயகத்தி யுங்கலங்குந் தோதகக்கண் மாதே
பேயகத்தி மூலிகண்ட போ்.

(இ-ள்.)பேயகத்தியால் ரசதாதுக்கிருமிகளும்உஷ்ணச்சொறியும் தினவும் நீங்கும், ரத்தநரம்பு பிரகாசிக்கும். நெய்-ரத்தம், அம்மை-அழகு. 258

### ஈச்சுரமூலியின் குணம்.

பலபல வீக்கஞ்சன்னி பாதங்க ளோடு
நலமகல் விஷங்கள் நடுக்குங்-கலகலெனப்
பேச்சுர முண்டாகுமலர்ப் பெண்ணனமே நீகேளா
யீச்சுரமூலி தனக் கின்று.

(இ-ள்.) மலரில் வசிக்கும் பெண்ணன்னம்போன்றவளே! ஈச்சுர மூலியால் விஷசோபை முதலிய சோபைகளும் சன்னிகளும் பலவிஷங்களும் நீங்கும். உரத்தவார்த்தை யுண்டாமென்க. 259

### நிலவிளாவின் குணம்.

அழன்ற கணவேக மதிகதாகந் தீருஞ்
சுழன்று வருபித்தந் தொலையு-முழன்று
பொருநிலை மேகத்துடனே புண்சுரமும் போகு
மருநில விளாவத் தயாந்து.

(இ-ள்.) நிலவிளாவினால் வெதும்புகின்ற கணச்சுரம் அதிதாகம் பித்தகோபம் மாறுப்பிரமேகம் விரணசுரம் இவை நீங்கும். 260

### சங்கங்குப்பியின் குணம்.

கரப்பான் கிரந்தி கருங்குட்ட ரோக
முரப்பான மேகமொழியுங்-கருப்பக்
கருங்கிரந்தி செவ்வாப்புக் கட்டிகளுமேகு
மருஞ் சங்கங்குப்பிக் கறி.

### இதுவுமது.

வெட்டை சொறிசிரங்கு வீறிவருஞ் சூலை
துட்ட வர்தங்கபந் துணுக்கிருமல்-கெட்டவிஷம்

அங்கங்கொள் பூச்சியிவை யாவும்போம் பித்தமுறுஞ்
சங்கங் குப்பிக்கெனவே சாற்று.

(இ-ள்.) சங்கங்குப்பிச்செடிக்கு ஆரைக்கடுவன் சிரங்கு விகர்ச்சி காகுஷ்டம் வாதப்பிரமேகம் கர்ப்பத்திலுண்டாகிய கருங்கிரந்திகுண் டாலகட்டி வெள்ளை தவளைச்சொறி விரணம் கீல்வீக்கம் குத்தல் மகாவாதம் சிலேத்மதோஷம் வறட்டிருமல் சர்ப்பவிஷம் ரத்தக்கிருமி ஆகிய இவைகள்போகும் பித்தாதிக்கமென்க. 261

கறிமுள்ளியின் குணம்.

ஈளையிரும விரைப்புச் சுவாச மறும
வாளைவென்ற கண்ணுய் வழுத்தக்கேள்-நாளையென்
றில்லைக் கபச்சுர மதின்றேஇலகிடுநங்
கொல்லைக் கறிமுள்ளி கொள்.

(இ-ள்.) வாளையென்ற கண்களையுடையாளே! சொல்லக்கேட்பாயாக, கறிமுள்ளியினல் நெஞ்சிற் கோழைக்கட்டு காரம் தமகசுவாசம் சிலேத்மசுரம் ஆகிய இவைகள் நீங்குமென்க. 262

செம்முள்ளியின் குணம்.

செம்முள்ளி யென்றூர் சிலேத்மம் கடுகடுக்கும்
விம்முமுலை மாதே விளம்பக்கேள்-கம்முகின்ற
மாந்தகண மையமிவை மாறுஞ்சிருவருக்குச்
சேர்ந்தசுர தோஷமும்போஞ் செப்பு.

(இ-ள்.) விம்முகின்ற தனங்களையுடைய பெண்ணே! விளம்பக் கேள் செம்முள்ளியினல் கபப்பெருக்கம் கணமாந்தம் சுவாசம் குழந்தைகளுக்குண்டாகின்ற சுரதோஷம இவைபோம். 263

கண்டங்கத்திரியின் குணம்.

காசஞ் சுவாசங் கதித்தக்ஷய மந்தமனல்
வீசுஞ்சுரஞ்சன்னி வினைதோஷ-மாசுறுங்கர
வித்தரையு ணிற்கா வெரிகாரஞ் சேர்கண்டங்
கத்தரியுண் டாமாகிற் காண்.

(இ-ள்.) வெப்பமுங்கார்ப்புமுள்ள கண்டங்கத்திரியினல் காசம் சுவாசம் க்ஷயம் அக்கினிமந்தம் சீதச்சுரம் சன்னிபாதம் ஏழுவகை தோஷங்கள் வாதரோகம் ஆகிய இவைகள் போமென்க. 264

தேட்கொடுக்கின் போதுக் குணம்.

தேட்கொடுக் குண்டாயிற் றினவடக்குந் தப்பாது
நாட்பட்ட புண்கரப்பான் காசமாங்-கீட்பட்ட

மாந்த கணமுமறு மானிலத்துட் சிலவிஷம்போம்
போந்த மருந்தாகும் புகல்.

(இ-ள்.) தேட்கொடுக்குச் செடியால் சுமைச்சல் பழையவிரணம் கடுவன் கணமாந்தம் சிலவிஷம் ஆகிய இவை விலகுமென்க. 265

## பெருந்தேட்கொடுக்கின் குணம்.

சுடுகாடு முட்டா னெனப்பெரி யோர்சொல்லும்
நெடியபெருந் தேட்கொடுக்கால் நேரா-பொடிக்கிருமி
புண்கிரந்தி மேகப்புண் பொல்லாக் கருங்கிரந்தி
விண்சரந்து போகாதே காண்.

(இ-ள்.) சுடுகாடு முட்டானென்கிற பெருந்தேட்கொடுக்கால் ரசதாதுவைப்பற்றிய அணுக்கிருமி விரணக்கிரந்தி மேகப்புண் கருங்கிரந்தி ஆகிய இவைகள் நிவர்த்தியாகுமென்க. 266

## சிறுதேட்கொடுக்கின் குணம்.

சிறுதேட் கொடுக்கதனாற் சேயிழையே கேளாய்
சொறிசிரங்கு புண்கரப்பான் சூலை-கொறுமாந்தை
மேகவெட்டை பித்தவெட்டை மீளா வெலும்புருக்கி
யாகம் விடுத்தோடு மறி.

(இ-ள்.) செவ்விய ஆபரணத்தையணிந்தபெண்ணே! சிறுதேட்கொடுக்கால் சுமைச்சிரங்கு விரணக் கரப்பான் ஷீல்வீக்கம் கொறுக்குமாந்தம் ஒழுக்குப்பிரமேகம் பித்தவெள்ளை அஸ்திசிராவம் ஆகியவைகள் நீங்குமென்க. 267

## நிலவேம்பின் குணம்.

வாதசுர நீரேற்ற மாற்றுஞ் சுரதோஷங்
காதமென வோடக் கடியுங்காண்-மாதரசே
பித்த மயக்கறுக்கும் பின்புதெளிவைக் கொடுக்குஞ்
சுத்தநில வேம்பின் றொழில்.

(இ-ள்.) பெண்களுயகமே! நிலவேம்பு வாதசுரம் மேகநீர்க்கோவை சுரதோஷம் பித்தமயக்கம் ஆகியவைகளைநீக்கும் தெளிவையுண்டாக்குமென்க. 268

## சிவனார்வேம்பின் குணம்.

சாய்க்குமிடிப் புண்பழம்புண் சர்மகுட்டம் பிளவை
நீக்கடுகால் வன்பெருநோய் சிந்துமா-நோய்க்கு
விதையாதி வேம்பினல் மெய்க்கழகு காலை
லுதையாதி வேம்பினை யுண்.

(இ-ள்.) சிவனார்வேம்பினால் ஆகந்துகவிரணம் நாட்பட்டபுண் சர்மகுட்டம் ராஜப்பிளவை சர்ப்பவிஷம் மகாவாதம் குஷ்டு அக்கினிமந்தம் இவைநீங்கும் அழகுண்டாம். தீக்கடு-மகாவிஷம். 269

நீர்முள்ளியின் குணம்.

பாண்டு குளுப்பையறும் பாரித்த நீரேற்ற
மாண்டுவிடு நீர்க்கட்டு மாறுங்காண்-பூண்டதொரு
வீக்கமெலா நீதாய் விடுமேநீர் முள்ளிக்குத்
தாக்கு மயில்விழியாய் சாற்று.

(இ-ள்.) கூரியவேலனைய கண்களையுடைய பெண்ணே! நீர்முள்ளி செடிக்குப் பாண்டு குளுப்பை சலக்கோவை மூத்திரச்சிக்கல் வீக்கங்கள் ஆகியவைகள் விலகுமென்க. 270

பெருமருந்தின் குணம்.

திரிதோடம் வெப்பு சிரங்கும் சொறிகஞ்சோ
டறிதேமல் வன்புடைய மண்டா-தொருவா
னருமருந்தை யொத்த வணங்கே யுலகிற்
பெருமருந்தை நீயெடுத்த பின்.

(இ-ள்.) தேவாமிர்தத்தைபொத்த பெண்ணே! பெருமருந்தினால் வாதாதிமுத்தோடம் சுரம்நமைக்கிரந்தி விடம் தினவு தேமல் மேகப்படை இவைகள் நீங்கும். 271

ஊமத்தையின் குணம்.

நாய்க் கடியால்வந்து நவிசெய்யு விரணமும்போம்
வாய்க்குழிப்புண் கட்டிகளு மாறுங்கண்-தீக்குணத்தைச்
சேமத்தில் வைததவிடத் தீருமுத் தோடமறும்
ஊமத்தை யின் குணத்தை யுள்.

(இ-ள்.) ஊமத்தையினால் நாய்க்கடிப்புண் குழிவிரணம் வித்திரிசி கட்டிகள் நஞ்சுதிரிதோடம் ஆகிய இவை நீங்கும். 272

கருவூமத்தையின் குணம்.

வந்தவிர தங்கள்கட்டு மேனிதருங் குஷ்டமொடு
வந்தவியர்ப் பரிப்பை மாற்றுங்காண்-முந்தப்
பெருமத்தஞ் செய்சுரத்தைப் போக்கும் கபப்பாங்
கருவூ மத்தைமூலி காண்.

(இ-ள்.) கசப்பையுடைய கருவூமத்தை சுக்கிலத்தையும் பாத ரசத்தையும் கட்டும் உடலுக்கு அழகையுண்டாக்கும் பெருவியாதி வியர்வைத்தினவு பயித்தியம் சுரம் இவை நீங்கும். 273

பொன்னூமத்தையின் குணம்.

பொன்னூமத்தை மூண்டாகிற் பூவையரே புண்கிரந்தி
தொன்மைக்கிராணி வருகரும-வன்பேதி
சுதத சுரத்துடனே போரவிடச் சுரமுஞ்
சத்தலதி சாரமும்போஞ் சொல்.

(இ-ள்.) பெண்ணே! பொன்னூமத்தையினல் விரணக்கிரந்தி நாட்சென்ற கிராணி அதிசாரம் பித்தவிஷசுரங்கள் பேதி இவை நீங்குமென்க. 274

மருளூமத்தையின் குணம்.

சிதசுரம் நீரேற்றஞ் சிலவிடங்கள் மந்தத்தோ
டுதையிவை யெல்லா மொழியுங்காண்-போத
இருளூருங் கூந்த லெழின்மாதே கான
மருளூ மத்தைக்கறிந்து வை.

(இ-ள்.) இருண்டகூந்தலையுடைய பழகுபொருந்திய பெண்ணே! மருளூமத்தைக் குளிர்ச்சுரஞ் சரீரத்திற் சகலக்கோவை அற்ப வீரியம் அக்கினிமந்தம் வாததோஷம் இவை விலகுமென்க. 275

நிலக்குமிழின் குணம்.

பேதியொடு கண்சொருகற் போராத சீதளமும்
வாதவலி கொட்டாவி மாந்தமும்போம்-ஓதச்
சலக்குமிழை யொத்த தனக்கருங்கண் மாதே
நிலக்குமிழைக் கையிலெடு நீ.

(இ-ள்.) நீர்க்குமிழியனைய கொங்கைகளையுங் கறுத்த கண்களையு முடைய பெண்ணே! நிலக்குமிழினல் சலமந்தப்பேதி விழிசொருகல் சீதளிப்பு வாதக்கடுப்பு அதிகொட்டாவி மந்தம் ஆகியவைகள் போம்.

நிலத்துத்தியின் குணம்.

தொடங்கா சங்கட்டி தொலையவப் புலோக
மடங்கி நீருகவெண்ணி னம்பொற்-குடம்போ
னலத்துத்தி பூத்ததலை நல்லா ரயிர்தே
நிலத்துத்தி மூலியை நினை.

(இ-ள்.) தேமல்படர்ந்த குடம்போன்ற தனங்களையுடையபெண்ணே! நிலத்துத்தி மூலியானது ஆரம்பமூலரோகத்தையும் வித்திரிக் கட்டிகளையும் போக்கும் கருவங்கத்தைப் பஸ்பஞ்செய்யும். 277

பெரும்பீளைச்செடியின் குணம்.

பாடான பேதியெனப் பன்னுபெரும் பீளைக்கு
மேடான வீக்கம் விலகுங்காண்-நாடருய்ய
பேய்பூத முமயறக்கும் பேசிற் பலபிணிபோக்
தூயோ ரறிவதைச் சொல்.

(இ-ள்.) பாஷாண பேதியென்கிற பெரும்பீளைச்செடிக்கு மிகு சோபையும் பைசாசமுதலிய சங்கை தோஷமுங் கல்லடைப்பு முதலிய சில ரோகங்களுந் தீருமென்க. 278

சிறுபீளைச்செடியின் குணம் இதுவே கற்பேதியாம்.

பாண்டு பெரும்பாடு பகர்மூத்திரக் கிரிச்சரம்
பூண்ட திரி தோஷமிவை போகுங்காண்-தாண்டிப்
பரிய வேளைத்தூரத்தும் பாரவயிற் கண்ணுப்
சிறிய பீளைக்குச் சிதைநது.

இதுவுமது.

நீரடைப்பு கல்லடைப்பு நீங்காக் குடற்சூலை
பேரிட ரிரத்தகணம் போக்குங்காண்-வாரிறுக்கும்
பூண்முலையே கேளாய் பொருந்துஞ் சிறுபீளை
யாமிது கற்பேதி யறி.

(இ-ள்.) மாரனை வெற்றிகொள்ளும் வேலனைய கண்களையுடைய பெண்ணே! சிறுபீளைச்செடிக்குத் தேகம்வெளிறல் அசிர்க்கரரோகம் வாத மூத்திரக்கிரிச்சரம் முததோஷம் மூத்திரச்சிக்கல் அஸ்மரி ஆந்திரபித்தவாதம் சோணிதவாதங்கள் ஆகியவைகள் போமென்க.

பல்லிப்பூண்டின் குணம்.

வல்விடந் தோடசுரம் வாதபித் தங்களோடு
பல்வலியும் பஞ்சாய்ப் பறக்குங்காண்-கல்லோர்பாற்
சொல்லிப்பாற் பாடாண தாளகமுஞ் சுத்தியதாம்
பல்லிப் பூண்டுண்டாயிற் பார்.

(இ-ள்.) பல்லிப் பூண்டில் சர்ப்பவிஷம் சுரதோஷம் வாதபித்த தொந்தம் பல்வலி இவைபோம் பாஷாணமுந் தாளகமுஞ் சுத்தியாம்.

**தாணிப்பூண்டு, பொரிப்பூண்டு இவைகளின் குணம்.**

*தாணிப்பூண் டேயிருந்தாற் ருவிவரு மேகத்தை*
*நாணிப் போகச்செய்யு நானிலத்துள்-வீணி*
*லெரிகிரந்தி மேக மிருக்குமோ வூறிற்*
*பொரிபூண்டின் பேரைப் புகல்.*

(இ-ள்.) *தாணிப்பூண்டு ரத்தபிரமேகத்தை நீக்கும் பொரி பூண்டினால் அக்கினிகிடகிரந்தி மேகம் இவை நீங்கும்.* 281

**குருவிச்சுப்பூண்டின் குணம்.**

*குருவிச்சிப் பூண்டெனவே கூப்பிட்டாற் போதும்*
*வருவிச்சு குஷ்டம் மலடும்-ஒருமிச்ச*
*மேகக் கரப்பான் விடமாந்தஞ் சீதரத்தம்*
*பேதமறப் போமொருகாற் பேசு.*

(இ-ள்.) *குருவிச்சிப் பூண்டினால் பெருவியாதி மலடு சிலேஷ்ம மேகங் கரப்பான் விஷமாந்தம சீதரத்த கிராணி இவைகெடும்.* 282

**தலைச்சுருளின் குணம்.**

*பாண்டகற்று மெய்யிற் படர்குஷ்ட நோய்விலக்கும்*
*நீண்ட விருதயநோய் நீக்குங்காண்-தாண்டதம்பை*
*முன்னே யொழித்துவிடு மூவாத தலைச்சுருளி*
*யென்னே யுலகி லிசை.*

(இ-ள்.) *தலைச்சுளிப்பூண்டு உடல்வெளுப்பு படர் குஷ்டம் இருதயநோய் ஆகந்துகசோபை இவைகளைப்போக்கும்.* 283

**கருப்பு மணத்தக்காளியின் குணம்.**

*வெவ்வெழலு மாறும் விரிகுறர்க்கம் மற்போடி*
*மொல்வ சிசுவுக்கா முலவைவிடுஞ்-செவ்வி*
*யருமணிக் கச்சுமுலை யாயிழையே கேளாய்*
*கருமணத் தக்காளிதனைக் கண்டு.*

(இ-ள்.) *அரிய விரத்தினைக் கச்சணிந்த தனங்களையுடைய பெண்ணே! கருமணத்தக்காளியினால் பயித்தியவெப்பம் சுரசாத ரோகம்பாததோஷம் இவைபோம் இதுபாலர் சிகிச்சைகளுக்குதவும்.* 284

**சிவப்பு மணத்தகாளியின் குணம்.**

*கந்ததாளிம் புண்ணைக் கைங்கையினு லுள்ளுக்குள்*
*வந்தவேக் காட்டைமிக மாற்றுங்காண்-முந்தனில்*

ஐயவினை பையாற்றி விடுகற் புலத்துச்
செய்ய மணத்தக்காளிச் சீர்.

(இ-ள்.) சிவப்பு மணத்தக்காளியானது கந்ததாளிவிரணம் உட்சுரவேகம் வாதகபதொந்தம் ஆகிய இவைகளைப் போக்குமென்க. 285

நல்வேளையின் குணம்.

சிரநோய் வலிகுடைச்சல் தீராச் சயித்திய
முரநோ யிவைக ளொழியு-முரமேவும்
வில்வேளைக் காயும் விழியாய் பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில்.

இதுவுமது.

நல்லவேளைப் பூண்டை நாடுங்கால் வாதமும்போஞ்
சொல்லும் ஐயத்துடனே சோபையறும்-மெல்லமெல்லத்
தக்கவனலும் பித்துந் தாமெழும்புஞ் சாந்தமின்றி
சக்கரநோய் விஞ்சு மறி.

(இ-ள்.) கரும்புவில்லேந்திய மதனனைக்கோபிக்குங் கண்களையுடையபெண்ணே! நல்வேளையினல் சிரஸ்தாபரோகம் சரீரநோய் குடைச்சல் சீதளம் மார்வலி வாததோடம் கபரோகம் வீக்கம் இவைபோம் பசியுஞ் சூடும் பித்தாதிக்கமும் ஜிக்வாகண்டக ரோகமு முண்டாம்.

நாய்வேளையின் குணம்.

வாதமுடற் கடுப்பு வன்சூலை காதிரைச்ச
லோதமிகு கெசமு மோடுங்காண்-நேபோதெரிந்து
காய்வேளைக் காயும்விநக் காரிகையே வையமதில்
நாய்வேளை யுண்டுநவில்.

(இ-ள்.)புட்ப பாணம்விடுதலுக் கோபிக்காநின்ற மதனனைச்சினக்கும்விழிக் காரிகையே! நாய்வேளையால் வாதப்பொருமல் தேகக்கடுப்பு குத்தல் கர்னநாதரோகம் சிலேத்மபீனிசநோய் இவைகள்போம்,

கொள்ளுக்காய்வேளையின் குணம்.

வாதமிக்க தென்பார்க்கும் வாய்வறட்சி யென்பார்க்கு
மீதுதந்த மூலநோ யென்பார்க்கு-மோதமுற்ற
சொள்ளுக்கா தாரகபந் தோற்றியதென் பார்க்குமொரு
கொள்ளுக்காய் வேளைதனைக் கூறு.

(இ-ள்.) கொள்ளுக்காய் வேளையினால் வாதாதிக்கமும் நாவறட்சியும் தந்தமூலநோயும் சொள்ளுவடியச் செய்கின்ற கபமும்போம்.

கல்லுருவிப்பூண்டின் குணம்.

கல்லுருவிப் பூண்டுபல கட்டிகளை யுங்கரைக்கும்
வல்லுதிரக் கட்டறுக்கும் வந்தபுண்ணை-மெல்லரிய
மேகத்தை வல்விடத்தை மீறுதொடக் கிடுமு
லோகத்தைச் சுத்திசெய்யு மோர்.

(இ-ள்.) கல்லுருவிப்பூண்டு பலகட்டிகள் ரத்தக்கடிப்பு கிரந்தி பிரமேகம் சர்ப்பவிஷம் இவைகளை நீக்கும் இரும்பைச்சுத்திசெய்யும்.

எரிசாலை, குதிரைக்குளம்படி இவைகளின் குணம்.

பூவில் எரிசாலைப் பூண்டிக் கிழப்புவலி
கூவியமுஞ் சூலையனி லக்குறையுங்-தாவு
குதிரைநடை வாயுசன்னி கூறுதினவும் போங்
குதிரைக் குளம்படியைக் கூறு.

(இ-ள்.)எரிசாலைப்பூண்டுக்கு தனுஸ்தம்பவாதமும்கீல்குத்தலும் வாதகோபமும் நீங்கும் குதிரைக்குளம்படிப் பூண்டுக்கு அஸ்வ வாதமுஞ் சன்னியுந் தினவும் விலகும் இதனைக் குளித்திபூண்டு என்பர்.

சுளுக்குநாயகத்தின் குணம்-விருத்தம்.

சுளுக்கு நாயகந் தோடஞ் சுரமொடு
சுளுக்கும் வாங்குந் தொடுத்தகை கால்களின்
சுளுக்கு மேற்கறடுங் கரைக்குஞ் சொல்லேனுஞ்
சுளுக்கு மேல்வீழி ரத்தக் துடைக்குமே.

(இ-ள்.) சுளுக்கு நாயகப்பூண்டு சப்ததோஷம் சுரமெலியினால் வந்த தேகச்சுளுக்கு சுபாவக்கைகால்களின் சுளுக்கு ரத்தங்கட்டிய கறடுகளுக்கு மேலுண்டாகிற ரத்தத்தடிப்பு ஆகிய இவைபோம். 291

கிரந்திநாயகத்தின் குணம்.

சீதமறு மாவிடமுந் தீரும்விழி நோயகலும்
பூதமொடு மருளும் போகுங்காண்-மேதினியுள்
ளாயகத்துப் புண்கிரந்தி யாறுமயி லே கிரந்தி
நாயகத்தி னாலே நவில்.

(இ-ள்.) மயில்போன் றசாயலையுடையபெண்ணே! கிரந்திநாயகப் பூண்டினால் சீதளம் சர்ப்பவிஷம் கண்ணோப் பைசாசமுதலிய சங்கை தோஷம் உள்புண் கிரந்தி இவை நீங்குமென்க. 292

### பிளவை கொல்லிப்பூண்டின் குணம்.

பிளவைகொல்லிப் பூண்டிருந்தாற் புண்விரணம் பேரு
மளவையுறு மேக மடக்கு-முளர்மாந்தை
யாறப் பிளவைகட்டி யெல்லா முலர்ந்திடுமே
பாருக் கவினணங்கே வாழ்த்து.

(இ-ள்.) நீங்கா வழகினையுடைய பெண்ணே! பிளவைகொல்லிப் பூண்டினால சிறுசிரங்கு கிரந்தி ஒழுக்குப்பிரமேகம் உள்மாந்தை ராஜ பிளவைக் கட்டி இவை நீங்கும். 293

### மலைதாங்கிப்பூண்டின் குணம் இதுவே வேற்பேந்தி.

வாதமெண் பதுஞ்சுரமும் வாதச் சயித்தியமுங்
காதுவலி பாரங் கரந்திடுங்காண்-போதச்
சிலைதாங்கி யென்றநுதற் செந்திருவே நீயும்
மலைதாங்கிப் பூண்டை வழுத்து.

(இ-ள்.) வில்லனைய புருவங்களையுடைய விலக்குமியை நிகர்த்த பெண்ணே! மலைதாங்கிப் பூண்டுக்கு சமஸ்த வாதரோகங்கள் ருட்சை வாத தொந்தம் கர்ணசூலை தேகபாரிப்பு இவைபோம். 294

### குடியோட்டிப்பூண்டின் குணம்.

புண்ணொடு கரப்பான் பொடிசிரங்கு சில்விஷங்கள்
கண்ணிருமல் மேகவலி தண்மேக-மெண்ணிற்
குடியோட்டு மாவிடமும் பலநோயுந் தீருங்
குடியோட்டுப் பூண்டால் குலைந்து.

(இ-ள்) குடியோட்டுப்பூண்டினால் பெருவிரணம் கரப்பான் சிறு சிறங்கு சிலவிஷங்கள் காசமேகவாயு சலப்பிரமேகஞ் சர்ப்பவிஷம் தந்தரோகம் ஆகிய இவைகள் விலகுமென்க. 295

### ஆடுதீண்டாப்பாளையின் குணம்.

ஆடுதீண்டாப் பாளைக் கக்கிருமி வன்சிலந்தி
நீடுகருங் குஷ்டம் நிறைகரப்பான்-ஆடிடச்செய்
யெண்பது வாய்வு மிக்ககுஷ்ட முநதீருந்
திண்பெறு நற்றுதுவுமாஞ் செப்பு.

(இ-ள்.) ஆடுதீண்டாப்பாளைக்குமலகபாதத்தாசயக் கிருமிகள்வாதத்திச் சிலந்திப்பூச்சிவிஷம் கருங்குஷ்டம் கரப்பான் சர்வவாதரோகங்கள் கிடிபகுஷ்டம் இவைநீங்கும் பலமும் சுக்கிலமும் உண்டாம். 296

### குழிமீட்டான் குணம்.

கணத்திலெழு மாந்தத்தைக் காணவுட் சூட்டைக்
கணத்திலே வேரைக் களையும்-பணத்தமுலைப்
பாலைச் சுரப்பிக்கும் பாரிற் குருமீட்டான்
காலைத்தொழு துண்ணுங் கால்.

(இ-ள்.) குழிமீட்டான்பூண்டு கணமாந்தத்தையும் உள்வெப்பத்தையும் போக்கும், முலைப்பாலைச் சுரக்கும்படிக் தச் செய்யுமென்க.

### செருப்படையின் குணம்.

செருப்படைக்கு வாதமந்தஞ் சேர்வான மேக
மிருப்படிகொள் பொல்லா இசிவும்-விருப்படிக்குஞ்
சூலையொடு வாதகுன்மந் தீர்ற்று தொருநாளும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

(இ-ள்.) வேலைநிகர்த்த கண்களையுடைய பெண்ணே! செருப்படைக்கு வாதகோபம் மந்தாக்கினி வெள்ளைவிழுல் ஆகிருஷ்ணாஸ் கம்பனவாதம் சூலைகுன்மம் நீங்குமென்க. 298

### கல்தாமரையின் குணம்.

வீரிய விருத்திதரு மெய்க்கு பலங்கொடுக்கும்
கூறிய குஷ்டதனைக் கோபிக்கும்-காரியத்தை
நற்றும் பரமாக்கு நங்கா யடுக்கலுறை
கற்றாமரை யதனைக் காண்.

(இ-ள்.) மலையில்முளைத்தகல்தாமரை சுக்கிலத்தையும் பலத்தையும் விருத்தியாக்கும். குஷ்டைநீக்கும் காரியத்தைச் செமபாக்கும்.

### கஞ்சாங்கோரையின் குணம்.

மாந்தக் கழிச்சலரும் மாந்தஞ் சுரங்கணம்போஞ்
சேர்ந்த மூலத்தின் றினவடங்கும்-பூந்தடக்கை
யன்னமே மேகமறுங் கஞ்சாங் கோரையினை
யுன்ன இருமலிலை யோர்.

(இ-ள்.) மலரைநிகர்த்த விசாலமான கைகளையும் அன்னம்போன்ற நடையையுமுடைய பெண்ணே! கஞ்சாங்கோரையால் மாந்தபேதி அக்கினிமந்தம் கணச்சூடு குதாங்குரானமைச்சல் பிரமேகம் காசமிவை நீங்குமென்க. 300

### கீழ்வாய்நெல்லியின் குணம்.

சீதமதி பித்தவடஞ் செவ்விழிநோய்க் கூட்டம்
பூதமொடு பேயிரத்தப் போக்குகளும்-பூதலத்துட்
டாழ்வாய்ப் பணிக்கேருந் தப்பாது நற்புலத்துக்
கீழ்வா யெனு நெல்லிக்கே.

### இதுவுமது.

கீழாநெல்லிக் குணந்தான் கேளாய் மதுமேகந்
தாழாக் காமாலைகளைச் சண்ணுந்தா-னேழனலுந்
தொக்கி னனலுந் தொலைக்குந் தொன்மேகம்போம்
தக்க விரணமுங்கெடுக்குந் தான்.

(இ-ள்.) கீழ்வாய்நெல்லிக்கு ஆமக்கட்டு அக்கினிகிடைவிஷம் நேத்திரரோகங்கள் பூதமுதலிய சங்கைதோஷம் ரத்தாதிசாரம் மதுப்பிரமேகமூத்திரம் காமாலை சப்ததாது கதசுரம் தாதுவெப்பம் நாட்பட்ட மேகப்புண் ஆகிய இவைகள் போகும் என்க. 301

### மயிர்மாணிக்கத்தின் குணம்.

மயிர்மா ணிக்கத்தால் வளர்மேகம் போகுஞ்
செயிரான மேகவெட்டை தீருங்-கபரோகம்
மாவிரணம் போக்குமிதில் வல்லிரதஞ் சேர்த்தரைத்துத்
தாயுண்பா ருண்டறிந்தோர் தாம.

(இ-ள்.)மயிர்மாணிக்கத்தினால் வளர்கின்ற மேகமும் வெள்ளையும் க்ஷயமும் நீங்கும். இதில் முறைப்படி ரசஞ்சேர்த்துண்ண விரணம் ஆறுமென்க. 302

### துளசியின் குணம்.

ஐயம் வயிறுளைச்ச லஸ்திசுரந் தாகமும்போம்
பையசுர மாந்தம் பறக்குங்காண்-மெய்யா
வாயினரோசகமும் போம் வன்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல்.

(இ-ள்.) கார்ப்பும்வெப்பமும் உள்ள துளசியினால் கபதோஷம் வயிறுளைதல் அஸ்திதாதுசுரம் அரூசி இவைபோமென்க. 303

### செந்துளசியின் குணம்.

செய்ய துளசிவிஷந் தீர்க்குங் கபமறுக்கும்
வெய்யபாடி விஷத்தை விண்ணேற்றுந்-தையலே

முத்தோஷத் துண்டா முரணேட்டு மவ்வழியா
மெத்தோஷ மும்போக்கு மெண்.

(இ-ள்.) சிவப்புத்துளசிவிஷம் கபாதிக்கம் அக்கினிதோஷம் திரிதோஷத்தால் சனிக்கின்ற பற்பல ரோகங்கள் இவைபோம். 304

## கருந்துளசியின் குணம்.

இருமலொடு நெஞ்சி விழுப்புச் சுவாசம்
கிருமிசல தோஷங் கேவல்-மருமச்
சளிருட்சை சூலைவிஷஞ் சந்நிபிவை போக்குந்
தளிரார் கருந்துளசி தான்.

(இ-ள்.) கருந்துளசி காசம் தொண்டைக்குள் குறுகுறுஎன்னும் ஒருசத்தம் இரைப்பு கிருமி நீர்கோவை இருமலால் வருங்கேவல் மார்புச்சளி சுரம் குதநல் விஷம சந்நிபாதம் இவைகளை ஒழிக்கும். 305

## நிலத்துளசியின் குணம்.

நிலத்துளசி மாதர்தரு நீண்முலைப் பால்மந்தம்
வலுத்த சுரம்பித்த கண்மாற்றும்-அலத்துகண
மாந்தசுரம் பிததசுர மாபெரிய சீதசுரஞ்
சேர்ந்தோடச் செய்யுந் தெளி.

(இ-ள்.) நிலத்துளசி முலைப்பாலால் வருமந்தம் வாதசுரம் பல பித்த ரோய்கள் கணச்சூடு மந்தம பிததருட்டை குளிர்ச்சுரம் இவற்றை நீக்குமென்க. 306

## நாய்த்துளசியின் குணம்.

கபத்தொடு குற்றிருமல் காணு தொழிக்குஞ்
சபத்தைச்செய் முத்தோஷஞ் சாடும்-விபத்தழலைக்
காய்த்துடலைப்போஷிக்குந் நாரணியி னுள்ளோர்க்கு
நாய்த்துளசி யீது நவில்.

(இ-ள்.) நாய்த்துளசியானது கோழை பொடியிருமல் திரிதோஷமாகிய இவைகளைமாற்றும். சரீரத்தைப்போஷணை செய்யும் எனக.

## கல்துளசியின் குணம்.

தாபச்சுரமுந் தனிவித் திரிகளுஞ்
சோபச் சிலவிஷமுந் தோற்றமே-கோபிச்சங்
குற்றுள சிலேஷ்மத்தா னூன்றுகாசம் பறக்குங்
கற்றுளசிப் பேருரைக்குங் கால்.

(இ-ள்.) கற்றுளசியால் தீச்சுரம் வித்திரிக்கட்டி நீர்வண்டு முதலிய சிலவிஷம் கோழையைத்தள்ளுகின்ற கபகாசம் தீரும். 308

### முள்துளசியின் குணம்.

எலிவிஷம்போம வெட்டுன் டிருக்கும் விரணக்
கிலிவிடும் விஷங்கள் கேளக்கா-துலவிவரும்
மட்டுறச்சி வர்தமலர் மண்டபத்துள் வாழுமாமே
முட்டுளசி பேரை மொழி.

(இ-ள்.) தேனையுடைய சிவந்தமலராகிய மண்டபத்துள் வாழ்கின்ற வன்மைபோல்பவளே! முள்துளசியால் எலிவிஷம் வெட்டுப்புண் அற்பவிஷமும் போமென்க. 309

### கழுதைத்தும்பையின் குணம்.

அரையாப்புக் கட்டி யனில முதிரம்
பிரியாச் சீதக்கடுப்பும் போகுந்-தரையிற்
பழுதைக் கொள்ளாச்செய்ய பங்கயப் பெண்ணேகேள்
கழுதைத் தும்பைச்செடியைக் கண்டு.

(இ-ள்.) குற்றமற்ற சிவந்ததாமரையில் வசிக்குமிலக்குமியனைய பெண்ணே! கழுதைத்தும்பையால் அரையாப்புக்கட்டி வாதநோய்ரத்தமுஞ் சீதமுங் கலந்து விழலால் வருங்கடுப்பு ஆகிய வைபோம். 310

### நெய்ச்சட்டியின்குணம் இதுவே சகதேவிதேவகர்தம்.

நெய்ச்சட்டி யென்றால் நிறைமெய்யுட் சுக்கிலமும்
பொய்ச்சிட்ட கண்ணொளியாம் பூவையரே-வெய்ச்சிட்ட
மேகமறுந் தீபனமாம் வெட்டையழலுந் தணியுந்
தாகமறும் பித்தமும்போந் தான்.

### இதுவுமது.

தூயழ குறப்புரியுஞ் சூதகந்த மாதிகளால்
வாயழுகி நாறுபுண்ணை மாற்றிவிடுந்-தீயழலை
நீக்கிவிடு நிம்பநெய்யை நெய்யாக்கிடும் வமனம்
போக்கிவிடு நெய்ச்சட்டிப் பூண்டு,

(இ-ள்.) நெய்ச்சட்டிப்பூண்டு வீரியவிருத்தி நேத்திர ஒளி பசி அழகு இவைகளையுண்டாக்கும். பித்தமேகம் வெள்ளை உட்சூடு தாகம் பித்தகோபம் ரசகந்தக முதலியவற்றால் பிறந்த வாய்ப்புண் அழற்சி வாந்தி இவைகளை நீக்கும் வேப்பெண்ணெய்க்குரியகசப்பைவிலக்கும்.

### எழுத்தாணிப்பூண்டின் குணம்.

பழமலங்கள் சாறும் பருக்குடற் சிதம்போஞ்
செழுமலச் சீதக்கடுப்பு மேகு-மொழியாக்
கரப்பான் சொறிசிரங்கும் காணு தகலு
முரப்பா மெழுத்தாணிக் கோர்.

(இ-ள்.) எழுத்தாணிப்பூண்டுக்கு மலக்கட்டு குடலின் சீதளம்எழு கின்றமலச்சீதக்கடுப்புகரப்பன்புடைசிரந்தி ஆகியவைகள்போமென்க.

### கொட்டைக்கரந்தையின் குணம்.

கொட்டைக் கரந்தைதனைக் கூசாம லுண்டவர்க்கு
வெட்டை தணியுமதி மேகம்போந்-துட்டச்
சொறிசிரங்கு வன்கரப்பான் றேன்று மலப்பை
மறிமலமுந் தானிரங்கு மால்.

(இ-ள்.) கொட்டைக் கரந்தைக்கு வெள்ளை ஒழுக்குப் பிரமேகம் சொறி சிரங்கு கரப்பான் இவைநீங்கும், மறிப்பட்டமலமுஞ்சாரும்.

### சிவகரந்தையின் குணம்.

வாந்தி யரோசகத்தை மாற்றும்பசி கொடுக்குஞ்
சாய்ந்த விந்துவைக்கட்டுந் தப்பாலே-யேந்தழைகைத்
தண்டா துறச்சேர்க்குஞ் சார்ந்த பரிமளத்தைத்
தண்டாச் சிவகரந்தை தான்.

### இதுவுமது விருத்தம்.

சுந்தரா று கரந்தை யதன்குணம்
மந்தவாதஞ் சரப்பனை மாற்றிடும்
தொந்தரோகந் துடைக்கு மிருமல
மந்தகோயுந் தணிக்கு கமமாணையே.

(இ-ள்.) மணமுள்ளசிவகரந்தை வாந்திபரோகம் விந்துநஷ்டம் பட் சீணவாதம் கரப்பான் வாதாதிதொந்தம் காசம் அக்கினிமாந்தம் இவைகளைநீக்கும், சடராக்கினியையும் வனப்பையும் உண்டாக்கும்.

### வெள்ளறுகின் குணம் வெண்பா.

குன்மமொடு வாயுகுடல் வாதஞ் சூலையிடை
சென்மம் விடுத்தோடிச் சிதையுங்காண்-வன்முலைபா
யுள்ளு கிரந்திசொறி யொட்டிய சிரங்குமறும்
வெள்ளருகு தன்னை விரும்பு.

(இ-ள்.) சொக்கட்டான் காய்நிகர்த்த தனங்களையுடைய பெண்ணே! வெள்ளறுகினல் குன்மம் வாதப்பிணி வாதக்குடல் விருத்தி கீல் பிடிப்பு நரம்புகளைப்பற்றிய கிரந்தி தினவு சிறுசிரங்கு இவைபோம்.

ஓரிலைத்தாமரையின் குணம்.

ஓரிலைத் தாமரையு ளுற்றகுணத் தைக்கேளாய்
மார்பிற்பா லில்லாத மங்கையர்க்கு-மோரிற்
குடிக்கப்பா லுண்டாகுங் கோர வன்மேகம்
படிக்கு ளிருககுமோ பார்.

(இ-ள்.) ஓரிலைததாமரையை எலுமிச்சங்காயளவு அரைத்து அரை ஆழாக்குபசுமோரில்இரண்டுவேளையும 40-நாள்கொடுக்கில் தனத்திற் பாலில்லாதவர்களுக்குப் பால்சுரக்கும் வாதமேகம் போகுமென்க.

ஓரிதழ்த்தாமரையின் குணம்.

தாதுவை யுண்டாககுந தனிமேகத்தை தொலைக்கு
மாதரவர் மேனிக் கழகுதருஞ்-சீதம்போஞ்
சீரிதழ்த் தாமரைவாழ் செய்யமட வனமே
ஓரிதழ்த் தாமரையை யுண்.

(இ-ள்.) அழகுதங்கிய யிதழ்களையுடைய தாமரையில் வசிக்குமன்னம்போல்பவளே! ஓரிதழ்ததாமரை சுக்கிலததையும் சவுந்தரியத்தையும் உண்டாக்கும், மேகரோகத்தையும் சீதத்தையும் நீக்குமென்க.

அந்தரத்தாமரையின் குணம்-இதுவே ஆகாயத்தாமரை.

அழுகிரந்தி குஷ்ட மடர்ந்த கரப்பான்
பழுவுறு மக்கூடு முதற்போகும்-அழகாரு
மந்திரநீலக் கருங்க ணேந்திழையே யெப்போழ்து
அந்தரத் ,காமரையா லாய்.

(இ-ள்.) அழகுபொருந்திய இந்திரநீலமணியை நிகர்த்தகரியகண்களையுடைய பெண்ணே! அந்தரத்தாமரையால் அளிந்த விரணமும் குஷ்டமும் கரப்பானும் மார்புக்குள் கட்டுகின்ற கிருமிக்கூடு முதலிய சில நோய்களும் போமென்க. 318

பற்படாகத்தின் குணம்.

சீதவாதச் சுரமுந் தீராத தாகமும்போம்
போதவிரு கண்குளிரும் பொய்யலவே-பூதலத்துள்
வற்பரம பயித்தியமு மாபித்தமுந் தொலையும்
பற்படா கத்தையுண்ணிப் பார்.

(இ-ள்.) பற்பாடகத்துக்கு சீதவாதசுரம் பித்தகாசரோகம் உன்மாதம் பித்ததோஷம் இவைபோம் விழிக்குக் குளிர்ச்சியுண்டாம்.

திருநீற்றுப்பச்சை, உருத்திரச்சடை இவைகளின் குணம்.

திருநீற்றுப் பச்சை சிலேஷ்ம சர்த்திதன்னை
விரிநீற்றைப் போலாக்கு மெய்யே-பெரிய
சுரத்திரத்த வாந்தி சுரமருசி யில்லா
வுருத்திரச் சடைக்கே யுரை.

(இ-ள்.) திருநீற்றுப்பச்சைகபவாந்தியைநீக்கும் உருத்திரசடை சுரத்தலாகிய உதிரவம்மை பித்தசுரம் அரோசகமிவைகளைநீக்கும்.

மாசிப்பத்திரியின் குணம்.

புளிப்புந் துவர்ப்பும் பொருந்தி யிருந்தாலுந்
தளிர்த்த காலைக்கனலைச் சாடு-நெளிந்த
வலிதனை விட்டோட்டு மடமாதே நீகேளாய்
மலிமாசிப் பத்திரிதான் வாழ்த்து.

(இ-ள்.) இளமைபொருந்திய பெண்ணே! நீ கேட்பாயாக; புளிப்புந்துவர்ப்புமுள்ள மாசிப்பத்திரி வாதநோயையும் உஷ்ணத்தையும் ஐவகை வலியையும் போக்கும். 321

மருக்கொழுந்தின்குணம்.

கண்ணிலுறு தோடங் கபஞ்சூ டிவைபோக்கும்
ஒண்ணனல் கைப்புக்காரம் உள்ளமரும்-மண்ணிற்
கொழுந்த மருக்குணத்தைக் கொண்டிருக்க போழ்துந்
தழைந்தபசி வண்மைதருஞ் சாற்று.

(இ-ள்.) கைப்பும் காரமும உஷ்ணமும் உள்ளமரு ஆனது நேத்திரபடலம் கபதோஷம்உட்சூடு இவைகளைநீக்கும் அந்தமருவின் குணத்தைப் பெற்றகொழுந்து மிகுபசியையும பலத்தையுங் கொடுக்கும்.

---

## கொடிவகை

ஆதொண்டையின் குணம்.

மண்டைக் குடைச்சலறும் வாயுவழிப் பிசகும்போந்
தொண்டைக் கபமுந் தொலையுங்காண் -மிண்டுசெப்பும்
வாதக் கடுப்பகலு மாதே ஆதொண்டைக்குப்
போதப் பலபிணியும்போம்.

(இ-ள்.) ஆடுதொண்டையால் மண்டைக்குடைச்சல் வாதபீநசம் நெஞ்சிற்கபாதிக்கம் வாதக்குடைச்சல் முதலிய ரோகங்களும்போம்.

பெருங்கட்டுக்கொடி, சிறுகட்டுக்கொடி இவைகளின் குணம்.

பெரியகட்டுக் கொடிக்குப் பேசு பெரும்பாடு
மரியுமல பேதியும்போ மப்பா-வுரிய
சிறுத்த கட்டுககொடிதான் சீதாத்த நீக்கு
மிறுத்த புனலேக்கட்டு மெண்.

(இ-ள்.) பெருங்கட்டுக்கொடியால் பெரும்பாடும் மலக்கழிச்சலும் போம் சிறுகட்டுக்கொடி சீதரக்தத்தையும் மேகநீரையும் கட்டும்.

சிறுகுறிஞ்சாக் கொடிக்குணம்.

சிறுக்குறிஞ்சா வாதமொடு சீதத்தை நீக்கும்
மறுவுதிர மில்லாத மாதர்க்-குறுமுலகி
லத்தி சுரமு மகலாக் கடிவிடமுந்
தத்தி யகலத்தகர்க்குந் தான்.

இதுவுமது.

வாதஞ்சுரஞ் சந்நிசுர மாறுக் கபசுரமும்
பூதலம் விட்டோடப் புரியுங்காண்-மாதேகே
ளக்கரநோய் தீர்க்கு மதிசுரந் தாகம்போ
தக்கசிறு குறிஞ்சா தான்.

(இ-ள்.) சிறுகுறிஞ்சால் வாதவிஷம் மாதாந்த உதிரச்சிக்கல் அஸ்திகதசுரம் காணுக்கடிவிஷம் வாதசுரம் சந்நிபாதசுரம் கபசுரம் பித்தஜிக்வாகண்டகம் சந்ததசுரம் தாகரோகம் இவைநீங்கும். 325

இண்டின்குணம்-இதுவே புனற்றண்டு.

பீநசத்தைப் போக்கும் பெருகியதோர் நீரேற்றந்
தானசிக்கச் செய்யமது சத்தியங்காண்-வானசைக்கும்
மண்டைக்குடைச்சலொடு வாய்ச்சந்நி யும்விலக்கும்
பண்டையுற்ற விண்டிதனைப் பார்.

இதுவுமது.

கட்டுவா தங்களறுங் காரிகையே மேகம்போ
முட்டுவா தங்களெல்லா முன்பொழியுங்-கிட்டும்
புனலினறுந் தண்டுக்குப் போரீளை சூலை
யனலி லெழுபுண்ணு மறும்,

(இ-ள்.) இண்டின்கொடியினால் பீநசம் சகலதோஷம் கபாலக்குடைச்சல் மூகசன்னி வாதத்தடிப்பு பிரமேகம் சூதகவாயு சுவாசம் கீல்பிடிப்பு தீச்சுட்டவிரணம் ஆகியவைகள் போமென்க வாய்-முகம்.

கர்ப்பூரவள்ளியின் குணம்.

காச விருமல் கதித்தமமை சூரிஜபம்
பேசுபுற நீர்க்கோவை பேருங்காண்-வீசுசுரங்
கற்பாறை யொத்துநெஞ்சிற் கட்டுகபம் வாதமும்போங்
கர்ப்பூர வள்ளிதனைக் கண்டு.

(இ-ள்.) கர்ப்பூரவள்ளியினால் காசம என்கிற பொடியிருமல் அம்மைக் கொப்பிளம் சிலேஷ்மதோஷம் புறநீர்க்கோவை ரூட்சை மார்பிற் கட்டு கபம் வாதக்கடுப்பு ஆகியவைகள் போமென்க. 327

முசுமல்லிகையின் குணம்.

வீக்கமறுங் காமாலை விட்டோடுஞ் சோபைவிடு
நீக்கமற விம்முமுலை கேரிழையே-ஏய்க்கும்
விடபாக மேகமும்போம் வீரியமு முண்டாம்
படர்முசு மல்லிகைக்குப் பார்.

(இ-ள்.) மார்பிலிடமில்லாமல் விம்மிய தனங்களையுடைய பெண்ணே! முசுமல்லிகையினால் சோகை காமாலை ஆகந்துகவீக்கம் விஷபாகரோகம் பிரமேகம் ஆகியவைகள்போம், சுக்கிலவிருத்தியாம். 328

ஊசிமல்லிகையின் குணம்.

மாந்தகணம் பொருமல் வாராது மைந்தர்களுக்
கூர்ந்தே யிரத்தகண மோடுங்காண்-கூந்தன்முடி
மானே சுரந்தணியும் வாங்காத வீக்கம்போங்
கானூசி மல்லிகைக்குக் காண்.

(இ-ள்.) கூந்தலைமுடிக்கின் றமான் போலுங் கண்களையுடைய பெண்ணே! காட்டிலுள்ள ஊசிமல்லிகைக்கு கணமாந்தம் வயிற்றுப் பிசம் சிசுக்களுக்குண்டாகிற உதிரசம்பவப்பிணிகள் சுரம் சோகை இவைபோம்.

மிளகாணையின் குணம்.

ஐயமகற் றுமசீரண வாதம் போக்குஞ்
செய்ய பித்த சூலைதனைத் தீர்க்குங்காண்-பையவரு
பீனையிரும விரைப்புப் பிசங் தொலைக்கு
நாளு மிளகரணை நன்று.

(இ-ள்.) மிளகரணை கபவிருத்தி அசீரணவாயு பயித்தியசூலை க்ஷயம் காசம் சுவாசம் வயிற்றுப்பிசம் ஆகியவை போமென்க. 330

### நாய்ப்பாகலின் குணம்.

நாய்ப்பா கலின்குணத்தை நன்று யுரைக்கக்கேள்
வாய்ப்பான மேகசத்தை மாற்றுங்காண்-தீப்பாயி
லிங்கமதைச் சுத்திசெய்யு மேரிற்பா ஷாணத்தைப்
பங்கமறச் சுத்திசெய்யும் பார்.

(இ-ள்.) நாய்ப்பாகல் மேகசம்நீக்கும், சாதிலிங்கத்தையும் பாஷாணத்தையும் சுத்திசெய்யுமென்க. 331

### பிரண்டையின் குணம்-இதுவே வச்சிரவல்லி.

பிரண்டையை நெய்யால்வறுத்துப் பின்பரைத்து மாதே
வெருண்டிடா தேற்று விழுங்கி-லரண்டுவரு
மூலத்தினவடங்கு மூலவிரத்த மறும்
ஞானத் திலுள்ளே நவில்.

### இதுவுமது.

மந்தம் வயிற்றுவலி வாயுவதி சாரமுளை
சேர்ந்த மூலங்கபடமுட் செம்புனற்போக்-கோய்ந்தநடை
யெல்லா மகலு மெழுப்பு மதிகபசி
மல்லார் பிரண்டையுண்டு வா.

(இ-ள்.) பெண்ணே! பிரண்டையை நெய்விட்டுவறுத்து அரைத்துக்கொட்டைப்பாக்குப் பிரமாணம் எட்டுநாள் அந்தி சந்தி சாப்பிட ஆசனத்தினவும் ரத்தமூலமும் ஒழியும். இதைப்பற்பல ஔஷதங்களாகப் பிரயோகிக்கில் அக்கினிமந்தம குன்மம் வாதாதிசாரம் முளைமூலம் கபதோஷம் ரத்தபேதி வாலசதி இவை நிவிர்த்தியாம். ஜடராக்கினிவளரும். 332

### களிப்பிரண்டையின் குணம்.

ஐயமறும் பித்த மணுகாம லோடிவிடுந்
தையலார் போகமிகச் சாருங்காண்-மையபக்
கரப்பான் விலகுங் கடிசிலந்தியும்போ
முரப்பாங் களிப்பிரண்டை யுண்.

(இ-ள்.) களிப்பிரண்டையினால் கபவிரணம் பித்ததோஷம் கரப்பான் காணாக்கடி சிலந்திவிஷம் நீங்கும் வீரியவிருத்தியாம். 333

தீம்பிரண்டை, புளிப்பிரண்டை இவைகளின் குணம்.

*தீம்பிரண்டை தன்னாற் செரியாமந்தம் ஆமந்*
*தேம்பிரைப்பு விக்கலையந் தின்வாதம்-போம்பலரும்*
*பார்க்கும் புளிப்பிரண்டை பாண்டுநோய் குன்மகயம்*
*போக்குமது சூடாம் புகல்.*

(இ-ள்.) *தித்திப்புப்பிரண்டையால் செரியாமந்தம் சீதபேதிஅதி கொட்டாவி சுவாசவிக்கல் சிலேஷ்மாதிக்கம் வாததோபம் ஆகியவை போம். உஷ்ணகுணமுள்ள புளிப்புப்பிரண்டை சரீரவெளுப்பு மார்பு நோய் வயிறுவலி க்ஷயமிவைகளை விலக்கும்.* 334

நறுந்தாளியின் குணம்.

*நாவுகளார் மார்பு நாபிமூலங் களிலுட்*
*டாவி வருமிரணஞ் சாத்தியமாங்-கூவலிடு*
*மெய்யழலு மோதணியு மேகமறும் வீரியமா*
*மூய்யவெளி னற்றாளி யுண்.*

(இ-ள்.) *நறுந்தாளியினால் தொண்டை மார்பு உந்தி மூலம் இவற் றின்புண்கள் தேகவெப்பம் பிரமேகமிவைபோம், சுக்கிலமுண்டாம்.*

பேய்பாற்சோரியின் குணம்.

*பேய்ப்பாற் சொரியினாற் பேதிமுதல் வெப்பகலும்*
*வாய்ப்பார் கடுப்புதிர மாறுங்காண்-போய்ப்பாய்ந்*
*துருவாம துள்ளலைக்கு மோங்கயற் கண்மாதே*
*பொருவார் பயித்தியமும் போம்.*

(இ-ள்.) *கயல்போன்ற கண்களையுடைய பெண்ணே! பேய்ப்பாற் சொரியால் அதிசாரவுட்சூடு ரத்தக்கிரணி பித்ததோஷம் ஆகியவை கள் போகுமென்க.* 336

குதிரைவாலியின் குணம்-இதுவே மிரியார்குந்தல்.

*கடுப்பு கழிச்சல் கனன்ற சுரதாக*
*மிடுப்பு வலிவாத மிவற்றோ-டடுப்ப*
*விதிரைவா வென்றழைக்கு மேகமிரு மலும்போங்*
*குதிரை வாலிக்குக் குலைந்து.*

இதுவுமது.

*காசம் பருப்படுவென் கண்மயக்க மீளையொடு*
*வாசங் கமழ்குழலாய் மாந்தமும்போம்-பேசத்*

தரியாது வாதகபங் தானே சொறிபோம்
மிரியார் குந்தற்கு விரைந்து.

(இ-ள்.) வாசம்பரிமளிக்கும் கூந்தலையுடையபெண்ணே! குதிரை வாலியால் மூலக்கடுப்பு அதிசாரம் சுரவேகத்தால் வந்தகாவறட்சி சகஞ்விருதவா தம் பிரமேகம் இருமல்கட்டி படுவன் நேத்திரமங்கல்கோழைஅக்கினிமந்தம்வா தகபதொந்தம்தினவு ஆகியவைகள் நீங்குமென்க

பவளக்குன்றிக் கொடியின் குணம்.

பவளக் குன்றிக்கொடிக்குப் பற்றிநின்ற மேகங்
கவிழிரத்த பித்த கயமும்-நவமாகு
சொறு கரப்பான் புண்கிரநதி தேலோர்கடுவன்
மறுகரப்பான் போமே மலைந்து.

(இ-ள்.) செங்குன்றிக்குவெள்ளை ரத்தபித்த க்ஷயம் நமைக்கரப்பான் விரணம் சிரங்கு சருமக்கடுவன் அழுக்குக்கரப்பான் இவைபோம்

முசுட்டையின் குணம்.

மாதே முசுட்டையது வாதமோ டையத்தைத்
தீதே புரிசீரைத் தீர்க்குங்காண்-வேதனைசெய்
வன்மலத் தைத்தள்ளும் வறட்சி சொறிசிரங்கைச்
சன்மமறப் போக்குமிசத் தான்.

(இ-ள்.) பெண்ணே முசுட்டையானது வாதகோபம் கபதோஷம் பிரமேக நீர்தினவுபுடை சிறுசிரங்குஇவைநீக்கும் மலத்தையிறக்கும்.

பொன்முசுட்டையின் குணம்.

வாதமொடு பித்தத்தை மாற்றுமே மாநிலத்திற்
சீத மகற்றுந் தினவடங்கு-மாதேகே
ளுண்டிக்கும் வாசனையா மோங்கிவளா ரனலைக்
கண்டிக்கும் பொன்முசுட்டை காண்.

(இ-ள்.) மாதேகேள் பொன்முசுட்டை வாதவலி மயக்கம் சீதம் நமைச்சல் உட்சூடு இவைகளைநீக்கும். உண்ணமணமாயிருக்கும்.

நஞ்சறுப்பான்பூண்டின் குணம்-இதுவேநஞ்சுமுறித்தான்.

தொடுநஞ்சு நாவாரத் துயக்குநஞ்சு மற்றூ
றிடுநஞ்சுந் தாவர நஞ்சேறிப்-படுநஞ்சுங்
கூண்டட னேகாதோ குயின்மொழியாய் நஞ்சறுப்பான்
பூண்டுதனை நீயெடுக்கும் போது.

(இ-ள்.) குயில்போலினிய மொழியாளே! நஞ்சறுப்பான் பூண்டினால் கீடசர்ப்பம் தீண்டுகலாலும் தானே நுகரலாலும் இடுமருந்தாலும் பாஷாணங்களாலும் வியாபித்தவிஷம் தீரும். 341

நீர்மேல்நெருப்பின் குணம்.

வாதமகா ரோகம் வாரினுங் கறையல்கி
மீதடாவன் றிமிரே மேவுகினு-மோதரிய
சீர்மே னிலம்பரவு தெய்வ மடமயிலே
நீர்மே னெருப்பே நினை.

(இ-ள்.) தெய்வத்தன்மை பொருந்திய மயில்போன்ற சாயலையுடைய பெண்ணே! நீர்மேல்நெருப்பினால் மகாவாதரோகமும் எத்தக்குறைவினால் பிறக்கின்ற திமிரவாதநோயும் விலகுமென்க. 342

முடக்கற்றன் குணம்.

சூலைப் பிடிப்பு சொறிசிரங்கு வன்கரப்பான்
காலைத் தொடுவளியுங் கனமலமுஞ்-சாலக்
கடக்கத்தா னேடிவிடுங் காசினியை விட்டு
முடக்கத்தான் றன்னை மொழி.

(இ-ள்.) முடக்கற்றான் மூலிகையால் கீல்பிடிப்பு சிரங்கு கிரந்தி கரப்பான் பாததாகவாதம் மலக்கட்டு ஆகியவைபோமென்க. 343

கொல்லங்கோவையின் குணம்.

சூலைபாண்டு திரிதோஷ மக்கிவைப்பு கண்ட
மாலை குடவின்வலி மாகுஷட-மாலவிஷ
முட்கரப்பான் மெய்யுரிப்பு முண்டோ கொல்லங்கோவை
கைக்குளிருககு வின்னுங் காண்.

(இ-ள்.) கொல்லங்கோவையால் சூலைவலிசரீரம் வெளிறல்பாண்டு திரிதோஷம் அக்கிப்புண் உட்சூடு கண்டமாலை ஆந்திர பித்தவாதம் மாகுஷ்டம் மகாவிஷம கரப்பான் நமைச்சல் ஆகியவைபோம். 344

கற்கோவை வரிக்கோவை அப்பைக்கோவை செங்கோவை
அருங்கோவை இவைகளின் குணம்.

வீக்க மகற்றுநஞ்சை வீட்டுநீர்ப் பேதிதரும்
போக்கு மதுவையழற் புண்ணொழிக்குந்-தேக்குறுகற்
கோவைவரிக் கோவையப்பைக் கோவைசெங் கோவைகருங்
கோவை முறையேயுணர் குணம்.

(இ-ள்.) இனிப்புள்ளகற்கோவை சோபையையும், வரிக்கோவை விஷத்தையும், அப்பைகோவை மேகவிரணத்தையும்நீக்கும் தேக்கு இனிப்பு. 345

நரிப்பயற்றங்கொடியின் குணம்.

நரிப்பயற் றங்கொடிக்கு நாடாது பித்தந்
தரிப்புற்ற ஐயமெல்லாந் தாழு-முருப்பொழிக்கு
மேகவெட்டை பித்தவெட்டை மீளாக் கரப்பனிவை
யாகம் விடுத்தோடு மறி.

(இ-ள்.) நரிப்பயற்றங்கொடிச்குப் பித்தசோபம் கபரோகங்கள் பிரமேகவெள்ளை அதித்திராமேகம் கரப்பான் இவைபோம். 346

மூக்குரட்டையின் குணம்.

சீத மகற்றுந் தினவடங்குங் காந்திதரும்
வாத வினையை மடிக்குங்காண்-பேதி
கொடுக்குமதை யுண்டாக்காற் கோமளமே பித்த
மடுக்குமே மூக்குறட்டை யால்.

(இ-ள்.) அழகியபெண்ணே மூக்குறட்டை ஆமம்நமைச்சல்வாத நோய் இவைகளை நீக்கும் அழகையும விரேசனத்தையும் பித்தப் பிணியையும் உண்டாக்கும. 347

வெள்ளைச்சாறடையின் குணம்.

வித்திரிதி மூலம் விழிப்படல மார்புநோய்
தத்துசுவாசந் தனிக்கருப்பை-யுற்ற
கருச்சிதறச் செய்சூசி காவாதமும்போம்
விருச்சிகத்தின்பேரை விரி.

(இ-ள்.) விருச்சிகம்என்கிற வெண்சாறடையால் வித்திரிக்கட்டி மூலவாயு கண்படலரோகம் நெஞ்சுநோவு சுவாசரோகம் கருப்பத்தை சின்னபடுத்துகின்ற சூசிகாவாதம் ஆகிய இவைபோம். 348

பொன்னுங்காணியின் குணம்.

காசம் புகைச்சல் கருவிழிநோய் வாதமனற்
கூசும பிலீகங்கு தாங்குரநோய்-பேசிவையா
வென்னுங்கர ணிப்படிவ மேமாஞ் செப்பலென்னை
பொன்னுங் காணிக்கொடியைப் போற்று.

(இ-ள்.) பொன்னுங்கண்ணியினுல் விழியைப்பற்றிய வாதகாசம் தும்பிரரோகம் கிருஷ்ணமண்டலரோகம் வாததோஷம் தேகச்சூடு பீலிகம் மூலரோக மிவைபோம சரீரத்தில் பொன்னிறமுண்டாம்.

புனற்றண்டின் குணம்.

கபவமன நாடிக் கமலங் காப்ப
விபமறு களத்தொலியு நீங்காச்-சுபமா
ரனற்றண்டைக் காட்டா வற்றசுரமு மேகும்
புனற்றண்டைச் சிந்திக்கும் போழ்து.

இதுவுமது.

கட்டுவாதங் கொடிய கான்மேகங் கீல்சுடோறு
மூட்டு வாதஞ்சூலே மூடிரணம்-விட்டுவிடுஞ்
சொல்லவொண் ணுவின்ப சுகமளிக்கு மாரமிர்தே
நல்ல புனற்றண்டி னுல்.

(இ-ள்.) சொல்லவொண்ணு வின்பசுகமளிக்கும் அமுதனையாளே! புனற்றண்டுக்குச் சிலேத்மவாநதி நாசியில்வீழ்கின்ற சலம் கரப்பன் காரணமின்றி அடைபட்ட கண்டத்தொனி நாளுநன்கைவிளேக்கின்ற பசியின் வரம்பைக்காட்டாத சீதசுரம் கட்டுவாதம் வாதப்பிரமேகம் சந்திகவாதம் சூலே கிரந்தி இவைபோம் நாடி-நாசி. கமலம்-சலம்.

அம்மான்பச்சரிசின் குணம்.

காந்தல் விரணமலக் கட்டுமேகத் தடிப்பு
சேர்ந்த தினவிவைகள் தேசம்விட்டுப்-பேர்ந்தொன்று
யோடுமம்மான் பச்சரிசிக் குண்மை யினத்துடனே
கூடுமம்மா னேத்தகண்ணுய் கூறு.

(இ-ள்.) இனத்துடன் சஞ்சரிக்கு மான் விழிகளேநிகர்த்த கண் களேயுடைய பெண்ணே! அம்மான்பச்சரிசிக்கு எரிபுண் மலபந்தம் பிர மேகக்கசிவு சரீரத்தடிப்பு நமைச்சல் ஆகியவைகள் போகுமென்க.

சிவப்பு அம்மான்பச்சரிசின் குணம்.

அரத்தவம் மான்பச் சரிசியெனு மூலிக்
குரத்த வன்மேக மொழியுங்-கரத்ததொரு
விந்துவு முண்டாகும் வெள்ளி பொடியா
மிந்துவினும் வாண்முகத்தா யெண்.

(இ-ள்.) சந்திரன்போன்ற வொளிபொருந்திய முகத்தையுடைய பெண்ணே! சிவப்பு அமமான் பச்சரிசிமூலிகந்து வாதப்பிரமேகம்போகும் சுக்கிலதாது விருத்தியாகும் இதனை வெள்ளி பற்பமாகுமென்க.

### சிறு அம்மான் பச்சரிசின் குணம்.

பாதுபுகல் வேனமுதா லங்கிகரு மெழுகாங்
தீதுபுரி மேகவெப்பந் தீருமினு-மோதுங்காற்
றேரம்மான் சீரமொக்குந தின்னுதையஞ் செம்மைநிறச்
சீரம்மான் பச்சரிசிச் சீர்.

(இ-ள்.) பாலுள்ள சிறு அம்மான் பச்சரிசியால் அங்கிகரு என்கிற சாதிலிங்கம் மெழுகாகும் மேகவுஷ்ணம் நீங்கும் நல்ல பசும்பாலுக்கொக்கும் இதனை உதயகாலந்தோறும் உண்பாயாக என்க. 353

### பொடுதலையின் குணம்.

பொடுதலையின் பேருரைத்தாற் போராமப் போக்கு
மடுதலைச்செய் காரமு மடங்குங்-கடுகிவரு
பேதியொடு சூலைநோய் பேசரிய வெண்மேகம்
வாதமுமபோ மெய்யுரக்கும் வாழ்த்து.

(இ-ள்.) பொடுதலையால் சீதபேதி இருமல் அதிசாரம் சூலைநோய் சிலேஷ்மப்பிரமேகம் வாதநோய் இவைபோம். தேகம்பலக்கும். 354

### கோத்தான் குணம்.

சித்த ரறிவார் சொறிகுழலாய் நீகேளாய்
கொத்தான் மிகக்குளிர்ச்சி கொண்டக்காற்-சுத்தப்
பிறமேக மூட்கிரிச்சம் பித்த மிளைப்பு
மறுமே தவறு தறி.

(இ-ள்.) நெருங்கிய கூந்தலையுடைய மாதே! அதிகுளிர்ச்சியுள்ள கொத்தானுக்கு ஒழுக்குப் பிரமேகம் மூத்திரக்கிரிச்சரம் பித்தநோய் அயர்ச்சி ஆகியவைநீங்குமென்க. 355

### நல்லநெருஞ்சின் குணம்.

நல்ல நெருஞ்சிலது நாளுங் கிரிச்சரத்தை
வல்ல சிரமனலை மாற்றுங்காண்-மெல்லியலே
மானிலத்திற் கல்லடைப்பும் வாங்காத நீர்கட்டுங்
கூனுறுமெய் வாதமும் போக்கும்.

இதுவுமது.

மேகவெட்டை நீர்ச்சுறுக்கு வீறுதிரி தோஷம்புண்
வேகசுர தாகவெப்பை விட்டோட்டும்-போகந்
தருஞ்சின் மதலைமொழித் தையலே நல்ல
நெருஞ் சிலதனை நினை.

(இ-ள்.) இன்பத்தைத்தருங் குதலைமொழியாளே! நல்லநெருஞ் சில் சொட்டுமூத்திரம் சுரவெப்பம்அஸ்மரிரோகம் நீரடைப்பு முடவா தம் பிரமேகவெள்ளை மூத்திரகிரிச்சரம் திரிதோஷகோபவிரணம் சுர தாகம் உஷ்ணம இவைகளை நீக்கும். 356

யானைநெருஞ்சிலின் குணம்.

மேகத்தைப் போக்கிவிடுமே வெண்குஷ்டந் தானொழிக்குந்
தேகத்திற் கல்லடைப்பைத் தீர்க்குங்காண்-மேனிதனில்
தேனையரும் பாகைத் திருதனுங் கிளிமொழியே
யானை நெருஞ்சி லது.

இதுவுமது,

யானை நெருஞ்சி லதுசீ தளமாகும
மானே யெனும்புருக்கி மாற்றுங்காண்-மேனிதனி
லுள்ள வெரிச்ச லுழலையுட் டாகமொடு
தள்ளுபித் தமும்போகுந் தான்.

(இ-ள்.) தேனையும் பாகையும் திருத்துமொழியாளே! குளிர்ச்சி யையுடைய யானைநெருஞ்சிலவெள்ளைவீழல் வெண்குஷ்டரோகம்அஸ் மரி அஸ்திசிராவரோகம் தேகயெரிவு உழலைதாகம் பித்தமயக்கம் ஆகி யவைகளைப் போக்குமென்க. 357

செப்புநெருஞ்சில் குணம்.

செப்பு நெருஞ்சில் திரிதோஷம் போக்கிவிடும்
வெப்பு முதலனைத்துமே வீட்டுங்காண்-செப்பாய
சுக்கில மேகம்போக்குந் தொலலை யனல்மாற்று
மிக்கு மருந்தாம் விரி.

(இ-ள்.) செப்புநெருஞ்சில் திரிதோஷம் சுரமுதலியநோய்கள்சுக் கிலமேகம் நீடித்த உட்சூடு ஆகியவைநீங்கும். நல்லமருந்தாம். 358

பேய்ப்புடலின் குணம்.

பித்தசுரஞ் சீதசுரம் பீரிக்குங் காமாலை
யுற்ற மசூரி யழற்றுக-நித்தியமுங்

காய்புடலை யண்ணக் கவிழ்க்கின்ற பித்தமும்போம்
பேய்ப்புடலை யுண்பாரைப் பேணு.

(இ-ள்.) பேய்ப்புடலால் பித்தகபசுரங்கள் காமாலை மசூரிகைதா கம் தேகங்காய்ப்பேறும்படி தள்ளுகின்ற மயக்கம் இவைகள்போம்.

### வல்லாரையின் குணம்.

அக்கர நோய்மாறு மகலும் வயற்றிழிவு
தக்கவிரத் தக்கடுப்புத் தானேகும்-பக்கத்தி
வெல்லாரையும் மருகதென் றேயுரைத்து நன்மனையுள்
வல்லாரையை வளர்த்து வை.

(இ-ள்.) வல்லாரையினல் பித்தஜிக்வண்டகரோகமும் மலக்கழிச் சலும் ரத்தகிராணியால் பிறக்கின்றகடுப்பும் நீங்குமென்க. 360

### பிரமியவழுக்கையின் குணம்.

கிலின் பசையாற் கிளைத்த வலிவீக்கங்
காலின் பிடிப்பொடுகை காலெரிவு-மேலிலெழு
வாதத்தா நோவு மலக்கட்டுஞ் சோபையும்போஞ்
சீதத்தாஞ் சப்தலைக்குத தேர்.

(இ-ள்.) சப்தலைஎன்கிற பிரமியவழுக்கைக் கீல்களின்கபம் விருத்தி யடைவதாற்பிறந்தவலி வீக்கம் கால்பிடிப்பு கைகால்எரிவுவாதக் கடுப்பு மலபந்தம் சோபை ஆகியவைகள் போகுமென்க. 361

### கையாந்தகரையின் குணம்-இதுவே கரசனுங்கண்ணி கரியசலை.

குரற்கம்மற் காமாலை குட்டமொடு சோபை
யுரற்பாண்டு பன்னோ யொழியு-நிரற்சொன்ன
மெய்யாந் தகரையொத்த மீளியண்ணு கற்புலத்துக்
கையாந் தகரையொ தநக் கால்.

(இ-ள்.) கையாந்தகரையால் சுரசாந்தரோகம் காமிலம் புண்டக குஷ்டம் வீக்கம் பாண்டு தந்தரோகம் ஆகியவைபோம், தேகத்திற் பொற்சாயலும் யாளிக்குச் சமதையானபலமும உண்டாகுமென்க.

### பொற்றலைக்கையாந்தகரையின் குணம்.

பொற்றலைக்கையாந்தகரை பொன்னிற மாக்குமுடலை
சுந்தமுறக் கட்குச் சுகங்கொடுக்குஞ்-சிற்றிடையாய்
சிந்தூரங் கட்காகுஞ் சிந்தைதனைத் துலக்கு
முந்திவளர் குன்ம மொழிக்கும்.

(இ-ள்.) பொற்றலைக்கையாந்தகரை தேகத்திற்பொற் சாயலையும் விழிக்குள் ஒளியையும் புத்திக்குத்தெளிவையும் உண்டாக்கும், குன் மக்கட்டியைப்போக்கும்; இதுபலவிதசிந்தூரஞ்செய்ய ஆம். 363

விஷ்ணுகிராந்தியின் குணம்.

செய்ய மாலின்கிராந்தி தீராத வல்சுரத்
தைய மறுக்கு மனற்றணிக்கும்-பையவரு
காச மிருமலையுங் கட்டறுக்கும் வாதத்தா
லாசலா டும்பிணி போக்கும்.

(இ-ள்.) விஷ்ணுகிராந்தி சுத்தசுரத்தார்ப் பிறந்தகபம் உட்சூடு கோழை இருமல் வாதப்பிணி இவைகளைநீக்கும். மால்-விஷ்ணு. 364

தொட்டாற்சுருங்கியின் குணம்.

மேகநீரைத் தடுக்கு மேதினியிற் பெண்வசிய
மாகவுன் னிருக்கு மதுவுமன்றித்-தேகமிடைக்
கட்டாகக் காட்டுகின்ற காலைத்துரத்திவிடுந்
தொட்டாற் சுருங்கியது சொல்.

(இ-ள்.) தொட்டாற்சுருங்கி மேகமூத்திரத்தைநீக்கும், பெண்வசியஞ்செய்யும் உடலிற் ஓடிகட்டுகின்ற வாதத்தடிப்பைக் கரைக்கும்.

கோட்டைப்பாசியின் குணம்.

மேகமறுந் தீபனமாம் வெஞ்சரமு மேகிவிடுந்
தேகமதிற் றேமலினஞ் சேருமோ-பாகுமொழி
மின்னே வெகுகுணஞ்செய் மென்கொட்டைப் பாசியினாற்
றுன்னுகரப் பானும்போஞ் சொல்.

இதுவுமது.

மிக்குகக்கு வானகனும் வெப்ப கிரந்தியறுந்
தக்க ஐயதாதந் தணியுங்காண்-மிக்ககிலின்
மட்டைப் பாய்ச்சுங்கூந்தல் மாதே யுலகத்திற்
கொட்டைப் பாசிப்பெயரைக் கூறு.

(இ-ள்.) அகலின்வாசனையைவீசும் கூந்தலையும்பாகனையசொல்லையுமுடையபெண்ணே! கொட்டைப்பாசியால் பிரமேகம் பித்தசுரம்தேமல் கரப்பான் கக்கிருமல் கிரந்தி கபவாதமிவைபோம், பசியுண்டாம்.

கானும்வாழையின் குணம்.

கானும் வாழைக்குமூலக் கண்குழிப்புண் ணாறிவிடு
மானுலும் போக மதிகரிக்கு-மானேகேள்

ஐயம் விளையு மனற்றணியு நீங்காத
பையுதிர மாறுமுனனிப் பார்.

(இ-ள்.) கானும்வாழைக்கு ஸ்தனவித்திரிதி சுரம் ரத்தபேதி இவைநீங்கும், சுக்கிலவிருத்தியும கபப்பெருக்கமும் உண்டாம். 367

சிறுப்புள்ளடியின் குணம்.

மாந்தகணம் போராமல் வன்மகத நக்கிவிடு
மேய்ந்த மூலப்பாலு மொழுகுங்காண்-மோந்தே
சிறுபுள் ளடிதனையாத தேமலர்ப்பூங் கோதாப்
சிறுபுள் ளடியைசிதஞ் சேர்.

(இ-ள்.) வாசனைபொருநதிய மலர்மாலையைத்தரித்த கூந்தலையுடையபெண்ணே! சிறுபுள்ளடியால் எண்வகைமாந்தம் சிதக்கட்டுவாத சலம் ஆகியவைநீங்கும், வற்றியமூலப்பாலும் பெருகும். 369

உப்பிலாங்கோடியின் குணம்.

பிள்ளை மந்தபேதி போராத ருட்சையும்போம்
வெள்ளைசெய்யுந் தங்கத்தை மென்மலரா ற்-றெள்ளைபுரி
வேலுநடுங்குவடி வேலேசிகர் கூர்விழியாய்
காளுமுப் பிலாங்கொடியி னால்.

(இ-ள்.) மலர்பாணதநால்போர்புரியுங்காமனும் அஞ்சும்படியான கூரியவேல்போன்ற கண்ணாளே! உப்பிலாங்கொடியினலகுழந்தைகள் மாந்தமும் க்ஷீரதிசாரமும் நீங்காதசுரமும்நீங்கும், இது தங்கத்தைப் பற்பமாக்கும். 369

பம்பந்தாராவின் குணம்.

பாலிராக் கொங்கைகளிற் பாலாங் கருப்பைப்பை
மூலியிறை யழுக்கு முனபிழியும்-மேலெழுத்
தப்பமெனத் தங்குஞ் சலனமரோ சகமபோம்
பமபநதரா யருந்திப் பார்.

(இ-ள்.) பப்பந்தாரனல பிரசவஅழுக்கும் எலும்புக்தம்பம்போற் றடுக்கின்ற வாதத்தடிப்பும அருசியுமபோம், பால்வற்றியஸ்திரீகளுக்குப்பால் விருத்தியாகும். சலனம்-வாயு. 370

---

# புல்வகை

சதுரக்கள்ளியின் குணம்.

காப்பான் சொறியுங் கடியுங் கபமு
மூரப்பாங் குன்மத்தையு மொழிகுங்-நிரைப்பான்

பேதிதருஞ் சீதமென்ற பேச்சகற்றம் பூவுலகிற்
சாது சதுரக்கள்ளி தான்.

(இ-ள்.) சதுரக்கள்ளி காப்பான நமைச்சல் கழுக்கடி கபநோய் வாதகுன்மம் இவைநீங்கும் விசரோசனத்தைத் தரும். 371

நாகதாளிகள்ளியின் குணம்.

சேர்ந்து விஷங்கள் செடிவிஷங் களைததொலைக்கு
தொந்திடச் செய்வாதத்தை தூறுங்காண்-முந்தவெகு
வேகமா விக்கும்வடி வேல்விழிமாதே பணைதல்
நாகதாளிக் குணத்தை நாடு.

(இ-ள்.) வேல்போலுங் கண்களையுடையமாதே! நாரதாளிக்கள்ளி சங்கம்விஷம் தாவரவிஷம் மகாவாதரோகம் இவைகளைப் போக்கும்.

பேய்க்கற்றாழை செங்கற்றாழை இவைகளின் குணம்.

பேய்க்கற் றாழைக்குப் பெருமேக மும்மெரிவு
மேய்க்கக் கூடாவழலு மேருங்காண்- தாய்க்குநிக
ராஞ்சிவந்த கற்றாழை யங்கங் குளிர்விக்கும்
பூஞ்சயத்தைப் பொன்னாக்கும பார்.

(இ-ள்.) பேய்க்கற்றாழைக்கு அதிமேகம் சரீரஎரிவும் சுரமும் போம் செங்கற்றாழை உட்சூடகற்றும் இரும்பைத் தங்கமாக்கும்.

கற்றாழையின் குணம்.

பொல்லா மேகங்கபம் புழுச்சூலை குஷ்டரச
மல்லார் மததம்பகந் தரமகுன்ம-மெல்லாம்விட்
டேகு மரிக்கு மெரிச்சற் கிரிச்சரமு
மாகு மரிக்கு மருண்டு.

(இ-ள்.) நறுங்கற்றாழைக்கு வாதமேகம் கபமேகம்கிரிமிக்குற்றல் பெருவியாதி மூலம் உன்மாதம் பகந்தரம் வயிற்றுநோய் தினவுள்ள பித்தகிரிச்சரம் இவைகள்போம் குமரி கற்றாழை. 374

கள்ளிமுளையான் குணம்.

வாய்க்குப் புளித்திருக்கும் வன்பசியை யுண்டாக்கு
மேய்க்குமுடல்வா ததததை யேறுபித்தஞ்-சாய்க்குந்
தெள்ளிய வின்பமொழி தெய்வ மடவனமே
கள்ளி முளையானருந்திக் கண்.

(இ-ள்.)தெள்ளிய யின்பமொழியையும் அன்னநடையையுமுடையபெண்ணே! புளிச்சுவையுள்ள கள்ளிமுளையான் தீபனத்தையுண்டாக்கும் வாதபித்ததோஷத்தையும் மாற்றும். 375

### மேகநாதப்பூண்டின் குணம்.

இரத்த பித்தரோக மெரிசருவ காள
முரத்த வுன்மா தமிவை யோட்டு-மிரத்தனப்புண்
வாரணிவான் கொங்கை மடவார் தொழுந்திருவே
தாரணி வாழ்மேக நாதம்.

(இ-ள்.) இரத்தினபரண ததையணிந்த கச்சினுலிறுக்கிய தனங்களையுடைய மாதர்கள்தொழத்தகுந்திருவே! மேகநாதப்பூண்டு இரத்தபித்தத்தையுந் தாவரச்சங்கமம் முதலிய விஷங்களையும் உன் மாத ரோகத்தையும் போக்குமென்க. 376

### அறுகம்புல்லின் குணம்.

அறுகம்புல் வாதபித்த ஐயமோ டீளை
சிறுக வறுக்குமினனஞ் செப்பி-லறிவுதருங்
கண்ணோ யொடுதலைநோய் கண்புகை யிரத்தபித்த
முண்ணோ யொழிக்கு முறை.

(இ-ள்.) அறுகம்புல்திரிதோஷம் கோழை கண்ணோய் சிரஸ்தாபம் துமபிரமநோய் ரத்தபித்தம மருநகுச்சூடியிவைபோக்கும் அறிவு தரும். 377

### சோதிப்புல்லின் குணம்.

காசப் படலங் கருவித்தோஷம் பில்லம்
பூசாந்திரஞ் சதைபொண் பூசக்கிரன்-கூசலென
வோதியவிந் நோய்முழுது மொண்விழியை விட்டகலுஞ்
சோதியெனும் புல்லுக்குச் சொல்.

(இ-ள்.)சோதிப்புல்லுக்கு விழிக்காசபடலம் கருவிழிநோய் நீர்ப்பில்லம பூசாந்திரம் ஊன்பலம் பூவெண்புள்ளி கூசுதல் இவைபோம்.

### தருப்பைப்புல்லின் குணம்.

தோடஞ் சிறியவிடஞ் சோரக்கப பெருக்கஞ்
சாடுஞ் சகலசுரம் தாகமிவை-யோடு
மரிபபு மகலு மடல்வேள்வி கட்காந்
தருப்பையெ னும்புல்லுக்கு தான்.

(இ-ள்.) தருப்பைக்கு சப்ததோஷம் அற்பவீரியம் விஷம் கபாதிக்கம் சர்வசுரம் தாகம் களைச்சல் போம் யாகங்கட்காம். 379

### மாந்தப்புல், காவட்டம்புல் இவைகளின் குணம்.

*மாந்தப்புற் பேதிகட்டு மந்தமசீ ரணத்தைச்*
*சாந்திசெய்யும் வந்தசுரத்தைப் போக்கு-மேந்திழையே*
*காவட்டம் புற்குக் கணமாந்தம் பேதியறு*
*நாவெரட்டிக் காய்ச்சலும்போ நாடு.*

(இ-ள்.) மாந்தப்புல் மலப்பேதி அக்கினிமந்தம் அசீரணம் சிலேத்மசுரம் ஆகியவைகளைப்போக்கும், காவட்டம் புல்லுக்கு கணமாந்தம் அதிசாரம் நாவெரட்டிக்காய்ச்சல் ஆகியவைகள் விலகும்.

### பீனசப்புல்லின் குணம்.

*பீநசப்புல் லுண்டாயிற் பேர்க்குவிடு மாந்தமெலாம்*
*பீநசமுந் தீரு பெருமூலந்-தானொழியும்*
*மைய வினைசிலேதயு மக்கரநோ யுந்தீரு*
*மெய்யா யிதனை விளம்பு.*

(இ-ள்.) பீநசப்புல்லினால் எண்விதமாந்தம் நாசிரோகம் மூலம் சிலேத்மதோஷம் பித்தசிக்வாகண்டகம் ஆகியவைகள்போகும்.

### வாசனைப்புல்லின் குணம்.

*வாசனைப்புல் வாதபித்த மாற்றுவது மன்றிமிகு*
*சூசனையாய் வந்தசுரம் போக்கும்-பேசரிய*
*ஐய மறுக்கு மரோசகத்தை விண்ணேற்றுந்*
*துய்ய பசியைக்கொடுக்குஞ்சொல்.*

(இ-ள்.) வாசனைப்புல் வாதபித்தரோகம் சுரம் கோழை அருசி இவைகளை நீக்கும் பசிதீபனத்தை யுண்டாக்கும். 382

### பேய்ப்புல்லின் குணம்.

*இறுத்து ரோகம்போ மெலிவிஷம் போமெய்யி*
*லுறுத்து கின்றசூலை யொழியுங்-கறுத்தவளி*
*பேய்ப்புற்ற கண்ணு யெழில்வானர வாயுண்டாம்*
*பேய்ப்புல்லை கண்டறிந்த பேர்க்கு.*

(இ-ள்.) கறுத்த வண்டைநிகர்க்குங் கண்களையுடையாளே! மலையில் முளைக்கின்ற பேய்ப்புலலுக்கு மார்புநோய் எலிவிஷம் வாயுவின் குத்தல் ஆகியவைகள் போமென்க.

### பதங்காளான் குணம்.

*சுபங்கிரந்தி தாகங் காக்குமண் டம்விக்கல்*
*மயங்கு விக்கும்பித்த மடல்வாதம்-பயங்கரத்தைச்*

செய்யவரு பேதி திட்டிமகத நோய்களுண்டாம்
வெய்யபரு மாம்பியால் விள்.

(இ-ள்.) பருங்காளானுல் கஷபமும் விரணமும் தாகமும் நீங்கும் குடல்விருத்தி விக்கல்ரோகம் பித்தகோபம் மகாவாதம் அதிசாரம் கண்புகைச்சல் இவைகளுண்டாம். ஆம்பி-காளான். 384

புற்றுக்காளான், வளைக்காளான், பொறிக்காளான், வரிக்காளான் இவைகளின் குணம்.

புற்றுக் காளான் வலையைப் போலும் பொறிவரியை
யுற்றெழு காளானென் றுரைக்குமவை-முற்று
பழுதின்று நற்குணமும் பண்ணுவன மாந்தர்
தொழுதின்று முண்பரெனச் சொல்.

(இ-ள்.) புற்றின் றன்மையாயும வலைககண் ணுருவமாயும் பலநிற மாயும் வரிநிறைநத குறியுள்ளதாயும இராநின்ற நான்குவகை காளான்களைப் புசிக்கிற் குற்றமில்லை நற்குணத்தைச் செய்யினுஞ்செய்யும்.

---

## மரத்தின் சமூலவகை

### அரசமரத்தின் சமூலகுணம்.

அரசம்வேர் மேல்விரண மாற்றுமவ் வித்து
வெருவவருஞ் சுக்கிலநோய் வீட்டுங்-குரல்வறளுந்
தாகமொழிக்குங் கொழுந்து தாது தரும் வெப்பகற்றும்
வேகமுந் தோஷம்போக்கு மெய்.

(இ-ள்.) அரசம்வேர்ப்பட்டை சருமவிரணத்தையும், விதை சுக்கிலக்கெடுதியையும், கொழுந்து தொண்டையை வறட்டுகின்ற தாகத்தையும், மகரந்தம் தேகஉஷ்ணத்தையும் திரிதோஷத்தையும்நீக்கும்

### ஆலமரத்தின் சமூலகுணம்.

சொல்லுகின்ற மேகத்தைத் துஷ்டவகக் கடுப்பைக்
கொல்லுகின்ற நீரிழிவைக் கொல்லுங்கா-ணல்லாவின்
பாலும் விழுதும் பழமும்விதை யும்பூவு
மேலு மிலையுமென விள்.

(இ-ள்.) ஆலமரத்தின் பால் விழுது பழம் விதை பூ பட்டை இலை இவைகள் மேகவயிற்றுக்கடுப்பு மேகநீர் இவைகளை நீக்கும்.

இதுவுமது.

வடமரவிழ் பல்லிறுக்கு மாமேகம் போக்கு
மடர்கொழுந் திரத்தப் போக்காற்றும்-படரதிலாம்
புல்லுருவி யென்றெய்திற் பொல்லா விடபாக
வல்லுருவி லுண்மை மதி.

(இ-ள்.) ஆலமரத்தின்விழுது தந்தங்களை யிறுகச்செய்யும் பிரமேகத்தைநீக்கும், கொழுந்து ரத்தாதி சாரத்தைவிலக்கும், இத்தமரத்தில் முளைத்த புல்லுருவிவால விஷபாகரோகம நீங்கும். 388

வில்வமரத்தின் சமூலகுணம்.

பல்லவம் பூபிஞ்சின் பழமியாவும முறையே
வல்லவம் மேகம் மந்தமா நுன்மஞ்-செல்லுகின்ற
நோக்கமருள் வாதநாட்ட நூறுமடுத் தவர்கட்
காக்கமருள் விலலுவத்தி லாம்.

(இ-ள்.) வில்வமரத்தின் தளிர் சலமேகததையும் பூ மந்தத்தையும் பிஞ்சு குனமததையும் பழம் கண்ணிருளையும் பிசின் விந்துநஷ்டத்தையும் நீக்கும. 389

பூவரசமரத்தின் சமூலகுணம்.

நூறுண்டு சென்றதொரு நூண்பூ வரசம்வேர்
தூறுண்ட குஷ்டைத் தொலைக்குங்காண்-வீறிப்
பழுத்தயிலை விதைமேற் பட்டை யிவைகண்டாற்
புழுததபுண் விரோசனமும போம.

இதுவுமது.

குட்டங் கடிகூலே கொல்லும் விஷபாகந்
துட்ட மகோதரமுஞ் சோபையொடு-கிட்டிமெய்யிற்
றுவுகரப் பான்கிரந்தி தண்மேகம் போக்கிவிடும்
பூவரசங் காய்ப்பட்டைப் பூ.

(இ-ள்.) நூறுவருடத்திய பூவரசம்வேர் காட்பட்ட குஷ்டத்தை நீக்கும், பழுப்பிலே விதை பூ பட்டை காய் இவைகள் கிருமி விரணம் பேதி பெருவியாதி காணுக்கடி குத்தல் விடபாகம் பெருவயிறு வீக்கம் கரப்பான் சிரங்கு சலப்பிரமேகம் இவைகளைப்போக்கும். 390

இலந்தைமரத்தின் குணம்.

வேருக் காயாசம் விலகும பசியுண்டாஞ்
சீரோத் திடுமிலைக்குச் சீழ்மூலஞ்-சோரிவிழல்

மேவெரிச் சலுங்கடுப்பு மேகபித்த மும்போகுந்
தாவும் விழியா யிலந்தை.

(இ-ள்.) காதுகளைத் தாவுஞ் சேல்கண்ணுளே! இலந்தைமரவேரு
க்கு அயர்ச்சிநீங்கும், ஜடராக்கினியுண்டாக்கும், இலைக்கீழ் மூலமும்
ரத்தாதிசாரம் தேக எரிச்சல் வயிற்றுக்கடுப்பு பித்தமேகம் நீங்கும்.

காட்டிலந்தைமரத்தின் சமூலகுணம்.

விறகுணுமெண் ணெய்க்கனலா மெய்யெரிவு நீக்குஞ்
சிறியவிலைக் குக்கடுப்புக் தீரும்-முறிக்கு
அழைத்திடு பித்தும்போ மதன்கனி யடைக்குத்
தழைத் திடுமிக்காட்டி லிலந்தை.

(இ-ள்.) காட்டிலந்தைமரம் நித்தியங்குடிக்கின்ற குளிர்ச்சிஎண்
ணெய் காய்ச்சுதற்குவிறகாகும், இலைக்கு தேகஎரிவும் கொழுந்துக்கு
வயிற்றுக்கடுப்பும் பழத்தின் அடைக்குப் பித்தமும் நீங்கும். 392

நறுவிலிமரத்தின் சமூலகுணம்.

நறுவிலி யிலைக்கிரந்த நாசமவ் வேர்க்கு
மறுவி லெலும்புருக்கி மாறு-நறுவிலியின்
றன்பழ மிரத்தபித்தஞ் சார்மேக முந்தீர்க்கு
மின்புர யாவர்க்கு மிசை.

(இ-ள்.) நறுவிலியிலைக்கு மூலரத்தமும் வேருக்கு அஸ்திசிராவ
மும் பழம் ரத்தபித்தத்தையும் பிரமேகத்தையும் நீக்கும். 393

நுணுமரத்தின் சமூலகுணம்.

பட்டை கரப்பனொடு பாரச் சிலேஷ்மசுர
மொட்டிநின்ற புண்கிரந்தி யோட்டுங்காண்-மட்டலரை
யேந்து நுணுவி னிலைமாந்தம் தீர்த்துநல்ல
காந்திதரு மேகமடுங் காண்.

(இ-ள்.) நுணுப்பட்டை கரப்பான் கபச்சுரம் புண்கிரந்தி இவை
களையும், இலை மந்தம் மேகம் இதுகளையும்விலக்கும் ஒளியைத்தரும்.

முருங்கைமரத்தின் சமூலகுணம்.

பிஞ்சாற் றிரிதோஷம் பெரும் பூவாற்போகு
மிஞ்சுவிழிக்குக் குளிர்ச்சியுஞ் சேரும்-பிஞ்சிலைவெப்
பாற்றுந்தோ லஞ்சுறுக்கு மவ்வேர்வாதச் சினத்தை
மாற்று முருங்கைமரம்.

(இ-ள்.) முருங்கையின்சிறியபிஞ்சால் திரிதோஷம் நீங்கும் பூவி னல் புணர்ச்சியில்வன்மையும் கண்ணுக்கு குளிர்ச்சியும்உண்டாம்இலை சுரத்தையும் பட்டைவிஷத்தையும் வேர்வாதகோபத்தையும் நீக்கும்.

காட்டுமுருங்கைமரத்தின் சமூல குணம்.

தின்றுற் கசப்பாகுந் தீயாங்கொடு விஷத்தைக்
கொன்றுவிடுங் கட்குங் குளிர்ச்சிதரு-மென்றுமைய
மோட்டும் வேரூவிலைகா யுற்றபிசினும் பிஞ்சுங்
காட்டுகைப் புளமுருங்கை காண்.

(இ-ள்.) கைப்புள்ளகாட்டுமுருங்கைவேர் மகாவிஷத்தை நீக்கும் பூ கண்ணுக்குக்குளிர்ச்சிதரும் இலை காய் பிசின் பிஞ்சி என்னுமிவை கள் சிலேஷ்மரோகங்களை நீக்குமென்க. 396

பசுமுன்னைமரத்தின் சமூல குணம்.

முன்னைவேர் வாதமுதி ரோப்பந் தான்போக்கு
மன்ன மிறக்கு மதனிலைதான்-சொன்ன
வியல்வாத மெண்பதையு மில்லையெனச் செய்யு
கயல்பொருவும் கண்ணுய் கருது.

(இ-ள்.) மச்சத்தைபொருதுங் கண்களையுடைய பெண்ணே! பசு முன்னைவேர் வாதஇத்மாரோகத்தை நீக்கும் இலை உணவைச்செலுத் துவதுந்தவிர (80) வாதரோகங்கத்தையும் விலக்கும். 397

மாதுளைமரத்தின் சமூல குணம்.

மாதுளைவேர் பிஞ்சிவைக்கு வாந்தியதி சாரம்போந்
தாதுவுமா மக்கனிக்குத் தாகம்போஞ்-சூதைநிகர்
வன்னமுலை யாயிலைகாய் மாமலர் களுக்குமுனஞ்
சொன்னவை யெலாம்போகுஞ் சொல்.

(இ-ள்.)வன்னமுலைகளுடைய மாதே! மாதுளைவேர் பிஞ்சுஇவை கட்கு வமனமும் அதிசாரமும் நீங்கும், அதன்கனி உண்டால் தாகம் போம் வீரியவிர்த்தியுமுண்டாக்கும் இலைகாய்மலர் இவைகளுக்கு முற் கூறிய ரோகங்களெல்லாம் தீருமென்க. 398

உசிலமரத்தின் சமூலகுணம்-இதைச்சீக்கிரான் என்பர்.

அளுமந்த மெய்ச்சிக் கழண்மேக நீங்குநிதங்
கொள்ளு தயிலக்கறைக்கு கொள்விறைகாம்-விள்ளுமதி
லோதியடை வாளினமென் றென்றுகுழலே கலிகை
யாதி யடைபிசின் கட்டை.

(இ-ள்.) உசிலமரத்தின்வேர்பட்டை அள்ளுமந்தத்தையும், இலையின்றாள் எண்ணெய்ச்சிக்கையும், பிசின்பித்தமேகத்தையும் நீக்கும் கட்டைபிரதினமும் குடிக்கின்ற எண்ணெய்க்காச்சுதற்கு விறகாகும் கவிகை-உசிலமரம். 399

தாளிப்பனையின் சமூலகுணம்-இதுவே கூந்தற்பனை.

எழுத்திற கிடமா யிருக்கு நெடுங்காலம்
வழுத்தில் தன்மாழை மடலாற்-கழுத்திலுறுஞ்
சோறு மலமிருக்குங் ஆறுபாளைப் பிழிபா
சூறும் உடலுக்கிந்தாளிக ளோர்.

(இ-ள்.) தாளிப்பனையின் மழைபாகிய ஓலை யெழுத்திற்கிடமாக நீடித்திருக்கும் இதன்சோறுமலங்கட்டும பிழிஎன்கிற்கள்ளு மாமிசத்தைவளர்ப்பிக்குமென்க. 400

தாழைமரத்தின் சமூலகுணம்.

மடிச்சோற்றான் மங்கையர்க்கு மாதாகத பூப்பாம்
வெடிச்சபூ நற்பசி யீவே கருக-தடிச்சமூலை
சுக்கிலத்தை நெய்யைத் துலக்குவிக்குஞ் சோபையெனு
மக்குலத்தை நீக்கு மறி.

(இ-ள்.) தாழைச்சோற்றினால் மாதர்க்குச்சோணிதம் விருணமின்றியுண்டாம பூ தீபாக்கினியைத்தரும விழுது விந்துவையும் ரத்தத்தையும் பிரகாசப்படுத்தும, சோபாரோககூட்டங்களை நீக்கும் மடி-தாழை. 401

வாழைமரத்தின் சமூலகுணம்.

நற்கதலிக் கந்தமனை ரார்தண் டோகுடலிற்
சிக்குமயிர்தோஞ்சுந் தீர்த்திடுங்காண்-நொக்குறுபூ
மேகமொழிக்கும் பிஞ்சால் வெங்கடுப் போகுங்காயாற்
றேக முழுதுங்காலாந் தேர்.

(இ-ள்.) கிழங்கிற்குடுள்ள நறும் வாழைத்தண்டு குடலிற் சிக்கியரோமம தோல்விஷம் இவைகளை விடுவிக்கும் பூ பிரமேகம நீக்கும் பிஞ்சினால் மூலக்கடுப்புதீரும காயினால் உடல்முழுதும வாயுவாம். ()

நாட்டுவாழை, கருவாழை இவைகளின் சமூலகுணம்.

நாட்டுக் கதலியது நாளுந் துவர்ப்பதனாற்
றீட்டுபித்த மையஞ் சேருங்காண்-நீட்டுகரு
வாழை திரிதோஷ மாற்று மதன்கிழங்கா
லாழுஞ் சுரம்விருத்தி யாம்.

(இ-ள்.) துவர்ப்புள்ள காட்டுவாழையினால் பயித்தியகபதோஷங்கள் அதிகரிக்கும். கருவாழைவாதாதி மூன்றுதோஷங்களையும் நீக்கும் இதன்கிழங்கினால் அடங்கியசுரமும் விருத்தியாகுமென்க. 40

# செடியின் சமூலவகை

### ஆவாரை பஞ்சாங்கத்தின் குணம்.

மேகத்தினாலே விளைந்த சலம் வெட்டையன
லாகத்தின பண்ணோ யருக்கிராணி-போகததால்
ஆவாரைப் பஞ்சகங்கொ ளஸ்திசுரந் தாகமும்போ
மைவாசரைக் கண்மட மாதே.

(இ-ள்.) ஐபரிபடர்ந்த கண்களையுடைய பெண்ணே! ஆவாரைச்செடியின்வேர் இலை பூ காயென னும ஐவகை அங்கங்களால் பிரமேக மூத்திரம் வெள்ளை உட்சூடுவிரணம் வாதகிராணி அஸ்திதாது கதசுரம் தாகம் இவை போகுமென்க. 404

### சங்கஞ்சேடியின் சமூலகுணம்.

வீக்கங் கரப்பான் விதாகக் கிரந்திகுன்ம
மூக்குமிகு சூலைவாய் வோடுபித்தந்-தாக்குவிஷம்
வீறுமோ கண்டிலங்கும் வீசுபசி ரத்தமுண்டாங்
கூறுசங்கு வேரிலை கட்கு.

(இ-ள்.) முட்சங்கின்வேருக்கும் இலைக்கும்சோகை கரப்பான்விதாகம் விரணம் குன்மம் கில்விஷகம வாதசோபம் பித்தரோய்பலநஞ்சுயிவை விலகும். கண்குலக்கமும் மிகுபசியும ரத்தவிருத்தியும் ஆம்.

### கருப்புப்பூலாஞ்சேடியின் சமூலகுணம்.

காட்டமதில் வீரியமாங் காணவிலை மூலரத்த
வோட்ட மறிக்கு முதிருமூணக்-கூட்டமெழுச்
சிததம்வைக்கி லவ்வண்ணஞ் செய்யுங் கருங்கனிதா
னைத்தமூற்ற பூலாவி வாம்.

(இ-ள்.) காட்டிலுள்ள கறுப்புப்பூலாங் குச்சியினாற் பற்றுலக்கில் வீரியவிருத்தியுண்டாம், இலைமூலாதகப்பெருக்கைத் தடுக்கும், பழயரோமங்களை யுதிரவொட்டாமற் செய்யும். அத்தம்-காடு. 406

### கண்டங்கத்திரியின் குணம்.

வேரிலைபூ காய்பழமவ் வித்துமேற் பட்டையுமிவ்
வூரிலிருக்க வுடற் கைப்பும்-நீராய்

வரும் பீநசகபஞ் சுவாசமுந் தங்காவே
யருங் கண்டங்கததிரியுள் ஆய்.

(இ-ள்.) கண்டங்கத்திரியின்வேர் இலை பூ காய் பழம் விதை பட்டை இவைகளால் நீரேற்றம் சலப்பீநசம் ஈளைசுவாசம் இவைபோம்.

மணத்தக்காளியின் சமூலகுணம்.

காய்க்குக் கபந்தீருங் காரிகையே யவ்விலைக்கு
வாய்க்கிரந்தி வேக்காடு மாறுங்காண்-தீய்க்கு
ளுணக்கடு வற்றலுறு பிணியோர்க் காகும்
மணத்தக் காளிக்குள்ள வாறு.

(இ-ள்.) மணத்தக்காளிக் காய்க்கு சிலேஷ்மரோகமும் இலைக்கு நாப்புண்ணும வேக்காடும் நீங்கும். வற்றல் நோயாளிகளுக்காகும்.

நாயுருவின் சமூலகுணம், இதுவே அபமார்க்கி விருத்தம்.

மலிகாரங் கைப்புள்ள அபமார்க்கியின் வேரால் வசியமுண்டா
மிலைமூல வுதிரமந்தம் பேதிகபம் வியர்வுதந்தி யிறங்குமேகம்
மலையேறும் படிபுரியு முள்ளரிய பசிமாற்று மதன்சமூலம்
பலமாதர்க் குளளமுக்கை நீக்கும்வங்கசிந்தூரம் பண்ணுமாதோ

(இ-ள்.) கார்ப்புங்கைப்புமுள்ளநாயுருவியின்வேரால் முகம்வசீகரமாம். இலைரத்தமூலம் அதிசாரம் கபநோய் வியர்வை தந்தி பிரமேகம் இவைகளை விலக்கும், அரிசி என்கிறவிதை பசியைநீக்கும் சமூலசாம்பல் பிரசவித்தமாதர்க்கு உதிரச்சிக்கலை ஒழிக்குமென்க. 409

செந்நாயுருவின் குணம்-வெண்பா.

ஒதமுறு சோபை யுயர்பாண்டுவைப் போக்குந்
தீதுறுகா மாலைநோய் தீர்க்குமினூர்-சூதகநீர்
பொய்ப்புறு காலத்ததனைப் பொங்குவிக்குக் காரமொடு
கைப்புறு செந்நாயுருவி காண்.

(இ-ள்.) கார்ப்புங்கைப்புமுள்ள செந்நாயுருவியின்சமூலம் வறுவீக்கம் பாண்டு காமாலை இவைகளைநீக்கும், மாதர்களின் ருதுகால சோணிதத்தை வழக்கப்படி யுண்டாக்கும். 410

## கொடியின் சமூலவகை

தூதுளையின் சமூலகுணம்-விருத்தம்.

தூதுபத்திரியூண் சுவையாக்கும்பூ
காதுவைத்தழைப் பித்திடுங் காயது

வாதபித்த கபத்தையு மாற்றும்வே
ரோதும்வல்லி பன்னோயு மொழிக்குமே.

(இ-ள்.) தூதுவளையிலே உண்டிக்குச் சுவையைத்தரும் பூ சுக்கில தாதுவை விருத்திசெய்யும் காய்திரிதோஷங்களை நீக்கும் வேருங் கொடியும் சுவாசமுதலிய சிலேஷ்மரோகங்களைப் போக்கும். 411

சுரையின்சமூல குணம்.

சுரையிலையோ சோபையொடு தோன்றுநீர் கட்டைத்
தரையிலையோ வைக்காமற் சண்ணுஞ்-சுரையினது
தண்டோ பித்தத்தைத் தரிக்கவொட் டாதடிக்குங்
கண்டோ ருரைப்பரிதைக் காண்.

(இ-ள்.) சுரையிலையானது வீக்கத்தையும் மூத்திரச்சிக்கலையும் விலக்கும், கொடிய பயித்திய ரோகங்களைப் போக்குமென்க. 412

நாளையின்சமூல குணம்.

நாளையிலை தன்குணங்கே ளாரியர் வயற்றி
ஆருளிரத் தக்குன்ம மொழிக்கும்-நாளைக்
கிழங்குங்கு மேகமொடு கீறு கரப்பான்
புழுங்கு புண்மூலமிவை போம்.

(இ-ள்.) நாளையிலை மாதர்களின் ரத்தக்குன்மக்கட்டியைப் போக்கும், கிழங்குக்கு பிரமேகம் கரப்பான் அளிவிரணம் மூலமிவைபோம்.

வெண்குன்றியின்சமூல குணம்.

வீரியத்தை யுண்டாக்கும் வெண்குன்றி வித்ததன்வேர்
பாரிய தாகத்தைப் பறக்கடிக்குஞ்-சீரியவோர்
சிற்றிலையி னற்சளுக்குத் தீருங் கொடிகாயாற்
சுற்றிலைப்பேய்க் கூட்டமெனச் சொல்.

(இ-ள்.) வெண்குன்றிவிதை சுக்கிலத்தை விருத்திக்கும் வேர் தாகத்தையும் இலைசளுக்கையும் காய்கொடி பைசாசங்களையும்நீக்கும்.

---

## மரத்தின் கிழங்குவகை

பனங்கிழங்கு ஒடிகிழங்கு இவைகளின் குணம்.

பனங்கிழங்கா லத்திவெப்பும் பன்மேகமும்போ
மினுங்குளிர்ச்சி யோடமுரு மெய்யுந்-தினநமையும்
புண்ணுங் கரப்பானும் பூரிக்கு மெய்யெலா
நண்ணும் ஒடிகிழங்கி னால்.

(இ-ள்.) பனங்கிழங்கால் அஸ்திச்சூடும பித்தமேக முதலிய மேகங்களும்போம், குளிர்ச்சியும் வனப்பும் உண்டாம், ஒடிகிழங்கு களுக்கு நமைச்சலும் விரணமும கரப்பானும் வன்மையும்உண்டாம்.

நிலப்பனைக்கிழங்கின் குணம்.

மேகவனற் றணியும் வெண்குஷ்டந் தான்விலகும்
போக மிகவுமுறும் பொற்கொடியே-போகாத
சூலைமே கங்களொடு தூன்னுகரும புள்ளியும்போஞ்
சால நிலப்பனைக்குத் தான்.

(இ-ள்.) நிலப்பனங்கிழங்கினல் மேகமூத்திரவெப்பமும்வெள்ளை குஷ்டமும் விலாக்குத்தலும் ஒழுக்குப்பிரமேகமும் நீலாஞ்சனரோக மும்போம், புணர்ச்சியில் இச்சை உண்டாகும். 416

மரவள்ளிக்கிழங்கின் குணம்.

பித்தங் கலந்த பெருவாயு வைக்கூவு
மெத்த அனல் மந்தத்தை மேலெழுப்புஞ்-சுத்த
இரவள்ளிக் கொண்டகுழ லேந்திழையே யிந்த
மரவள்ளிக் கந்தமெண வை.

(இ-ள்.) இருண்டகூந்தலையுடையாளே! மரவள்ளிக்கிழங்கு பயித் தியவாத தொந்தத்தையும் அக்கினிமாந்தத்தையும் உண்டாக்கும்.

---

## செடியின் கிழங்குவகை

மெருகன்கிழங்கின் குணம்.

மெருகன் கிழங்கதுதான் மேகத்தைப்போக்குந்
துருவு குன்மமூலந் துடைக்கும-பெருமீளை
யஸ்திசுரம் ஐபறுக்கு மங்கம் குளிர்விக்கு
மத்திமுலை மாதே யறி.

(இ-ள்.) மெருகன்கிழங்கு கட்டிப்பிரமேகம் வயிற்றுநோய் கப ரோகம் அஸ்திதாதுகதசுரம் சிலேஷ்மாதிக்கம் ஆகியவைகளைப்போக் கும், உடலுக்குக் குளிர்ச்சியை யுண்டாக்குமென்க. 418

அழுக்கிராக்கிழங்கின் குணம்-இதுவே அசுவகெந்தி.

கொஞ்சந் துவர்ப்பாங் கொடியகயஞ் சூலையரி
மிஞ்சுகரப் பான்பாண்டு வெப்பதப்பு-விஞ்சி

மூசிவுரு தோஷமும்போ மோகமன லுண்டா
மசுவ கந்திக்கென் றறி.

(இ-ள்.) கொஞ்சந் துவர்ப்புள்ள அமுக்கிராக் கிழங்கினால் க்ஷயம் வாதசூலை வாதக்கரப்பான் பாண்டு சுரம் வீக்கம் சலதோஷம் இவைகள்போகும், மாதர்மேலிச்சையும் பசியும் உண்டாகும். 419

பேதிக்கிழங்கின் குணம்-இதுவே ரேவல்சின்னி.

பேதிதனை யுண்டாக்கும் பித்தந் தனையெழுப்புந்
தோதக் குடல்தனைச் சுத்திசெய்யு-மோதியகால்
பேதிக்குந் தாதுவைப் பெருக்கிவிடு மெப்போதும்
பேதிக் கிழங்கதனைப் பேசு.

(இ-ள்.) பேதிக்கிழங்கு விரோசனம் பித்தாதிக்கம் குடற்சுத்தி வீரியவிர்த்தி இவைகளையுண்டாக்கும். வாதகோபத்தை யடைவிக்கும். 420

சேவகனார்கிழங்கின் குணம்.

கபரோகந் தன்னைக் கடவிலவிழச்செய்யு
மபமிருத்துவாம் விஷத்தை மாற்று-மிபமுலவும்
காவக ராடாக் கருங்குயிலே கண்டுரைத்த
சேவகனார் கிழங்கதே.

(இ-ள்.) சோலையிற் சஞ்சரிக்காத குயிலனையாய்! சேவகனார் கிழங்கு சிலேஷ்ம தோஷத்தையும் காலமில்லாமற் கொல்லுகின்ற விஷத்தையும் போக்கும் என்க. 421

பூமிச்சருக்கரைக்கிழங்கின் குணம்.

மேகமுறு முள்ளுருக்கு வெட்டை யனற்றணியும்
போகுமே மூலம் புகலக்கேள்-பாகுமொழிப்
பொன்னனையாய் பூமிச் சருக்கரைக் கிழங்குக்கு
வன்னவுடல் பருக்கும் வாழ்த்து.

(இ-ள்.) பாகொத்த மொழியையும் திருமாதனைய அழகையுமுடையபெண்ணே! பூமிச்சருக்கரைக் கிழங்குக்குப்பிரமேகம் அதிசுஷ்கம் வெள்ளைவிழல் சுரம்மூலம் ஆகியவைபோம்தேகம்பூரிக்கும்என்க

முள்ளங்கிக்கிழங்கின் குணம்.

வாதங் கரப்பான் வயிற்றெறிவு சூலைகுடல்
வாதங் காசமையம் வன்றலைநோய்-மோதுநீர்க்
கோவைபன்னேப் பல்கிலந்தி குன்மமிரைப் புக்கடுப்புஞ்
சாவு முள்ளங்கிக்கந்தத் தால்.

(இ-ள்.) முள்ளங்கிக்கிழங்கால் வாதப்பிணி கரப்பான் வயிற்றி லெரிச்சல் குத்தல் குடல்விருத்திநோய் இருமல் கபம் தலைவலி நீரேற்றம் பல்நோய் பல்கிலந்தி குன்மம் சுவாசம் மூலக்கடுப்புகள் போகும் என்க. 423

மஞ்சளின் குணம்.

பொன்னிற மாம்மேனி புலானாற்ற மும்போகும்
மன்னு புருஷன் வசியமாம்-பின்னியேழும்
வாந்திபித்த தோஷமையம் வாதம்போந் தீபனமாங்
கூர்ந்த நறுமஞ்ச டனக்கு.

இதுவுமது.

தலைவலி நீரேற்றஞ் சளையாத மேக
மூளைவுதரு பீநத்தி னூடே-வலிசுரப்பு
விஞ்சு கடிவிஷமும் வீறுவிர ணங்களும்போ
மஞ்சட் கிழங்குக்கு மால்.

(இ-ள்.) உடலைப் பொற்சாயலாக்கிப் புலால்நாற்றத்தை நீக்குகின்ற மஞ்சளினால் புருஷவசியமும் பசியுமுண்டாம். வம்மைபித்தகப வாதகோபங்கள் தலைவலிசலதோஷம் பிரமேகம் நாசிகாரோகம் ஐவகைவலி வீக்கம் வண்டுகடி விஷம் பெருவிரணம் இவைபோம். 424

மரமஞ்சளின் குணம்.

அழன்ற கணைமூல மருசி யுடனே
யுழன்ற கணச்சுரமு மோடுஞ்-சுழன்றுள்ளே
வீறுசுர முக்குணியும் வீசுமா மஞ்சளுக்குத்
தேறு மொழியனமே செப்பு.

(இ-ள்.) தெள்ளிய வசனத்தையுடைய பெண்ணே மரமஞ்சளுக்கு முக்குணம் மூலநோய் அரோசிகம் கணச்சுரம் உட்சுரம் ஆகியவைகள் விலக்கும் என்க. 425

கஸ்தூரிமஞ்சளின் குணம்.

புண்ணுங் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணுமந் தாக்கினியு நாசமாம்-வண்மலர்த்த
கொத்தே றளகமின்னே சுக்கிலமும் புத்தியுமாங்
கஸ்தூரி மஞ்சளுக்குக் காண்.

(இ-ள்.) பூங்கொத்தையணிந்த மின்போல்பவளே! கஸ்தூரி மஞ்சளுக்கு பெருவிரணம் கரப்பான் கிருமிரோகம் அக்கினிமந்தம் இவை போம், வீரியமும் அறிவும் விருத்தியாம். 426

### இஞ்சியின் குணம்.

இஞ்சியதனுக் கிருமலைய மோக்காளம்
வஞ்சிக்குஞ் சந்நிசுரம் வன்பேதி-விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போந் தூண்டாத தீபனமாம்
வேலையுறுங் கண்ணுப் விளம்பு.

(இ-ள்.) கடலைநிகர்த்த கண்களையுடையமாதே! இஞ்சிக்கு காசம் கபம் வெள்ளோக்காளம் சந்நிபாதசுரம அதிசாரம் வாதசூலை வாத கோபம் இவைபோம் பசியுண்டாம். 427

### காறுகருணைக்கிழங்கின் குணம்.

கரப்பான் சிரங்குசொறி காணுக் கிரந்தி
யுரப்பாக்கு மூலநோ யோட்டும்-நிரைப்பான
மந்தமொடு கோழைதரு மாறுத்தின வளிக்கு
மந்தமிகுங் காறுகரு ணை.

(இ-ள்.) காறுகின்ற கருணைக்கிழங்கு கரப்பான் பொடிச்சிரங்கு சொறி உட்கிரந்தி மந்தாக்கினி கபக்கோழை நமைச்சல் ஆகியவை களை உண்டாக்கும் மூலரோகத்தை நீக்கும். 428

### காறகருணைக்கிழங்கின் குணம்.

ஞாலமதிற் கபநோய் காடாது வாதமறு
மூலமுளை யிரத்த முனபொழியு-மோலமிட்டு
மாறுக் கனல்மந்த மாறுமதி தீபனமாங்
காறுக் கருணை தனைக் கண்டு.

(இ-ள்.) காறுக்கருணைக்கிழங்கினால் சிலேத்மரோகம் வாதநோய் ரத்தமூலமுளை அக்கினிமந்தம இவைநீங்கும் பசியுண்டாம். 429

### காட்டுக் கருணைக்கிழங்கின் குணம்.

மேகமணுகாது வெகுதீ பனமாகுந்
தேகமதில் மூலமுளை சேராவே-போகாச்
சுரதோஷம் போங்கரப்பான் றோன்றும் வனத்திற்
பரவு கருணைக்கிழங்காற் பார்.

(இ-ள்.) காட்டுக்கருணைக்கிழங்குக்கு வாதம் பிரமேகம் முளை மூலமும் சுரதோஷமும்போம் மிகுபசியும் கரப்பானுமுண்டாம்.

### சேம்புக்கிழங்கின் குணம்.

வாதகபத்தை யுள்ளே வைத்திருக்குந் தின்றக்காற்
கோதிலாத் தொண்டை தனில்கோழை-மாதரசே

புண்மருந்தி னற்குணம தோடுஞ்சேம்புக் கிழங்கைத்
தண்மேக சாந்தியென்பர் தாம்.

(இ-ள்.) மாதர்கள் நாயகமே! வாதகப தோஷத்தையுடைய சேம்புக்கிழங்கைத் தின்றால் தொண்டையில் கோழைகட்டும்நன்மருந்தின் குணமுங்கெடும் இது சுபத்திரவியமாகையால் மேகசாந்தி என்பர்.

பிரப்பங்கிழங்கின் குணம்.

தந்தரோ கத்தைத் தணியாத வாதத்தை
யுந்துசூலைப் பிடிப்பை யோட்டுங்காண்-வந்து
காப்புந் திறப்புமெனக்காட்டு நகைமாதே
பிரப்பங் கிழங்குதனைப் பேண்.

(இ-ள்.) காப்புந் திறப்புமெனக் காண்பிக்கும் பற்களையுடைய மாதே! பிறப்பங்கிழங்கு தந்தமூலரோகம் வாதகோபம் கீல்பிடிப்பு சிலேத்மதோஷம் ஆகியவைகளை நீக்கும்.

காறடைக்கிழங்கின் குணம்.

சீதஞ் சலதோஷந் தேமல் தழும்புகுன்மம்
வாதஞ் சிறுசிரங்கு வன்மேக-மோதரிய
காசமுத ஞேயெல்லாங் காஞ்சா றடைக்கிழங்கால்
நாசமுறு மென்றே நவில்.

(இ-ள்.) காட்டுச்சா றடைக்கிழங்கால் சீதளம் நீரேற்றம் தேமல் தடிப்பு குன்மம் வாதவலி சிறுசிரங்கு பிரமேகம் இருமல்இவைதீரும்.

கோவைக்கிழங்கின் குணம்.

முத்தோஷஞ் சூலைபித்த முடகுஷ்டஞ் சிக்குவைநோ
யெதது சுவாசங் கபமினிப்பு-யித்தனையுங்
கூட்டோடகற்றுங் குளிர்ச்சியொடு காரத்தைக்
காட்டிய கோவைக்கிழங்கு காண்.

(இ-ள்.) சீதளத்தையும்வாதத்தையும் உடையகோவைக்கிழங்கு திரிதோஷம் சந்துகளின் குத்தல் பித்தகோபம் சருமதல குஷ்டம் ஜிக்வாரோகம் இரைப்பு கோழை மதுப்பிரமேகம் இவைகளைநீக்கும்.

கோல்லன் கோவைக்கிழங்கின் குணம்.

துட்டவிஷம் பாண்டுவெப்ப சூலைவாதங் கிரந்தி
குட்ட மரிப்பக்கொண்டகுநோய்-கெட்டகண்ட
மாலைபோங் கொல்லன் கோவைக்கிழங்கால் முத்தோஷ
வேலை போம்பாரில் விளம்பு.

(இ-ள்.) கொல்லன்கோவைக் கிழங்கால் மகாவிஷம் தேகவெளுப்பு சுரம் வாதசூலை சிரங்கு பெருவியாதி கமைச்சல் வக்கிரநேத்திரம் குடல்வலி கண்டமாலை திரிதோஷம் ஆகியவைகள் நீங்கும். 435

சீந்திற்கிழங்கின் குணம்-இதுவே அமிர்தக்கொடி.

சீந்திற் கிழங்கருந்த தீபனமா மேகவகை
போந்த வுதிரபித்தம் பொங்குசுர-மாந்த
மதிசாரம் வெய்யகண மாம்பல நோயோடே
சுதிவிஷமுங் கெட்டுவிடுங் காண்.

(இ-ள்.) சீந்திற் கிழங்கினால் சர்லமேகம் ரத்தபித்தரோகம் ருட்சை மாந்தசுரம் பேதி பித்தகணம் ஆமிலபித்தரோகம் சர்ப்ப விஷம் ஆகியவைகள் போகும் ஜடராக்கினியுண்டாகும். 436

பொற்சீந்திற்கிழங்கின் குணம்.

பொற்சிந்தி லின்கிழங்கு பொங்கு மதுமேக
மெச்சுகய ரோக மிளைப்புவிஷம்-பச்சையா
யோடிரத்த பித்தமுயர் சுரகதனைக் களையும்
தேடரிய மேனிதருஞ் சேர்.

(இ-ள்.) பொற்சிந்திற்கிழங்கானது மதுநீர் க்ஷயம் அதிசுஷ்கம் சர்ப்பவிஷம் ரத்தபித்தம் இவைகளை நீக்கும் காயசித்தி பண்ணும்.

கருடன்கிழங்கின் குணம் இதுவே பேய்சீந்தில்.

அரையாப்பு வெள்ளை யகலாக் கொறுக்கை
கரையாத கட்டியிவை காட்டினர்-வரையிற்
றிருடனெனச் சொல்லும்விஷஞ் சேர்ப்பாம்பு மஞ்சுங்
கருடன் கிழங்கதனைக் கண்டு.

(இ-ள்.) கருடன் கிழங்குக்கு அரையாப்புக்கட்டி வெள்ளைகொறுக்கு மாந்தை அற்புதரணம் ஆகியவைநீங்கும் சர்ப்பங்கள் நடுங்கும்.

கூகைக்கிழங்கின் குணம்.

மேனியிடும் வாய்க்கு மிருதுவா மாக்கியுண்ணத்
தானிருமல் வெப்பதிக தாகமிவை-யேனிருக்கு
மம்பே றிளங்கிழங்கி தியாவர்க்கு மாணப்பூங்
கொம்பே கூகைக்கிழங்கைக் கூறு.

(இ-ள்.) வாசனைபொருந்திய பூங்கொம்பனையாளே! நீர் நிறைந்துள்ள இளங்கூகைக் கிழங்கைச் சமைத்துண்ணில் தேகபுஷ்டி யுண்டாகும் இருமலும் சுரமும் தாகமும் நீங்கும். 439

புளிநரளைக்கிழங்கின் குணம்.

*புளிநரளை யின்கிழங்கோ பொன்போலச் செம்பைத்*
*தெளிவாகச் சுத்தியது செய்யும்-வெளியான*
*மூலமுளை யறுக்கு முந்துசுவைக் கேதுவுமாங்*
*கோல மடமயிலே கூறு.*

(இ-ள்.) அழகிய மயிலபோலுஞ் சாயலையுடையாளே! புளிநரளை கிழங்குசெம்பைத் தங்கம்போற் புனிதமாக்கும் வெளி முளை மூலத்தைப்போக்கும் உணவிற் சுவையைத்தரும். 440

மாகாளிகிழங்கின் குணம்-இதனை மாவலி பநநன்னரி என்பர்.

*அனலைபதி பித்தத்தை யாற்றும் பசியா*
*மனலை யெழுப்புங் கபமறுக்கு-மானிலத்தார்*
*வேகாளத்தைத் தணிக்கு மென்கொடியே காட்டினுறை*
*மாகாளிக் கந்தமிது வாம்.*

(இ-ள்.) வஞ்சிக்கொடிபோன்ற இடையாளே! மாகாளிக்கிழங்கு உட்சூடு பித்தகோபம் சிலேத்தநோய் வாதநோடம் இவைகளை நீக்கும் ஜடராக்கினியை வளர்ப்பிக்கும். 441

தண்ணீர்விட்டான் கிழங்கின் குணம்.

*நீரிழிவைப் போக்கு நெடுகாட் சுரத்தைமெலா*
*மூரைவிடுத் தோட வுறுக்குங்காண்-நாரியரே*
*வெண்ணீர்பெய் சோமனோய் வெட்டை யனற்றணிக்குந்*
*தண்ணீர் விட்டான்கிழங்கு தான்.*

(இ-ள்.) மாதே! தண்ணீர்விட்டான்கிழங்கு வெகுமூத்திரம் புராதனசுரம் சோமரோகம் வெள்ளை உட்சூடு ஆகியவைகள் நீக்கும்.

தாமரைக் கிழங்கின் குணம்.

*கண்ணுக் கொளிகொடுக்குங் காசபித்தம் போக்கு*
*மெண்ணுங் குளிர்ச்சிதரு மேந்திழையே-மண்ணுலகிற்*
*றாமரைப்புண் ணும்போக்குந் தொந்திக் கடுப்பகற்றும்*
*தாமரைக் கந்தமது தான்.*

(இ-ள்.) ஏந்திழையாளே! தாமரைக்கிழங்கு நேத்திரஒளியையும் குளிர்ச்சியையுந்தரும் பித்தகாசம் மாமிசதாதுவைப்பற்றிய தவளைச்சொறி வயிறுகடுப்பு ஆகியவைகளை நீக்கும் ஆ-தசை. மரை-தவளை.

### செவ்வல்லிக் கிழங்கின் குணம்.

செம்பைக் களிம்பகற்றிச் சிந்தூர மாக்கிவிடும்
வெம்பு பித்தமேகம் விலக்குங்கா-ணம்புவியி
லல்லிற் கறுத்தகுழ லாரணங்கே நற்சிவப்பா
மல்லிக் கிழங்கென் பது.

(இ-ள்.) இருளினுக்கரிய அளகபாரத்தையுடைய ஆரணங்கே! சிவந்த அல்லிக்கிழங்கு செம்பின்களிம்பை நீக்குவதுந்தவிர அதைச் சிந்தூரமாக்கும் பித்தப்பிரமேகத்தை விலக்கும் என்க. 444

### நெய்தற்கிழங்கின் குணம்.

கண்ணுங் குளிருமக்கி காணுநா காந்தாபித்த
மெண்ணுந் தோஷம்மே கமேகநங்காண்-பெண்ணே
வயிற்றுக் கடுப்புரத்த மாறு நெய்தலுக்குப்
பயித்தியம்போம் விருதூறும் பார்.

(இ-ள்.) மாதே! நெய்தற்கிழங்குக்கு அக்கினிப்புண் பித்தயெரிச்சல் திரிதோஷம் பிரமேகம் ரத்தகிராணி பித்தகோப் ஆகிய இவை போம் விழிக்குளிர்ச்சியும் சுக்கிலவிருத்தியும் உண்டாகும். 445

### செங்கழுநீர்க்கிழங்கின் குணம்.

கண்ணுங் குளிர்ந்திருக்குங் காசமபோம் பித்தமறு
மெண்ணரிய மேகமிடையுங் காண்-பெண்ணேகேள்
பொங்கமொடு மாதைப் புணர்ந்தவழ லுந்தணியுஞ்
செங்கழுநீர்க் கிழங்காற் றேர்.

. (இ-ள்.) மாதேநீகேட்பாயாக; செங்கழுநீர்க் கிழங்கால் இருமல் பித்தநோய் சர்வமேகம் புணர்ச்சியின்வெப்பம் இவைநீங்கும் விழிக்கு குளிர்ச்சியாம். 446

### கோட்டிக்கிழங்கின் குணம்.

கொட்டிக் கிழங்கு குளிர்ச்சியென்பார் தேமலுடன்
ஒட்டிநிறை மேகமொழிக்குங்காண்-வட்டமுலை
மானே யகக்கடுப்பும் வந்தவழ லுந்தணிக்குந்
தானேயிதை யறிந்து சாற்று.

(இ-ள்.) வட்டமாயடிப்பரந்த தனங்களையுடைய பெண்ணே! கொட்டிக்கிழங்கு தேமல் பிரமேகம் தேகக்கடுப்பு உட்சூடு ஆகிய இவைகளை நீக்கும் இதனைக்குளிர்ச்சி என்பார் என்க. 447

### நிலப்பூசினிக்கிழங்கின் குணம்.

மெய்யிறுகுந் தாதுகளும் விறுமதி தேசசுமாம்
நொய்ய வுடலம்பருக்கு நுண்ணறிவாம்-பைய
மலப்பூச லேகு மலர்த்திருவே நல்ல
நிலப்பூசி ணிக்கிழங்கு னீ.

(இ-ள்.) மலரில்வசிக்குந் திருவனையாளே! நிலப்பூசினிக் கிழங்கினால் தளர்ந்ததேகம் இறுகப்படுவதுமன்றி இளைத்த சப்ததாதுக்களுக்குச் செழுமையுஞ் சருமதாதுவிற்கு ஒளிவும் நுட்ப அறிவும் உண்டாகும் மலபந்தம் நீக்கும் என்க. 448

### பருங்கிழங்கின் குணம்.

பருங்கிழங் கொன்றெய்திற் பறைபறவும் வாத
பருங்கணையா தெவ்விடமு மாறுங்-கருங்கலென
வீக்குமடல் வீக்கமொடு மேகப் பிணியுமறு
மாங்குயிலே நாளும் வழுத்து.

(இ-ள்.) மாங்குயிலனையமாதே! பருங்கிழங்கினால் வயிற்றில் இரைச்சலைச்செய்கின்ற வாதரோகம சர்வவிஷம் கபச்சோபை பிரமேகம் இவைநீங்கும் என்க. 449

### சன்னிக்கிழங்கின் குணம்.

சன்னிக் கிழங்குசிறு சிரங்குபுண் வளர்க்கு
மூன்னிலது வூன்பன்றிக் கொவ்வுங்கா-ணன்னமே
மூல மறுக்குமினு மோதிரத்தஞ் சீழ்மாற்றுந்
தால மறியுணிசந் தான்.

(இ-ள்.) அன்னம்போல்பவளே! ஊர்ப்பன்றி மாமிசத்துக்கு ஒப்பாகிய சின்னிக்கிழங்கு பொடிக்கிரந்தியையும் புண்ணையும் விளைக்கும் மூலரோகத்தையும் ரத்தமயகிரகணியையும் நிவர்த்திசெய்யும். 450

### பெருவள்ளிக்கிழங்கின் குணம்-இதுவே ஆள்வல்லி.

வாதகபம் பித்தமொடு மாமூலம் வாதகுன்ம
மோதுபல நோய்மந்த முண்டாகும்-போதின்
மருவள்ளிக் கொண்டழகின் மாதே யுலகிற்
பெருவள்ளி யின்கிழங்காற் பேசு.

(இ-ள்.) வாசனையையுடைய அளகபாரத்தாளே! பெருவள்ளிக்கிழங்கால் திரிதோஷதொந்தம் வாதமூலம் வாதகுன்மம் முதலிய சிலநோய்கள் அக்கினிமந்தம் இவை உண்டாம். 451

சிறுவள்ளிக்கிழங்கின் குணம்.

மந்தமிகுந் தீபனம்போ மாறுக் கரப்பானுஞ்
சிந்தமிகு கபமுஞ் சேருங்காண்-சொந்தமா
மூல முளைவரு முட்டைச் சிறுகிழங்கா
லேலவளக மின்னே யெண்.

(இ-ள்.) மயிர்ச்சாந்தணிந்த குழலாளே! சிறுவள்ளிக் கிழங்கால் மந்தம் கரப்பான் சிலேஷ்மவிருத்தி மூளைமூலம் ஆகியவை யுண்டாம் உதராக்கினிகெடும் என்க. 452

காய்வள்ளிக்கிழங்கின் குணம்-இதுவே வெற்றிலைவள்ளி.

அக்கினிவெப் பையடக்கு மென்பார் வாதமொடு
தொக்கிலதி புண்சிரங்கைத் தூண்டிவிடும்-மிக்குபசும்
வேயையுடைத் தோளணங்கே வெற்றிலையாம் வள்ளியெனுங்
காயை யுடைவள்ளி பது காண்.

(இ-ள்.) பசியமூங்கிலனைய தோள்களையுடையாளே! காய்வள்ளிக் கிழங்கு வாதரோகத்தையும் சருமத்தின்மீது பெரியசிறிய விரணங்களையும் விளைவிக்கும், உஷ்ணசாந்தியென்பர். 453

சருக்கரைக்கிழங்கின் குணம்.

உள்ளிற்கோ ணன்மருந்தை யும்முறிக்குஞ் சர்க்கரையாம்
வள்ளிக் கிழங்கதிக மந்தந்தா-னுள்ளில்மூளை
மூலம் விளையுந்த மோடிரைச்ச லுண்டாகுங்
கோல வயிறுங்கடுக்கும் கூறு.

(இ-ள்.) அதிமந்தமுள்ள சருக்கரை வள்ளிக்கிழங்கு திவ்ய ஔஷதகுணத்தைக் கெடுப்பதுமன்றிமூலமுளையையும் குடலிரைச்சலையும் கிரகணியையும் விளைவிக்கும். 454

---

# புல்லின் கிழங்குவகை

அறுகங்கிழங்கின் குணம்.

ஆறு வழுலெல்லா மாறுமுத் தோஷமது
வீறு திருக்குநல்ல மேனிதரும்-மாறுக்
கடியமா லங்கலணி காரளக மின்னே
கொடியறுகம் புற்கிழங்கைக் கூறு.

(இ-ள்.) வாசனைபொருந்திய மலரையணிந்த கரிய கூந்தலாளே! அறுகின் கிழங்கால் தணியாதபற்பல வெப்பமும் திரிதோஷ ரோகங்களும் நீங்கும், சரீரவனப்புண்டாகு மென்க. 455

கோரைக்கிழங்கின் குணம்.

சீதசுரந் தீர்க்குஞ் செம்புனற்பித் தம்போக்கும்
வாதசுரந் தணிக்கும் வையகத்தில-வேதைசெய்ப
வந்தபிணியை யெல்லாம் வாட்டும் முத்தக்காசு
கொந்துலவும வார்குழலே கூறு.

இதுவுமது.

அதிசாரம்பித்தமென் ற ருகமையங்
குதிவாதஞ் சோபக் கொடிய-முதிர்வாந்தி
யாரைத் தொடர்ந்தானு மவ்வவர்க் கெலாங்குளத்துக்
கோரைக் கிழங்கைக் கொடு.

(இ-ள்.) வாசனைவீசும் நீண்டகூந்தலாளே! முத்தக்காசு என்கிற கோரைக்கிழங்கு களிர்ச்சுரம் ரத்தபித்தம் வாத்சுரம் பேதி பயித்திய தோஷம் பித்ததாகம் கபரோகம் குதிகாலைப்பற்றிய வாயு மூர்ச்சை திரிதோஷவாந்தி ஆகியவைகளையும், துன்பத்தைத் தருகின் றசிற்சில ரோகங்களேயும் போக்கும். 456

மருட்கிழங்கின் குணம்.

தொண்டைக் கட்டையுந் தொலையு மகோதாமும்
பண்டைப் பல்வீக்கம் பறக்குங்காண்-கெண்டைவிழி
மானே மருட்கிழங்கால் மாறுமூலங்க ளெல்லாந்
தானே பசியெழும்புந் தான்.

(இ-ள்.) மகரகோக்கியே! மருட்கிழங்கால் நெஞ்சைப்பற்றிய கபகட்டு பெருவயிறு பலவிதசோகை மூலமிவைபோம், தீபாக்கினி உண்டாகும். 457

வெங்காயத்தின் குணம்.

வெப்ப மூலங்கிரந்தி வீறிரதத பித்தமுடன்
செப்புநா அக்காந் தீராத்தாகம-வெப்புக்
கடுப்பறு மந்தஞ்சந்நி காசம் வயிற்றுப்பல்
தடிப்பேறும் வெங்காயத் தால்.

(இ-ள்.) வெங்காயத்தில் தேகஉஷ்ணம் மூலம் சிரங்கு ரத்த நோய் பித்தம் கண்டகம் தாகம் உஷ்ணபேதி இவைநீங்கும் அக்கினி மாந்தம் சன்னிபாதம் இருமல் வயிற்றுப்பிசம் இவைவிருத்தியாம். ()

நரிவெங்காயத்தின் குணம்-இதுவே காட்டீருள்ளி.

நஞ்சோடு சீதகபம் நாடா திரைப்புமறும்
பஞ்சாகமூல பகந்தரம் போம்-பஞ்சணைசேர்
வீட்டுள் ளிருக்கு விநோத மடமயிலே
காட்டுள்ளி யின்கிழங்கைக் கண்டு.

(இ-ள்.) பஞ்சணை பொருந்திய வீட்டிற் சஞ்சரிக்கும் விநோத மயில் போல்பவளே! நரிவெங்காயத்தால் சர்ப்பவிஷம் சீதளத்தாலுண்டாகிய கோழை சுவாசம் மூலகபரோகம் ஆகியவைபோம். 459

கிட்டிக்கிழங்கின் குணம்.

கிட்டிக் கிழங்கால் கிளர்தீ பனமுண்டா
மெட்டிக் கிழமேக மேகுங்காண்-துட்டஞ்செய்
பித்த சமனமுமாம் பேசில்கப நாசமுமாம்
நிர்த்த மயிலே நினை.

(இ-ள்.) நடனமாடு மயிலணையாளே! கிட்டிக்கிழங்கால் நாட்பட்ட பிரமேகமும் சிலேஷ்மநோயும போகும், மிகுபசியும் பித்தசாந்தியும் உண்டாகும் என்க. 460

கிழங்குகளின் பொதுக்குணம்.

கிழங்குவகை யின்பேரைக் கேண் மூலத்துள்
முழங்கும் வாதத்தின் முரசம்-வழங்குகின்ற
சூரணக் கிழங்குகளைத் துய்த்தார் பேர்சொல்லிற்
சீரணக் குடும்பமங்கே சொல்.

(இ-ள்.) கிழங்குவகைகளால் மூலவாயு விருத்தியாம் கருணைக் கிழங்குகளால் மூலரோகங்கள் நீங்கும். 461

---

## மரத்தின் வேர்வகை

வில்வமரத்தின்வேர்க் குணம்.

வில்லுவத்தின் வேருக்கு வீறுகுன்ம வாயுகபம்
சொல்ல வொண்ணுப்பித்தக தொடர்சோபை-வல்லகப
தாகசுர நீரேற்றஞ் சன்னியொடு மெய்வலியும்
வேகமொடு நீங்குமே விள்.

இதுவுமது.

அக்கினி மாந்தம் மரோசியதி சாரம்விக்கல்
நிற்கரிய பித்தசுரம் நீள்சாந்தி-சுட்கநோ

யாதிபகோ பேகு மழகோடு புஷ்டியுண்டாங்
கோதில் வில்வவேரதனைக் கொள்.

(இ-ள்.) வில்வவேரினால் வாதகுன்மம் கபாதிக்கம் பித்தசோ கைக் கபத்தால் வந்ததாகம் சலக்கோவை சந்நிபாதம் தேகக்கடுப்புமந் தாக்கினி அருசி உஷ்ணபேதி விக்கல் பித்தருட்சை வசனம் அதிசுட் கம் முதலிய ரோகங்கள் நீங்கும், அழகு தேகபுஷ்டியுண்டாம் என்க.

பாதிரிமரத்தின்வேர்க் குணம்.

பாதிரியின் வேரினாற் பாரமது மேகம்போ
மோதுகரப் பானுழலை யோடிவிடும்-மாதேகேள்
கண்ணெரிவு காதெரிவு கையெரிவு காலெரிவு
நிண்ணய மாய்ப்போகு நிசம்.

இதுவுமது.

மேகத் தால்வந்த மிருபிளவை மாவிரணம்
போகத் தால்வந்து பொருமூல-மாகத்தில்
வந்தசொரி யோடுகப வாதமுக்த மும்போகும்
கொந்தடரும் பாடலத்தாற் கூறு.

(இ-ள்.) மாதரசே! பாதிரிவேருக்கு மகாமூத்திர கரப்பான் உழலை கண் காது கை கால் இவைகளைப்பற்றிய எரிச்சல் மேகப் பிடகம்பெரு விரணம் ஆக்கந்து மூலரோகம் புடை சிலேஷ்மவாததொந்தம் அக்கினி மாந்தம் ஆகியவைகள் போகும். பாடலம் என்பது பாதிரி என்க.

சண்பகமரத்தின்வேர்க் குணம்.

தீராத வுட்டினத்தைத் தீர்க்குஞ் சுரம்போக்கும்
நேரே பசுயெழுப்பு நிச்சயமே-யோருங்கால்
பண்புறுகண் டோடத்தைப் பற்றறுக்கும் வாசமுள்ள
சண்பக மரத்தின்வேர் தான்.

(இ-ள்.) சண்பகவேரானது உஷ்ணம் சுரம் நேத்திரதோஷம் ஆகியவைகளை நீக்கிப் பசியை யுண்டாக்கும் என்க. 464

மாமரத்தின்வேர்க் குணம்.

சீதரத்தப் போக்கைச் சிக்கெனவே தான்பிடிக்கும்
போதவயிற் றுக்கடுப்பை போக்குங்கா-ணோதுகின்ற
வாந்தியையுந் தீர்க்கும்வெளி மாமரத்தின் வேர்பட்டை
பூந்துகிலின் மாதே புகல்.

(இ-ள்.) அழகிய மேகலாபரணத்தை யணிபவளே! மாமரத்தின் வேர்ப்பட்டையானது சீதரத்தபேதிவயிற்றுக்கடுப்பு வாந்திஎன்னும் இவைகளைப் போக்குமென்க. 465

இலுப்பைமரத்தின்வேர்க் குணம்.

புண்ணும் புரையுமறும் போதத் துவர்ப்பாகு
மெண்ணு மகக்கடுப் பிருக்குமோ-பெண்ணேகேள்
நீரிழிவு மேரும் நெடுமோமை மூலத்தாற்
போடா கடுப்பிரத்தம் போம்.

இதுவுமது.

மந்த மரோசி மகாசூலை சர்வசுரம்
விந்துநஷ்டந் தாகமொடு மெய்யுளைப்பும்-முந்த
அலுப்பைப் பெற்றேகு மளகத்திற் காகா
விலுப்பைக்குச் சூடதிக மெண்.

(இ-ள்.) பெண்ணே! நீகேட்பாயாக துவர்ப்பாகிய இலுப்பை வேரினால் விரணம் புரை வயிற்றுக்கடுப்பு அதிமூத்திரம் ரத்தகிரணி அக்கினிமாந்தம் அருசி வாதசூலை சகலசுரம் சீணசுக்கிலம் தாகம்சரீர அயர்வு ஆகியவை நீங்கும், தலைரோமங்களுக்கு ஆகாது, உஷ்ணகாரி என்க, ஓமை-இலுப்பை. 466

மருதோன்றிமரத்தின்வேர்க் குணம்.

சோணித தோஷமெலாஞ் சொல்லாம லேகிவிடும்
பேணுவார்க்கிரத்தமொடு பித்தம்போம-காணு
ஒருதோன்ற லென்னுமத னேத்துமெழின் மாதே
மருதொன்றி வேரால் மறைந்து.

(இ-ள்.) ஒப்பற்ற புருஷனாகிய மன்மதன் புகழும் அழகுடையாளே! மருதோனறிவேரால் மாதர்கள் ருதுகாலசோணித தோஷங்கள் அசிர்க்காரோகம் பித்தநோய் ஆகிவைகள் நீங்கும். 467

வெண்கர்லீமரத்தின்வேர்க் குணம்.

விம்மு மகோதரமு மேனோக்கு பித்தமொடு
சிம்மகிருஷ்ண தோஷமுமுட் சேருமோ-கம்முகின்ற
கள்ளைப் பெருநீருங் காணாது கைப்பையுறும்
வெள்ளைக் கருங்காலி வேர்க்கு.

(இ-ள்.) கசப்புள்ள வெள்ளைக் கருங்காலி வேருக்குப்பெருவயிறு ஏறுபித்தம் கிருஷ்ண சிம்மகதோஷம் சுரமேகம் இவைநீங்கும். 468

### கருங்காலிமரத்தின் வேர்க்குணம்.

கைப்புற் றிருக்குங் காலி வேருக்கு
மைப்புழுவும் பாகம் மதுநீரு-மெய்க்குளெழு
குஷ்ட முதிரப்போக்குங் கூவியமு தகலும்
மட்டுதும்பூங் கோதாய் வழுத்து.

(இ-ள்.) தேன்பொருந்தியபூங்கொத்துகளையணிந்த கூந்தலாளே கைப்புள்ள கருங்காலிவேருக்கு மாசயக்கருங்கிருமி பாகுபடுமதுநீர் ருசியசிம்மக் குஷ்டம் ரத்தபேதி இவைவிலகும். 469

### எட்டிமரத்தின் வேர்க்குணம்.

ஆலவிஷ மொக்கு மருந்தக் கடிநீரு
ஞாலமதிற் பித்தகுண நாசமா-மாலைக்கோ
லட்டிய பாகுமொழியே யானவிஷ முட்டிபெனு
மெட்டி மரவே ரிது.

(இ-ள்.) ஆலையிலாடு பாகனைய மொழியாளே! விஷமுஷ்டிஎன்கிற எட்டிமரம் ஆலவிஷம்போன்றது. இதன் வேரால் மகாசர்பவிஷங் களும் பயித்திய குணங்களும்நீங்கும். 470

### புங்குமரத்தின் வேர்க்குணம்.

வாதக்கடுப்பு மகாமூர்ச்சை தாபசுரம்
வாதகுன்ம மிரதத்தால் வக்கிடுகோ-யோதுகின்ற
புண்புரையும் வல்விஷமும போகுந் திரண்டுருண்டே
பண்புறு புங்கமவேர்க்குப் பார்.

(இ-ள்.) புங்கமரவேரினல் வாதக்குட்டச்சல் திரிதோஷமூர்ச்சை தாபசுரம் வாயுகுன்மம் ரத்தகாதுவினுற் பிறக்கின்றரோகங்கள் விரணம் புரையோடல் சர்ப்பவிஷம் ஆகியவைநசிபோம். 471

### நாவல்மரத்தின் வேர்வகை.

வாதமறுங் கரப்பான் மாறும் விரணமோ
டோதமுறு நீரிழிவு முந்தூரத்த-சீதமுங்காய்
மாவன் சுரமும்வளர் மேகமும் போகும்
நாவன் மரவேரி னல்.

(இ-ள்.) நாவல்மரவேரால் வாதவிகாரம் கரப்பான் புண் வெகுமூத்திரம் ரத்தசீதபேதி வாதசுரம் மச்சாமேகம் இவை விலகும்.

கருவேல்மரத்தின் குணம்.

கருவேலின் வேர்க்குக் கடுப்பிரத் தம்மாநதம்
பருவாத மூறு கரப்பானும்-பெருகும்
பெரும்பேதி யும்போக்கும் பேச வினிக்கும்
கருமபே யிதனைக் கருது.

(இ-ள்.) பேசவினிக்குங் கருமபனையாளே! கருவேல்வேரினால் ரத்தக்கடுப்பு அக்கினிமந்தம் மகாவாதம் கரப்பான் வதிசாரம் ஆகிய வைகள் போகுமென்க. 473

உருதிவாக்கின் வேர்க்குணம்-இது ஓதி எனமருவியது.

புண்புரை கிராணிரத்தப் போக்கதி சாரக்கடுப்புந்
திண்பெறு தாகஞ்சோபஞ் சீதளமும்-நண்பி
லதிவிரைவாய்த் தாண்டு மணங்கே பருத்த
வுதிமரத்தின வேரினு லோர்.

(இ-ள்.) தெய்வமகளிரனையபெண்ணே! உருதிமரவேரினால் விரணம் புரைகிரகணி ரத்தபேதி சீதக்கடுப்பு தாகம் மூர்ச்சை பித்த சீதளம் இவைவிலகும் என்க, தூர்-வேர். 474

அகத்திமரத்தின் குணம்.

நல்லகத்தி வேரதனை நாடுங்கால் மேகமனுஞ்
சொல்லகனுக் தாகமறுஞ் சொல்லவெனின்-மெல்லமெல்ல
மெய்யெரிவு கையெரிவு மேகநத்தி னுள்ளெரிவு
மையெரிவும போமென் றறி.

(இ-ள்.) நல்ல அகத்திவேரால் வெள்ளை விதாகம் உடல் உள்ளங் கை ஆண்குறி நாளம் பஞ்சேந்திரியமின விடங்களில் யெரிச்சலிவை நீங்கும். 475

நெல்லிமரத்தின் குணம்.

வமன மரோசியமும் வாதமுதன் மூன்றுஞ்
சமனமுறு மலமுஞ் சாரும்-மமனசுரம்
புல்லிவரு தோஷசந்நிப் பொல்லாச் செயலும்போம்
நெல்லிமர வேரை நினை.

(இ-ள்.) நெல்லிவேரால் வாந்தி அருசி திரிதோஷகோபம் தருண சுரத்தில் அபத்தியத்தாற்பிறந்த பீதஜிம்மகதோஷம் அதிற்கிளைத்த சந்நி இவைதீரும் திரிதோஷசமனமும் மலப்போக்கும் உண்டாமென்க. 476

### அருநெல்லிமரத்தின்வேர் குணம்.

சுத்த சுரமருசி தோலாப் பெருவாந்தி
பித்தசந்நி பாதமிவை பேருங்காண்-மெத்தமண
நாறுமலர் கூந்தன்மின்னே நாவுக் கினிமையெனக்
கூறுமரு நெல்லியின் வேர்க்கு.

(இ-ள்.) மிருபரிமளம் பொருந்திய மலர்க்கூந்தலையுடையாளே! அருநெல்லிமரவேரால் தனிச்சுரம் அரோசிகம் திரிதோஷவாந்தி இரத்தபுஷ்டி சந்நிபாதம் ஆகியவைகள் போகுமென்க. 477

## செடியின் வேர்வகை

### ஆடாதோடையின்வேர் குணம்.

காசமொடு மந்தங் கதிதபித்தங் கொடுஞ்சு
வாசங் கழுத்துவலி முதநோய்-கூசி
யோடா கிராதிங் கொருநாளு மொண்டொடியே
யாடா தொடைத்தருக் கஞ்சி.

(இ-ள்.) ஆடாதொடைவேரினால் இருமல் அக்கினிமந்தம் சுவேத பித்தம் மகசுவாசம் களரோகமுதலிய நோய்கள்போம். 478

### சங்கமவேர்க் குணம்.

சங்கம்வேர்ப் பட்டை சளியிருமலைச் சுரத்தை
யங்கவாதக் கடுப்பை யாடத்தைப்-பங்கே
செய்யுங் கிரந்தியையுட் டீகால் கிருமியையிவ்
வையக் தனிலொழிக்கு மால்.

(இ-ள்.) சங்கம்வேர்ப்பட்டை கோழை காசம் கபச்சுரம் வாதக் கடுப்பு சிலேத்மசோகை பங்கவிசர்ப்பி உட்சுரம் தனியாதகோபம் கிருமிரோகம் ஆகிவைகளைப் போக்குமென்க. 479

### போராமுட்டிவேர் குணம்.

வாதசுரந் தாகம் மதலைக் கணமாக்தஞ்
சீதசுரம் பித்தமெனச் செப்பணங்கு-மோதுநம்மாற்
சோரா முட்டிக்கேகுஞ் செய்ய மடமயிலே
பேரா முட்டித்துனரைப் பேசு.

(இ-ள்.) அழகு பொருந்திய மயில்போலுஞ் சாயலையுடையாளே! போராமுட்டிவேரினால் வாதசுரம் தாகரோகம் மாந்தகணம் குளிர்ச் சுரம் பித்தரோகம் ஆகிய இவைகள் போகுமென்க. 480

### சித்தாமுட்டி வேர்க்குணம்-இதுவே குறுந்தோட்டி.

*அத்திசுர முதலனந்த சுரம்பித்த மும்போ*
*மெத்தவிழிக் கொளியாம வீறு தயி-லத்திற்காம்*
*நற்று மரைதருவு நாடுமெழி ற்றிருவே*
*சித்தர் முட்டித்தூரைச செப்பு.*

(இ-ள்.) நல்ல தாமரையில் வசிக்கு மிலக்ஷுமியையொத்த அழகு டையாளே! சித்தாமுட்டிவேரினால் அஸ்திசுரமுதலிய சுரங்களும்பித் தநோயும் நீங்கும் கண்ணுக்கொளியாம், தயிலத்துக்குதவும். 481

### செந்தோட்டி வேர்க்குணம்.

*சந்துவலி வாதந் தாகஞ் சுரங்கரப்பா*
*னுந்து சுவாசந்தப மோடுங்கா-ணந்தமிகு*
*மிந்தொட் டியவதன வின்ப மடமயிலே*
*செந்தொட்டி வேறுற் றெளி.*

(இ-ள்.) சந்திரன்போன்ற முகத்தினையுடைய யின்பந்தரு மட மயிலே செந்தொட்டிவேரினால் சகன விருதவாதரோகம் விதாகம் ருட்சை கடுவன் இரைப்பு கோழை ஆகியவைபோம். 482

### முட்காவேளை வேர்க்குணம்-இதுவே முக்காவேளையென மருவியது.

*தாகாதி மந்தமதி சாரநா வறட்சி*
*போகாச் சுரந்தாபம் போக்கமருந்-தோகையிற்*
*சிக்காவேளைப் பதத்தைத் தின்னச்செய் விக்கவென்றான்*
*முக்கா வேளைப்பதத்தை முன்.*

(இ-ள்.) முக்காவேளை வேரினால் வாததாகம் மந்தாக்கினி அதிசா ரம் நாவறட்சி சுந்தசுரம் வெப்பம அன்னத்துவேஷம் இவைபோம்.

### செங்கத்தாரி வேர்க்குணம்.

*செங்கத்தாரிச் சடைச்குத் தீராத வன்மேகம்*
*பொங்கி வருகிரந்திப் புண்புரைகள்-தங்குகின்ற*
*சந்திக சிலேஷ்மந் தணித்த மகாவாத*
*முத்திகை விட்டோடும் மொழி.*

(இ-ள்.) செங்கத்தாரிவேருக்கு பிரமேகநீர் ஒட்டுப்புண்புரைகள் நில்களை வீங்கச்செய்கின்ற கபம மகாவாதமிவைபோம் சடை-வேர்.

### மரக்காரை வேர்க்குணம்.

*சீதங் கடுப்பு திரிதோஷ மாந்தபித்த*
*வாதங் கரணைய மாந்தகண-மியாதிங்*

கிரிக்கான மருந் தென்பா ருலகில்
மரக்காரை வேரால மதி.

(இ-ள்.) மரக்காரைவேரால் சீதக்கடுப்பு திரிதோஷம் உதிரபித்த வாதநோய் கரப்பான்கபம கணமாந்தமிவைபோம் இதுவாந்திமருந்து.

குத்துக்காற் சம்மட்டிவேர்க் குணம்.

சாரமுறு குத்துக்கா ற சம்மட்டி வேரெனச்சொற்
கோரமுள்ள மாவாதக் கூட்டமெங்கே-வீரமுறு
மேகத கட்டுப்பெங்கே திமிர் வாதமெங்கே
சோகத் தளர்ச்சியெங்கே சொல்.

(இ-ள்.) பச்சையுள்ள குத்துக்காற் சம்மட்டி வேரினால மகா வாதம் சர்வ மேகக்கட்டிகளும திமிர்வாதமும மூர்ச்சையின் அசதி வும்போம. 486

அவுரிவேர்க் குணம்-இதுவே நீலி.

எல்லா விஷங்களுக்கு மேற்ற முறிப்பாகும
பொல்லாச் சுரமூர்ச்சை பொங்குவட்டை-நில்லாப்
பவுரிதரும் குன்மமுதற் பன்னோ யொழிப்பு
மவுரிதரு வேருக் கறி.

(இ-ள்.) அவுரிவேரினால சர்வவிஷம் ரூட்சை மூர்ச்சை வெள்ளை வயிற்றுநோய் முதலிய பலநோய் ஆகியவையோம். 487

களாவேர்க்குணம்-இது கிளா எனமருவியது.

விடத்துருநோய் பித்தமைய வேர்வை யதிதாகந்
திடத்தக வுதிரத்தினது சிக்கற்-கடக்துளொழு
மக்கினி மாந்தமிவை யண்டா தொருநாளுந்
சிக்கெனக் களாவேரைச சேர்.

(இ-ள்.) களாவேரினால் விஷசம்பவரோகம் பயித்தியம் கபாதிக் கம் கபவியர்வை விதாகம பிரசவ அழுக்கு மந்தாக்கினி இவைநீக்கும்.

வெட்டிவேர்க்குணம்-இதுவேகுருவேர்-விருத்தம்.

பித்தவிதாகஞ் சசிகாமிலங் கறைப்பித்த மனம்
தத்திடுகுட்டஞ் சிரநோய் களமடி தாதுகட்ட
மத்தமனற்புண் டடைப்புண் வண்மூர்ச்சை வரிவிழிநோய்
வித்திரமேகத்தின் கட்டியும்போம் வெட்டி வேரினுக்கே.

(இ-ள்.) வெட்டிவேருக்குப் பித்ததால் அகாலத்தி னுண்டா கிறதாகம் சோமரோககாமாலை சத்தபித்தம சுரமபரவுகின்ற குஷ்டம் தலைநோய் கழுத்துநோய் சுக்கிலநஷ்டம் உன்மத்தம் தீப்புண் மூலைச் சிலந்தி திரிதோஷமூர்ச்சை நேத்திரரோகம் வித்திருக்கட்டி யிவை நீங்கும். 489

# கொடியின் வேர்வகை

## நாகமல்லிகை நாகமுட்டிவேர்க் குணம்-வெண்பா.

சீராரு நாகல்லைச் சிவைவரைக் கண்டாக்காற்
றீரா நமைச்சற் செறிபுடைக்க-ணீராருஞ்
சன்னப் புழுச்சங்கந் தாங்காவாஞ் சாம்புனத
வன்னக் குயிலனையாய் வாழ்த்து.

(இ-ள்.) வன்னக்குயிலனையமாதே! நாகமல்லிகைவேரால் ஒழியாத்தினவும் செருக்கியபுடைகளும் ரசதாதுவைப்பற்றிய கிருமிக் கூட்டமும் நீங்கும் என்க. சிவை-வேர். 490

## காட்டுமல்லிகைவேர்க் குணம்.

சுரங்களொடு நாவறட்சி தொரதி மந்தமபேதி
யுரங்கதித்த தாகமிவை யோட்டும்-வருஞ்சோரார்
தாமல்லி லோடுந் தாகமைபோ லோடிவிடுங்
காமல்லிகை வேரார்க் காண்.

(இ-ள்.) காட்டுமல்லிகை வேரினால் சாவசுரம் நாவறளல் அக்கினி மந்தம் அதிசாரம் விதாகம் ஆகியவைகள் போகும். 491

## சிறுகுறிஞ்சாவேர்க் குணம்.

சிறுகுறிஞ்சா வேர்விஷத்தைத் தீர்க்கு மானிலத்
துறுசுரங் கள்வாத மொழிக்குந்-தெறிபாணக்
கண்ணா யிருமன்முதற் காசந தணிக்கும்
விண்ணா டருக்குமிதை விள்.

(இ-ள்.) ஏவுகின்ற பாணமனைய கண்களையுடையாளே! சிறுகுறிஞ்சா வேரானது அற்பசெந்துக்களின நஞ்சுவாதசுரம் வாததோஷம் காசம் சுவாசகாசம் இவைகளைப் போக்குமென்க. 492

## பேச்சுரைவேரின் குணம்.

கடுவேறு பேய்ச்சுரைவேர் கண்ட லரவின்
கடுவேறு துண்மை முக்காலுங்-கொடுவிடமு
மீளையிருமலும் விட்டேகு முண்டால் வஃந்தியுண்டாம்
வாளையுறுங் கண்ணாய் வழுத்து.

(இ-ள்.) வாள்போலுங் கண்ணையுடையமாதே! கசப்புள்ள பேய்ச்சுரைவேரினால் சர்ப்பசப்தவேகம மகாவிஷம் கோழை காசம் இவை நீங்கும். இதில் வமனம் உண்டாம் என்க. 493

### முசுமுசுக்கைவேர்க் குணம்.

கந்தம் பரவு களிச்சளியும் புணவிடமு
மந்தம் பெறுவிடமு வாததிகளுநம-மநதம
பெருகுரங்குக் கிச்சூரும பித்தமு மிருக்கா
திரு குரங்குக்கை வேருக்கே.

(இ-ள்.) முசுமுசுக்கை வேரினால துர்க்கந்தத்துடன் இறுகிய கோழை இற்பவீரியவிஷம் விஷாலச்சகரோகம் வமனம மார்புநோய் குன்மம் பித்தாதிககம் இவைபோம் குரங்குக்கு முசுஎன்றொருபெயர்.

### வெண்காக்கட்டான்வேர்க் குணம்.

மாதரால் வந்தவெட்டை வன்மேகஞ் சென்னிவலி
யோதுசுரம் விழிநோய் போடுங்காண்-பேதியொடு
மாக்கட்டாஞ் சீதமறு மாமூலியாம் வெள்ளைக்
காக்கட்டான வேரைக் கருது.

(இ-ள்.) மாமூலியென்னும் காக்கட்டானவேருக்கு வெள்ளை பிரமேகம் தலைநோய் சுரம் கண்ணோய் ஆமம இவைநீங்கும். 495

### கருங்காக்கட்டான்வேர்க் குணம்.

மாதர்க்கங் கிருமியடல் லாதங் கபமினமுஞ்
சேர்ந்தமலக் கட்டுஞ் சிதையுங்காண்-சூழ்ந்த
அருங்கா குவடுகளி லண்டா மயிலே
கருங்காக் கட்டான்வேரைக் கண்டு.

(இ-ள்.) தருக்களையுடைய மலைகளிலே சஞ்சரிக்காதேமயிலே! கருங்காககட்டான் வேருக்கு மாந்தம மலக்கிருமி வாதாதிக்கம் சிலேஷ்மரோகம் மலக்கட்டு ஆகியவை நீங்கும் என்க. 496

### கொடிவேலின் வேர்க்குணம்-இதுவே சித்திரமூலம்.

கட்டி விரணங்கிரந்தி கால்க ளறையாப்புக்
கட்டி சூலைவீக்கங் காழ்மூல-முட்டிரத்தக்
கட்டு நீரேற்றங் கனைத்த பெறுவயிறு
கட்டுங் கொடிவேலி யாம்.

(இ-ள்.) கொடிவேலிவேரானது வித்திரிதி புண் சொறிசிரங்கு வாதரோகம் குதஸ்தானவித்திரி குத்தல் சோபை மூலரோகம் உதிரக்கட்டு ஜலஸ்வாரம் மகோதரம் இவைகளைக் கெடுக்கும். 497

### பெருமருந்தின் வேர்க்குணம்.

பெருமருந்தின் வேர்ப்பித்தம் பீரியைப்பு காசம்
வருதிர முரும்பு வலிவாத-முருவுவிட
மொன்றிய மாகடிக ளோட்டு மூலகிலிது
வன்றியது கோச்சிகிச்சைக் காம்.

(இ-ள்.) பெருமருந்துவேர் பித்தகோபம் சுவாசம் இருமல் சுர ரோகம் சரீரக்குத்தல் வாதநோஷம் அற்பவிஷக்கடிகள் ஆகியவை களை நீக்குவதுமன்றி கோச்சிகைச்சைக்கும் உதவும் என்க. 498

### பெருங்காஞ்சொறி வேர்க்குணம்.

காசஞ் சுவாசங் கபச்சுரங்க ளோடுவன
வாசஞ்செய் யும்மூர்க்குள் வாராமல-வாசம்
பெருக்கு முலையாய் பெருங்காஞ் சொறிவே
ரிருக்கு மெனமனதது ளெண்ணி.

(இ-ள்.) வாசமிகு தனங்களையுடைய பெண்ணே! பெருங்காஞ் சொறிவேரினால் இருமல் இரைப்பு சீதசுரமபோம். 499

### சிறுகாஞ்சொறி வேர்க்குணம்.

சிறுகாஞ் சொறிவேர் சிலேஷ்ம வாசத்தைக்
குறியாத முச்சுரக் குழாத்தைச்-சொரியுங்
கரப்பான் சிறுசிரங்கைக் காலைத் தாகத்தே
யுரப்பாகச் சாடுமென வோது.

(இ-ள்.) சிறுகாஞ்சொறிவேரானது தமக்கவாசம் திரிதோஷ சுரங்கள் கரப்பான் புண் வாதப்பெருக்கம் தாகரோகம் இவைகளை நீக்கும். 500

### கருங்காஞ்சொறி வேர்க்குணம்.

குற்றிருமல் சீரேற்றங் கோரகப ரூட்சை
நித்திய வரோசகமு நீக்குங்காண்-ரத்ன
அருங்காஞ்சி வாய்ந்தவிடை யன்னமே சுத்தக்
கருங்காஞ் சொறிவேரைக் கண்டு.

(இ-ள்.) அருங்காஞ்சிவாய்ந்த விடையையுடைய அன்னம்போல் பவளே! கருங்காஞ்சொறிவேருக்கு பொடியிருமல் ஜலஸ்ராவம்சிலேஷ் மரூட்சை அன்னரோசகம் ஆகியவை நீங்கும். 501

### பச்சைதிப்பிலி வேர்க்குணம்.

*தாகமுடன் சோபந் தணிக்குங்கா ணைவ்வகையின்*
*மேகமுடன் பித்தம் விலக்குமே-போகமிகும்*
*நவ்வியா ன்ன நயங்கொடுக்கும் பச்சை யாஞ்*
*செவ்வியம் மூலச் செயல்.*

(இ-ள்.) *சிவந்தநீற்பச்சையுள்ள திப்பிலிவேர் விதாகம் ஆயாச பலமேகம் பித்தாதிக்கம் இவைநீங்கும். சுககிலத்தையும் அழகையும் விருத்திக்கும்.* 502

### இன்புற வேர்க்குணம்.

*இன்புரு வேரை யிதமா யருந்தினர்க்கும்*
*பின்புரு ஐயமொடு பித்தமுமே-துனபா*
*மிருமல் சுவாச மெரிசுரம் வயிற்றுப்*
*பொருமலுப் பிசம்பறந்து போம்.*

(இ-ள்.) *இன்புருவேருக்கு கபாதிக்கம பித்தகோபம் காசம்சுவா பித்தசுரம் வயிறிரைதல் விக்குதல் இவைகள் நீங்கும் என்க.* 503

### நன்னாரிவேர்க்குணம்-இதுவே நீறுண்டி.

*நன்னாரி வேரை நருக்கியரைத் தது மதன்*
*வின்னாரி யூணல் வெதுப்பிமே-தினவெறி*
*தோணாது கற்றாழைச் சோற்றில் கலந்துண்ணக்*
*காணாது வண்டு கடி.*

### இதுவுமது.

*சலதோஷம் பித்த மதிதாக முழலே*
*சலமேறு சீதமின்னார் தஞ்சூ-டலகமதிற்*
*சொன்மது மேகம்புண் சுரமிவை யெலாமொழிக்கு*
*மென்மதுர நன்னாரி வேர்.*

(இ-ள்.) *நன்னாரிவேரை யரைத்துத் தேனிற்பாகுஞ் செய்துண்ணில் அதிபித்தந்தீரும அதைக் கற்றாழை சோற்றோடுண்ண வண்டு கடிபோம் இன்னுங் கிரமப்படி உபயோகிக்க நீரேற்றம் பித்தநோய் தாகம் வாய் நீர்ச்சுரப்பு புணர்ச்சியின் சூடும் மதுநீர்க்கிராந்தி சுரவே கம் போம்.* 504

---

# புல்லின் வேர்வகை

### பச்சைவிலாமிச்சுவேர்க் குணம்-இதுவே வெட்டிவேர்.

திரிதோஷந் தாகஞ் செறிகுஷ்ட மீளை
பெரிதான சூலைமந்தம் போராச் சுரவெப்ப
மச்சையுண் ணுங் கீடமுதன் மாறுமெய்க்குங் காந்தியுண்டாம்
பச்சைவிலா மிக்குப் பார்.

(இ-ள்.) பச்சைவிலாமிச்சுவேருக்கு வாதபித்த கபாதிக்கம் தாக ரோகம் பெருவிபாதி சுவாசம் சரீரக்கடுப்பு அக்கினிமந்தம் உஷ்ண சுரம் மச்சைதாதுக்கிருமி ஆகியவைகள் நீங்கும் அழகுண்டாகும்.

### பஞ்சமூலத்தின் குணம்.

செவ்வியம் பேராத்தை சித்திரமூலஞ்சுக்கோ
டொவ்வு கண்டுபரங்கியோ ரைந்தும்-செவ்வினையைச்
சண்ணு பஞ்சமூலமெனத் தாரணி யெலாமறிய
வண்ண மயிலே வழுத்து.

(இ-ள்.) வண்ணமயிலனைய மங்கையரே! திப்பிலிமூலம் பேராத்தை கொடிவேலிவேர் சுக்கு கண்டுபரங்கி இவ்வைந்தும் பஞ்சமூலமாம் இது கொடிய ரோகங்களையு நீக்கும் என்க. 506

### சிறுபஞ்சமூலத்தின் குணம்.

சிறிய வழுதுணைவேர் சின்னெரிஞ் சினைமூலஞ்
சிறுமலி கண்டங் கத்திரிவேர்-நறிய
பெரிமலி யோரைந்தும் பேசுபன் ஞேய்தீர்க்கு
மரிய சிறுபஞ்ச மூலம்.

(இ-ள்.) சிறுவழுதுணை சிறுநெருஞ்சில் சிறுமல்லிகை கண்டங் கத்திரி பெருமல்லிகை ஆகிய இவைகளின் வேர்கள் ஐந்தும்சிறுபஞ்ச மூலமாம் இது பற்பலரோகங்களைப் போக்கும். 507

### பெரும்பஞ்சமூலத்தின் குணம்.

பாதிரிவேர் வாகை பருங்குமிழ மாலூர
மாதே தழுதாழையிவ் வேரைந்தும்-போதிலமை
ருஞ்சிலை நுதற்றிருவே யுன்னுபெரும் பஞ்சமூ
லஞ்சில நோயேகுமிதி லாய்.

(இ-ள்.) மலராசனத்தில் வசிக்கும் சிலைநுதற்றிருவனைய பெண் ணே! பாதிரிவகை பெருங்குமிழும் வில்வம் தழுதாழை இவ்வைவகை வேரும் பெரும்பஞ்சமூலமாம் இதனாற் சிலநோய்கள்போம். 508

### அஷ்டமூலத்தின் குணம்.

கோரை யரிகரந்தை சூலங்களுசி கஞ்சாங்
கோரை யாடாதோடை கோத்துளசி-வீரியபற்
பாடகமிவ் வெட்டுமே பலவிஷக குழாமிரியச்
சாடுமஷ்ட மூலமென்ப தாம்.

(இ-ள்.) முத்தக்காசு விஷ்ணுகரந்தை பேய்ப்புடல்வேர் சிந்தில்வேர் கஞ்சாங்கோரை ஆடாதோடைவேர் கருந்துளசி, பற்பாடகம் இவ்வெட்டும் அஷ்டமூலமாம் இது பற்பலவிடங்களைத் தீர்க்கும, சூலம்-பேய்ப்புடல். 509

### தசமூலத்தின் குணம்.

வில்வம பெரிதமிழ் மேனெரிஞ்சல முன்னையிரு
மல்லிகை சிறிய வருதணை வோ-நல்லகண்டங்
கத்திரி புன்காலி பெருவாகை யிவ்வைபன்னோவைக
குத்துந் தசமூலங் கூறு.

(இ-ள்.) வில்வம பெருங்குமிழ் யானைநெருஞ்சில் முன்னை சிறு மல்லிகை சிருவழுதுணம் கத்திரி பாதிரி பெருவாகை இப்பத்தும் தசமூலமாம் இதுகடினமான ரோகங்களைத் தீர்க்கும என்க. 510

---

## மரத்தின் பட்டைவகை

### அத்திமரப்பட்டையின் குணம்.

வீறு கடுப்பிரத்தம் வெண்சிந ரதநமொடு
நாறுவிர ணங்கெளலா நாடாவாம-கூறுங்கா
லத்திதரு மேகம்போ மாயிழைபே வெஞ்ஞான்று
மத்திப்பாற் பட்டைக் கறி.

(இ-ள்.) ஆயிழையே அத்திமரப்பட்டைக்கு ஆசனக்கடுப்பு உதிரப்போக்கு சீதாத்தபேதி புண் தத்துப்பிரமேகம ஆகியவைபோகும்

### நாவல்மரப்பட்டையின் குணம்.

ஆசிநோய் காச மசிர்க்காஞ் சுவாசவினை
கேசமுறு பாச கிரகநோய்-பேசரிய
மாவலிங்க லாஞ்சனமிவ் வண்பிணி வெலாமேகு
நாவலறு பட்டை யதனல்.

(இ-ள்.) நாவல்மரப் பட்டையினல் வாயிற்பிறக்கும் நோய்கள் இருமல் பெரும்பாடு ஈளை பிள்ளைகளின் கிரகதோஷங்கள் வியங்கம் லாஞ்சனம் என்னும் மச்சுபேதங்கள் ஆகியவைகள் தீரும் என்க. 512

### முருங்கைமரப்பட்டையின் குணம்.

முருங்கைவேர் பட்டைக்கு மூடு கபத்தோ
டொடுருங்குருச் சுரதி சுரமோடு-பருங்கனக
வட்டைப் பொருமுலையாய் வாய்வொடு விஷங்களுமேற்
பட்டைக்குப் போமே பறந்து.

(இ-ள்.) சூதாடுகருவியை நிகர்த்த முலைகளையுடைய மாதே! முருங்கை வேர்ப்பட்டைக்கு கபதோஷம் சந்நிபாதசுரமும், மரப்பட்டைக்கு வாததோஷமும் சிலவிஷங்களும் நீங்கும். 513

### புளியமரப்பட்டையின் குணம்.

புளிய மரத்தின் புரணிதனைக் கண்டா
லுளமாந்தை குன்மவலி யோடும்-வளியார்ந்த
பேதிகட்டுஞ் சுரம்போம் பித்தமுறுந் தீபனமா
மோத வசீரணமே யுன்.

(இ-ள்.) புளியமரப்பட்டையினால் உளமாந்தை குன்மநோய் வாதாதிசாரம் சுரம் அசீரணம் இவைநீங்கும் பித்தமும் பசியும்விருத்தியாம்

### பெருமரப்பட்டையின் குணம்.

பெருமரப் பட்டையது பேதி கிராணி
மருவிரத்த நோயினத்தை மாத்தூ-திருவே
நடலைபுரி வாதத்தை நாடா தகற்று
முடலை யிரட்சிக்குமென வோர்.

(இ-ள்.) இலக்குமியனையாளே! பெருமரப் பட்டையானது அதிசாரம் கிரகணி உதிரநோய் வாதாதிக்கம் இவைகளை நீக்கும். சரீரத்தைப் போஷிக்கும். 515

### கருவேலமரப் பட்டையின் குணம்.

தந்த மிறுகுந் தனிச்சூதம் புண்ணுறு
மந்தசுரம் பித்தம் மடியுங்காண்-பந்த
மருவே யகலா மலரளக மாதே
கருவேலம் பட்டைக்குக் காண்.

(இ-ள்.) வாசனை நீங்காத புட்பங்களைச்சூடிய அளகபாரத்தை யுடையாளே! கருவேலம்பட்டைக்கு ரசவேகத்தின் வெக்காடுமுதலிய விரணங்களும் சுரமும் பித்தநோயும் ஒழியும், பல்லிறுகும். 516

### கருங்காலிமரப்பட்டையின் குணம்.

மேகநீரைக் கெடுக்கு மீறு தந்த மூலத்து
ளாகிய வேதனையை யார்த்துக்காண்-சோகந்
தருங்காச மீளையிவை சாரா தகற்றுங்
கருங்காலிப் பட்டையது காண்.

(இ-ள்.) கருங்காலிமரப் பட்டையானது பிரமேகமூத்திரம் தந்த மூலரோகம் இருமல் சுவாசம் ஆகியவைகளை நீக்கும். 517

### மாவிலிங்கு, யெருக்கு, கருவேல் இதுகளின் பட்டைக் குணம்.

மாவிலிங்கப் பட்டையினுல் வாதமொடு சந்திகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் பாறுமே-மாவெருக்கம்
சடைசந்தி வாதம் பலவிஷம் போக்குங்கருவேற்
பட்டைநா கோய்தீர்க்கும் பார்.

(இ-ள்.) மாவிலிங்கப்பட்டையால் வாதநோயும் சந்திகளும் அஷ்மரி ரோகமும் நீங்கும். யெருக்கம்பட்டை சந்நிபாதம் வாதநோய் பல விஷம் இவை போக்கும். கருவேலபட்டை நாப்புண்ணை நீக்கும். 518

### கள்ளி, நொச்சில் இதுகளின் பட்டைக் குணம்.

நரம்புச் சிலந்தி நளிர்வாத சந்நி
யுரம்பெரிய வாதமிவை யோடும்-பெரும்புவியிற்
கள்ளிமறப் பட்டையினுல் காரநொச்சிற் பட்டையது
துள்ளு சன்னிவாத மகற்றும்.

(இ-ள்.) கள்ளிமரப்பட்டையினுல் நரம்பு சிலந்தியும் கபவாத தொந்த சன்னிபாதமும் வாதப்பிரகோபமும் நீங்கும் நொச்சில்மரப் பட்டையானது சன்னிபாதத்தாற் பிறந்த வாதத்தைப் போக்கும்.

### கிளியூரர்ப்பட்டையின் குணம்.

மணவருக்க மாகும் வருசுரத்தைப் போக்குந்
தணலாய வெப்பைத் தணிக்குங்-குணமாதர்
கிளியூரற் பட்டையது கீதம பயிலு
மளியூருங் கூந்தன்மின்னே யாய்.

(இ-ள்.) கீதம்பயிலும் வண்டுகள் பொருந்திய கூந்தல்மின்னே! பரிமளச் சேர்க்கையி லோங்கிய கிளியூரற்பட்டையானது சுரரோகத்தையும் தேகக்கொதிப்பையும் தணிக்கும். 520

### அக்காரப்பட்டையின் குணம்.

அக்காரப் பட்டைக் கறனு வறட்சிகளு
மெக்கு சன்னிபாதசுர மென்பவையும்-பக்கச்

சகலதலை நோய்வாய்வுந் தாழ்ந்தே யொழியும்
புகலிரத்த கந்தமது போம்.

(இ-ள்.) அக்காரப்பட்டைச் சலாதிக்கம் நாவறட்சி சன்னிபாதம் சுரம் பற்பல தலைநோய் வாதகோபம் உதிரநாற்றம் இவை நீங்கும்.()

கோங்குமரப்பட்டையின் குணம்.

கோங்கினறும் பட்டையார் கூறறிய மேகம்போந்
தாங்கிய பற்பிணியுஞ் சாந்தமாம்-வாங்குவெண்மைக்
கன்னு ரதுவெள்ளிக் காசெனவே பஸ்மிக்கும்
மின்னார்ச் சிகாமணியே விள்.

(இ-ள்.) மின்னர் சிகாமணியே! கோங்கின்பட்டையால் பிரமேக மூத்திரமும் தாளக்கூடாத தந்தரோகம் நீங்கும் கல்நார் பஸ்பமாகும் என்க. 522

கொஞ்சிப்பட்டையின் குணம்.

மாந்த மகற்றும் வயிற்றுப்பி சந்தவிர்க்கு
மாந்த கணச்சுரத்தை மாற்றிவிடும்-சேர்நதசிறு
வாதநோ யோட்டும் வகைகொஞ்சிப் பட்டையது
மாதரசே நீயுமுணர் வாய்.

(இ-ள்.) மாதரசே! காட்டுக்கொஞ்சிப்பட்டை பாலர்மாநதம் வயிற்றுப்பொருமல் கணச்சூடு ஆவிருதவாதரோக மிவைகளைப்போக்கும்.

பஞ்சவர்க்கத்தின் குணம்.

ஆலரசு சம்புடனே யதத்திருரு வேலற்றின்
தோலைக்தும் பஞ்சவர்க்கந் தொல்லுலகி-லேலுமதாற்
காசஞ் சுவாசஞ் சுபங்கொங்கை வித்திரித
நாசமுறு மென்றே நவில்.

(இ-ள்.) ஆல் அரசு நாவல் அத்தி இத்தி என்னும் ஐவகைமரங்களின்பட்டைகளே பஞ்சவர்க்கமாம் இதனல் இருமல் இரைப்பு சிலேஷ்மதோஷம் ஸ்தனவிததிரிக்கட்டி ஆகியவைகள் போமென்க. 524

---

## மரத்தின் பிசின்வகை

மாம்பிசின் குணம்.

பெரும்பா டெக்கேயிரத்த பேதியெங்கே முக்க
தரும்பாழும் வெள்ளையெங்கே சாற்றும்-கரும்பாம்பின்

நாதகிரி யாசஞ்செய் நங்காய் வனத்திலுறை
சூதகிரி யாசமெனச் சொல்.

(இ-ள்.) கரும்பாம்பின் நாதகிரியாசஞ்செய்நங்கையரே! மாம்பிசினால் பெரும்பாடு என்கிற அசிர்க்கரரோயும் ரத்தாதிசாரமும் வாதப்பிரமேச வெள்ளையும் நீக்கும், கிரியசெம்-பிசின். 525

பிரமதருவின்பிசின் குணம்-இதுவேபலாசு முருக்கு.

சந்திகட்கு நாடிகட்குத் தங்குசுக்கி லந்தனக்கும்
புந்தியுரங் கட்குரமும் பூட்டுங்கா-ணுந்து
சரமதனுக் காகமநூல் சாற்றுமலர் மாதே
பிரம தருவிற்சம் பிசின்.

(இ-ள்.) உந்துசரமதனுக் காகமநூலைப் புகட்டும் மலர்மாதனையாளே! பிரமதருவின் பிசினானது கீல்கள் நரம்புகள் சுக்கிலம் அறிவு மார்பு ஆகிய இவைகளுக்குப் பலத்தையுண்டாக்கும். சம்-பிறப்பு. ()

மலைவேப்பன்பிசின் குணம்.

மலைவேம்பு தன்பிசின்றான் வாதக் கரப்பன்
மலுமேகக் கட்டியிவை மாற்று-நிலமீது
தாதவு முண்டாக்கும் சலப்பேதி யைக்கட்டு
மாதே யிதனை வழுத்து.

(இ-ள்.) மாதே! மலை வேப்பம்பிசின் கருங்கரப்பன் மேகக்கட்டி சலமர்தம் பேதி ஆகிய இவைகளை நீக்கும் சுக்கிலம் விருத்தியாகும்.

கருங்காலிப்பிசின் குணம்.

கருங்கா லியின்பிசின்றான் காரார் கரப்பன்
வருமேக நீரிழிவை மாத்தும்-விரைவாய்ப்
பெரும்பாட்டை நீக்கும் பெருந்தாது விர்த்தி
யருப்புமெனக்கண் டறி.

(இ-ள்.) கருங்காலிப்பிசின் கருங்கரப்பன் மேகமூத்திரம் அசிர்க்கரம் ஆகிய இவைகளைநீக்கும் விந்துவை வளர்ப்பிக்கும். 528

வாகைப்பிசின் குணம்.

வாகைப் பிசின்மேகம் வன்கிரந்தி கட்டியையு
மேகத் தாத்துமிது நிசமே-மாகனக
மேனி கொடுக்கு மிகுத்தபல முண்டாக்குந்
தேனினிய மென்மொழியே தேர்.

(இ-ள்.) தேனினுமினிய மொழியையுடைய பெண்ணே! வாகைப் பிசின் பிரமேகம் வாதகிரந்தி மேகக்கட்டி ஆகிய இவைகளைவிலக்கும் அழகையும் வன்மையையும் உண்டாக்கும். 529

### இலவம்பிசின் குணம்.

மேகவெட்டை நீர்ச்சுருக்கு மெய்யனற் கிருச்சரத்தின்
வேகமதி காரமென விள்ளுநோ-யேகவென்றால்
வாரணியுங் கும்பமுலை மாதே மறைப்பின்றிப்
பூரணி ரசத்தைப் புகல்.

(இ-ள்.) வாரணியுங் கும்பஸ்தனங்களை யுடையாளே! இலவம் பிசினியினால் பிரமேகவெள்ளை மூத்திரக்கடுப்பு உட்சுரம் கிரிச்சுரவேகம் பேதி ஆகிய இவைகள் நீங்கும் பூரணி இலவம், ரசம-பிசின். ()

### விளாம்பிசின் குணம்.

நல்ல விளாம்பிசினை கற்பகஞ் செய்தருந்தத்
தொல்லை யதிசாரந் தொலைவதன்றே-மெல்லியரால்
வந்தவெள்ளைத் தன்னுடனே மாதர் பெரும்பாடு
முந்துநீர்ப் போக்கும்போ மூன்.

(இ-ள்.) சுத்திசெய்த விளாம்பிசினை சூரணம் மாத்திரை முதலிய அவுஷதரூபமாகச்செய்து உண்டால் நீடித்த அதிசாரம் புணர்ச்சியால் வந்தவெள்ளை அசிர்க்குரோகம வெகுமூத்திரம் ஆகிய இவை நீங்கும்.

### முருங்கைப்பிசின் குணம்.

மூந்து நீரை ததடுக்கு மோரைப் போலேயொழும
விந்துவைத் தடிப்பித்து மேனிதருந்-தொந்தக்
கரியநிற வாயுதனைக் காதிவிடு நாளும
பெரிய முருங்கைப் பிசின்.

(இ-ள்.) முருங்கைப்பிசின் அதிமூத்திரம் குஷ்டமேகம் தொந்த வாதம் இவைகளைநீக்கும் சுக்கிலத்தை இறுக்கி அழகையுண்டாக்கும்.

### விடத்தேரின்பிசின் குணம்.

விடத்தேரின் றன்பிசின்றான் வெண்மேகம் போக்கு
மடுத்த பிரமேகத்தை யாற்றுந்-தொந்தக்
மேகக் கரப்பானை விட்டோட்டு மென்றுலகி
னாகரிக மாதே நவில்.

(இ-ள்.) நாகரீகமாதே! விடத்தேரின் பிசின்வெண்மேகம் சிழ்ப் பிரமேகம் மேகவெப்பத்தால் வந்தகரப்பன் ஆகியவைகளை விலக்கும்.

### அடப்பமரத்தின்பிசின் இதுவே வாதுமையாம்.

நெஞ்ச முரக்கு நிகழுவிகது யுங்கட்டும
நஞ்சு மருந்துகளு நல்லமிர் தாம்-விஞ்சுவைக்
கோழை யடக்குங் குலவா துமை யெனவே
வாழை யுடம்பின் சளிக்குமாற்

(இ-ள்.) அடப்பமரத்தின்பிசினால் சுக்கிலத்திற்குத் தடிப்புண்டாவதுமன்றி விஷமான மருந்துகளும் அமிர்தமாம் சயத்தினால் அதிகரித்தகபக்கோழையானது தங்கிலேயைவிட்டுப் பெயர்தடங்கும். 534

### கருவேலம்பிசின் குணம்.

நீத்தொழுகும் விந்துவை நிலைக்கப் புரியுமெரி
பூத்தொழுகும் வெள்ளை தனைப் போக்குமிம-மாத்திரமோ
தேசுதரு முரமுஞ் செய்யும் பெரியோராற்
பேசு கருவேலம் பிசின்.

(இ-ள்.) கருவேலம் பிசினானது நீத்துப்போன சுக்கிலத்தை இறுகச்செய்வதுமன்றி எரிச்சலோடு விழுகின்ற சீழ்ப்பிரமேகத்தையும் நீக்கும், அழகையும உண்டாக்கும் என்க. 535

### ஆவாரைப்பிசின் குணம்.

பெருநீர் மறிக்கும் பிரமேகம் போக்கும
வருநீர்ச் சுருக்குதனை மாற்றுந்-தருநீர்வை
பூணுமேனிக் கமலப் பொன்னே பிடகரெலாம்
பேணு மேகாரிப்பி சின்.

(இ-ள.) அழகுபொருந்திய கமலயின்னனேய காரிகையே! ஆவரைச்செடியின பிசினானது வெகுமூத்திரத்தையும் பிரமேகரோகத்தையும் வாதகிரிச்சுரத்தையும் போக்கும் என்க, மேகாரி-ஆவாரை.

### புற்பிசின் குணம்.

நெஞ்சிற் குரஞ்சலம்போ நீத்தவிந்து விற்குறுதி
வஞ்சிபர்தம் போகத்தில் வன்மையா-நஞ்சைத்
தடவியகூர் வாளென்னச் சாற்றும் விழியா
யடவிவரு புற்பிசினென் றூல்.

(இ-ள்.) நஞ்சைத்தடவிய கூர்வாளனையவிழியாளே! காட்டிலுள்ள புற்பிசினால் மார்புக்கும் நீரான சுக்கிலத்துக்கும் சையோகத்திற்கும் அதிகபல முண்டாகும்.

---

# மரத்தின் இலைவகை

### மரியங்கொழுந்தின் குணம்.

வாயருசி நீர்ச்சுரப்பு வாந்தி கடிதேகுப்
பேயிரத்த சீதமென்ற பேதியறும்-பாயு
மரியங்க மொத்தவிடை யாரா வமிர்தே
மரியங் கொழுந்தை வழுத்து.

(இ-ள்.) அரியங்கமொத்த இடையையும் அமிர்தத்தை நிகர்த்த மொழியையுமுடைய பெண்ணே! மரியங்கொழுந்தினால் அரோசகம் வாயில் சலமூறல் வமனம் ரத்தாதிசாரம் சீதபேதி ஆகியவைநீங்கும்.

### கருவேல்கொழுந்தின் குணம்.

கண்டாலு வின்றளிரைக் கல்லிலரைத் துத்தயிரி
லுண்டாற் பாஷாணவெப்ப மோடுங்காண்-கண்டாவி
வந்தசிவப் பேகுமதை மாதர்ப.லா லரைத்து
வெந்தவடை கண்ணிலொத்த வே.

(இ-ள்.) கருவேலங்கொழுந்தைத் தயிரிலரைத்துக்குடிக்க பாஷாணவேகம் நீங்கும் முலைப்பாலிலரைத்து அடைதட்டிக் காய்ந்தசட்டியிலிட்டு வெதுப்பி அற்பச்சூடாக ஒத்தடமிடில் கண்சிவப்புமாறும் கண்டாலு-கருவேல். 539

### புளியிலையின் குணம்.

அழுபுண்ணை நீக்கு மடற்சோபை மாற்று
மெழுபாண்டு வைப்போக்கு மிப்பான்-முழுது
மளியச் சிவந்தகண்ணோ யாற்றுங் கனலாம்
புளியிலையை நன்றாய்ப் புகல்.

(இ-ள்.) வெப்பமுள்ள புளியிலை அளிந்தவிரணம் சோபரோகம் பாண்டுரோகம் சிவந்தகண்ணோவு இவைநீங்கும் என்க. 540

### வேப்பிலையின் குணம்-இதுவே நிம்பம்.

கிருமிகுட்ட மாந்தங் கெடுவிடஞ் சுரங்கள்
பெருமிய வசூரிகையின் புண்க-ளொருமிக்க
நிம்பத் திலையிருக்க நீடுலகி னீங்காமற்
கம்பத் திலையிருக்கக் காண்.

(இ-ள்.) வேப்பிலையினால் புழுக்கள் பெருவியாதி மாந்தம் மகாவிஷம் சுரரோகங்கள் அம்மைக்கொப்புள விரணம் இவைகளொழியும்.

### முருங்கையிலையின் குணம்.

செறிமந்தம் வெப்பந் தெரிசூருந் தலைநோய்
வெறிமூர்ச்சை கண்ணோய் விலகு-மறமே
நெருங்க யிலையொத்தவிழி நேரிழையே நல்ல
முருங்கை யிலையை மொழி.

(இ-ள்.) வேலையொத்த கண்களையுடையாளே! முருங்கையிலையால் அக்கினிமந்தம் உட்சூடு சிரஸ்தாபரோகம் பித்தமூர்ச்சை கண்ணோவு ஆகியவை நீங்குமென்க. 542

### அகத்தியிலையின் குணம்.

மருந்திடுதல் போகுங்காண் வண்கிரந்தி வாய்வாந்
திருந்த வசனஞ் செரிக்கும்-வருநதச்
சகத்திலெழு பித்தமது சாந்தியாம் நாளு
மகத்தியிலை தின்னு மவர்க்கு.

(இ-ள்.) அகத்தியிலையை உண்ணில் இடுமருந்தும் பயித்தியதோஷமும் நீங்கும் கடுவானும் வாய்வுமுண்டாம் போஜனசீரணமாம்.

### செவ்வகத்தியிலையின் குணம்.

செவ்வகத்திப் பன்னுஞ் சிலேத்மமதை யுண்டாக்கும்
வவ்வுபல சிந்தூரம் வைப்பதற்காங்-கவ்வு
நவநீத பஸ்மமதை நாளு முடிப்பிக்குஞ்
சிவமாக்குந் தாளகத்தைத் தேர்.

(இ-ள்.) செவ்வகத்தியிலை கபதோஷத்தை யுண்டாக்கும் பற்பல சிந்தூரம் நவநீதபஸ்பம் தாளகசுத்தி இவைகளைச் செய்வதற்குதவும்.

### பசுமுன்னைஇலையின் குணம்-இதுவே நறுமுன்னை.

வாயருசி சோபையைய மாறுக் கரப்பனெழும்
வாயுமந் தாக்கினி மயக்கமென்ற-நோய்க
ளறுமுன்னை யுண்ணுவர்கட் காழி யுலகி
னறுமுன்னை தன்னிலையை நாடு.

(இ-ள்.) பசுமுன்னையிலையால் அரோசகம் வீக்கம் கபம் கரப்பான் இவையுண்டாம் வாததோஷமும் அக்கினிமந்தமும் மயக்கமும் போம். 545

### கருவேப்பிலையின் குணம்.

வாயி னருசி வயிற்றுளைச்ச லீடுசுரம்
பாயுகின்ற பித்தமுமென் பண்ணுகதான்-தூய
மறுவேறு காந்தளகை மாதே யுலகிற்
கருவேப் பிலையருந்திற் காண்.

(இ-ள்.) வாசனைபொருந்திய காந்தள் மலரனைய கைகளையுடைய மாதே! கருவேப்பிலையால அரோசகம் சீதபேதியால்வரும் வயிற் றுளைவு புராதனசுரம் பயித்தியதோஷம் ஆகியவைகள் போகும். 546

சிற்றுழா பேருழா-இவ்விலைகளின் குணம்.

சிற்றுழா மூலாத்தஞ் சீழ்மூலம் போக்கிவிடு
மற்றதொரு பேருழா வாய்த்திடினே-உற்றகுத
மூன்றும் வலைய முளையாசனக் கடுப்பைத்
தோன்று தகற்றிவிடுஞ் சொல்.

(இ-ள்.) சிற்றுழாமரத்தின் இலையானது ரத்தமூலத்தையுஞ்சீழ் மூலத்தையும் போக்கும், பேருழாமரத்தின் இலையானது ஆசனவளை யம் மூன்றிற்குள் உள்வளையமுளையையும் குதக்கடுப்பும் ஒழியும். ()

தெங்கு பனை இவைகளின் குருத்துக் குணம்.

தென்னங் குருததாற் சிலேதம வலிநீங்கு
மன்னு திர மூலமது மாறுங்கா-னுண்ணும்
பனங்குருததைத் தின்றாற் பகருதிர மூலங்
கனமபெருகும பேதியுமாங் காண்.

(இ-ள்.) தென்னங்குருத்தால் கபவுபத்திரவமும் ரத்தமூலமும் நீங்கும், பனங்குருததால ரததமூலமும அதிசாரமும் உண்டாம். ()

பேரீச்சு சிற்றீச்சு இவைகளின் குருத்துக் குணம்.

பேரீச்சுத் தன்குருத்தைப் பேணியே தின்பவருக்
கீரீச்சு குன்மவலி யேகுங்கா-ணாரிற்
சிறியயீச்சுக் குருத்தைத தின்றால் வயிற்றின்
மறிபுதிர வாயுவறும் வாழ்த்து.

(இ-ள்.) பேரீச்சுக்குருத்தால் சிலேத்மகுன்மம்போம், சிற்றீச் சுக் குருத்தால் வயிற்றில் கட்டுப்பட்ட ரத்தவாத குன்மம்போம். ()

மூங்கில்இலையின் குணம்.

குடற்கட்டிச் சூலையுடன் குன்ம முதிர
முடற் கெட்டாதோடி யொழியு-மடற்றங்கு
வேல்விழி மாதேகேளாய் வேயினிலை தனக்குக்
கால்வழியுஞ் சோணிதமபோங் காண்.

(இ-ள்.) வேல்விழிமாதே! மூங்கிலிலைக்கு குடற்சூலையும் வயிற்று நோவும் தத்தத்தடிப்பும் பிரசவகாலத்திற்றங்கிய அழுக்கும் நீங்கும்.

---

# செடியின் இலைவகை

### ஆடாதோடையிலையின் குணம்.

ஆடாதோடைப் பன்ன மையறுக்கும் வாதமுதற்
கோடாகோடிச் சுரத்தின் கோதொழிக்கு-நாடின்
மிகுத்தெழுந்த சந்நிபதின் மூன்றும் விலக்கு
மகத்துநோய் போக்கு மறி.

(இ-ள்.) ஆடாதோடையிலை கபாதிக்கம் வாததோஷம் பற்பல சுரம் சந்நிபாதம் 13-வயிற்றுநோய் ஆகியவைகளை நீக்கும். 551

### வெண்ணொச்சில் இலையின் குணம்.

நாசந் தருவாத நாசிப்பிணி யழல்சு
வாசந் தசனவுரு வன்றோடங்-காசமற
லுச்சி யடையை யுறைநோயு மென்படுமோ
நொச்சி யடையை நுவல்.

(இ-ள்.) வெண்ணொச்சிலிலையால் மகாவாதம் பீநசம் சுரம் இரைப்பு தந்தவலி திரிதோஷம் இருமல் நீரேற்றம் கபசிரஸ்தாபம் இவைகளை விலக்கும் 552

### கருநொச்சில் இலையின் குணம்.

வாதக் கடுப்பகலு மாருத பீநசம்போ
மோதப் பேயோடி யொளிக்குங்காண்-வேதைசெய்யு
மண்டைக் குடைச்சலறும் மாசில்கரு நொச்சிலுக்கும்
பண்டைத் தலைவலிபோம் பார்.

(இ-ள்.) கருநொச்சில் இலையால் வாதவலி நாசிரோகம் கபம் மண்டைகுடைச்சல் சிரஸ்தாபரோகம் இவைகள் நீங்கும். 553

### வெள்ளாமணக்கிலையின் குணம்.

மந்தங் கதித்தெழுந்த வாத மருவலி
பந்தமல மியாவும் பறக்குங்காண்-சந்ததமும்
பூமணக்கு நெய்த்த புரிகுழன் மாதேவெள்ளை
யாமணக்குப் பத்திரியா லாய்.

(இ-ள்.) புட்பங்கள் பரிமளிக்கும் நெய்த்த புரிகுழன்மாதே! வெள்ளாமணக்கு இலையால் அக்கினிமந்தம் வாதவலி மார்புநோய் மலக்கட்டு ஆகியவைகள் போமென்க. 554

சேவ்வாமணக்கிலையின் குணம்.

குன்மமொடு மந்தங் கொடுவாத மெய்வலியுஞ்
சன்மமட்டு வாராமற் றண்டுங்கா-ணன்மைதரு
மெய்வா மணக்குசுட்கு மேற்றமென்பார் காந்தியுள்ள
செவ்வா மணக்கிலையைச் சேர்.

(இ-ள்.) செவ்வாமணக்கு இலையால் வயிற்றுநோவு செரியாமந்தம் வாதகோபம் தேகக்கடுப்பு இவைகள் விலகும். 555

சேம்பையிலையின் குணம்.

கட்டியொடு வீக்கங் காயது ணீரேற்ற
மொட்டிவரு வாதகப மோட்டுவது-தொட்டுவிடு
மம்பயிலை வேலைவென்ற வங்கண் மடமாதே
செம்பையிலை வேலையென தேர்.

(இ-ள்.) அம்பயிலைவேலைவென்ற அழகியகண்களை யுடையாளே! செம்பயிலையால் வாயுவின்கட்டிகள் சோபை சரீரநீரேத்தம் வாதசிலேஷ்மதொந்தம் ஆகிய இவைகள் ஒழியும் என்க. 556

கருஞ்சேம்பையிலையின் குணம்.

விப்புருதிப் புண்ணுறும் வீறுகரப் பானும்போந்
தப்பாமன் மேகந் தணியுங்காண்-வெப்பார்
கபரோக மேகுங் கருஞ்செம்பை யொன்றுக்
கிபமா முலைமாதே யெண்.

(இ-ள்.)யானைமத்தகம்போன்ற தனத்தாளே கருஞ்செம்பை இலையால் விப்புருதிக்கட்டி கரப்பான் பிரமேகம் பித்தசிலேஷ்மதொந்தம் ஆகிய இவைகள் போகும் என்க. 557

வறட்பூலாயிலையின் குணம்.

சீதரத்தஞ் சேர்ந்தேனுஞ் சேர்க்கையின்றி யேனும்வரு
பேதிகள் வயிற்றின் பிடுங்கலினு-பாதிகளும்
பூதலத் திராகல்வறட் பூலாவிலை யரைத்து
மேதித் தயிரிலுண்ண வே.

(இ-ள்.) வறட்பூலா இலையை யரைத்து எருமைத்தயிரிற் கரைத்துக்குடிக்கில் சீதரத்தமும் கலந்தாவது தனித்தாவது காணுகின்ற பேதிகளுமிதுகளாலுண்டாகிற வயிற்றுநோயும் ஆயாசமும்விலகும்.

பாவட்டையிலையின் குணம்.

தீதவாதங் களறுந் தீபனமோ வுண்டாகும்
வாதகபமொழியும் வார்குழலே-போதவே
ஆவட்டைத் தாச்சுர மற்றுவிடுந் தோஷம்போம்
பாவட்டைப் பத்திரிக்குப் பார்.

(இ-ள்.) நீண்டகுழலாளே! பாவட்டைஇலையால் சிலேஷ்மவாதம் வாதகபதோஷம் ஆயாசம தாபசுரம் திரிதோஷம் ஆகிய இவைபோம் பசியுண்டாகும். 559

பெருஞ்சின்னியிலையின் குணம்.

காணுக்கடியுமெதிர கண்ட விஷக்கடியு
நாணுதிரங் கிடவு ஞாயமுண்டோ-தோணு
வருஞ்சின்னி மதலைமொழி மாதரசே கேளாய்
பெருஞ்சின்னி மூலியுண்ட பேர்க்கு.

(இ-ள்.) மதலைமொழிமாதரசே! பெருஞ்சின்னி இலைக்குக்காணுக் கடிவிஷமும் பார்க்கும்படிக்குக் கடிததபற்பல சேர்ந்து விஷங்களும் நீங்குமென்க. 560

சிறுசின்னியிலையின் குணம்.

கடிவிஷமும் காணுக் கடிவிஷமு மாத
ரிடுவிஷமு மோடுமிதுவன றி-கெடியவிழிக்
கன்னிகையே மேகங் கணக்காச்சல் மாந்தமுபோஞ்
சின்னி யிலைக்குத தெறித்து.

(இ-ள்.) காதளவோடி நீண்டகண்ணுளே! சிறுசின்னியிலைக்கு வண்டுமுதலிய கடிவிஷங்கள் இன்னதெனத் தெரியக்கூடாத சேர்க்கைகளின் விஷங்கள் இடுமருந்து பிரமேகம் கணச்சுரம் அக்கினி மந்தம் ஆகிய இவைகள் போமென்க.

வாதம் பிடிப்பென்ற வற்காலியைப் புலிபோற்
போதப் புவிக்கும் புகல்வற்றே-காத
அழிதாழைப் பீனசத்தை யண்டா தகற்றுந்
தழுதாழைப் பன்னமது தான்.

இதுவுமது.

சேர்ந்த சொரிசிரங்கைத் தின்வாதக் கூட்டத்தை
யாய்ந்தொழிக்கும் பித்தை யழைக்குமந்த-மோய்ந்திடா
ஐயின் சுரந தணிக்கு மானதழு தாழையது
மெய்யின் கடுப்பகற்றும் விள்.

(இ-ள்.) தழுதாழையிலை பக்கவாதமுதலிய 80 வாதரோகங்கள் சிலேஷ்மபீனசம் புடைகிரந்தி ஆசிருதவாதங்கள் மந்தகபசுரம் தேக குடைச்சல் இவைகளை நீக்கும் பித்தத்தை யுண்டாக்கும். 562

### விராலியிலையின் குணம்.

ஆன்ற துரிசிநீ ருகமனத் துன்னினவே
ரூன்ற வருகட்டி யோடதைப்பு-தோன்றிற்
சுராலிக் குதலேயிளந் தோகாய் விரைவாய்
விராலிக் குழையோடு வின்.

(இ-ள்.) குதலைச்சொற்களையுடைய மயிலேணயாளே! விராலியிலை பெருமை தங்கிய துரிசை வெளுப்பாக்குவதுந் தவிர அடிகனத்த கட்டிகளையும் வீக்கத்தையும் போக்கும். குழை-தளிர். 563

### எருக்கிலையின் குணம்.

எலிவிஷக் குஷ்டமைய மேமூ கிருமி
எலிசூலை வாயு விஷமந்தம்-மலபந்த
மெல்லா மகலு மெருக்கிலையைக் கண்டாக்கால்
வில்லாரு நன்னுதலே வின்.

(இ-ள்.) வில்போன்ற நன்னுதலாளே! எருக்கிலையினால் எலிவிஷம் பெருவியாதி சிலேட்மரோய் கிருமிரோகம் ஐவகைவலி கீல்வீக்கம் தனிவாதகோபம் சர்ப்பவிஷம் அக்கினிமந்தம் மலக்கட்டு ஆகிய இவைகளை நீக்கும் என்க. 564

### காட்டாமணக்கிலையின் குணம்.

கட்டி விரணங் கரப்பான் பிலீகமதி
கொட்டியுறு குன்மங் கிளைத்தசிரங்-கொட்டுமோ
கூட்டோ டொழியுங் குவடனைய கொங்கைமின்னே
காட்டா மணக்கிலையைக் கண்டு.

### இதுவுமது.

காட்டா மணக்காற் கபவாத சூலையுடன்
வீட்டு தலைநோய் விரிகிரந்தி-வாட்டுகின்ற
உண்மூலம் போகுமுடமபுலாதல் வெட்டையறும்
திண்மூல தாதுவுமாஞ் செப்பு.

(இ-ள்.) மலைகளைநிகர்த்தகொங்கையுடையாளே காட்டாமணக்கு இலையினால் மேகக்கட்டி புண்கரப்பான் பீலிகம் குன்மக்கட்டி ஜனிக்

கின்ற விரணங்கள் சிலேட்மவாதக்குத்தல் சிரஸ்தாப ரோகம்பெரு விரணம் வருத்தாநின்ற உள்மூலம் உள்ளுருக்கு வெள்ளை இவைகளை போக்கும் சுக்கிலவிருத்தியுண்டாம். 565

### தவசுமுருங்கிலையின் குணம்.

தவசு முருங்கைத தழையதற்குக் கேளா
யவசியம் பீநச முண்ணுக்கு-முவசர்க்கி
யையஞ் சுவாசகப மண்டாது குதநிருமல்
வையம் விடுத்தேகும வழுத்து.

(இ-ள்.) தவசு முருங்கையிலைக்கு வாதபீனசம் உபஜிக்வாதரோகம் தொந்தநோய் கபம் சுவாசம் பொடியிருமல் இவைகள நீங்கும் உவசர்க்கி-தொந்தநோய். 566

### வெதுப்படக்கியின் குணம்.

வெள்ளெடுப்பு சீதம் வெதும்பல சுரத்துடனே
யள்ளெடுக்கு மாந்த மதிவாதத்-தெள்ளுமொழி
மாதே வெதுப்படககி வன் றழையுட்காய்ச்சலொடு
கோதே றிரத்தமும்போக் கும்.

(இ-ள்.) தெள்ளுமொழிமாதே! வெதுப்படக்கியின் யிலையானது வெளுப்பானபேதி சிலேத்மக்கிராணி தாபம் ரூட்சை அள்ளுமாந்தம் வாதாதிக்கம் உட்சுரம ரதத தாதுவிலுண்டாகினற மலினம் ஆகிய வைகளைப்போக்கும். 567

### பேரியாநங்கையின் குணம்.

பெரியாநங்கைத் தழைக்குப் பித்தமென்ப தெல்லாந்
தெரியாம லோடுமிது திண்ணம்-பிரியா
மலமறுக்கும் பஸ்பவகை வைப்பதற்கு மாகுஞ்
சிலை நுதலே நன்றாய்த் தெரி.

(இ-ள்.) சிலைநுதலாளே! பெரியாநங்கையிலைக்கு பித்தரோகங்களும் மலபந்தமும் நீக்கும் இது பலவித பஸ்பங்கள்செய்வதற்கு முதவுமென்க. 568

### சிறியாநங்கையின் குணம்.

சிறியாநங்கைத் தழையைச் சேவிதத பேரைப்
பிறியாற் மடந்தயர்கள் பின்னு மறியதிவி
டங்கணமும் நீறுக் தனியழகு முண்டாகுந்
திங்சண்முக மாதே தெளி.

(இ-ள்.) திங்கண்முகமாதே! சிறியாநங்கை என்னுமூலி ஸ்திரி வசியத்தைச் செய்யும் வெங்காரத்தைப் பஸ்பமாக்கும் தேகத்தில் வனப்பை உண்டாக்கும், டங்கம்-வெண்காரம். 569

பருத்தியிலையின் குணம்.

பருத்தியிலை மொட்டிரண்டைப் பாலிலரைத் துண்ண
வருத்துகின்ற மேகமெல்லா மாறும்-பருத்த
விரத்த பித்தத்தோடு விரணவிக் கம்போ
மரத்த விதழ்மாதே யறை.

(இ-ள்.) சிவந்த அபரத்தாளே! பருத்தியினது இலையையாவது மொக்கையாவது பலம் அரைத்து அரை ஆழாக்குப்பசும்பாலில் கரைத் துண்ணில் சில்மேக முதலிய மேகங்களும் ரத்தபித்தரோக மும் விரணசோபையும் நீங்கும். 570

கூத்தங்குதம்பையிலையின் குணம்.

குக்துகின்ற நோய்போக்குங் கோரபித்த முண்டாக்கு
மத்திசெய்யுஞ் சநநி யகற்றுங்காண்-சத்திக்கு
மாத்தங்கு வாய்மொழிக்கு மண்டூரத் திற்குதவுங்
கூத்தங் குதம்பைக் குழை.

(இ-ள்.) கூத்தங்குதம்பையிலை சூலரோகம் சந்நிபாதம் மகாவாத ரோகம ஆகியவைகளை ஒழிக்கும், பித்தகோபத்தை விருத்திசெய்யும் மண்டூரத்தைச் செந்தூரஞ்செய்வதற்கும் உதவும். 571

அரிவாள்மூக்குப் பச்சிலையின் குணம்.

வெட்டுக் காயத்தை விரைவி லுலர்த்திவிடுந்
துட்டக் கடுவேட்டுந் தோன்றிமிகக்-கெட்ட
பிரிவாற் றலையைப் பிளக்கும் வளிநீக்கு
மரிவாள் மூக்குப்பச் சிலை.

(இ-ள்.) அரிவாள் மூக்குப்பச்சிலை ஆயுதங்களாலுண்டாகிற காயத்தை சீக்கிரத்தில் ஆற்றுவதுந்தவிர மகாவிஷத்தையும் உதிரக்கெடு தியார்பிறந்த சிரஸ்தாபரோகத்தையும் விலக்கும். தோன்றி-உதிரம்.

துத்தியிலையின் குணம்.

மூலநோய் கட்டி முளைபுழுப் புண்ணும்போஞ்
சாலவதக்கிக் கட்டத் தையலே-மேலுமதை
எப்படியே னும் புசிக்கி லெப்பிணியுஞ் சார்தமுறு
மிப்படியிற் றுத்தி யிலையை.

(இ-ள்.) மாதே! துத்தியிலையை ஆமணக்குநெய்யால் வதக்கிக் கட்ட மூலரோகமும் கட்டிவிரணமூலைகளும் கிருமி விரணமும்போம் அதை எவ்விதமாவதுபாகஞ்செய்துண்ணில் சகலரோகங்களும்போம்.

### விழுதியிலையின் குணம்.

விழுதித் தழைகரப்பான் வெண்மேகம் நீக்கு
பழுபடுவன் சூலை பறிக்கு-மெழுபேதி
யாக்கு மதிமந்த மகக்கிருமி தனமலமும்
போக்கு மதுவே புகல்.

(இ-ள்.) விழுதியிலை கரப்பான் சுவேதப்பிரமேகம் வித்திரிதிக் கட்டி சரீரக்குத்தல் அக்கினிமாந்தம் மலாசயக்கிருமி விரோதமலம் ஆகியவைகளைப்போக்கும். விரோசனத்தை உண்டாக்கும். 574

### கணப்பூண்டினது இலையின் குணம்.

கணப்பூண் டிலைமேகக கட்டிமேகக் கரைக்கு
மணக்குமிக வாய்க்கு மதுரஞ்-சிணுக்கான
வாதகணம் பித்தகண மாற்றுங் கபச்சுரத்தின்
பேதமறப் போக்குமெனப் பேசு.

(இ-ள்.) பரிமளமும் வாய்க்குமதுரமுமுள்ள கணப்பூண்டின் இலையானது மேகநீராற்பிறந்த கட்டிகளைக்கரைக்கும் தேரைக்கணம் ஆமக்கணம் சிலேஷ்மசுரங்கள் ஆகியவைகளைவிலக்கும். 575

### காரை, சேம்பு இலைகளின் குணம்.

காரைத் தழைக்குக் கடுப்பிரத்தம போம்புளியைச்
சேரப் பெய்தாக்கிச் சுவைததறிசீ-பாரிலுள்ள
சேம்பிலைக்கு நற்புளியைச் சேர்த்து சமைததுண்டாற்
கூப்பிட்ட மூலமறுங் கூறி.

(இ-ள்.) புளியிட்டுக்கடைந்தகாரையிலைக்கு ரத்தக்கடுப்பு விலகும் அவ்வாறுசமைத்த ஊர்ச்சேம்பிலைக்குச் சுஷ்கமூலம் நீங்கும். ()

### பிடங்குநாரி இலையின் குணம்.

பிடங்குநாறிப் பன்னப் பேச்சை யெடுக்கி
லடங்கு மலச மிஃதன்றித்-தொடங்குகின்ற
நீர்ச்சுரப்பும் வாங்கிவிடு நீடேசட ராக்கினியாந்
தேர்ச்சியுறும் புத்திக்குத் தேர்.

(இ-ள்.) பிடங்குநாறியிலையால் செறியாமமந்தமும் ஆரம்ப சலக் கோவையும் போகும், சடராக்கினியும் புத்திக்குத்தெளிவு உண்டாம்.

அவுரியிலையின் குணம்.

உரிய வவுரித்தழைதா னேது பதினென்
ணரியநஞ்சைத் தின்றவர்க்கு மாகுந்-தெரிவரிய
வாதவெப்பு காமாலை மைந்தர்க்குறு மாந்தந்
தேக மற்றுக் தெரி.

இதுவுமது.

சந்நிபதின் மூன்றுஞ் சந்தொடித்த வாதமுத
லுன்னு விஷக்கடியு மோடுங்காண-மின்னுங்
கவுரிநிற முண்டாகுங் காசினி யுளேகல்
லவுரி யிலையா லறி.

(இ-ள்.) அவுரியிலை தாவரக் கந்தமூலவிஷங்கள் 18-ம், வாத சுரம் காமியம் மாந்தம் சீதளம் சந்நிபாதங்கள் கில்வாதம் சர்ப்ப விஷம் இவைகளையும் நீக்கும் உடற்குப் பொன்னிறந்தரும். 578

குப்பைமேனியின் குணம்.

தந்தமூலப் பிணிதீத தந்திடுபுண் சர்வவிஷ
மூந்துகுன்மம் வாத முதிரமூ-லந்தினவு
சூலஞ் சுவாசா தொடர்பீநசங் கபம்போம்
ஞாலங்கொண் மேனியத னால்.

(இ-ள்.) குப்பைமேனியிலையால் தந்தமூலநோய் தீச்சுட்டபுண் தாவர சங்கமவிஷங்கள் வயிற்றுவலி வாதரோகம் ரத்தமூலம் நமைச்சல் குத்தல் இரைப்பு பீநசம் கபாதிக்கம் ஆகியவைநீங்கும். 579

மிளகுத்தக்காளியின் குணம்.

மந்தாக்கினி சோபை வாந்திகழல் வாயுவெப்ப
மிந்துநோய் பாண்டோ டெதிர்விக்கன்-முந்த
வளருமுத் தோஷநோய் மாற்றுங் கைப்பான
மிளகுத் தக்காளியிலை மெய்.

இதுவுமது.

மிளகுத்தக் காளியிலை வெண்ணுகங் கட்டு
மிளகுபற் சிந்தூரத்திற் கேகும்-கொளுவுகின்ற
மேகச் சொறிபகற்றும் வெட்டையனற் றணிக்கு
மாகச் சணிமுலையாய் வாழ்த்து.

(இ-ள்.) கச்சணிந்த முலைகளையுடையாளே! கசப்புள்ள மிளகுத் தக்காளியிலை அக்கினிமந்தம் வீக்கம சர்த்தி பாதாக்ஷேபகவாதம்

சுரம் சோமரோகம் பாண்டு விக்கல் திரிதோஷநோய்கள் மேகச்சொறி வெள்ளை உட்சூடு இவைகளை நீக்கும், வெள்ளீயத்தைக்கட்டும் பலவித சிந்தூரங்களுக்குதவும. 580

தும்பையிலையின் குணம்.

சீறுகின்ற பாம்போடு சிலவிஷங்கால் சென்னிவலி
யேறுகப மாந்த மிருக்குமோ-நாறுமலர்க்
கொம்பனைய மாதே குளிர்சீத சந்நிவிடுந்
தும்பையிலை யென்றொருகாற் சொல்.

இதுவுமது.

தும்பையிலை யையுண்ணுஞ் சோற்றுக்கெலாங்கறியா
யம்புவியோர் மிக்க வருந்துங்கால்-வெமபிவரு
மேகமொடு கண்புகைச்சல வீறுகை காலசதி
தாகமதி சோம்பலுறுந் தான்.

(இ-ள்.) மலர்க்கொம்பனையமாதே! தும்பையிலையால் சர்ப்பகிட விஷங்கள் வாதகோய் தலைவலி கபதோஷம அக்கினிமாதம் சிலேஷ்ம சந்நி இவைநீங்கும் இதை புளியிட்டுக்கடைந்து உணவோடுருந்தில் பிரமேகம் நேத்திரப்புகை கால்களின் அசதி தாகம் சோம்பல் இவை உண்டாம். 581

முள்ளங்கியிலையின் குணம்.

வாயு மிகும்பித்தம் வளருங் கிருமியுமா
மோய்வுரு நெஞ்செரிவு முண்டாங்காண்-பேயுநிற
முள்ளாங்கி யிலையை முற்றுமுண்டாற் குன்மவலி
யுள்ளாங் கிளம்பா துரை.

(இ-ள்.) முள்ளாங்கியிலையால் வாதகோபம் பித்தநோய் கிருமரோகம் மார்பெரிச்சல் ஆகியஇவையுண்டாகும் வயிற்றுநோயடங்கும்.

சுவற்றுமுள்ளங்கியிலையின் குணம்.

நீரை யிறக்கிவிடு நெஞ்சுவலியைத் தொலைக்குங்
கோர வதைப்பைக் குடிகெடுக்கு-நேரே
தவத்தி னுயர்ந் தோர்மயங்குஞ் சாயக்கண் மாதே
சுவற்று முள்ளாங்கியது சொல்.

(இ-ள்.) தவத்தினுயர்ந்தோர் மயக்குகின்ற சாயகத்தை நிகர்த்த கண்களையுடையமாதே சுவற்று முள்ளாங்கி யிலையானது நீர்க்கட்டையும் மார்நோயையும் வாதசோபரோகத்தையும் போக்கும்.

கறுப்பு வழுதுணையிலை, பருவழுதுணைவேர், சிறுவழுதுணைவேர் இவைகளின் குணம்.

வழுதுணையின் பேதம் வழுதநின் மிருநோய்க்காம்
வழுதுணைக டம்மை நவிலவாமை-வழுதுணைப்பன்
னஞ்சலம் போக்குங்கா லடக்கும் பருதுசன்னம்
பஞ்சமூலத்தி லொன்ருகும் பார்.

(இ-ள்.) வழுதுணை செடி வகைகளைக்கூறில் மிகவும் பெருகும் இவற்றுள் பிணிக்குதவுகின்றவைகளை மாத்திரம் சொல்வாம். வழுதுணை இலை நீர்க்கட்டையும் பருவழுதுணைவேர் வாதரோகத்தையும் நீக்கும் சிறுவழுதுணைவேர் பஞ்சமூலத்தில் ஒன்றாயிருந்து பலபிணியையும் விலக்கும். மை=கருப்பு. 584

புகையிலையின் குணம்.

மருந்தை முறித்துவிடும் வாய்வளறச் செய்யுந்
திருந்து பலவினஞ் சேர்க்கும்-பொருநதுபித்த
முண்டாக்கும் வித்தழிக்கு மோது புகையிலையைக்
கண்டார்க்கு மாகாது காண்.

(இ-ள்.) புகையிலை வாய்வறட்சி துர்ப்பலம் பித்தாதிக்கம் சுக்கிலக்ஷீணம் இவைகளை விளைக்கும் நல்லமருந்தையும் முறிக்கும். 585

---

# கொடியின் இலைவகை

தூதுளையின் குணம்.

காதுமந்தங் காதெழுச்சி காசந் தினவுமத
மோதுமந்த முத்தோஷ மூட்சூலை-தாதுகட்ட
மீதுளைப் பதிரியை மேவச்செய் வாராய்ந்தோர்
தூதுளைப் பத்திரியைத் துய்த்து.

(இ-ள்.) தூதுளையிலையால் காதுமந்தம் காதெழுச்சி காசம் நமைச்சல் மதரோகம் அக்கினிமந்தம் திரிதோஷம் உட்குத்தல் விந்துநஷ்டம் மேலிளைப்பு ஆகிய இவைகள் விலகும். 586

பறங்கி இலையின் குணம் இதுவே பூசினி.

பித்தமொடு வாதம் பெருந்தாக மும்பெருகும்
சத்தமொடு பேதி தலைப்படுங்காண்-சுற்றுங்
கறங்காகு மேனியுள்ளே கவ்வுபுழுச் சேரும்
பறங்கி யிலைக்குப் பகா

(இ-ள்.) பறங்கியிலைக்குப் பித்தகோபம் வாதாதிக்கம் அதி தாகம் இரைகின்றபேதி சரீரப்படபடப்பு கிருமி இவைகளுண்டாம்.

சீமையிலையின் குணம்.

நீரிழிவும் வீக்கம்போ கேரே மலமிறங்கும்
பாரமுறு சோபை பறக்குங்காண்-தீராத
திரிதோஷம் போகுஞ் செறிந்த சுரையி
னரிய கொழுந்திலையை யுண்.

(இ-ள்.) நீரையிரக்காதின்ற சுரையிலையால் சோபரோகம் தேக வீக்கம் நீங்காமுத்தோஷங்கள் இவைபோம் மலமிளகி யிறங்கும்.

பேய்ச்சுரையிலையின் குணம்.

மூல ரோகத்தின் முளையைக் களைந்துவிடு
மால விஷத்தையு மகற்றுங்காண்-ஞாலமதில்
வாய்ச்சி விடங்கிட்டுவது மாவருததும் வெற்பிலுறும்
பேய்ச்சுரையின் பததிரததைப் பேண்.

(இ-ள்.) மலையில்முளைத்த பேய்ச்சுரை யிலைபானது முளை மூல ரோகத்தையும் கொடிய சர்ப்பவிஷத்தையும் கெடுக்கும். 589

பாகல் இலையின் குணம்.

பிரியாக் கிருமியறும் பேதியுண்டாந் தோஷ
முறியு மிரத முறியுங்-குறியாத
மாகற்புடைய மடமயிலே யெப்போதும்
பாகற் றழைக்குப் பயந்து.

(இ-ள்.) மாகற்பினையுடைய மாதே! பாகல் இலைக்கு கிருமிரோக மும் திரிதோஷகோபமும் நீங்கும், விரோசனமுண்டாகும். இதனல் பாதரசவேகம் முறியும். 590

அவரை இலையின் குணம்.

அவரையிலைக் குதலைநோ யாழ்ந்த கிராணி
யுவரும் விஷமுத லேகங்-தவறுமற்
கொண்டவர்க்குத் தீபனமாங் கோதாய் விரணமறுங்
கண்டவர்க்குத் தோற்றுமிது காண்.

(இ-ள்.) மாலைசூடிய கூந்தலாளே! அவரை இலைக்குச் சிரஸ்தாப நோய் கிராணி, விஷம் சிரோகம் சிரங்கு ஆகியவை விலகும் உதிராக் கினியுண்டாகும் என்க. 591

காராமணி இலையின் குணம்.

காரா மணியிலையைக் காய்ச்சியுண்டா லுவரிசை
வாராத வாயுமிக வகதுறங்கா-ணேரேகேண்
மூலம் விளையு முசியாக் கழிச்சலுண்டாந்
தாலமதி லதனைத் தள்.

(இ-ள்.) உரிசையுள்ள காராமணியிலையைப் பாகஞ்செய்துண்டால் வாதநோய் வாதமூலம் நீங்காபேதியுமுண்டாகும், பூமியிலி தனைத்தள். 592

கொடிக்குறிஞ்சாஇலையின் குணம்.

கரப்பான் கிரந்தி கடியவிரும புண்காசு
முரப்பாம் விஷபாக மோட்டு-நிரைப்பான
அக்கரத்தை மாற்றிவிடு மாயிழையே பித்தமுமாந்
தக்குறிஞ் சாவினிலை தான்.

(இ-ள்.) ஆயிழையே! பித்தகுணமுள்ள கொடிகுறிஞ்சாயிலை அரைக்கடுவன்சிரங்குகாசம் வலியவிஷபாகம் காப்புண் இவைநீங்கும்.

கறிப்பாலை இலையின் குணம்

மேகமனல் வெட்டைசுரம வீறுபித்த முங்தொலையும்
போகமுறு மெய்மருந்தும் பொய்மருந்தாம்-பாகுமொழி
மானே கறிப்பாலை மன்னுமிலை யைதினமுந்
தானே யருந்தவர்க்குத் தான்.

(இ-ள்.) பாகனையசொல்லையுடையபெண்ணே! கறிப்பாலையிலையை தின்பருக்கு பிரமேகவெப்பம சீழ்மேகசுரம் பித்தகோபமிவை நீங்கும் சுக்கிலவிருத்தியும் ஔஷதக்கெடுதியு முண்டாம். 594

ஊசிப்பாலைஇலையின் குணம்.

மேக மகலும் விழிகுளிரு நாளததின
வேகமகலுமங்க மேனியிடும-மோகமண
வாசிப் பாலைப் பருவ மாந்தரை வீக்குங்கொடியே
ஊசிப் பாலைப்பன்ன முண்.

(இ-ள்.) மோகமணவாசிப்பால் பருவமாந்தரைக் கட்டும கொடி போல்பவளே! ஊசிப்பாலையிலையால் பிரமேகமும் ஆண்குறியினது துவாரவெப்பமும் தீரும் கண்குளிர்ச்சியும் தேகபுஷ்டியும் உண்டாம்.

கோவையிலையின் குணம்.

கண்ணுங் குளிர்ச்சிபெருங் காசமொடு வாயுவுறும்
புண்ணுஞ் சிரங்கும் புரண்டேகும்-கண்ணுமுடல்

மீதிலார் வெப்பகனும் வீழாநீர்க் கட்டேகும்
கோதிலாக் கோவை யிலைக்கு.

(இ-ள்.) கோவையிலைக்கு இருமல்வாதகோபம்பெருவிரணம்சிறு சிரங்கு தேகச்சூடு நீரடைப்பு இவைபோம் கண்குளிர்ச்சியுண்டாம்.

### முசுமுசுக்கை இலையின் குணம்.

இருமலுட னீளை யிரைப்பு புகைச்சன்
மருவுகின்ற நீர்த்தோஷ மாறுங்-திருவுடைய
மானே முசுமுசுக்கை மாமூலி யவ்விலையைத்
தானே யருந்துவர்க்குத் தான்.

(இ-ள்.) அழகையுடைய பெண்ணே! மாமூலியாகிய முசு முசுக்கையிலைக்கு காசம கோழை சுவாசம் நெஞ்சிற் புகைக்கம்மல் சலதோஷம் ஆகிய இவைநீங்கும். 597

### கோழியவரை இலையின் குணம்.

ஆழிசுற்றும வையத் தடர்ந்த பேராமையொரு
நாழியினிற் கெட்டு நலியுங்காண்-தோழிகேள்
கோழியவரைத் தழைக்குங் குணமங் குடல்வாத
மூழிவரைக்கும வாரா தோர்.

(இ-ள்.) தோழியே! கடல்சூழ்ந்த வுலகில் கோழியவரையிலைக்கு வயிற்றிற் காணுகின்ற பருத்த ஆமக்கட்டியும், வயிற்றுநோயும் ஆந்திர பித்தவாதமும் போக்கும். 598

### முசற்காதிலையின் குணம்.

பீசத் தெழுத்த பெருவீக்கங் கைகாலில்
வீசிப் புடைத்த வெறுவீக்கம்-பேசாம
லேல்குமுசற் காதிலை யிருக்குமூரை விட்டுப்
பாகுமொழி மாதே பகர்.

(இ-ள்.) பாகுமொழிமாதே! முசற்காதிலையால் குடலண்டவீக்க மும் கைகால்களின் கீல்களைப்பற்றி வீங்கிய வீக்கமும் விலகும். 599

### கழற்சியிலையின் குணம்-இதுவே வச்சிரம்.

விரைவாதஞ் சூலையறும் வெட்டை யனலேகு
நிரைசேர்ந்த குன்ம நிலையா-துரைசே
ரழற்சி விலகு மருந்திற் கசப்பாங்
கழற்சியிலை யென்றுரைக்குங் கால்.

(இ-ள்.) கசப்புள்ள கழற்சியிலையால் பீசவாதம் சூலைக்கட்டு பிரமேகம் சுரம் பலவிதகுன்மம் உள்ளழலை ஆகியவை ஒழியும். 600

### வெண்கழற்சி இலையின் குணம்.

ஏறண்டத் தோடே யிறங்கண்ட மெத்தவுமே
வீறண்ட வெல்லாம் விலகுங்காண்-தூரண்ட
வள்ளைக் குழையடிபோல் வாள்விழி மாதேநல்ல
வெள்ளைக் கழற்சியிலை வின்.

(இ-ள்.) வள்ளைக்குழையடிபோல் வாள்விழிமாதே! வெள்ளைக் கழற்சியிலை ஏறண்டரோகத்தையும் இறங்கண்ட நோயையும் தசையண்டப்பிணியையும் கெடுக்கும் என்க. 601

### வரிக்குமட்டி இலையின் குணம்.

பற்றுதிர பூச்சிகளைப் பற்பலவா மந்தத்தைச்
சுற்றுதிரப் பித்தத்தைத் தூவிடத்தை-முற்று
மரிக்குமட்டி யாயிலைமா தங்கருரை யன்றோ
வரிக்குமட்டி யாயிலை மாதே.

(இ-ள்.) பெண்ணே! வரிக்குமட்டியிலை ரத்தக்கிருமிகள் பலவித மந்தம் ரத்தபித்தம் தசையைப்பற்றிய சர்ப்பவிஷமிவைகளை விரைவிற் கெடுக்கும் என்க. 602

### சிறுபூனைக்காலி இலையின் குணம்.

சிறுபூனைக் காலியிலை சிலவிஷத்தைப் போக்கு
முறுகாந் தத்தைச் சிந்தூரிக்குஞ்-சிறுமாந்த
மையங் கபந்தீர்க்கு மாறதசப நோய்விலக்கும்
வையாக தனிவிதனை வாழ்த்து.

(இ-ள்.) சிறுபூனைக்காலியிலையானது வண்டுகடிமுதலிய சிலவிஷம் அற்றமந்தம் சிலேஷ்மகோபம கோழைக்கட்டு க்ஷயரோகம் ஆகியவைகளை ஒழிக்கும் காந்தத்தைச் சிந்தூரஞ்செய்யும். 603

### வேலிப்பருத்தி இலையின் குணம் - இதுவே உத்தாமணி.

ஆலித் தெழுந்தநோ யத்தனையுந் தீருமே
வேலிப் பருத்தியதன் மெல்லிலையால்-வேலொத்துக்
கண்டிக்கும் வாதஞ் சன்னிதோஷ மும்போ
முண்டிக்கும் வாசனையா மோது.

### இதுவுமது.

உததா மணியிலையா லுள்வயிற்றுக் குன்மமொடு
குத்தாம் வலியுங் குளிருமபோம்-பற்றி

*யிசுக்கும் வலியிரைப்பு மெத்தடிப்பு மேகும்*
*பசிக்குந்தி மாந்தமும்போம பார்.*

(இ-ள்.) உணவில் மணத்தைத தருகின்ற உத்தாமணியிலையால் பலநோய்கள், வாதநோய் விஷம் சன்னி திரிதோஷம் வாதகுன்மம் சரீரக்குடைச்சல் குத்தல் நடுக்கல் தநுர்வாதம் சுவாசம் பலவிதத் தடிப்புக ளக்கினிமந்தம் இவைநீங்கும், தீபனமுண்டாம். 604

**தாரா இலையின் குணம் - இது தூரா என மருவியது.**

*புண்கிரந்தி கட்டி பொருசன்னி கீடமும்போங்*
*கண்புகைச்சல் காசங் கதிக்குமென்பார்-பெண்களுக்குப்*
*பாலும் பெருகுமுள்ளே பற்றுகிரச் சிக்கல்விடு*
*மேலுந் தாராவினிலைக கே.*

(இ-ள்.) தாராயிலைக்கு விரணம் கிரந்தி வித்திரிதிக்கட்டி சந்நி பாதம் எரிகிருமி நேத்திரப்புகை கண்காசம் முலைப்பால் விருத்தி ஆகிய இவைகள் உண்டாகும் மாதாந்த உதிரச்சிக்கல்விடும். 605

**செந்தாரா இலையின் குணம்.**

*அனில முளையு மரோசகமு நீக்குந்*
*தனியான தோஷமது தாழுங்-கனிமொழியே*
*வெந்தாரைச் சூடும் விடாயும்போந் தீபனமாஞ்*
*செந்தாராவின் றழைக்குச் செப்பு.*

(இ-ள்.) கனிமொழியாளே! செந்தாரா இலைக்கு வாத முளைமூலம் அருசி வாதமுதலிய தனித்தோஷங்கள் நீர்த்தாரைச்சூடு ஆயாசம் இவைநீங்கும் தீபனமுண்டாம். 606

**விஷமூங்கில் இலையின் குணம்.**

*பிளவை யுகிர்ச்சுற்று பெரும்படுவன்வீக்க*
*மளவினையுங் காதெழுச்சியாற்று-மளவையுறு*
*தோங்கி வளர்ந்தமுலை யோவியமே நீண்டவிஷ*
*மூங்கிலிலை நன்மூலி முன்.*

(இ-ள்.) அளவையுறு தோங்கிவளர்ந்த முலைகளையுடைய வோவி யம்போல்பவளே! விஷமூங்கிலை ராசப்பிளவைநகச்சுற்று பெரும்படு வன் சோபை சிலேஷ்மகர்ணசூலைமுதலிய நோய்களையும் போக்கும்.

**சதாப இலையின் குணம்.**

*கணமாந்த ருட்சை கணக்கழிச்சல வாந்தி*
*குணமாம் பசியுங் குலவும்-வணமயிலே*

கூடுநிறை கருப்பக் கோதையர்க்காம் வேதகனு
நாடு சதாபலையிலையினால்.

(இ-ள்.) வண்ண மயில்போலுஞ் சாயலையுடையாளே! சதாபலை யிலையினால் பால்மந்த முதலியவற்றால் விளைகின்றசுரம் கணப்பேதி கபவமனம்பிரசவமாதர்களின்வேதனை இவைநீங்கும்தீபனமுண்டாம்.

## கீரை வகை

கருணைக்கிழங்குதண்டின் குணம்-இதுவே சூரணம்.

சித்த குதாகுரநதைத் துட்டகப மேதையதி
கத்தை விலக்குங் கறியமைக்கிற்-பத்தியமாஞ்
சீரணத்தை யும்மிகுத்த தீபனத்தை யுங்கொடுக்குஞ்
சூரணத்தின் றண்டெனவே சொல்.

(இ-ள்.) சூரணதண்டென்னும் பத்திபத்திற்கான கருணைத் தண்டால் மூலரோகமும் கபகோபமும் மேதோதாதுவிருத்தியும் நீங் கும் சீரணமும் பசியுமாம். 609

கீரைத்தண்டின் குணம்.

தண்டுமெத்த வாயு தணியாத சீதளமாம்
விண்டுரைக்கிற் கின்னேய்போம் விள்ளவே-கொண்டக்கா
ணீர்க்கடுப்பு வெட்டையு மில்லாது நேரிழையே
போர்க்கடுப் பிரத்தமும் போம.

(இ-ள்.) நேரிழையாளே! அதிவாதசீதளமுள்ளகீரைத்தண்டால் பித்தகிரிச் சரம் பிரமேகச்சூடு வயிற்றுக்கடுப்பு ரத்தபேதி முதலிய நோய்களும்போம். 610

வெண்கீரைத்தண்டின் குணம்.

வெண்கீரைத் தண்டு வியாதியற்ற நற்கறியாங்
கண்காணு தோடிவிடுங் காந்தலெல்லாங்-கண்காணு
மூலமதற் கேற்கு முகியா வெரியகற்றுந்
தாலமதி லக்குணத்தைச் சாற்று.

(இ-ள்.) நோயற்ற நல்லபதார்த்தமாகிய வெண்கீரைத் தண்டி ளைல் வெப்பமும் வெளிமூலரோகமும் பித்த எரிச்சலும் நீங்கும். ()

புதியன்மூலிக்குணம்-இதுவே புதியனு.

அருசியொடு வாந்தி யக்கினி மந்தங்
குருதி யழுக்குமலக் கொட்ட-விரியுக்

துதியதன்று சோறிரங்குந் தொல்லுலகி னாளும்
புதியன் மூலிப் புகல்.

(இ-ள்.) புதியன் மூலியால் அருசி சர்த்தி மந்தாக்கினிரத்ததாது வினழுக்கு மலப்போக்கு இவைநீங்கும் போஜனமுஞ்செல்லுமென்க.

வெள்ளைக்கீரை, பருப்புக்கீரை-இவைகளின் குணம்.

வெள்ளைக்கிரைதனில் மாரும்பா லுண்டாகும்
பிள்ளைப் பருப்பிலைக்கும் பித்தமறுங்-கொள்ளத்
தெரியுங் கடல்சூழித தேசத் தோருக்குக்
கரிய குழலணங்கே காண்.

(இ-ள்.) கறுததகுழலாளே! வள்ளைக்கிரைக்கு வாதகோபம் நீங்கும் முலைப்பால்பெருகும்; இளம்பருப்புக்கிரைக்குப் பித்தாதிக்கம் போம். 613

வங்காரவள்ளக்கீரையின் குணம்.

மாரிக்கா லத்தாய வங்கார வள்ளையினுற்
பூரித்த வாதம் பொருமலொடு-காரித்
திறங்கா மலசல மிறங்கு மின்புண்டா
முறங்கா விழியணங்கே யுள்.

(இ-ள்.) மதர்த்த விழிகளையுடைய மாதே! மழைக்காலத்து வங்கார வெள்ளைக்கிரையினல் வாதரோயும் வயிற்றுப்பிசமும் நீங்கும், கருத்துஞ்சிக்கிய மலமும மூத்திரமும சரியாயிறங்கும். குடலுக்குச் சுகமுண்டாம் என்க. 614

கோடிவலக்கீரையின் குணம்-இது வசலை பசலை என் மருவியது.

நீர்க்கடுப்பு நீரடைப்பு நீங்காத மேகமுமிவ்
வூர்க்கடுத்து வாராம லோடுங்காண்-பார்க்கவொண்ணு
வற்பவிடை மாதே யரோசிசர்த்தி யுந்தொலையு
நற்பசலைக் கீரையத னுல்.

(இ-ள்.) நுட்பமான யிடையையுடையாளே! நல்ல வசலைக் கிரையால் மூர்த்திரக்கடுப்பு மூர்த்திரக்கிரிச்சரம் ஒழுக்குவெள்ளை அருசி வாந்தி ஆகியவைகள்போகும். 615

சிறுபசலைக்கீரையின் குணம்-இதுவே பசறை.

போகமிகக் கொடுக்கும் போர்செய்கபத் தைப்பெருக்கு
மாகமதிற் றுகமனலைத் தணிக்கு-மாகுடரின்

மன்னு மலமிளக்கு மாறு வரிசைதருந்
தின்னுஞ் சிறுபசலைத் தேர்.

(இ-ள்.) அதிசுவையுள்ள சிறுபசலை புணர்ச்சிபி விச்சையையும் கபத்தையும்பெருக்கும்தாகத்தையும்சூட்டையும் தணிக்கும்மலத்தை யிளக்கும். 616

பாற்சோறிக்கீரையின் குணம்.

வயிற்றுக் கடுப்பு மலஞ்சீதப் பேதி
நியத்தரத்தம் போக்கிவை-நிறுத்துங் குபத்தையொரு
பாற்சரியக் காட்டுமபருவ வணங்கரசே
பாற்சொரியக் கீரையது பார்.

(இ-ள்.) மங்கைப்பருவமுள்ள பெண்கள் நாயகமே! பாற்சொரிக் கீரையானது வயிற்றுக்கடுப்பை மலம சீதம்ரத்தம் இவ்வகைப்பேதி களையும் நீக்கும் என்க. 617

சாணுக்கீரையின் குணம்.

கோழையொடு மாந்தவ குழந்தைச் சுழிக்கணமும்
பேழையெனச் சொல்லும் பெருவயிறுங்-கேழொருவர்
காணுக் கிருமிகளைக் கக்குமளி புண்ணுஞ்
சாணுக்கிக் கீரையிற்போக் தான்.

(இ-ள்.) சரணுக்கீரையால் கபம அக்கினிமாந்தம் சுழிக்கணம் மகோதரம் புழுநெளிகின்ற விரணம் ஆகியவைபோம். 618

துயிலிக்கீரையின் குணம்.

சீதம் விளையுஞ் சிறுசிரங்கு புண்ணுமாங்
காது பழமலமுங் கட்டறுங்காண்-கீதக்
குயிலனையாய் வெட்டையெனக் கூறுளோ யில்லைத்
துயிலயிலைக் கறிக்குஞ் சொல்.

(இ-ள்.) கீதக் குயிலனையபெண்ணே! துயிலிக்கிரைக்கு ஆமமும் கமிட்டுச்சிரங்கும் விரணமும் உண்டாகும் பழமலக்கட்டும் பிரமேகம் வெள்ளையும் நீங்கும். 619

பண்ணைக்கீரையின் குணம்.

பண்ணையிளங் கீரையது பற்றுமல மிளக்கு
மெண்ணுங் குடருக் கிதங்கொடுக்கும்-பெண்ணேகேள்
சீதங் கரப்பான் சிரங்குபுண் மாற்றுவிக்கும்
கோதச் சிலையதனைக் கொள்.

(இ-ள்.) பெண்ணே! குடலுக்கு நன்மைத்தாநின்ற பண்ணைக் கீரை ஆமங் கரப்பான் கிரந்தி விரணம் இவைகளை நீக்கும். மலத்தை யிளக்கும் என்க. 620

பாட்டைக்கீரையின் குணம்.

பாட்டைநறுங் கீரையது பததியத்திற் காகும்
வெருட்டுகின்ற பித்தமிக வீறு-புரட்டுங்
கபமுடனே வாதங் கரப்பானு மேகுஞ்
சுபவசன மாதே துதி.

(இ-ள்.) சுபவசனமாதே! பத்தியவியஞ்சனமாகிய பாட்டைக் கீரையால்கிலேஷ்மரோகமும்வாதப்பிணியும்கரப்பானும் பித்தம் போம்.

செங்கீரைத்தண்டின் குணம்.

செங்கீரைத் தண்டதுதான் தீராத பித்தத்தைத்
தாங்காம லோட்டிவிடுந் தையலர்க்குப்-பொங்கும்
பெரும்பாட்டை நீக்கும் பெரிய கறியாக
தரும்பாட்டு வெப்பகற்றுந தான்.

(இ-ள்.) பெருங்கறியாகிய செங்கீரைத்தண்டு தீராத பித்த ரோகத்தையும் பெண்களுக்கும் பெரும்பாட்டையும் பிரலாப சன்னிபாத சுரத்தையும் நீக்கும் என்க. 622

முளைக்கீரையின் குணம்.

தளர்ந்தவர்க்கும் பாலர்க்குந் தக்கவயதோர்க்கும்
மிளங்கீரை நாவுக் கிதமாங்-கிளம்பு
சுரகாசம் போக்குந் தொடர்பசி யுண்டாக்கும்
பிரகாசமா யெடுததுப்பேசு.

(இ-ள்.) விருதத பால யௌவன பருவத்தவர்க்கும் நாவுக்கிதவு வைத்திராநின்ற முளைக்கீரை காசசுரத்தைநீக்கும், பசியைத்தரும்.

முள்ளிக்கீரையின் குணம்-இதுவே குப்பைக்கீரை.

நீரைப்பெருக்கிவிடு நீடனலைத் தானெழுப்பும்
பாரநறுந் தங்கத்தை பஸ்மிக்கு-நேரே
விடவிருக்கும் பொற்றட்டை மேவல்குன் மாதே
யடவிநிற்கு முள்ளிக் கீரை.

(இ-ள்.) விடவிருக்கும் பொற்றட்டையொத்த அல்குலையுடைய மாதே! காட்டு முள்ளிக்கீரை நீர்ப்பேதியையும் ஜடராக்கினி விருத் தியையும் செய்யும். தங்கத்தைப் பஸ்மமாக்கும் என்க. 624

அறுகீரையின் குணம்-இது அரைக்கீரை எனமருவியது.

காய்ச்சல் குளிர்சந்நி கபநோய் பலபிணிக்கும்
வாய்ச்ச கறியாய் வழங்குங்காண்-வீச்சாயக்
கறுவுமோ வாயுவினங் காமமிக வுண்டா
மறு கீரையத்தின் றறி.

(இ-ள்.) பலபிணிக்கும் நற்கறியான அறுகீரையினால் சுரம் நடுக்கல் சந்நிபாதம் கபரோகம் வாதநோய் இவைபோம் தாதுவிருத்தியாம்

புளிச்சிறுகீரையின் குணம்.

தேகசித்தி யாகுஞ் சிறுகாச மந்தமறும்
போகமுறு வுந்துவுநற் புஷ்டியுண்டாம்-வாகாம்
வெளிச்சிறுமா னேக்கும்விழி மென்கொடியே நாளும்
புளிச்சிறு கீரையுண்ணும் போது.

(இ-ள்.) வெளிச்சிறுமானேக்கும் விழிமென்கொடியே! புளிச்சிறுகீரையினால் சிணுக்கிருமலும் மந்தமும் நீங்கும் காயசித்தியும் புணர்ச்சியில் விருப்பமும் வீரியவிருத்தியும் உண்டாம். 626

சிறுகீரையின் குணம்.

கண்புகைச்ச நேத்திரநோய் காசம் படலம்ரசப்
புண்கிரிச் சுரஞ்சோபை போங்குபித்த-மண்பரவு
தாவர விஷங்களும்போந் தாழாத திருவுமுண்டாங்
கூறுசிறு கீரை தனைக் கொள்.

(இ-ள்.) சிறுகீரையால் நூம்பிரநோய் காசம் படலம் பாதரசவேகம் விரணம் மூத்திரகிரிச்சம் வீக்கம் பித்தநோய் நாவிபாஷாண முதலிய விஷங்கள் ஆகிய இவைபோம் அழகுண்டாம். 627

கலவைக்கீரையின் குணம்.

வாதபித்த வையசுத்தை மாற்று மலமறுக்கு
மோதுகுடல் வாதமதை யோட்டுங்காண்-போதின்
பலகலவைக் கோதாய்நற் பத்தியத்திற் கெவ்வும்
பலகலவைக் கீரையுண்டு பார்.

(இ-ள்.) மயிற்சாந்தணிநத கூந்தலாளே பலவகையுங் கலந்தகீரை வாதபித்த கபதோஷங்களையும் மலச்சிக்கலையும் ஆந்திர பித்தவாதத்தையும் போக்கும் பத்தியத்திற்காம் என்க. 628

### மணலிக்கீரையின் குணம்.

வாதமறு நெஞ்செரிவு வாதகபம விலகுஞ்
சீதமுடனேய்பலவுந தீருங்காண்-போதவுள்ளே
வீறு கிருமியொடு மேவாப் பயித்தியம்போங்
கூறு மணலிக் கீரைக்கு.

(இ-ள்.) மணலிக கீரைக்கு வாதகபம் மார்புச்சளி சிலேஷ்ப முதலிய பலநோய் கிருமி ரோகம பயித்தியதோஷம இவைநீங்கும்.

### நீர் ஆரைக்கீரையின் குணம்-இதுவே ஆரைக்கீரை.

தின்ருலரிகைதருந தீராப பயித்தியததைப்
பொன்ருத நீரிழிவைப் புண்ணுரை-யென்றுமிந்த
ஆராரைச் சாராம லோட்டிவிடு நாவிதழார்
நீராரைக் கீரையது நீ.

(இ-ள்.) நல்ல சுவையும நாவிதழுமுள்ள நீராரைக்கீரை பித்த நோயையும் அதிமூத்திரததையும் ரத்தபிரமேகத்தையும் நீங்கும்.

### புளியாரைக்கீரையின் குணம்.

பித்த மயக்கமறும பெருலகின் மானிடர்க்கு
நித்தமருள் வாதகப நேருமோ-மெத்தெனவே
மூலக் கிராணிவிடு மூல வுதிரமறுங்
கோலப் புளியாரைக் கு

(இ-ள்.) புளியாரைக்கீரைக்கு பித்தமயக்கம் தீமையை விளைக்கின்ற வாதகபமிசிரம மூலவாயு கிரகணி ரததமூலம் இவைபோம்.

### கோழிக்கீரையின் குணம்-இதுவே பருப்புக்கீரை.

சொறியுங் கரப்பானுந் தோற்று மென்மேலுஞ்
சொறியுங் கிருமிமிகச் சேரு-மெறிகின்ற
வாழிக் கிடானவிழி யாரணங்கே வையகததிற்
கோழிக கீரைக்குணத்தைக் கூறு.

(இ-ள்.) சமுத்திரத்தை நிகர்த்த கண்களையுடையாளே! கோழிக் கீரையால் புடையும் கரப்பனும் கிருமியும் உண்டாம். 632

### புளிப்புக்கீரையின் குணம்.

வாதமறும் பித்தமுறு மாரு வரோசிவிடுஞ்
சீதமுடனே யகலுஞ் செயிழைமே-போதப்
புளித்த விலைக்கறிக்குப் போமிரத்த பித்தங்
களித்த கரப்பனெடு காண்.

(இ-ள்) சேயிழையாளே! புளிப்புக்கீரைக்கு வாதகோபம் அருசி சீதளம் ரத்தபித்தரோகம் கரப்பான் ஆகிய இவைநீங்கும், பித்தங் கதிக்கும் என்க. 633

பிண்ணாக்குக்கீரையின் குணம்.

மலமிறங்கும் வாதமுடன் வன்கரப்பா னுண்டாஞ்
சலமிறங்கு மேகந் தணியு-மலர்விழியா
யுண்ணாக்குக் கின்பமா மோமெனல் வெட்டையெலாம்
புண்ணாக்குக் கீரையுண்ட பேர்க்கு.

(இ-ள்.) மலர்போன்ற விழியாளே! உரிசையுள்ள பிண்ணாக்குக் கீரையால் மலமும் மூத்திரமும் சரியாயிறங்குவதுந் தவிர வாத தோஷமும் கரப்பானும் உண்டாகும். பிரமேகவெள்ளையும் அரித் திராமேகமும் போகும் என்க. 634

முக்குளிக்கீரையின் குணம்.

ஐய மிகக்கொடுக்கு மாந்தர்போகத் தருங்காண்
மெய்யெரிவை யெல்லாம விலக்குமே-தையலே
பேதி யளிக்கும் பெருமுக் குளிக்கிரை
சீதம் விளைக்குமெனத் தேர்.

(இ-ள்.) தையலே! முக்கிளிக்கிரை கபதோஷம் புணர்ச்சியிலிச்சை அதிசாரம் ஆமம் ஆகியவைகளை உண்டாக்கும், வெப்பத்தை நீக்கும்.

வெந்தயக்கீரையின் குணம்.

பொருமந்தம் வாயுகபம் போராடு கின்ற
விருமல் ருசியிவை யேகுந்-தரையி ற்
றீதி லுயர்சமனைச் சீறும் விழியணங்கே
கோதில் வெந்தயக்கீரை கொள்.

(இ-ள்.) தீதிலுயர்ந்த காலனைச்சினக்கும் விழிகளையுடையமாதே! வெந்தயக்கீரையால் வயிற்றுப்பிசம அக்கினிமந்தம் வாதகோபம் சிலேஷ்மதோஷம் காசம் அரோசகம் ஆகியவைநீங்கும். 636

கொத்துமல்லிக்கீரையின் குணம்.

கொத்துமல்லிக் கீரையுண்ணிற் கோர வரோசகம்போம்
பித்தமெல்லாம் வேருடனே பேருங்காண்-சத்துவமாம்
வெச்செனவே போகம விளையுஞ் சுரந்தீருங்
கச்சுமுலை மாதேநீ காண்.

(இ-ள்.) கச்சுமுலை மாதே! கொத்துமல்லிக் கீரையால் வாத அரோசகம பித்தசுரமுமபோம், வன்மையும் சுக்கிலமும் விருத்தியாம்.

கோடிக்காசரைக்கீரை, செடிக்காசரைக்கீரை விதை இவைகளின் குணம்.

கொடிக்கா சரையிலையாற கூறுபித்த மேகுஞ்
செடிக்கா சுரைக்குச் சிலேஷ்மந்-தடிக்காவா
மிவ்விதைகளாற் கருப்ப மின்றெனவே பொய்த்துவிடுஞ்
செவ்விய மெல்லிதழாய் தேர்.

(இ-ள்.) செவ்விய மெல்லிதழையுடைய பெண்ணே! கொடிக்காசரைக்கீரையால் பயித்தியம்போம், செடிக்காசரைக் கீரையால் கபம் நீங்கும். இவ்வித்துக்களால் கருப்பங்கரையும். 638

காசினிக்கீரையின் குணம்.

அத்திவெப்பம் நீக்கு மடர்சோபை யைத்தொலைக்கு
மெத்த வுதிரத்தழுக்கை விலக்கு-மததரத்தின்
மாசினியி லைங்காத வார்த்தையெனப் பேசுவிக்குங்
காசினி யிலைக்குணத்தைக் காண்.

(இ-ள்.) காசினிக்கீரை அஸ்திதாதுகதசாத்தையும் வீக்கத்தையும் உதிரத்தழுக்கையும் நீக்கும ரத்தவிருத்தியைச் செய்யும். 639

போகம் விளைக்குங் கீரைகள்.

தாளி முருங்கைத் தழைதூது ணம்பசலை
வாளிலறு கீரையுநெய் வார்த்துண்ணி-லாளியென
விஞ்சுவார் போகத்தில் வீம்புரைத்த பெண்களெலாங்
கெஞ்சுவார் பின்வாங்கிக் கேள்.

(இ-ள்.) நறுந்தாளி நன்முருங்கை தூதுணம் பசலை அறுகீரை இவற்றுள் யாதேனும் ஒன்றைப்புளிநீக்கிப் பாகஞ்செய்து அன்னத்துடன் நெய்சேர்த்துக் காலையில்மாத்திரம் ஒரு மண்டல அளவையாக உண்ணில் புணர்ச்சியில் நிர்வாகம் உண்டாம் என்க. 640

## மரத்தின் புட்பவகை

பச்சைக் குங்குமப்பூவின் குணம் - விருத்தம்.

சங்கையின் மதுரதோடஞ் சலதோடம் நீசசங்கட்
செங்கையற் கண்ணின்றோடஞ் செவித்தோடம் பித்ததோடங்
கெங்கையாங் கபதோடங்கள் கெஞ்சிடும் பச்சையான
குங்குமப் பூவினாலே கோதையே யிதனைக்கொள்ளே.

(இ-ள்.) கோதையே! பச்சைக் குங்குமப்பூவுக்கு இன்சுவையால் பிறந்த துர்க்குணங்கள் நீரேற்றம் காசிநேத்திரம் செவி இவைகளைப் பற்றிய ரோகம்பயித்தியம்சிலேஷ்மதோஷம் இவைகள்விலகும்என்க.

கொன்றைப்பூவின் குணம் இதுவே சரக்கொன்றை-வெண்பா.

மலக்கிருமி யோடு மதுநீர் குடலாந்
தலத்துநோ யுங்குலைந்து சாயு-நிலத்திற்கு
ளென்றைக்கு வாடாத வின்பமலர்க் கொம்பே
கொன்றைப் பசுமலரைக் கொள்.

(இ-ள்.) இன்பமலர்க் கொம்பனையாளே கொன்றைப்பூவால் மலாசயமிருகி மதுமேகம் குடலைப்பற்றியரோகங்கள் ஆகிவைகள்போம்.

மைக்கொன்றைப்பூவின் குணம்-இதுவே மயிர்க்கொன்றை-வெண்பா.

மைக்கண விழியனமே வையகத்தி லெப்போது
மைக்கொன்றைப் பூமேக மாற்றுங்காண்-மிக்கதனைக்
கொண்டாற் சலமேகங் கூடுவென றேபதறி
யண்டாதி துண்மை யறி.

(இ-ள்.) மையணிந்த கண்களையுடைய அன்னமேமைக்கொன்றை பூவால் பிரமேகமும் சலமேகமும் நீங்கும். 643

காட்டத்திப்பூவின் குணம்.

உதிரக் கடுப்போடுதிரக் கழிச்சல்
விதிரக கடும்பேதி மேக-மெதிர்நிற்க
மாட்டா தகனும்வனசமலர்த் திருவே
காட்டத்திப் பூவுக்குக் காண்.

(இ-ள்.) தாமரையில் வசிக்கு மிலக்குமிபோல்வாளே! காட்டாத்திப்பூவுக்கு மதத்தகடுப்பு ரத்தாதிசாரம் வெளுத்த மலக்கழிச்சல் பிரமேகம் ஆகிய இவைகள்போகும். 644

சண்பகப்பூவின் குணம்.

வாதபித்த மஸ்திசுர மாமேகஞ் சுத்த சுரந்
தாதுநஷ்டங் கண்ணழற்சி தங்காவே-மாதேகேள்
திண்புறு மனக்களிப்பாந் திவ்யமண முட்டனஞ்சேர்
சண்பகப் பூவற்குத் தான்.

(இ-ள்.) பெண்ணே! நீகேட்பாயாக நல்லமணமுள்ளதும் உள்ள சண்பகப்பூவிற்கு வாதபித்த மிஸ்ரம் அஸ்திசுரம் பிரமேகம் தனித்

தோஷசுரம் சுக்கிலகஷ்டம் நேத்திர அழற்சி ஆகிய இவைபோம் மனக் களிப்புண்டாம். 645

பாதிரிப்பூவின் குணம்.

பித்த சுரந்தணியும் பெண்வசிய முண்டாகும்
முற்றியதோர் வெட்டை முடியுங்காண்-மெத்தவுமே
மாதுரிய நீங்கா வசன மடவனமே
பாதிரியின் பூவையுண்டு பார்.

(இ-ள்.) மாதுரியவசனியே! பாதிரிப்பூவினால் தீச்சுரமும் மேகமும் நீங்கும், ஸ்திரீவசியமாம். 646

மந்தாரப்பூவின் குணம்.

மந்தாரப்பூ குளிர்ச்சி மன்னர் வசியமுமாஞ்
செந்தா மரைத்திருவே செப்பக்கேள்-சந்ததமுங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி காணுங் கொதிப்பகற்று
மண்ணினின்றும் பூவெனவே வை.

(இ-ள்.) செந்தாமரையில் வசிக்கு மிலக்குமியனைய பெண்ணே! குளிர்ச்சியுள்ள நல்ல மந்தாரப்பூ ராஜவசியத்தையும் விழிக்குக்குளிர்ச்சியையும் செய்யும் சரீரவெப்பத்தை நீக்கும். 647

புன்னைப்பூவின் குணம்.

புன்னைப்பூ பித்தமென்பார் போராடு வன்மேகம்
வின்னப் படாசித்த விப்பிரமம்-பின்னுங்
கரப்பான் சொறிசிரங்குங் காணு தகற்று
முரப்பாக வேமயக்கு முன்.

(இ-ள்.) புன்னைப்பூ நீங்காமேகம் சித்தவிப்பிரமம் சந்நிகரப்பன் புடை விரணம் இவைகளைநீக்கும் மயக்கமுண்டாக்கும்பித்தமென்பர்.

மகிழம்பூவின் குணம்-இதுவே மகிழம்பூ.

வெகு வனலமாகு விரகமிக வுண்டா
முகர வரோசக முறியு-மிகவு
மகிழச்சுரத வகைகாட்டு மாதே
மகிழத் துரு மலர்க்கு.

(இ-ள்.) மகிழப்புணர்ச்சி விளையாட்டைக் காட்டுமாதே! மகிழம் பூவுக்கு தேகவெப்பமும் புணர்ச்சியிவிச்சையும் உண்டாக்கும் இதனை முகர அரோசகரோகம் நீங்கும். 649

### பன்னீர்மரப்பூவின் குணம்.

சர்த்தி யரோசகமுட் டாதுநட்ட மேல்வறட்சி
பொத்த வழலு மொழுங்குங்கா-ணைத்தரத்துந்
தன்னீர்மை குன்றாத தளிர்வண்ண மாதரசே
பன்னீர்ப்பூ மரத்தைப் பார்.

(இ-ள்.) தன்னீர்மைகுன்றாத வளிர்வண்ண மாதரசே! பன்னீர் மரப்பூவினால் வாந்தி அருசி சுக்கிலட்சீணம் நாவறட்சி பித்தகோப மிவைகள் போம். 650

### குருக்கத்திப்பூவின் குணம்-இதுவே மாதவி.

சிரரோகந் தாகஞ் சிலேஷ்ம விரணம்
பொருபித்தம் பலவிஷமும் போக்கும்-வரிசேர்
கருக்கொத்த வாள்விழியாய் கைப்புமது கஞ்சார்
குருக்கத்திப்பூ வின் குணம.

(இ-ள்.) வாள்விழியாளே! கைப்பினையுள்ள குருக்கத்திப்பூ சிரஸ்தாபம் அதிதாகம் சிலேத்மகுஷ்டவிரணம் பித்தகோபம் பலவிஷம் இவைகளை நீக்கும். 651

### செந்தாழம்பூவின் குணம்.

தலைநோய் சலதோடஞ் சண்ணு கபங்காச
முலைவாத மெல்லா மொடுக்கு-நிலைசேர்
திருந்துடற்குக் காந்திதருஞ் செம்மணப்பில் வெம்மை
பொருந்துகின்ற செந்தாழம் பூ.

(இ-ள்.) உட்டினமணம் பொருந்திய செந்தாழம்பூ சிரஸ்தாபரோகம் நீரேற்றம் நெஞ்சிற்கபாதிக்கம் இருமல் சலிக்கின்றவாதகோபம் இவைகளைப்போக்கும் சரீரத்தில் வனப்பைத்தரும். 652

### முருங்கப்பூவின் குணம்.

விழிகுளிரும் பித்தம்போம் வீறருசி யேகு
மழிவிந்து வும்புஷ்டி யாகு-மெழிலா
ரொருங்கை யகலாக் கற்புடை வாணகையே
முருங்கையின் பூவை மொழி.

(இ-ள்.) கற்பினையுடைய ஒளிபொருந்திய நகையாளே! முருங்கப்பூவினால் பித்ததோஷம் அரோசகமும் நீங்கும் கண்குளிர்ச்சியும் சுக்கில விருத்தியும் உண்டாகும். 653

### அகத்திப்பூவின் குணம்.

புகைப்பித்த மும்மழலாற் பூரிக்கு மந்த
வகைபித்த மும்மனலு மாறும்-பகுத்துச்
சகத்தி லருந்தாத் தனியமிர்தே நாளு
மகத்தி மலருக் கறி.

(இ-ள்.) சகத்திலருந்தா ஒப்பற்றஅமுதனையபெண்ணே! அகத்திப்பூவுக்கு சுருட்டுமுதலிய புகைகளாலும் வெய்யிலாதி உஷ்ண திரவியங்களாலும் பிறந்த பித்தங்களும் தேக அழலையும் நீங்கும்.

### செவ்வகத்திபூவின் குணம்.

நாடிற் பனிப்பீனு நாசிக்கறைக் கதழ்வை
யோடித் துடைத்துள் ளொளியாற்றும்-பாடேத்
தவரகத்தி னுந்துணங்கைத் தண்டா மயிலே
துவரகத்தி பூக்காண் டுதி.

(இ-ள்.) மடமயிலனைய மங்கையே! செவ்வகத்திப்பூ பார்க்கிற் பயங்கரத்தைக் கொடுக்கின்ற நாசியால்விழுகிற ரத்தபெருக்கை விரைவில் நிறுத்துவதுமன்றி உள்வெப்பதத்தையும் நீக்கும். 655

### வேப்பம்பூவின் குணம்.

பித்தத் தெழுந்த பெருமூர்ச்சை நாத்தோடஞ்
சத்தத் தெழுதமனந் தஙகருசி-முற்றியகா
லேப்ப மலகிருமி விவையேகு நாட்சென்ற
வேப்ப மலருக்கு வெருண்டு.

(இ-ள்.) நாட்சென்ற வேப்பம்பூவுக்கு சந்நிமூர்ச்சை ஜிம்மகதோஷம்வாந்தி அரோசகம் நீடித்தவாதமலஏப்பம் மலக்கிருமிஇவைபோம்.

### மாதுளம்பூவின் குணம்.

வாந்திபித்த தோடமொடு மாறுக் கடும்பனலஞ்
சேர்ந்துநின்ற மூலரத்தந் தீர்க்குங்காண்-மாந்தளிர்க்கை
மாதே கறைப்புஷ்டி வல்லபல னுண்டாகும்
பூதலத்துண் மாதுளையின் பூ.

(இ-ள்.) மாந்தளிரனைய கைகளையுடையமாதே! மாதுளம்பூபித்த வாந்தி வயிறுளைதல் ஏப்பம் ரத்தமூலம்இவைகள்போகும், ரத்தபுஷ்டியையும் பலத்தையுந் தரும், கறை-உதிரம். 657

புளியம்பூவின் குணம்.

பித்தத் துடனே பெருததவரோ சகமபோ
மெத்த வெழும்வாந்தி பிதத்துணிற்கு-மெத்தக்
கனத்துப் பூரித்தமுலைக் காரிகையே லெற்பார்
வனத்துப் புளியம்பூ வால்.

(இ-ள்.) கனத்துப்பூரித்த முலைகளையுடையாளே! மலையைச் சார்ந்த காட்டில் முளைத்த புளியம்பூவினால் பித்தகோபமும் அருசியும் அதிகரித்தவமனமும் நீங்கும் என்க.

இலுப்பைப்பூவின் குணம்.

குனமு விலுப்பையின்பூ கூர்மதுரம் வாசனைபார்
தின்முற் பயித்தியமுஞ் சேருங்காண்-வன்றனுறுந்
தார்குழலே பித்தசுரந் தாகந் தணிந்துவிடும்
வார்தயக்க மெய்தும் வழுத்து.

(இ-ள்.) வாசனையையுடைய நீண்டகூந்தலாளே! ருசியும் பித்தமணமும் உள்ள இலுப்பைப்பூவினால் பித்தசுரமும், தாகரோகமும் நீங்கும், அதிபித்தமும் பிரமைபும உண்டாகும். 659

வாகைப்பூவின் குணம்.

வாத சனஞ்செய்பு வல்விடத்தைப் பொக்கிவிடுஞ்
சீத சிலேஷ்மத்தைச் சிதைக்குங்காண்-போதவுள்ளே
யாகைப்பை வைத்திருக்கும் மாநிலத்திலே பிறந்த
வாகைப்பூத் தன்னை வழுத்து.

(இ-ள்.) கைப்புச்சுவையுடைய வாகைப்பூ வாததோஷத்தையும் சர்ப்பவிஷங்களையும் சிலேஷ்மகோபதைதயும் கொடுக்கும். 660

முள் முருக்கம்பூவின் குணம்-இதுவே கலியாணமுருக்கு.

கருப்பா சயத்திற் கறுத்துத் தடித்தே
பருத்த வுதிரத்திரளைப் பஞ்சாய்த்-துரத்திவிடும்
பண்முருக்கு மின்பமொழிப் பாவாயுலகறிய
முண்முருக்கம் பூவை மொழி.

(இ-ள்.) இசையை வெற்றிகொண்ட யின்பமொழியாளே! முள் முருக்கம்பூ கருப்பப்பையிற் கட்டிய ரத்தகுன்மத்தை விலக்கும்.

தென்னம்பூவின் குணம்.

மேக மகக்கொதிப்பு வீறு விரத்தபிததம்
வேக வசிர்க்கரோய் வீழ்பிரமி-தேகத்தில்

வின்னம் பாலிக்கும் விஷபாகம் போகவென்றார்
றென்னம் பாளைப்பூவைத் தின்.

(இ-ள்.) தெங்கினிளம்பாளைப்பூவால் பிரமேகம்உட்காய்ச்சல் ரத்தபித்தம் அசிர்க்கரம் ஒழுக்குரபிரமியம் விஷபாகநோய் இவைநீக்கும்.

பனம்பூவின் குணம்.

பனையிலுறு பூவதுதான் பக்கமுறுக் குன்ம
வினையகற்று நீர்கட்டை மீட்கும்-முனையான
பன்னே யொழிக்கும் பழச்சுரத்தைப் போக்கிடு
மின்னே யிதனை விளம்பு.

(இ-ள்.) மின்னலனையாளே! பனம்பூவானது வாதகுன்மம் மூத்திரச்சிக்கல் தந்தரோகம் புராணசுரம் ஆகியவைகள் போகும். 663

வாழைப்பூவின் குணம்.

வாழைப்பூ மூலரத்த மாபிரமி வெட்டைபித்தம்
கோழையயிற் றுக்கடுப்பு கொல்காச-வாழியன
லென்னவெரி கைகா லெரிவந் தொலைத்துடலின்
மன்னவளாக் குந்தாது வை.

(இ-ள்.) வாழைப்பூ ரத்தமூலம் பிரமேகம் வெள்ளை பயித்தியம் கபாதிக்கம் உதரக்கடுப்பு இருமல் கைகால் எரிச்சல் இவைகளைநீக்கும் சுக்கில விருத்தியைத்தரும். 664

## செடியின் புட்பவகை

ஆவாரம்பூவின் குணம்.

தங்க மெனவே சடத்திற்குக் காந்திதரு
மங்காத நீரை வறட்சிகளை-யங்கத்தா
மாவைக் கற்றுழை மணந்தனை யகற்றிவிடும்
பூவைச் சேராவாரம் பூ.

(இ-ள்.) ஆவாரம்பூ பிரமேகநீர் வறட்சி உடம்பிற்குத்த உப்புமாகற்றுழை நாற்றம் இவைநீக்கும், மெய்க்குப் பொற்சாயலைத்தரும்.

கருஞ்செம்பைப்பூவின் குணம்.

தலைக் குத்த லையஞ் சலதோடம வாத
முலைப்பீ நசமிருந்த வூர்கருண்-ணிலைக்கா
தருஞ்சண் பககாசி யாயிழையே சுத்தக்
கருஞ்செம்பைப் பூவிருக்கு மகால்.

(இ-ள்.) அரிய செண்பகமலரை நிகர்த்த நாசியையுடைய பெண்ணே கருஞ்செம்மைப்பூவால கபாலச்சூலை சிலேஷ்ம கோபம் நீரேற்றம் வாததோஷம் பீநசம் ஆகியவைநீங்கும் என்க. 666

## செம்பரத்தம்பூவின் குணம்.

செம்பரத்தை மேகவெட்டை தீராப் பிரமியொடு
வம்பிரத்த வெள்ளை வழுவழுப்பும்-வெம்பும்
பெரும்பா டிரத்தபித்த பேதமு மகற்றுங்
கரும்பா மொருமயிலே காண்.

(இ-ள்.) கன்னலையொத்த மொழியையும் மயில்போனுஞ் சாயலையுடையபெண்ணே! செம்பரத்தம்பூ மேகவெள்ளை, பிரமியமேகம் ரத்தப்பிரமேகம் பெரும்பாடு அசிர்க்காவருக்கம் இவைகளைநீக்கும்என்க.

## அலரிப்பூவின் குணம்.

வெப்பருசி குஷ்டம் விதாகஞ் சொறிசிரங்கு
செப்பிரத்தப் புண்பித்தஞ் சென்னியெரி-விப்படியிற்
றங்குமோ கும்பத்தன தணங்கே வாசஞ்சேர்
கொங்கலரிப் பூப்பெயரைக் கூறு.

(இ-ள்.) கும்பத்தனத்தணங்கே! வாசமுள்ள கொத்து அலரிப்பூவால் சுரம்-அரோசகம் குஷ்டம் விதாகம், புடை, கிரந்தி, ரத்தக்கட்டி, பித்தரோய், தலைஎரிவு, இவைபோம் என்க. 668

## செம்பருத்திப்பூவின் குணம்.

செம்பருத்திப் பூவழலைத் தீயாதஉ பித்தத்தை
வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீத்-தம்பெனச்செய்
மேகத்தை வெட்டையை விழுசிமுதற் பேதியையுட்
பாகத்தை யோட்டிவிடுந் தான்.

(இ-ள்.) செம்பருத்திப்பூ தேக அழற்சி ரத்தபித்தரோகம் உதரக்கடுப்பு சலமேகம் வெள்ளை விழுசி முதலிய பேதிகள் தாகம் இவைகள் நீங்கும். 669

## நந்தியாவட்டப்பூவின் குணம்.

காசம் படலங் கரும்பாவைத் தோஷமெனப்
பேசுவிழி நோய்கட்மைப் பேர்ப்பதன்றி-மோசைதரு
தந்திபோலே தெறித்துச் சாருமண்டைநோயகற்று
நந்தியா வட்டப்பூ நன்று.

(இ-ள்.) நந்தியாவட்டப்பூவானது நேத்திரகாசம் படலம் விங்க நாத தோஷங்கள் சிரஸ்தாபரோகம் ஆகியவைகளை விலக்கும் என்க.

துத்திப்பூவின் குணம்.

துத்தி மலரைநிதந துய்க்கின்ற பேர்களுக்கு
மெத்தவிந்து வும்பெருகு மெய்குளிருஞ்-சத்தியமே
வாயால் விழுமிரத்த மாறு மிருமலறுக
தேயா மதிமுகத்தாய் செப்பு.

(இ-ள்.) கலைகுறையாத சந்திரனைப முகத்தையுடைய பெண்ணே! துத்திப்பூவால் ரத்தவாந்தியும் காசசோகமும் நீங்கும், சுக்கில விருத்தியும் தேகக்குளிர்ச்சியும உண்டாம். 671

செவ்வந்திப்பூவின் குணம்.

அலைமயக்கஞ் சுற்றலறு மட்சிக் கொளியாந்
தலைமயி ருண்டா மனலஞ்சாரும்-நிலைமைமா
மொவ்வந்தி வான்புறைபை யொத்த நுதற்றிருவே
செவ்வந்திப் பூவதனைச் செப்பு.

(இ-ள்.) அந்திவான் பிறையையொத்த நுதல்களையுடைய பெண்ணே! வாசனையுள்ள செவ்வந்திப்பூவால், மூர்ச்சையும் தலைச்சுழலும் நீங்கும் கண்ணுக்கொளியும், ரோமச்செழிப்பும் உண்டாம்.

தும்பைப்பூவின் குணம்.

தாகங் கடிந்தொழியுஞ் சந்நிபா தங்களறு
மாகந் தனில் வருநோ யண்டுமோ-மாகத்த
வம்பைப் பீறுங்குயத்து மாதேநின் செங்கரத்தாற்
றும்பைபூத் தன்னை தொடு.

(இ-ள்.) கச்சைபீறுந் தனங்களையுடைய பெண்ணே தும்பைப் பூவினால் தாகரோகம் சந்நிபாதசுரங்களும் நேத்திரத்தைப் பற்றிய தோஷங்களும் நீங்கும் என்க. 673

வேளைப்பூவின் குணம்.

கணமாந்தம் வாதங் கபக்கோவை கோழை
யணுமாந்த வெப்பு மகலு-மணமாறும்
பாளைக் குழலே பசிமெத்த வுண்டாகும்
வேளைப்பூ வென்றெருக்கால் விள்.

(இ-ள்.) மணமார்ந்த கூந்தலாளே! வேளைப்பூவினால் மாந்தகணம் வாதகோபம், சலதோஷம், மார்ப்புச்சளி, மாந்தசுரம், இவை நீங்கும் டீபனமுண்டாகும். 674

### சிற்றமரைப்பூவின்குணம்-இதுவே பன்னீர்ப்பூ.

சிற்று மரைப்பூவாற் சேர்ந்தமலக் கட்டுவிடு
முற்றவெப்பு தாகமதி யோய்க்காளாஞ்-சற்றும்விடா
மூல வெரிவிரத்த மூத்திரம் வயிற்றிசிவு
ஞாலம் விடுத்தேகு நவில்.

(இ-ள்.) சிற்றுமரைப்பூவால், மலபந்தம், சுரம், தாகம், ஒக்காளம் ஆசன எரிச்சல் ரததபிரமேகம் வயிறெறிவு இவைபோம். 675

### களாப்பூவின் குணம்.

கண்ணிற் படருங் கரும்படலம் வெண்படலம்
வண்ண வுதிரப்படலம வன்சதைக-ளெண்ணற்
களவினோய் போக்கு மணங்கே சிரிய
களவினது பூவென்றுங் காண்.

(இ-ள்.) தேவமகளிரனைய பெண்ணே! களாப்பூ நேத்திரத்தி லுண்டான கரும்படலம் ஸ்வேதபடலம் ரததபடலம் சதைப்படலம் முதலிய நோய்களை விலக்கும். 676

## கொடியின் புட்பவகை

### தாமரைப்பூவின் குணம்.

பருத்தகற் றுமரைப்பூ பலவாந்தி நோயைத்
துரத்திவிடு மின்னுஞ் சொலவோ-கரத்தி
லெடுத் தணைக்கக் கண்குளிரு மேகுஞ்சுரமு
மெடுத்த விதாகமும்போ மெண்.

(இ-ள்.) தாமரைப்பூ பலவிதமான ரோகம் வெப்பத்தாற் பிறந்த விழி எரிச்சல் சுரம் விதாபம் ஆகியவைகளைப் போக்கும். 677

### வெள்ளைத்தாமரைபூவின் குணம்.

ஈரலைப் பற்றிமிக வேறுகின்ற வெப்பமும் போங்
கோர மருந்தின் கொடுமையறும்-பாருலகிற்
றண்டா மணத்தையுள்ள தாற்குழலை கால்கள்விடும்
வெண்டாமரைப் பூவால் விள்.

(இ-ள்.) நீங்காத வாசனையுள்ள கூந்தலாளே வெள்ளைத் தாமரை பூவால் ஈரலிலதிகரிக்கின்ற உஷ்ணமும் வெப்பமுள்ள ஔஷதவேகம் எட்டும் நீங்கும் என்க. 678

### அல்லிப்பூவின் குணம்.

மேகமறும் புண்ணறும் விட்டேகு நீரிழிவு
தாகந் தணியுந் தழலகலும்-வாகான
மெல்லியலே யாயுண்மறை வேதியரோலா முறைக்கு
மல்லி மலரா லறி.

(இ - ள்.) மெல்லியலாலே! ஆயுண்மறை வேதியராலுரைக்கும் அல்லிப்பூவால் ரத்தபிரமேகம் ஆண்குறித் துவாரவிரணம் வெகுமூத்திரம் தாகம் உட்சூடு ஆகியவை நீங்கும் என்க. 679

### செவ்வல்லிப்பூவின் குணம்.

செவ்வல்லிப் பூவுக்குச் சேர்ந்திறங்கு நீர்பிணியோ
டொவ்வு மேகப்பிணியு மோய்வதன்றி-யிவ்வுலகிற்
கண்ணினோய் தீருங் கனத்தபித்த ரத்தமொடு
விண்ணினோய் பன்னோயும் போம்.

(இ-ள்.) செவ்வல்லிப்பூவுக்கு மூத்திரரோக சங்கவாதம் மேகமூத்திரம் வெய்யிலாதியாற்பிறந்த நேத்திரரோகங்கள் ரதத பித்தம் விரணம் தாதுநஷ்டமுதலிய சிறநோய்கள் ஆகியவைநீங்கும். 680

### கழநீர்ப்பூவின் குணம்.

உடற்குக் குளிர்ச்சியதா முள்ளழலை மாற்று
மடற்கப வரோசகத்தை யாற்றுங்-கடற்கு
ளெழுநீர்க் குமிழி யிகழு முலையாய்
கழுநீர் மலரெனவே காண்.

(இ-ள்.) கடற்குளெழும் நீர்க்குமிழியனைய கொங்கைகளை யுடையாளே! கழுநீர்ப்பூவானது தாகரோகத்தையும் சிலேத்ம அரோசக ரோகத்தையும் நீக்கும் சரீரத்திற்குக் குளிர்ச்சியைத்தரும். 681

### கருநெய்தற்பூவின் குணம் இதுவே நீலோற்பலம்.

பிரசவித தாரைத்தேற்றும் பேரசிர்க்கை மாற்றும்
வருசிலேத்மப் பிணியை மாட்டுங்-குருசாம்
விடபாக ரோகம் விலக்கும் புவியிற்
றடமாக்கு நெய்தற் றுன்.

(இ-ள்.) கருநெய்தல் பிரசவித்த மாதர்களைத் தேற்றுவதுமன்றி பெரும்பாட்டையும் கபநோயையும் விஷபாகத்தையும் போக்கும்.

### சாதிப்பூவின் குணம் - இதுவே பிச்சிப்பூ.

முத்தோஷஞ் சென்னிவலி மூடுஞ் சரீரவெப்ப
மொத்த விழியினோ யோடுங்கா-னித்தம்
விலகாத காந்தியுண்டா மேனிதனில் வாசங்
குலவு சாதிப்பூ வுக்கு.

(இ-ள்.) சாதிப்பூவுக்கு திரிதோஷம் தலைநோய் தேக உஷ்ணம் கண்படலம் இவைநீங்கும் நீங்காத ஒளியும் மணமும் உண்டாம். ()

### மல்லிகைப்பூவின் குணம்.

போகமிக வுண்டாகு பொங்குகபங் கட்பிரமை
யாகவனற் சூனியமு மண்டுமோ-பாகனையாய்
மன்னு திருவசியம வாய்க்குஞ் சூடுடன் றவரும்
பன்னு மல்லிகைப்பூவாற் பார்.

(இ-ள்.) பாகனையமொழியாளே! புணர்ச்சியி லதிவிருப்பமுண்டாக்குகின்ற மல்லிகைப்பூவால் கோழை கண்மயக்கம் தேக உஷ்ணம் சூனியம் ஆகியவைகள் நீங்கும் லட்சுமி கடாட்சமுமுண்டாகும் இதனை உஷ்ணமென்பர். 684

### முல்லைப்பூவின் குணம்.

முல்லையெனு மூசிமல்லி மொய்ந்த மலரெவர்க்கு
மொல்லை மணநோயை யொழிக்குங்காண்-மெல்ல
வழலைத் தணிக்கு மரோசகத்தைப் போக்கு
மழலைமொழி யாயறிந்து வை.

(இ-ள்.) மழலைச்சொல்லாளே! முல்லை என்ற ஊசிமல்லிகைப்பூ மனோவியாதியையும் உள்வெப்பதனையும் அரோசகதனையும் நீக்கும்.

### வெட்சிப்பூவின் குணம்.

வெட்சிப்பூ மேகமழல் விட்டோடும் வாசனையா
மட்சிவழி யாயுயிர்கொள் ளாரணங்கே-யெற்சுஞ்
சுரமுடனே தாகந் தொலைக்கு முலகில்
விரைவா யிளைப்பகற்றும் விள்.

(இ-ள்.) கண்களின்விழியா யுயிர்பருக்கும் பெண்ணணே! பரிமளத்தையுடைய வெட்சிப்பூ மேகச்சூடு சுரரோகம் தாகம் சரீர ஆயாசம் ஆகிய இவைகளைக்கெடுக்கும் என்க. 686

### தூதுளம்பூவின் குணம்.

புட்டியுண்டாந் தாதுவுமாம போகமுகோ டாற்றன்மிகு
முட்ட நரைத்து முதிர்ந்தமனைக்-கட்டழகு
மாதுளத்தி னீன்காது வைத்திடவு மெண்ணமுற்றூற்
றூதுளத்தின் வுண்ணச் சொல்.

(இ-ள்.) தூதுளம்பூவால் தேகபுஷ்டி சுக்கில தாதுவிருத்தி வனப்பு சரீரபலம் ஸ்ரீவசியம இவைகளுண்டாம். 687

### வேங்காயப்பூவின் குணம்.

வயிற்றுச் சிறுநோயை வாத வலியை
யுயிர்த்தியஞ் செய்யாம லோட்டும்-குயிற்றுத
சிங்காரக் கொங்கைச் செழுந்திருவே நாட்டிலுரை
வெங்காயப் பூவெனவே விள்.

(இ-ள்.) சிங்காரக்கொங்கைகளையுடைய பெண்ணே! நாட்டுவெங்காயப்பூவானது சாமானிய வாதமுதலிய மூன்று குன்மரோகங்களையும் குடலைப்பற்றிய வாதநோயையும போக்கும். 688

---

## மரத்தின் பிஞ்சுவகை

### வாழைப்பிஞ்சின் குணம்.

உதிரம விழுகடுப்போ டுண்மூல ரத்த
மெதிரில்விழு நீரிழிவுமேகு-மதிநுதலே
பேழை வயிற்றுப்புண் பேருந் துவரார்ந்த
வாழைக் கச்சறகு மருண்டு.

(இ-ள்.) பிறையனையநுதலாளே! துவர்க்கின்ற வாழைப்பிஞ்சுக்கு ரத்தக்கடுப்பு உள்வலயரத்தமூலம் அதிமூத்திரம் வயிற்றுவிரண மிவைபோம். 689

### பலாப்பிஞ்சின் குணம்.

தாகமபோம் வந்தபித்தஞ் சாந்தமா மாடவர்க்குப்
போகமிகப் பொழியும் பொய்யன்றே-மூக
வலஜமந்தங் குன்மமிவையண்டிவருஞ் சொன்னேங்
கலசப் பலாப்பிஞ்சாற் காண்.

(இ-ள்.) பாலுள்ள பலாப்பிஞ்சால் தாகமும் பித்தநோயும் நீங்கும் சுக்கிலவிருத்தி அடங்கிபசலம் மந்தாக்கினி குன்மம் இவையுண்டாம், கலசம்-பால். 690

அத்திப்பிஞ்சின் குணம்.

மூலக் கிராணியறு மூலவிரத்தந் தீரும்
சாலக் கடுப்புந் தரிக்குமோ-மாலரவத்
துத்திப் படவல்குற் றோகாய் துவர்ப்பையுறு
மத்திச் சிறுபிஞ் சருந்து.

(இ-ள்.) புள்ளிகளையுடைய பாம்பின்படம்போன்ற வல்குலாளே! துவர்ப்புச்சுவையையுடைய அத்திப்பிஞ்சால் மூலவாயு கிரகணியும் ரத்தமூலமும் வயிற்றுக்கடுப்பும் விலகுமென்க. 691

முருங்கைப்பிஞ்சின் குணம்.

சிக்குருக்குப் பிஞ்சத்திச் சுரதநிற் குஞ்சரிக்கு
மக்குருக்குருப்ப மரோசிகட்குஞ்-சுக்கிலத்தின்
கொச்சை யுறவருந்திக் கூறுவதற்கு மாமதனைப்
பச்சையுற வருந்திப் பார்.

(இ-ள்.) முருங்கையினது பூப்பிச்சைப்பாகஞ்செய்து தோலுடன் உண்ணில் அஸ்திசுரம் எலும்பையுருக்குகிற வெப்பம் அரோசகம் விந்துநஷ்டம் இவைகள் நீங்கும். சிக்குரு-முருங்கை. 692

மாம்பிஞ்சின் குணம்-இதுவே சூதப்பிஞ்சு.

காவை வாதபித்த கபமருசி வாந்தி
கவைவறுத்த மந்தமெனுந்தோஷ-மிவையெல்லாங்
காதத்துக் கப்புறம்போங் கான மடமயிலே
சூதத்தின் புன்வடுவைத் துய்.

(இ-ள்.) காட்டிற்சஞ்சரிக்கு மயிலனையாளே! மாம்பிஞ்சைதின்னக்கடவை, தின்றால் இளைத்தவாதாதி முத்தோஷங்கள் அரோசகம் சர்த்தி அக்கினிமந்தம் இவைபோம். 693

நாரத்தங்கச்சிலின்குணம்-இதுவே போஜனகஸ்தூரி.

அன்ன மிடுஞ்சித மருசியப் பிசக்கிருமி
மன்னுமோ விந்துவுடன் வன்பசியாம்-வன்னமலர்
வாசனை யேறுங்குழலீர் மாநோய்தனி லுண்ணும்
போசன கஸ்தூரிப் பூ.

(இ-ள்.) வன்னமலர்வாசனையேறுங்கூந்தலாளே! உலகில்சுரரோகிகளும் உண்ணுகின்ற நாரத்தங்கச்சலால் சீதளம் அரோசகம் வயிற்றுப்பொருமல் எரிகிருமி இவைநிலைக்காவாம், சுக்கிலதாதுவும் தீபாக்கினியும் உண்டாம். உணவைமிகுதியாக உட்செலுத்தும். 694

மாதுளம்பிஞ்சின் குணம்.

மலக்கழிச்சல் சீதத்தால் வந்த கழிச்சல்
சலக்கழிச்சல் சோரியாற் சாரு-பலகழிச்சல்
மாளும் புளிப்பான மாதுளம பிஞ்சாலயிலே
யாளுங் கண்மாதே யறி.

(இ-ள்.) வேல்போலுங்கண்ணுளே! புளிமாதுளம் பிஞ்சால் மலம் சீதம் ஜலம் ரத்தம் இவைகளினிறமாக ஆகின்றபற்பல அதிசாரரோகங்கள் தீருமென்க. 695

முகிழ்விரியாக் கத்திரிப்பிஞ்சின் குணம்.

அனலுடனே பித்த மகலு மலமபோங்
தொனியுண்டா மையக் தொலேயுஞ்-சனியாக
முத்திருக்கும் வெண்ணகையீர் மூடுமுகிழ் விரியாக்
கத்திரிப்பிஞ் சுண்பவர்க்குக் காண்.

(இ-ள்.) முத்தனைய வெண்டந்தங்களையுடையாளே! முகிழ்விரியாதகததரிப்பிஞ்சுக்கு சுரமும் பிதத தோஷமும் கபமும்நீங்கும் மலம் இளகியிறங்கும் குரற்றொனி பலக்கும். 696

அவரைப்பிஞ்சின் குணம்.

கங்கு லுணவிற்குங் கறிக்கு முறைகளுககும்
பொங்குதிரி தோடததோர் புண்சுரதந்தார்-தங்களுக்குங்
கண்முதிரைப் பில்லேநோய்க் காருக்குங் காழிறையா
வென் முதிரைப்பிஞ்சாம் விதி.

(இ-ள்.) விதைமுதிராத வெள்ளையவரைப்பிஞ்சு இராப்போஜனத்திற்கும மருந்துண்பவர்க்கும வாதாதிமுததோஷம் விரணம் சுரம் விழிக்குள் முதிர்ந்தசிலேஷ்மபில்லம முதலிய ரோகிகட்கும் ஆகும் உறை-மருந்து, காழ்-விதை, முதிரை-அவரை. 697

---

## மரத்தின் காய்வகை

வாழைக்காயின் குணம்.

வாந்திபித்தம் பேத வாய்நீர் வயிறுளேத்
லார்ந்தவன லங்காத மாண்டாவாஞ்-சூழ்ந்தேறு
செம்புனந் தென்புமுண்டாக இண்டி மிகப்பெருகு
மம்புவியுள் வாழைக்கா யால்.

(இ-ள்.) வாழைக்காயினல் பித்தவாந்தி பயித்தியம் பித்தாதி சாம் உமிழ்நீர்ச்சுரப்பு, வயிறளைதல் உஷ்ணம, இருமல் இவைபோம் ரத்தவிருத்தியும் பலனும் உண்டாம் போசனம் அதிகரிக்கும், செம் புனல்-உதிரம். 698

பலாக்காயின் குணம்.

உண்ணின் மிகுமக்கி முறுதியாம் வாதரோ
யண்ணி மிளைப்பிரப்பு மண்டுங்காண்-வண்ணப்
பலாக்காய்க்கு விந்துவுமாம் பாரி னுவமை
சொலாக்காம வாரிதியே சொல்.

(இ-ள்.) பாரினுவமை சொல்லாக் காமவாரிதி யனையாளே! பலாகாய்க்கு அக்கினிமந்தம் வாதகோபம ஆபாசம் சுவாசம் சுக்ல விருத்தி ஆகியவைகள் உண்டாகும் என்க. 699

அத்திக்காயின் குணம்.

அத்திக்காய் தன்னை யருந்தின லாரணங்கே
யெத்திக்கு மேக மிருகருமோ சதிக்கும்
வாதமகனு மலங்கழியுஞ் சூலையொடு
மீதனலும் புண்ணும்போம் விள்.

(இ-ள்.) பொருந்திய அழகனையாளே அத்திக்காயால் பிரமேகம் வாதநோய் சூலை சரீரவெப்பம விரணம் ஆகிய இவைகள் போம் மலங்கழியும் எனக. 700

முருங்கக்காயின் குணம்.

சொல்லு நோய்கட்கெல்லாந் தோஷமில்லை யையமறும்
பல்லுயிர்க்குந் தாது விந்தூறும்-வில்லார்
பெருங்கைக் காமன் துதிக்கும் பெண்ணே கறிய
முருங்கைக்காய் தன்னை மொழி.

(இ-ள்.) வில்லேந்திய காமன்றுதிக்கும்பெண்ணே நிதான நூலிற் கூறும் பலபிணிக்கும் ஒவ்வியாதாகவும் மத்தியக்கறியாயும் இராநின்ற முருங்கைக்காயால் கபம்நீக்கும் விக்துவூறும். 701

அருநெல்லிக்காயின் குணம்.

அருநெல்லிக் காய்குளிர்ச்சி யாம்பித்கம் போக்கு
மருவு துவர்பாற்றுரிசை மாற்றும்-விரியுலகிற்
ருகத் துயர்நீக்குஞ் சாரிரு மலைத்தொலைக்கு
மாகக் கொதிப்பகற்று மாங்கு.

(இ-ள்.) துவர்ப்புச் சுவையையுடைய அருநெல்லிக்காய் சீதபித்தம் தாகம் காசம் உட்சூடு ஆகியவைகளைப்போக்கும் 702

### நெல்லிக்காயின் குணம்.

*பித்தமன லையம் பீநசமவாய் நீர்வாந்தி*
*மத்த மலக்கட்டு மயக்கமுமி-லொததவுரு*
*வில்லிக்கா யம்மருக்கா மென்னுட் காலங்தேர்க்கே*
*நெல்லிக்கா யமமருந்து ணீ.*

### இதுவுமது.

*நெல்லிக் காய்க்குபிதத நீக்குமதன் புளிப்பாற்*
*செல்லுமே வாதமதிற் சேர்துவப்பாற்-சொல்லுமையு*
*மோடுமிதைச் சித்தத்தி லுன்ன னைனுடனே*
*கூறுபிர மேகமும்போங் கூறு.*

(இ-ள்.) கடல் அமிர்தம் ஒத்தநெல்லிக காயைப் பகற்போதுண்ணில பயித்தியம், கபரோய், பீநசம், வாய்நீர்ச்சுரப்பு, வாந்தி உன்மத்தம் மலபந்தம், தலைச்சுழல், பிரமேகம் இவைபோம். காமன் அழகுண்டாகும், அதன் புளிப்பால் வாயுவும். துவரால் கபமும் நீங்கும். மருந்து-அமிர்தம். 703

### புளியங்காயின் குணம்.

*சோபமொடு பித்தந தொலைக்கு முரிசைதறுங்*
*கோபமுற வாயுவையே கொண்டாடுங-தாபக்*
*கருப்ப மடவார்க்குக் கனவிருப்ப முள்ளே*
*பருப்புமுதிராப் புளியங் காய்.*

(இ-ள்.) ருசியைக்கொடுக்கின நகொட்டைமுதிராதபுளியம்பிஞ்சு சோருதலையும், பித்தக்கோபத்தையும் நீக்குவதுந்தவிராததோஷத்தையுண்டாக்கும். இது கருப்பஸ்திரீகளுக்கு விருப்பாம். 704

### மாங்காயின் குணம்.

*தாதுநஷ்டம் வாதந தனி கிரந்தி யாம்பசிபோங்*
*காதுமுட்டப் பக்குவிடுங காயமதி-லோதுகின்ற*
*பாங்காறுப் புண்வளரும் பற்கூசுஞ் சொற்குளறு*
*மாங்கா யுண்பாரை மதி.*

(இ-ள்.) மாங்காயால் சுக்கிலநாசம், மிருவாயு, சிரங்கு தேகம் வெடித்தலோடுஆருவிரணம், தந்தங்கூசுதல், சொற்றவரல்இவையுண்டாம், பசிபோம். 705

மிரியங்காயின் குணம் - இதுவே புளிமாங்காய்.

*வாயின் கசப்பகலு மாறு வரோசகமு*
*மோயுஞ் சுரத்தோர்க் குவப்பாகுந்-தூயவரித்*
*தேனமரும் வார்கூந்தற் றெய்வப் பெடையனமே*
*கான மரியங்காயைக் கண்டு.*

(இ-ள்.) தேனமரும்வார்கூந்தற்றெய்வபெடைவனமே! காட்டிலுள்ள மரியங்காயினால் வாய்க்கசப்பும் அரோசகமும் நீங்கும், இது சுரரோகிகளுக்குதவும் என்க. 706

பச்சைக்கடுக்காயின் குணம் - இதுவே பரிதிக்காய்.

*பச்சை பரிதிக்காய் பண்ணும் வகைகேளா*
*யிச்சையுறத் துவைத்துப் பிட்டழுத்தி-வைச்செடுத்துத்*
*தின்ன வரோசியறுந் தீபனமா முண்மலம்போ*
*மன்னநடை மாதே யறி.*

(இ-ள்.) அன்னநடையாளே! பச்சைக்கடுக்காயைக் கொட்டை நீக்கி யிடித்து அதற்கும் 5-ல் ஒருபங்கு உப்பிட்டு 105-நாள் சென்றபின் பிசைந்து அதை அசனத்திற் சேர்த்தாவது தனித்தாவதுபுசிக்கில் அரோசகந்தீரும்; பசியுண்டாம் மலங்கழியும். 707

இத்திக்காய், பிஞ்சு இவைகளின் குணம்.

*வாயு மலக்கட்டு மலக்கழிச்சல் கால்வழியே*
*சாயுமசிர்ச்சிக்குள்ளே தங்குவெப்பி-னோயினங்க*
*ளெத்திக்கா தாரமுந் திருப்பன விராவேவல்*
*லித்திக்காய் பிஞ்சுகளை யெண்.*

(இ-ள்.) இத்திக்காய்க்கு வாதமலபந்தம் போம், பிஞ்சுக்கு அதிசாரமும் பெரும்பாடும், உட்சூடுனாற் பிறக்கின்ற பிணிகளும்நீங்கும்.

கொடியெலுமிச்சங்காயின் குணம்.

*வாந்தி மயக்கம் வயிற்றுக் கழிச்சலைநற்*
*சேர்ந்த வரோசகமுந் தீருங்காண்-தீர்ந்த*
*தொடியமரு மங்கையிளந் தோகா யடவிக்*
*கொடியெலுமிச் சங்காயைக் கூறு.*

(இ-ள்.) காட்டிலுள்ள கொடியெலுமிச்சங்காய்க்கு வாந்தி, பித்தமயக்கம், மலமேதி, பித்த அருசிரோகம் ஆகியவைகள் போகும். 709

### எலுமிச்சங்காயின் குணம்.

*நீதிலெலு மிச்சங்காய் சேர்முத்தோ ஷத்தையுமுள்*
*வாதகபஞ் சூலையையு மாகொடிய-சாதியெனுஞ்*
*சர்த்திகுன் மத்தையுமுட் டங்கமருந் திட்டதையும்*
*பித்தவெப்பை யுந்தணிக்கும் பேசு.*

(இ-ள்.) குற்றமற்ற எலுமிச்சங்காய் திரிதோஷம் வாதசிலேஷ்மம் சூலை, சர்த்தி, குன்மம், இடுமருந்து பித்த உஷ்ணம் இவைகளைப் போக்கும். 710

### கலுமிச்சங்காயின் குணம்.

*தந்துவிழப் பண்ணுஞ் சலவைதனைக் கொடுக்கும்*
*வெந்துமிக விந்துவை விழிச்செய்யு-மந்த*
*வெலுமிச்சங் காய்போன் றிருக்குங் கொடிய*
*கலுமிச்சங் காய்க்குணத்தைக் காண்.*

(இ-ள்.) எலுமிச்சங்காய்போற் றோற்றுகின்ற கலுமிச்சங்காய் பற்களை விழச்செய்வதுந் தவிரச் சீதளத்தையும், வீரிய நஷ்டத்தையும் உண்டாக்கும். 711

### நாரத்தங்காயின் குணம்.

*நன்றி யுறவுலகி னாரத்தங் காயருந்த*
*வென்றி தரும்புளிப்பான் மெய்ச்சும்-மன்றியுமோ*
*வாதமொடு குன்மமறும வாற்கிருமி யும்போகுஞ்*
*சாதலுறு தீபனமாங் காண்.*

(இ-ள்.) நாரத்தங்காயால் வாதநோயும் வாலுள்ள மலக்கிருமியும் நீங்கும். பசியுண்டாம், இதன் புளிப்பினால் தேகஞ்சுத்தியாம். ()

### கடாரநாரத்தங்காயின் குணம்.

*பித்தமொடு வாயிற் பெருகறல ரோசகம்போம்*
*பத்தியமா நோயிற் பருகலாங்-குத்துங்*
*கடாரி யனையவிழிக் கன்னி மடமாதே*
*கடார நாரத்தங்காயைக் கண்டு.*

(இ-ள்.) குத்துங்கடாரியனைய விழிகளையுடைய கன்னிகையே! கடாரநாரத்தங்காயால் பித்தநோயும் வாய்நீரூறலும் அருசியும்போம் இது பத்தியவஸ்துவாம், நோயாளர்க்கும் உதவும். 713

### கொளுஞ்சிநாரத்தங்காயின் குணம்.

*சொல்லுங் கொளுஞ்சிக்காய் தோன்றுகின்ற காசத்தை*
*வல்லவட் சீதத்தை மாருதத்தைப்-பொல்லாத*

வையகத்தைத் தாகத்தை யப்பொழுதே நீக்கிவிடும்
வையத்துட் பெண்ணரசே வாழ்த்து.

(இ-ள்.) பெண்கள் நாயகமே! பண்டிதர் கூறுகின்ற கொளுஞ்சி நாரத்தங்காய் இருமல் ஆமதோஷம் வாதவிகுணம் கபாதிக்கம் தாகம் இவைகளை நீக்கும். இதனை கொடிநாரத்தை, முலையெலுமிச்சை, துரிஞ்சி எனவுஞ்சொல்வர். 714

பனைநுங்கின் குணம்.

நீர்வரா வியக்குருவை நீக்குமன லாக்குந்தோற்
சார்வா மயஞ்சிதந் தாஞெழிக்குஞ்-சேர்வார்
விழிக்கரையாந் துள்ளிக்கு மென்சுரத மானே
கழிக்கரையாந் தாளியிளங் காய்.

(இ-ள்.) மென்சுரதமாதே! கெய்தனிலப்பனையினது இளங்காயி லுள்ள நுங்கின் சலமானது வியர்க்குருவை நீக்கும், பசியைத்தரும் தோலுடனேயிருக்கும நுங்குசிதபேதியை விலக்கும். ஆமயம்-நுங்கு.

---

# செடியின் காய்வகை

## கத்திரிக்காயின் குணம்-விருத்தம்.

பண்டு மாண்ட கிரகதையைப் பாவிக்கு
முண்ட கைக்குந் தினவை யுண்டாக்கிடு
நண்டு கட்டுங் குரகவெகன நாளுமாங்
கண்டு விண்டது கத்திரிக் காயதே.

(இ-ள்.) கத்திரிக்காய் ஆறிய சிரங்கையும் நமைச்சலையு முண் டாக்கும் என்க. 716

கத்தரிக்காய் அதன்பிஞ்சு இவைகளின் குணம்-வெண்பா.

கத்தரிக்காய் பித்தங் கனன்றகபந் தீர்த்துவிடும்
தொத்து சொறிசிரங்கைத் தூண்டிவிடு-மெத்தவுந்தான்
பிஞ்சான கத்தரிக்காய் பேசுமுத் தோஷம்போக்கு
மஞ்சார் குழலே வழுத்து.

(இ-ள்.) மேகம்போன்ற கூந்தலாளே! கத்தரிக்காய் பித்தத்தால் வந்தகபத்தை நீக்கும். புடையையும் கிரந்தியையும் அதிகப்படுத் தும். பிஞ்சு திரிதோஷத்தை விலக்கும். 717

### கண்டங்கத்திரிக்காயின் குணம்.

ஐயமறுந் தீபனமா மாமலக் கட்டும்
பையவெளி யாகிவிடுமே பார்மீதிற்-செய்யமலர்த்
தொத்திரிக்கும் வார்குழலே தூமணலா ருங்கண்டங்
கத்திரிக் காயைப்புசிக்குங் கால.

(இ-ள்.) அழகிய மலர்மாலையணிந்த நீண்ட கூந்தலாளே! வெண்மணலி லுண்டாகின்ற கண்டங்கத்திரிக்காயால் சிலேஷ்மரோய்தீரும். சீதங்கலந்தமலமும் பசியும் உண்டாமென்க. 718

### கறிமுள்ளிக்காயின் குணம்.

வாதபித்த வையகத்தை மாற்றுமன்ற போக்கு
மோது சுவாசத்தை யோடடுங்காண்-பூதலத்துட்
டுள்ளிப்பாய் கெண்டைவிழித தோகா யறிந்திகறி
முள்ளிக்காய் செய்யு முறை.

(இ-ள்.) மகரநோக்கியே! கறிக்குதவாநின்ற முள்ளிக்காயானது வாதபித்த கபதோஷங்கள் சுரம் சுவாசரோகம் ஆகியவைகளைப்போக்கும் என்க. 719

### கொத்தவரைக்காயின் குணம்.

கொத்தவரைக் காய்பித்தங் கூடாது பத்தியத்தின்
மெத்தெனவு மையம விளைக்குங்காண்-பித்தத்தால்
சீத மகற்றிவிடுந் தின்மருந்தைப் பாழாக்கும்
வாதக் குடைச்சற்று மால்.

(இ-ள்.) அபத்தியமான கொத்தவரைக்காய் பயித்தியம் கபம் வாதக்கடுப்பு இவை யுண்டாக்கும் பித்தததால் ஙளிரையும் மருந்தையும் முறிக்கும். 720

### வெண்கடுக்காயின் குணம் - இதுவே வெண்டைக்காய்.

கண்ட கிராணி கடிய வதிசாரம
விண்டவெண் சீதாத்த மேவுங்கா-ஞெண்டொடியே
வண்டற்காய் வெய்யகப வாதமி தும வாய்க்குணவாம்
வெண்கடுக்கா யுண்பார்க்கு வின்.

(இ-ள்.) வறலுக்குதவியான வெண்டைக்காய்க்கு கிராணிபேதி சீதாத்திசாரம் சிலேஷ்மவாதம் நாவுக்குருசை இவை உண்டாம்.

### நறுமணத்தக்காளியின் குணம்.

மலமிளகுந் தானே மகாகபமும் போகும்
பலமிகுந்த வாதமபோம் பார்க்குண்-மலைபோற்

பணைத்தும் பூரித்தமுலைப் பாவாய்கே ணல்ல
மணத்தக் காளியை வாழ்த்து.

(இ-ள்.) மலைபோற் பணைத்துப் பூரித்தமுலைகளையுடைய பெண்ணே! நறுமணத்தக்காயால் மலம் இளகிச்சுபாவமாக இறங்குவதுமன்றி சிலேஷ்மநோயும் வாதாதிக்கமும நீங்கும் என்க. 722

மணத்தக்காளி வற்றலின் குணம்.

நீர்ப்பேதி யாகு நிலைவமனம் போமவாயிற்
கூர்ப்ப விலைப்புமறுங் கூறுவதோ-பார்க்கிலினு
மிக்கான நோயோர் விரும்புகின்ற நல்லமணத்
தக்காளி வற்றலுக்குத் தான்.

(இ-ள்.) நோயுற்றோர் காகின்ற நல்லமணத்தக்காளி வற்றலுக்கு நீர்ப்பேதியுண்டாவதுந தவிர வாந்தியும கூர்ப்பவிலைப்பும் நீங்கும்.

சுண்டைக்காயின் குணம்.

நெஞ்சின் கபம்போ நிறைகிருமி நோயும்போம்
விஞ்சு வாதத்தின் விளைவும்போம-வஞ்சியரே
வாயைக் கசப்பிக்கு மாமலையிலுள்ள சுண்டைக்
காயைச் சுவைப்பவர்க்குக் காண்.

(இ-ள்.) கசப்புச் சுவையையுடைய மலைச்சுண்டைக்காயால் மார்புசளிகிருமிரோகம் வாதாதிக்கம் ஆகியவைபோம். 724

சுண்டைக்காய் வற்றலின் குணம்.

பித்த வரோசகம்போம் பேராப் புழுச்சாகு
முற்ற கிராணியறு முட்பசியாஞ்-சுத்தியமாய்ப்
பண்டைச் சூதவாமம பற்றுமறு மாரையுந்தான்
சுண்டைக்காய் வற்றலுண்ணச் சொல்.

(இ-ள்.) சுண்டைக்காய் வற்றலால் பித்த அரோசகம்மலக்கிருமி கிராணி ஆசனத்துகாறச் சீதக்கட்டு இவைபோம் உள்ளிற்பசியுண்டாம். 725

விதுகங்காயின் குணம்.

விதுகங்காய் பத்திய வியஞ்சன மத்தாற்
புதுநெய் விங்கெழிற் பலமுமபூணு-முதுபித்த
வேக மொழியு மிகுதுர்ப் பலமகனும்
பாகனைய வின்மொழியே பார்.

(இ-ள்.) பாகை யொத்த யினியமொழியாளே! பத்தியகரியாகிய விதுகங்காயினுல் புதிய உதிரம் சுக்கிலம் அழகு பலம் இவை விருத்தியாம் நீடித்த பித்தமும் அதிதூர்ப்பலமும் நீங்கும். 726

### பாவட்டங்காயின் குணம்.

வாத சுரந்தணியும் வாயருசி யேகிவிடுஞ்
சீதக் கடுப்பகலுந் தேன்மொழியே-வாதுபுரி
பித்தவதி சாரமொடு பேராக் கபமுமறு
முற்ற பாவட்டங் காய்க்கு.

(இ-ள்.) தேன்போலும வசனிப்பவளே! பாவ்ட்டங்காய்க்குவாதசுரம் அரோசகம் சீதக்கடுப்பு பித்தாதிசாரம சிலேஷ்மதோஷம் ஆகிய இவை நீங்கும். 727

### ஊசிமிளகாயின் குணம்.

சீதக் கழிச்சற் சிறுநீர்ச் சுறுக்காசங்
காதக் குதநெகிழ்ச்சி காடடுங்கா-ணுதித்தன்
வீறு கிரணம்பருகி மேனோக்கிக்காய்த்த பங்காக்
காரமுறு மூசிமிள காய்.

(இ-ள்.) ஆகாயமுகமாய்க் காய்த்து சூரியனது அக்கினிகிரணத்தைப்புசித்து மிருகார்ப்புச் சுவையைப்பெற்ற ஊசிமிளகாய் சீதபேதி மூத்திரகிரிச்சுரம்மூலம்சூதநெகிழ்ச்சிரோகம் இவைகளையுண்டாக்கும்.

### வெண்டுமிளகாய், கருந்துண்டுமிளகாய், பச்சைமிளகாய் இவைகளின் குணம்.

வெண்டு மிளகாய்க்கனில மேவுமிடம் பார்க்குமணிக்
குண்டு மிளகாய்க் கனல்கூடுங்கா-மூண்டுபயிர்ப்
பச்சைமிளகாய்க்குப் பதமிறங்குஞ் சொவைபுரிந்
திச்சையுற வுண்ணின்மறு வில்.

(இ-ள்.) உன்னிற் போலாயிருக்கின்ற வெண்டுமிளகாய்க்குவாதகோபம்நீங்கும் ஆகாயத்தைநோக்கிக்கருமைநிறத்துடன் காய்க்கின்ற குண்டுமிளகாய்க்கு உஷ்ணமாம், பயிரிடுகிற விதையடர்ந்தபச்சைமிளகாய்க்குச் சம்பாரஞ் சேர்த்துண்ணில் அன்னமிறங்கும் குற்றமில்லை.

### களாக்காயின்குணம்-இதனைக்கிளாக்காய் என்பர்.

காதுவிடாய் தாகங் கடியபித்தம் வாந்தியும்போம்
மாதே யரோசகமு மாறுங்காண்-மூதா
மிரத்த பித்தம்போகு மினியகளாக் காய்க்
குரத்த பசியுமுண்டோ மோர்.

(இ-ள்.) மாதேயறிவாயாக; இன்புளிப்புள்ளகளாக்காய்க்கு காத டைப்பு தாகம் பித்ததோஷம வாகநி அருசி ரத்தபித்தம் இவைகள் போம் மிகுபசியுண்டாம். 730

ஊமத்தங்காயின் குணம்.

வாதமறும் பித்த மயக்கமுறு மாகிலத்திற்
நீதுகரப்பன் சிரங்ககலும்-கோதாய்கேள்
மாமத்த மாகும் வ றடசியெல் லாம்போகு
மூமத்தங் காய்க்கென் றுரை.

(இ-ள்.) பெண்ணே நீ கேட்பாயாக, ஊமத்தங்காய்க்கு வாத நோய் கரப்பான் கிரந்தி சொறி இவைநீங்கும், பித்தமயக்கமும் உன் மாதரோகமும் உண்டாகும். 731

---

# கொடியின் காய்வகை

கலியாணப்பூசினிக்காயின் குணம்-இதுவே பெரும்பூசினி.

பெரும்பூசினிக் காய்க்குப் பித்தமோ டுட்காய்ச்சு
லருஞ்சார நீர்க்கட் டருமே-மருந்திடுதற்
பித்தசுர மஸ்திசுரம் பேய்வ றட்சி மேகமும்போ
மெத்த வனிலமூறும் விள்.

(இ-ள்.) கலியாணப்பூசினிக்காய்க்கு பித்தரோகம் உட்காய்ச்சல் சாரமேக மூத்திரக்கிரிச்சரம் இடுமருந்து பித்தசுரம் அஸ்திதாதுகத சுரம் பேய்ச்சொறி பிரமேகம் ஆகியவைபோம் வாதாதிக்கமாம். 732

பறங்கிக்காயின் குணம்-இதுவே பூசினிக்காய்.

அனலழலை நீக்கு மதிபித்தம் போகதுங்
கனலனவே வென்பசியைக் காட்டும்-புனலாகு
மிக்கவைய முண்டாக்கு மென்கொடியே யெப்போதுஞ்
சர்க்கரைப் பறங்கிக்காய் தான்.

(இ-ள்.) மிருதுவான பூங்கொம்பனையாளே! இனிப்புள்ள பறங்கிக்காய் அனலால்வரும் அழற்சியையும் மிகுபித்தத்தையும் நீக்கும், நல்லபசியையும் கபகோபத்தையும் விளக்கும். 733

குழிப்பறங்கிக்காயின் குணம்-இதுவே கோடைப்பூசினி.

வாதக் குடைச்சலுறு மாறுத வையமுமாம்
போதவளிச் சூலையுண்டாம பொற்கொடியே-யோதுங்
குழிப்பரங்கிக் காய்க்குக் குளிர்ச்சி நிறையும்
பழிக்கடுத்த மந்தமிகும் பார்.

(இ-ள்.) பொற்கொம்புபோல்பவளே! குழிப்பறங்கிக் காய்க்கு வாதக்கடுப்பே விருத்தி, வாதசூலை அக்கினிமாந்தம் இவையுண்டாம் இதனைக்குளிர்ச்சி யென்பர். 734

குமட்டிக்காயின் குணம் இதனை மூலாங்காய் என்பர்.

தந்தம் விழுந்திடுமே தாது மெலிந்திடுமே
விகதை மிகுங்காந்தி விலகிடுமே-சக்ததமும்
வாதமிருந் திடுவே வந்துகபஞ் சேர்ந்திடுமே
யோது குமட்டிக்காயா லுன்.

(இ-ள்.) குமட்டிக்காயினால் பல்விழல் சுக்கிலட்சீணம் தேகவொளிகெடல் வாதகோபம் சிலேத்மாதிககம் ஆகியவைகளுண்டாம்.

சுரைக்காயின் குணம்.

வாதபித்தம் வாயருசி வன்பீலிகஞ் சீத
மோதிருத்து கோயுண்டா முள்ளனற்போ-மோதத்
திருப்பாற் கடற்றிருவே தீக்குணத்தை மேவுஞ்
சுரைக்காயைத் தின்பவர்க்குச் சொல்.

(இ-ள்.) திருப்பாற்கடலி லுறபவித்த இலக்குமியனையாளே! உஷ்ணமுள்ள சுரைககாயினால் வாதபித்தம் அரோசகம் பீலிகரோகம் ஆமம் மார்புநோய் இவைகளுண்டாகும உட்சூடு நீங்கும். 736

வெள்ளரிக்காயின் குணம்.

உண்டாருந்தத் தீயெழுப்பு மூண்மருந்தைத் தான்முடிக்குங்
கண்ட கரப்பனைக் கடிக்குங்காண்-பண்டிதரே
யுள்ளரிப்பை நீர்க்கடுப்பை யூரைவிடுத் தோட்டிவிடும்
வெள்ளரிக் காயின் குணத்தை விள்.

(இ-ள்.) பண்டிதரே! வெள்ளரிக்காய் கரப்பான் நீர்த்துவாரத்தினவு நீர்ச்சுருக்குஇவைநீங்கும் இதைப்புசித்தபின் யுண்ணப்பசியாம் மருந்தை முறிக்கும். 737

வெள்ளரிப்பிஞ்சு காய் பழம் விதை இவைகளின் குணம்.

பிஞ்சுவெள் ளரிக்காய்க்குப் பேசுதிரி தோஷம்போம்
வஞ்சியரே முற்றியகாய் வாதமாம்-நைஞ்சகனி
யுண்டாற் சத்தியமா முள்ளிருக்கு மவ்விதையைக்
கண்டாலு நீரிறங்குங் காண்.

(இ-ள்.) வெள்ளரிப்பிஞ்சுக்கு முத்தோஷங்களும்நீங்கும் காயால் வாதமும், நைந்தபழத்தால்கபமும்வினேயும், வித்தால் நீர்ப்பேதியாம்

### கக்கரிக்காயின் குணம் - இதுவே முள்ளரிக்காய்.

*கக்கரிக்காய் பித்தங் கடியுங் கபமுயர்க்கு*
*மெய்க்குக் குளிர்ச்சிதரு மெல்லியலே-முக்குகின்ற*
*மூல வழறணிக்கு மூடிரத்த பித்தத்தை*
*சால வகற்றிவிடுஞ் சாற்று.*

(இ-ள்.) மெல்லியலே! கக்கரிக்காய் பித்ததோஷம் மூலச்சூடு ரத்தபித்தம் இவைகளை நீக்கும். கோழையும், குளிர்ச்சியுமுண்டாகும்.

### ஆகாயக்கரிக்காயின் குணம்.

*ஐயம் விளையு மழல்சுரப்பான பித்தமும்போ*
*மெய்யு ளதிபோகம் விளையுங்காண்-செய்மருந்தின்*
*காந்தியும்போ மாகாயக் கக்கரிக்காய் தின்றவர்க்கு*
*வாந்தியும்போ மாதே வழுத்து.*

(இ-ள்.) மாதே! பந்தலில் காய்க்கின்ற ஆகாயக் கக்கரிக்காய்க்கு தேகச்சூடு கரப்பன் பயித்தியதோஷம மருந்தின் வீரியப் பித்தவாந்தியாகியவைகள்போம கபாதிக்கமும் புணர்ச்சியிலிச்சையு முண்டாம்.

### கோட்டை அவரைக்காயின் குணம்.

*கொட்டை யவரைக்காயாற் கோரவரோ சகநோய்*
*கிட்டாதென் பார்மருந்தின் கீர்த்திகெடுந்-துட்டமந்தம்*
*பையவுண்டாம பேதியுண்டாம் பாரிப்பனில முண்டா*
*மையமுண்டாஞ் சூலையுமுண் டாம்.*

(இ-ள்.) வித்துமுதிர்ந்த அவரைக்காயினால் அருசியும் ஔஷதநன்மையும் நீங்கும், அக்கினிமாந்தம் அதிசாரம் சரீரபளுவு வாததோஷம் சிலேத்மகோபம் குத்தல் ஆகியவைகளுண்டாம். 741

### வாள் அவரைக்காயின் குணம்.

*அதிபித்தம் வாந்தி யரோசகமு முண்டாங்*
*குதிவாதம் வாய்ச்சுரப்புங் கூடுந்-துதிசக்ர*
*வாள வரையொத்த வனமுலை மாதேபசிய*
*வாளவரைக் காயான் மதி.*

(இ-ள்.) சக்ரவாளகிரியனைய வனமுலைமாதே! பசுமையுள்ள வாளவகைக் காயால் பித்தாதிக்கம் வாந்தி அருசி குதவாதரோகம் வாய்நீரூறல் ஆகியவைகளுண்டாம். 742

மோச்சைக்காயின் குணம்.

அனிலபித்த வையங் களைக்கடி யுண்டாக்குந்
தொனியடுக்கும் வாதனைத்துக் குண்டு-மனுதினமுங்
கொச்சை மலதனைப்பெருக்குங் கோரவுட்டி னந்தணிக்கு
மொச்சைக்காய் செய்யு முறை.

(இ-ள்.) மொச்சைக்காயானது திரிதோஷங்கள் தொனிக்கத்தக்க வாதம் க்ஷீணமலம் இவைகளை விருத்திசெய்யும மிகு சூடுதணியும்.

பீர்க்கங்காயின் குணம்.

தின்றவுடன் பீர்க்கங்காய் சீதமுறுங் காண்பித்த
மொன்று மூன்றாக வுபருமே-மன்றலணிக்
காரளகக் கச்சுமுலைக் காரிகையே வாதகப
கோரளவைத் தாண்டு நிலை.

(இ-ள்.) கறுத்த அளகத்தையும் வாரிணுலிறுக்கிய தனங்களை யுடையமாதே! பீர்க்கங்காயையுண்ணில் சீதளமும பித்தம் தன்மாத் திக்குமேல் மூன்றுபங்கதிகமும் வாதகபங்கள் தததம் நிலைபிசகும்.

புடலங்காயின் குணம்.

போகம் விளையும் பொருந்தி வளருமைய
மாகமதிற் பித்த மணுகுங்காண்-மேக
புடலங் கவியகப் பாவாய் கேணும்
புடலங்காய்க் குள்ள புகழ்.

(இ-ள்.) மேகம்போன்ற கூந்தலாளே! புடலங்காய்க்கு சுக்கில மும் கபமும் பயித்தியமும் அதிகரிக்கும். 745

பன்றிப்புடலங்காயின் குணம்.

'கரப்பான் சொறிசிரங்கு காணுச கிலந்தி
யுரப்பாம் விஷக்கடியு முண்டா-முறைத்தவகை
யன்றிச் சயித்தியமி மாம்பன்றி தன்னையொத்த
பன்றிப் புடலுக்குப் பார்.

(இ-ள்.) பன்றிமாமிசத்தையொத்த பன்றிப்புடலங்காய்க்குகரப் பான்!புடை கிரந்தி சீதளம் இவையுண்டாவதூ மன்றிக் காணுக்கடி சிலந்திசர்ப்பம்முதலியவிஷங்கள் இறங்கியதாயினும் உடனேயேறும்.

கொம்புப்பாகல்காயின் குணம்.

மருந்துகளி னற்குணத்தை மாற்று மஃதொன்று
திருந்துவலி வாதத்தைச் சேர்க்கும்-பொருந்துபித்தங்

கூட்டுமவ பத்தியத்தைக் கொண்டிருக்கும் வன்கரப்பான்
காட்டுங் கொம்புப்பாகற் காய்.

(இ-ள்.) அபத்திய பதார்த்தமாகிய கொம்புப்பாகற்காய் நல்ல ஔஷதங்களை முறிப்பதுமன்றி வாதபித்த கோபங்களுமுண்டாம்.

மிதிபாகல்காயின் குணம்.

பித்தமொடு வாதப் பெருக்கைமிக வுண்டாக்குந்
தத்து கரப்பானைத் தருவிக்கும்-பற்றிரத
தார பாஷாணத் தமைமுறிகருக் தப்பாது
காரவல்லி யாம்பாகற் காய்.

(இ-ள்.) காரவல்லியென்கிற மதிபாகற்காய் பித்தவாதகோபங்களையும கரப்பானையும் உண்டாகரும். பாதரசம் அரிதாரம் பாஷாணம் முதலியவைகளை முறிக்கும். இது கேரளதேசத்துப் பத்தியக்கறியாம்

காட்டுப்பழிபாகல்காயின் குணம்.

போஜனமுட் செல்லும பொருந்துபசி யுண்டாகும்
காசபித்த வாதமிவை காணுவா-நேசமுற
வாட்டுப்படாக் கொங்கை மாதே குழிஞ்சிகிலக்
காட்டுப் பழுபாகற் காய்க்கு.

(இ-ள்.) சாயாத தனங்களையுடையமாதே! மலையடுத்த காட்டுப் பாகற்காய்க்கு அன்னமிறங்கலும் நல்லபசியும் உண்டாம. இருமலாற் பிறந்த பித்தவாதகோபங்கள் நீங்கும். 749

அதளக்காயின் குணம்.

அதளக்காய் வாய்க்குருசி யாபிருக்குந் தின்முற்
கதளவொட் டாபித்தங் கதிக்கும-பதளத்தின்
மந்தமுண்டாம் வாயுமிக வந்தடருந் தப்பாதே
கந்தமலர்க் குழலாய் காண்.

(இ-ள்.) கந்தமலர்க்குழலாளே! வாய்க்கு உணவைத்தருகின்ற அதளக்காயை யுண்ணில் பயித்தியமும் அடிவயிற்றில மந்தமும்வாத நோயுமுண்டாம் என்க. 750

தூதுளங்காயின் குணம்.

ஐயமுடன் பித்த மகலு மரோசகம்போங்
கையலே வாதந் தணியுங்காண்-வையமிசை
யோதுங் குடல்வாத மோமெல மொழிக்
தூதுளங் காயுண்ணச் சொல்.

(இ-ள்.) தூதுளங்காயால் கபரோகங்கள் பயித்தியதோஷம் அருசி ரத்தாசயவாயு ஆநாகபித்தவாதம் மலபந்தம் இவைவிலகும். 751

கொடிவழுதுணைக்காயின் குணம்-இது வழுதலங்காயெனவும் வழங்கும்.

எல்லார்க்கும நலவிதமாஞ் சிலேஷ்மத்தைப் போக்கும்
புல்லார்க்கும் பத்தியம புசிக்கலாம-முல்லைக்
கடிகமழும வார்குழலே காசினியிற் சொன்னோம
கொடி வழுதுணைக்காய்க் குணம.

(இ-ள்.) முல்லைமலர்வாசனை பரிமளிக்காநின்ற கூந்தலாளே! கொடிவழுதுணைக்காய் வாதமுதலிய மூன்றுதேகிகட்கும் பொருந்துவதுமன்றிக் கபத்தைக்கரைக்கும், பத்தியத்திற்கும் ஆகும். 752

பயற்றங்காயின் குணம்.

ஐய மகனு மரோசிகெடுந் தீபனமாம்
பையுதிர வாய்வும் பறக்குமெனபார்-செய்யு
நயத்த வவுஷத முநாசமடையும்
பயற்றங்காய் தன்னையுண்டு பார்.

(இ-ள்.) மருந்தைமுறிக்கின்ற பயிற்றங்காயினால் கபாதிக்கம் அருசிரத்தவாந்தி குன்மம இவைவிலகும, பசியிளேதலும் உண்டென்பார்.

கோவைக்காய் இதன் வற்றல் இவைகளின் குணம்.

வாயி னரோசகமபோ மாறு வழலையறு
நோயின் கபமகலு நுண்ணிடையே-தூயவதன்
வற்றறக் கருசி மருவுகரப் பானம்போகுஞ்
சுத்தக் கோவைக்காயைச் சொல.

(இ-ள்.) சிற்றுடைப் பெண்ணே! நல்ல கோவைக்காயால் அருசி நீங்காத வெப்பம் சுரகபதோஷம இவைபோம. வற்றலால் அரோசகமும் கரப்பானும் நீங்கும. 754

சுக்கான்காய் இதன்வற்றல் இவைகளின் குணம்.

மைக்குழலே கேளாய் வாதமறும பித்தமென்பார்
சுக்கான்காய் வற்றலது தொல்லுலகிற்-கைக்கின்ற
வாயுவை நீக்கும் வருமருசி போக்கிவிடு
நீயு மறிவாய் நிசம.

(இ-ள்.) கருத்த கூந்தலாளே! சுக்கான்காயினால் வாததோஷம் நீங்கும். இது பித்தம் என்பார், அதன் வற்றலால் வாதத்தையும் அரோசகத்தையும் நீக்கும்.

### மிளகுக்காயின் குணம்.

*அளவை யருக்கார மடைந்திருக்கும் வாத
விளைவை யெல்லாமறுக்கு மெய்யே-மிளன்காய்
கண்டவர்க்கு மின்பமாங் காரிகையே சீழ்மூலங்
கொண்டவர்க்கு நன்மருந்தாங் கூறு.*

(இ-ள்.) காரிகையே! மிருகார்ப்புச் சுவையுடைய மிளகுக்காய் வாதரோகங்களையும் சீழ்மூலத்தையும் நீக்கும். அதைப்பார்க்கில் விருப்பமுண்டாம் என்க. 756

### ஆற்றுத்தும்மட்டிக்காயின் குணம்-இதுவே கலிங்கம்.

*கிடையெங்கே சோம்பலெங்கே கேடுறச்செய் வாதக்
கடையெங்கே யாற்றுக் கலிங்க-மடைதிறக்கி
னண்டை யடைச்சலெங்கே யாயிழையார் சூதகத்தி
னுண்டை யுடைச்சலெங்கே யோது.*

(இ-ள்.) ஆற்றுத்தும்மட்டிக்காயால் கீழ்பிடிப்பால் நடையின்றிக் கிடத்தல் சோர்தல்மலாவிருதமுதலிய வாதரோகங்கள் கருப்பையைப் பற்றி அடைகின்ற ஆமம சத்தகுன்மக்கட்டி அகாலருது இவைபோம்.

### சிகைக்காயின் குணம்-இதனைச் சீக்காய் என்பர்.

*மூக்கின் சிகிச்சைகட்கு முக்கியமாம பேதியையுண்
டாக்கு வமனத்தையு மழைப்பிக்கும்-தேய்க்கும
வகைநெய்ச் சிக்கைப்போக்கு மாதரசே நாளுஞ்
சிகைக்கா யதனைத் தெரி.*

(இ-ள்.) பெண்களுயகமே! சிகைக்காயானது நாசியுட்புரிகின்ற ஆக்கிராண நசியச்சிகிச்சைகளுக்கு முக்கிய மருந்தாயிருக்கும், அன்றியும் பேதியையும் வாந்தியையு முண்டாக்கும், பலவித நெய்ச்சிக்குகளை நீக்கும். 758

---

## மரத்தின் பழவகை

### விளாம்பழத்தின் குணம்.

*எப்போது மெய்க்கிதமா மீளாயிருமல் கபமும்
வெப்பாகுந் தாகமும்போ மெய்ப்பசியா-மிப்புவியி
லென்றாகிலுங் கனிமே விச்சைவைத்துத் தின்னவெண்ணித்
தின்றால் விளாங்கனியைத் தின்.*

(இ-ள்.) விளாம்பழத்தினால் சுவாசங்காசம் கபாதிக்கம் பித்த தாகம் இவைவிலகும். உடலுக்குச்சுகமும் நல்லபசியும் உண்டாம்.

இலந்தைப்பழத்தின் குணம்.

பித்த மயக்கருசி பேராப் பெருவாந்தி
யொத்தனில வெல்லா முடிந்திடுங்காண்-மெத்த
வுலர்ந்த வெறுவயிற்றி லுண்டா லெரிவா
மிலந்தை நறுங்கனியை யெண்.

(இ-ள்.) இலந்தைப் பழத்தால் பித்தமூர்ச்சை அரோசிகந் திரிதோஷம் வாந்தி வலிவாதம் இவைபோம். இதைப் பசியிலுண்டால் எரிவுண்டாம் என்க. 760

வாழைப்பழத்தின் போதுக் குணம்.

சுத்தவறுச் சுனஞ்செய் சோமரோ கென்பதுவும்
பித்தரோ கெனனப் பிறந்தவையு-முத்தி
வரம்பைக் கடந்த யுதமூர்ச்சை யும்போ
மரம்பைக் கனியுண் டறி.

(இ-ள்.) வாழைப்பழத்தால் உடம்பை வெளுக்கச்செய்கிற சோமரோகம் பித்தபிணிகள் மதரோய் மூர்சசை ஆகிய இவைபோம். 761

என்வகை வாழைப்பழத்தின் குணம்.

செவ்வாழை வெள்வாழை சேர்ந்தரச தாளிமொந்த
னெவ்வு மலைவாழைக் குலதநிற்-கவ்வடுக்கு
வக்குமலை வாழைபசு வாழைகரு வாழைகளி
லாழுங்கரு வாழைநன்று மோர்.

இதுவுமது.

ஓதலுற்ற வாழை யெட்டிலுற்ற கனிகளெல்லாம்
வாதநோய்க் காகாது வையகத்தோர்-போதவுண்ண
வெண்ண முண்டாயி னிதற்கியைந்த சத்துருவோ
டுண்ண விடரின் றுறை.

(இ-ள்.) செவ்வாழை வெள்வாழை ரசதாளி பொந்தன் அடுக்கு வாழை மலைவாழைப் பச்சைவாழை கருவாழை என்கிற 8-வகை வாழைப்பழங்களுள் முதலிற்கூறிய 4-ம் நோயாளர்க்கு ஆகும் மற்ற 4-ம் கருவாழை நன்மையைத்தரும் இவ்வெட்டு வகைப்பழங்களும் வாதரோகிகட்குதவாது ஆனால் அசனத்துடன் உண்ணில் குற்றமில்லை. 762

### பேயன் வாழைப்பழத்தின் குணம்.

பேயன் பழமருந்திற் பித்தரோகம் போகும்
வாயு வுண்டாகு மலங்கழியு-நீயே
தகத்திலதி குளிர்ச்சி யாகு மணங்கே
சகத்தி லிதையறியச் சாற்று.

(இ-ள்.) தேவமகளிரனைய மாதே! பேயன்பழத்தினால் பயித்திய மும் உட்சூடும் நீங்கும் வாதாதிக்கமும் குளிர்ச்சியும் ஆம் ஜாரியாக மலமிறங்கலும் உண்டாகும். 763

### பொந்தன் வாழைப்பழத்தின் குணம்.

மந்தமுட னேப்பலத்தல் வாதவலி சீதம்
தொந்தமுறு தாகமிவை தோன்றுங்காண்-புந்திவலி
போட்டபித்தங் காமாலை புள்வறட்சி புகதாலேயு
நாட்டு பொந்தன் பழத்தி னால்.

(இ-ள்.) பொந்தன் பழத்தினால் அக்கினிமந்தம் உடல்வலியுடன் பாரிப்பு இசிவு சீதளம் திரிதோஷதாகம் இவையுண்டாம மனவுறுதி யை விலக்குகிற பித்தம், காமாலை, தாதுவைப்பற்றிய வறட்சிநீங்கும்.

### நவரை வாழைப்பழத்தின் குணம்.

மாந்தமொடு நமைசசல் வாதகபமும் பெருகும்
பாந்தனுறு கரப்பான் பரவுங்காண்-பூந்தடக்கை
யாழைப் பழித்தமொழி யன்னமே நவரை
வாழைப் பழந்தான் மதி.

(இ-ள்.) அழகுபொருந்திய கைகளையும் யாழைப்பழித்த மொழி யையுமுடைய அன்னமே! நவரை வாழைப்பழத்தால் மந்தாக்கினி தினவு வாதசிலேஷ்மதோஷம் கரப்பான் ஆகிய இவை அதிகரிக்கும் என்க. 765

### பலாப்பழத்தின் குணம்.

தித்திக்கும் வாத சிலேஷ்மபித்த முண்டாக்கு
மேதகக் கரப்பான் விளைவிக்குஞ்-சததியமாய்ச்
சோரப் பிணியையெலாஞ் சேர்ப்பிக்கு மோர்கொடியிற்
பாராய்ப் பலாவின் பழம்.

(இ-ள்.) இனிப்புள்ள பலாப்பழம் வாத பித்த தொந்தங்களையும் கரப்பானையும் முன்னில்லாத பிணிகளையும் உண்டாக்கும். 766

மாம்பழத்தின் குணம்.

தின்றூற் றினவெடுக்கு தீபனம்போ தெநசெரிவா
மற்றே விழிநோ யடருங்காண்-துன்றிமிக
வாதக் கரப்பனும வன்கிரந்தி யுமபெருகுஞ்
சூதக் கனியின் சுகம்.

(இ-ள்.) மாம்பழத்தையுண்ணில் நமைச்சலும் மார்புயெரிச்சலும் கண்ணோவும் கருங்கரப்பானும் கிரந்தியும் அதிகரிக்கும், பசிநீங்கும்.

மாம்பழம் காய் பிஞ்சு இவைகளின் குணம்-விருத்தம்.

வேத சத்தியமாக விளம்புவோந்
தாது விர்த்திக்குந் தமபன-மாங்கனி
போத மர்த்தனம் புன்காயி னல்வடு
வாத பித்த கபங்களை மாற்றுமே.

(இ-ள்.) மாம்பழம் சுக்கில பெருக்கத்துக்கும் அதைக்கட்டுவதற்குமாகும் காயினல் அறிவுகெடும் பிஞ்சு திரிதோஷகோபத்தைநீக்கும்.

தசையத்திப்பழத்தின் குணம்-வெண்பா.

இரத்த முணடாக்கு மிளைத்தமெய்யைத் தேற்றுஞ்
சுரத்தி லாமவெப்பைத் தொலைக்கும்-கரத்த
மலத்தைக் கடிதுள்ளும் வன்னிசுபத் தொந்தம்
பலத்த தசையத்திப் பழம்.

(இ-ள்.) உஷ்ணசீதளமுள்ள தசையத்திபபழம் ரத்தவிருத்தியும் தேகபோஷணையுந் தரும. சுரவெப்பும சிரணமலமும் நீங்கும். 769

விதையத்திப்பழத்தின் குணம்.

தினமுமலக் கட்டொழிக்குந் தேகவெப்ப நீக்கும்
வனமுறு பித்தகோப மாற்று-மினமயிலுந்
துன்னு விழியையுடைச் சொன்னமே வையகத்தோர்
பன்னு விதையத்திப் பழம்.

(இ-ள்.) துன்னியகண்களையுடைய பொன்னிறம் போல்பவளே! விதையத்திப்பழமாவது நித்திய மலபந்தத்தையும் சரீர உஷ்ணத்தையும் பித்தவேகத்தையும் போக்குமென்க. 770

புளியம்பழத்தின் குணம்-விருத்தம்.

புத்தியு மந்தமாகும் பொருமியே யுடலுமூதும்
பத்தியத் தவறுஞ்சந்நி பாதமாஞ் சுரங்கள்வீறுஞ்

சர்த்தியும் பித்தந்தீரும் தனுவெலாம் வாதமேறு
மத்திபங் தாதுபுட்டி வருந்திசை நரைபுளிக்கே.

(இ-ள்.) அபத்தியமான புளியம்பழத்தினால் மந்தபுத்தி தேகத் தூலித்தல் சந்நிபாதசுரங்கள் அங்கசலனவாதம் சுக்கிலதாதுமத்திமம் திரை நரை இவையுண்டாம், வாந்தியும் பித்தரோகமும் விலகும்.

பழம்புளியின் குணம்.

தீதிற் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோஷம்
வாதமொடு சூலைகப மாறுங்கா-ணோதுசுரஞ்
சர்த்தியென்ற தோஷமிவை சாந்தமாங் கண்ணோய்போம்
பித்தமென்ற பேரொழியும் பேசு.

(இ-ள்.) குற்றமற்ற பழம்புளியால் திரிதோஷம் வாதநோய் சூலை சிலேத்மகோபம ரூட்சை வாந்தி விழிநோய் பயித்தியமிவையுண்டாம்

சாக்கோன்றைப்புளியின் குணம்.

வன்பணில மேக மலக்கட் டொடுகுடரின்
றுன்ப மலினம்வெப்பு தோன்றுங்கா-வின்பந்
தருதமாலப் பரிமளத் தனத்தா யிந்தக்
கிருதமாலப் புளியைக் கேள்.

(இ-ள்.) பரிமளமணிந்த தனத்தாளே! சாக்கோன்றைப்புளியால் வாதப்பிரமேகம் மலபந்தம் குடல்வலி அக்குடலைப்பற்றிய அழுக்கு உஷ்ணம் இவைபோம். கிருதமாலம்-சாக்கொன்றை. 773

பனம்பழத்தின் குணம்.

நாளும் பனம்பழத்தை நல்லமுதா யுண்ணுங்கா
லாளுங் கரப்பா னழுகிரந்தி-நீளுமலஞ்
சிக்கும்பித் தத்தில்வளி சேருதல ணுய்க்கனமு
தித்திக்கும் பலக்குமெனச் செப்பு.

(இ-ள்.) தினமும் பனம்பழத்தையே உணவாக உண்டால் கரப்பான் அழுகிய சிரங்கு மலபந்தம் பித்தவாயுவாற்பிறந்த நோயினங்கள் இவைகளுண்டாம். இது யாழ்ப்பாணதேசத்து ஊணும் இதனைப் பனுட்டு என்பர். 774

தேற்றன்பழத்தின் குணம்.

தேற்றன் கனிதனக்குச் சேயிழையே வன்காசந்
தேற்று தொழியுஞ் சுவாசமும்போஞ்-சாற்றின்மிகு

வாத்தி பெருகு மலம்போ முத்தோஷத்தைச்
சேர்ந்த பிணிகளும்போஞ் செப்பு.

(இ-ள்.) ஆபரணமணிந்தபெண்ணே! தேற்றான்பழத்தால் வாத இருமல் இரைப்பு மலக்கட்டு திரிதோஷரோகங்கள் ஆகியவைபோம் வாந்தியுண்டாம். 775

நாவற்பழத்தின் குணம் இதனை நாகற்பழம் என்பர்.

மாந்தம் விளையும் வலிகரப்பா னுண்டாகுஞ்
சேர்ந்ததொரு நீரிழிவுஞ் சேருமே-நாந்தலொடு
வாயவங் கடுப்பும் வருங்கோதிப்புந் தாகமும்போந்
தூயநாவற் பழத்தாற் சொல்.

(இ-ள்.) நாவற்பழத்தினால் அக்கினிமந்தம் சரீரநோவு கடுவன் சிததாகம் கடுத்தல் இவையுண்டாம், அதிநீரும் வெப்பமும் தாகமும் நீங்குமென்க. 776

வெள்ளைநாவற்பழத்தின் குணம்.

உதிரமொடு விந்துவையு முண்டாக்கு முள்ளே
யதிரழலை தன்னை யகற்றும்-பதியதனிற்
கண்ணு வலியார்க்குங் கதிக்கரோக குந்திருவே
வெண்ணாவலின் கனியை விள்.

(இ-ள்.) மிகுந்த பார்வையையுடைய விலக்குமி போல்பவளே! வெள்ளை நாவற்பழம் ரத்ததாதுவையும், சுக்கிலதாதுவையும், உண்டாக்கும் உள்வெப்பத்தை நீக்கும். 777

சம்புநாவற்பழத்தின் குணம்.

அனில வழலு மரும்பித்த வெப்புந்
தனியலவு தாகமுந் தயங்கு-தனிவேட
னம்பு நாணுங்கண் ணணியிழையே கானிலுறுஞ்
சம்பு நாவற்கனிக்குத் தான்.

(இ-ள்.) காட்டிலுள்ள சம்புநாவற்பழத்தால் வாதவுஷ்ணம் பித்தவுஷ்ணம் ஒரு தோஷத்தாற்பிறந்த தாகரோகம் இவைநீங்கும். 778

பாலைப்பழத்தின் குணம்-இதுவே தீம்பாலை.

வாத கரப்பனறும் வல்லசிலேஷ்ம மும்போம்
வேது கிரந்தியுஞ்சா மென்பசியா-மோதுமதன்
கோலைப் பழித்தவிழிக் கோதா யினிமையுள்ள
பாலைப் பழத்தானீ பார்.

(இ-ள்.) தீம்பாலைப் பழத்தால் கருங்கரப்பன் சிலேஷ்மதோஷம் வெப்பத்தைச் செய்கின்ற கிரந்தி இவைபோம், மிகுபசியுண்டாம்.

கோட்டைமுந்திரிப்பழத்தின் குணம்.

தாகந் தணியுஞ் சகிக்கா கரப்பனு
மாகத்திற் சேர்ந்த வழலுமறுப-வேகின்ற
துட்ட வன்கிரந்தொடு புண்ணோடற்றுங் கரகரப்பாங்
கொட்டை முந்திரிப்பழத்தாற் கூறு.

(இ-ள்.) கொட்டை முந்திரிப்பழத்தால் தாகமும் சரீரவெப்பமும் நீங்கும், கரப்பான் துஷ்டவிரணம கிரந்தி நெஞ்சிற்கரகரப்பு இவையுண்டு. 780

தமரத்தம்பழத்தின் குணம் தந்தகசடம்.

வாதபித்தம் வாதசபம் வாந்திசுரற் கம்மல்கண்ணோய்
தாதுநஷ்டம் பித்தந் தலைநோய்போ-டோதுசிக்கத்
துற்ற பிரமைபும்போம் மொண்டொடியே மாபுளிப்பா
நற்றமரத்தம் பழத்தை நாடு.

(இ-ள்.) புளிப்புள்ள தமரத்தம்பழத்தால் வாதபித்ததொந்தம் வாதசிலேஷ்ம தொந்தம் வாந்தி சுரற்கம்மல் நேத்திரரோகம் சுக்கில நஷ்டம் பித்தகோபம் சிரஸ்தாபரோகஞ் சிக்குப்பிரமை இவைநீங்கும்.

கொய்யாப்பழத்தின் குணம்.

திரிதோஷஞ் சென்னித் திருப்ப மரோசி
பொருமாந்தம் வாந்தி பொருமல்-கரப்பானும்
மெய்யாப் பரவுமல மெத்தவிடும் போகமுண்டாங்
கொய்யாப் பழத்தினாற் கூறு.

(இ-ள்.) கொய்யாப்பழத்தினால் முத்தோஷந் தலைமயக்கம் அரோசகம் மந்தம் வாந்தி வயிறுப்பல் கரப்பான் வீரியம் இவையுண்டாம் மலங்கழியும். 782

எலுமிச்சம்பழத்தின் குணம்.

தாகம் நகநோய் தாழாச் சிலிபதநோய்
வேகங்க ளுண்மாதம் வீறுபித்தம்-மாகண்ணோய்
கன்னநோய் வாந்தியும்போங் கட்டுவாதித் தொழிலின்
மன்னெலு மிச்சங்கனியை வாழ்த்து.

(இ-ள்) மலபந்தமுள்ள எலுமிச்சம்பழத்தால் தாகம் நகச்சுற்று யானைக்கால் உன்மாதம் பித்தம் கண்ணோய் காதுவலி வாந்திநீங்கும்.

### நாரத்தம்பழத்தின் குணம்.

பித்தவழிக் குன்றுமறும் போராத தீபனமாம்
வித்தான தாதுவும் விளங்கிடுங்காண்-முத்திணைத்த
வாரத்தைத் தாங்குமுலை யாயிழையே யெக்காலும்
நாரத்தை யின்கனியி னால்.

(இ-ள்.) முத்தாரத்தைத்தாங்குந் தனங்களை யுடையாளேநாரத்தம்பழத்தினால் பித்தகுணம ரோகம் நீங்கும். நீங்காத ஜடராக்கினியும் சுக்கிலவிருத்தியும் உண்டாகும் என்க. 784

### சாதிநாரத்தை, கொளஞ்சி நாரத்தைப்பழங்களின் குணம்.

சாதிநாரத் தம்பழந்தா னருசுந் தனையகற்று
மோதருசி வாய்க்கசப்பை யோட்டுங்காண்-வேதா
லளிஞ்சமேகத் தேகர்க்கம வறட்சி போக்குங்
கொளிஞ்சி நாரத்தம்பழந்தான் கூறு.

(இ-ள்.) சாதிநாரத்தம்பழம் தாகம் அரோசகம் வாய்க்கசப்பு இவைகளை நீக்கும், கொளிஞ்சிநாரத்தம்பழம் பிரமேகதேகிகளது நாவறட்சியை விலக்கும் என்க. 785

### சீத்தாப்பழத்தின் குணம்.

பித்தகப மெத்தப் பெருகுமகத மேலோடுஞ்
சித்தமதிற் றயக்கஞ் சேருங்கா-ணத்தலவும்
பூத்தானத் தாரும் பொலன்கொடியே பூவுலகிற்
சீத்தாக் கனியாற் றெளி.

(இ-ள்.) சீத்தாப்பழத்தால் பித்தசிலேஷ்மதொந்தமும் அக்கினிமாந்தமும் சித்தப்பிரமையும் உண்டாகும் என்க. 786

### மாதுளம்பழத்தின் குணம்-இதுவே தாடிமக்கனி.

சங்கையறச் சொற்றவிர்க்குஞ் சங்கியாசஞ் சர்த்தி
யங்கையதி தாகநமைச் சாருமோ-கங்கை
விருந்தாடி மக்கட் கிரத்தளைச்செய் நோய்போ
மிருந் தாடமக்கனிகட் கெண்.

### இதுவுமது.

வாய்நீரூறல் கசப்பு வாந்திவிக்கண் மந்தமிகக்
காய்வெப்ப நெஞ்செரிவு காதடைப்பு-வேயா
மயக்கமுந் தீர்ந்துவிடு மாதுளம்பழத்தாற்
றயக்கமனத் தேமொழியே சாற்று.

இதுவுமது விருத்தம்.

வெடித்துவீழ் பழத்தைவாங்கி மெல்லிய சீலைகட்டிக்
கடுக்கெனப் பிழிந்துகொண்டு கண்டதற் கிணங்கக்கூட்டிக்
குடித்திட வெப்புமாறுங் குளிர்ந்திடு மங்கமெல்லாம்
வடித்தநன் மொழியினளே மாதுளம் பழத்தின்சாறே.

(இ-ள்.) பெருமையாகிய மாதுளங்கனிகளுக்கு சந்தேகம் நீங்க நினைப்பையும் பேச்சையும் ஒழிக்கின்ற சந்நியாசரோகம் வாந்திகபம் மிருதாகம் பித்தநோய் இவை அங்கு சேரமாட்டாது. புத்ரநிமித்தம் கங்காஸ்நானஞ் செய்து யாசிக்கச் செய்யும் மலட்டுவியாதி போகும், மேலும் அப்பழத்தைத் தின்பதனுல் வாய் நீர்ச்சுரப்பும் வாந்தியும் விக்கலும் மாந்தமும் அதிசாரமும் நெஞ்செரிவும் காதடைப்பும் நீங்கா தமயக்கமும் ஒழியும், வெடித்த அந்தப்பழத்தைச் சீக்கிரமாகப்பிழிந்து மெல்லியசீலையால் வடிக்கட்டி தகுந்த கற்கண்டு சேர்த்து ரசத்தைச்சாப்பிடஉட்டினம்ஒழியும், சரீரமுழுதுங்குளிர்ச்சியையடையும்.

கோமட்டி மாதுளம்பழத்தின் குணம் வெண்பா.

அருசி கெடும்பித்த மகலு மையந்தீரு
முரிசையுருங் கபமு மோடுஞ்-சரசமுறக்
காதளவும் பாயும்விழிக் காரிகையே நற்கொமட்டி
மாதுளையின் பொற்கனியை வாழ்த்து.

(இ-ள்.) காதளவோடும் விழிகளையுடைய பெண்ணே! கொமட்டி மாதுளம்பழத்தினுல் அரோசகம் பித்தகோபம் சிலேஷ்ம தோஷம் க்ஷயரோகம் இவை நீங்கும். உரிசையுண்டாம். 788

பேரிச்சம்பழத்தின் குணம்-இதுவே கற்றூரம்.

பேரீந் தெனுங்கனிக்குப் பித்தமத மூர்ச்சைசுர
நீரார்ந்த வைய கெடுந்தாகம-பேரா
விரத்தபித்த நீரிழிவு விலைப்பு மரோசி
யுரத்தமலக் கட்டுமறு மோர்.

(இ-ள்.) பேரிச்சம்பழத்தால் நீரைச் சுரப்பிக்கின்றபித்தரோகம் மதரோகம் மூர்ச்சைசுரம் சிலேஷ்ம நீர்க்கோவைதாகம் ரத்தபித்தம் நீரிழிவு வாயிலைப்பு அருசி மலபந்தம் இவை நீங்கும். 789

# செடியின் பழவகை

### சிற்றீச்சம்பழத்தின் குணம்.

சிற்றீச் செனுங்கனிக்குச் சீத முழலைநோய்
உற்ற சிரங்குகளு முண்டாகுஞ்-சுற்றிச
செறியும் பலபிணியுந் தேமொழியே நாளு
மறிவு மழுங்கு மறி.

(இ-ள்.) தேன்போல் வசனிப்பவளே! சிற்றீச்சம் பழத்திற்கு சீதபேதி உழலைநோய் விரணம் இவை முதலிய பற்பலரோகங்களும் புத்திக்குக் குறைவும் உண்டாகும். 790

### பூந்தாழம்பழத்தின் குணம்-இதுவே-அன்னாசிப்பழம்.

மேகவெட்டை வாந்திபித்த மீறுவா மேனியிடுந்
தாகமு மட்டாகுந் தலைவலிபோம்-பாகமுறு
பூந்தாழையின்பழத்தைப் பூரிப் புடன்புசிக்க
வாந் தாழ்வுமில்லை யறி.

(இ-ள்.) பூந்தாழம் பழத்தினால் பிரமேகவெள்ளை வாந்தி பித்த நோய் தாகம் சிரஸ்தாபரோகம இவைபோகும், அழகுண்டாகும்.

### கத்திரிப்பழத்தின் குணம்.

பித்தங் கரப்பான் பெருங்கிரந்தி குஷ்டமிவை
மெத்தவுபா மெய்யிலழல் வீறுங்காண்-சத்தான
தாதுநட்ட மாங்கபங்காற் சார்ந்த சுவாசமும்போ
மோது கததிரிப்பழந்தா னான.

(இ-ள்.) கததிரிப்பழததினால் பித்தரோகம் கரப்பான் பெருவிரணம் குஷ்டு மேகவெப்பம சுக்கிலககுறைவு ஆகியவைகள்உண்டாகும் கோழையும் வாததோஷமும இரைப்பும் நீங்கும் என்க. 792

### கண்டங்கத்திரிப் பழத்தின் குணம்.

காசஞ் சுவாசங் கயஞ்சீதம் பல்லரணை
வீசுசொறி தினவை விட்டோட்டும்-பேசுடலை
புததரிக்குந் தீபனத்தை யுண்டாக கிடுங்கண்டங்
கத்திரிப் பழக்குணத்தைக் காண்.

(இ-ள்.) கண்டஙகத்திரிப்பழம் இருமல், இரைப்பு, க்ஷயம்கபம் பல்லரணைபுடைநமைஇவைகளைநீக்கும பலத்தையும் பசியையும்தரும்

### களாப்பழத்தின் குணம்.

*நல்ல பசியிலுண்டா னண் ணுமே சீதாத்தம்*
*வல்ல மந்தத்திலுண்டால் மாபசியா-மெல்லப்*
*புரையார்கள் நோய்போம் போ றறுகிற நீர்போந்*
*தரையார் களாப்பழத்தைத் தான்.*

(இ-ள்.) *நிலக்களாப்பழததை மிகுபசியில் தின்றால் சீதாத்தத்தையும் அதிமந்தத்தில் தின்றால் நற்பசியுமுண்டாம தொண்டைவலியும் தலைக்கனப்பும் நீங்கும.* 794

### காரைப்பழத்தின் குணம்.

*சீதக் கசப்புஞ் செறியிரத் தககடுப்பு*
*மோதுமதி சாரமும் போ முண்மையே-மோதுகட*
*னீரைப் பருகுமுகி னேரளக மின்கொடியே*
*காரைப் பழத்திற்கு காண்.*

(இ-ள்.) *கடல்நீரையுண்டு சூல்முதிர்ந்த மேகம்போலக்கறுத்த கூந்தலாளே காரைப்பழத்தால் சீதரத்தக்கடுப்பும் அதிசாரம்நீங்கும்.*

### மரக்காரைப்பழத்தின் குணம்.

*சுரமும் பொருமலும்போந் தோன்மயக்க மில்லு*
*தாலூதற் போமறிவுந் தங்கும்-பருகு*
*மரக்காரை மெல்லிதழ்வா யஞ்சுகமே யாரு*
*மரக்காரை யின்கனியை வாழ்த்து.*

(இ-ள்.) *சிவப்புநிறம் பொருந்திய மெல்லிய இதழையும் அழகிய வாயையுமுடையாளே மரக்காரைப்பழத்தினால் சுரம் வயிற்றுப்பிசம் மூர்ச்சை மகோதரம் இவைகள் நீங்கும் புத்திக்குத்தெளிவுஉண்டாம்.*

### சூரைப்பழத்தின் குணம்.

*மந்த மதிகரிக்கும் வன்சீதளஞ் சேரு*
*முந்து குடல்வலியு முண்டாங்காண்-முந்துநவில்*
*காரைப் பழத்திற் கதித்தவொரு பேதமுமாஞ்*
*சூரைப் பழத்திற்குச் சொல்.*

(இ-ள்.) *முற்கூறிய காரைப்பழத்தில் ஒருபிரிவாகிய சூரைப்பழத்திற்கு அதிமந்தமும் கபதோஷமும் குடல்நோயும் உண்டாம்.* 797

### மிளகாய்ப்பழத்தின் குணம்.

*மூலவிரத்த மூளைகடுப்பு முண்டாகும்*
*தாலமதிற் றூறுவுந் தழைக்குமே-ஆலமெனு*

*மந்தமரோசிகுன்மம் வாய்வு பொருமலும்போ*
*மூர்த்து மிளகாய் பழத்தா லோர்.*

(இ-ள்.) *மிளகாய்ப்பழத்தினால் ரத்தமூலமூளையும் ஆசனக்கடுப்பும் வீரிய விருத்தியும் உண்டாம் விஷாலசகம் அருசி வயிற்றுநோய் விகுணவாதம் வயிற்றுப்பிசம இவைநீங்கும்.* 798

---

# கொடியின் பழவகை

**சீரியகோடி முந்திரிப்பழத்தின் குணம்-இதுவே திராட்சி.**

*வெப்பருசி தாகம் விரணஞ் சுவாசசுப*
*மெய்ப்புடைய பித்த மிரத்தபித்தமு-செப்பு*
*மடிமாத மேக மதமும்போஞ் சின்னக*
*கொடி முந்திரிகனிக்குக் கூறு.*

(இ-ள்.) *சிறியகொடி முந்திரிப்பழத்திற்கு, சுரம் அரோசகம் தாகம் மதரோகம் ஆகிய இவைகள் போகும் என்க.* 799

**பெருங்கோடி முந்திரிப்பழத்தின் குணம்.**

*சோமநோய் தாவரதத்தாற் றோன்றுவிஷ முன்மாத*
*நாமமுறு மூத்திரநோய் நாடுமோ-சாமசுரம்*
*விண்ணொழி மெய்குளிரும் வீறுகொடி முந்திரிக்குக்*
*கண்ணொளியுங் காதுவுமாங் காண்.*

(இ-ள்.) *பெருங்கொடி முந்திரிப்பழத்தால் சோமநோய் தாவர விஷம் உன்மாதம் மூத்திரதோஷம் ஆகிய இவை நீங்கும் உடல்குளிர்ச்சியும் கண்ணொளிக்கமும் சுக்கிலவிருத்தியும் ஆம்.* 800

**தூதுளம் பழத்தின் குணம்.**

*கபக்கட்டு சோழை சுத்திரி தோஷங்*
*குபுக்கென் றெழும்பு நீர்க்கோவை-கபுக்கென்*
*றழுத்து விஷமும் போமடர்தூ தூளத்திற்*
*பழுத்து விழும்பழத்தாற் பார்.*

(இ-ள்.) *தூதுளம்பழத்தினால் இருகிய மார்புசளி கூபம் வாதாதிமூன்றுதோஷங்கள் சலதோஷம் சர்ப்பவிஷம் இவைகள் நீங்கும்.* ()

**பாகற்பழத்தின் குணம்.**

*சுரமேகங் காசஞ் சுவாசமொடு மூலந்*
*திரிதோஷங் குஷ்டமிவை தீருங்-கிருமியது*

மோகப் புணரியெனு மொய்குழலே வெம்பிவிழாப்
பாகற் பழத்தையுண்டு பார்.

(இ-ள்.) மோகனசாகரமனைய நெருங்கிய கூந்தலாளே! வெம்பிவிழாத பாகல்பழத்தினால் சுரம பிரமேகம் இருமல் இரைப்பு மூலம் முத்தோஷம் குஷ்டம் மலக்கிருமி இவை விலகும். 802

சவரிப்பழத்தின் குணம்.

தலைவலி குடைச்சல் சலப் பீநசங்கள்
குலைகுலைந்தே காட்டிற் குடிபோ -நிலையா
னவரிப் படிமாதென் னையுறு மாதே
சவரிப் பழத்தினாற் றான்.

(இ-ள்.) தேவர்கள் இப்பூலோகமாதுதானேயென் னையமுறும் அழகினையுடைய பெண்ணே! சவரிப்பழத்தால் சிரநோயும் உடற்கடுப்பும் நீர்ப்பீநசமும் விலகுமென்க. 803

# மரத்தின் வித்துவகை

மாங்கொட்டையின் குணம்.

பேசுமோ சீதம பெருக்குஞ் சோரிக்கடுப்பும
வீசுமோ மூலமுறி வெங்கொதிப்பு-மாசுடைய
பூங்கொட்டையைத் தள்ளிப் போட்டுக் கனியில்வந்த
மாங்கொட்டையைக் காணில் வாது.

(இ-ள்.) மாம்பழக்கொட்டையால் சீதபேதி ரத்தாதிசாரம் உதிரக்கடுப்பு மூலச்சூடு ஆகியவைகள் போமென்க. 804

பலாக்கொட்டையின் குணம்.

அள்ளேறு நீள்குடரி னப்பான் மலக்கட்டுங்
கள்ளேறு நெஞ்சர்நெஞ்சாங் கல்லகட்டி-யுள்ளே
சலாக்கொட்டை யிட்டசுகந் தானுங் கருக்கும்
பலாக்கொட்டை யிட்ட பலன்.

(இ-ள்.) கருக்கிய பலாக்கொட்டையினால் அள்ளுமாந்தம் குடல் கபத்தால் மலச்சிக்கல் கட்குடியர்க்குண்டாவதுபோல் நெஞ்சிற் புளியேப்பம் கற்போற் வயிறுகெட்டிப்படல் அதில்ஓட்டைசாணளவு யிருப்புச்சலாக்கை சொருகினதுபோ லுபத்திரவமிவையுண்டாம்.

### புளியங்கோட்டையின் குணம்.

*சுக்கில மேகநற் றுன்னுமதி சாரமொடு*
*மிக்கிரண நாக்கடுப்பு வெட்டையறுக்-தொக்கொடுவ*
*ருற்றபுளி வித்திற் குறுகுணத்தை மேன்மேலு*
*நற்றரையுண் மாதே நவில்.*

(இ-ள்.) *மாதே! தோலில் துவர்ப்புள்ள புளியங்கொட்டைக்குச் சுக்கிலமேகம் பித்தாதிசாரம் அதிவிரணம் மூத்திரக்கடுப்பு வெள்ளை இவைகள் நீங்கும்.* 809

### தேற்றங்கோட்டையின் குணம்.

*பிரமிவெள்ளை வெப்புபசி பேரரா கடுப்போ*
*டெரிகிரிச் சுரம்புண்ணு மின்றும்-வருமநதக்*
*தேற்றாங் கொட்டைக்கஃதோ தீட்டமருந்தாகுங்*
*கூற்றாங்கண் மாதேநீ கொள்.*

(இ-ள்.) *இயமனைப்போன்ற கண்களுடைய பெண்ணே! தேற்றாங் கொட்டைக்கு பிரமேகம் வெட்டை உட்சூடு ஜடராக்கினி வயிற்றுக் கடுப்பு எரிகின்ற மூத்திரக்கிரிச்சுரம் இரணமும் நீக்கும் மந்தமுண் டாம் அது கண்ணுக்கு மருந்தாம.* 807

### எட்டிக்கோட்டையின் குணம்.

*கைக்கறுப்பு சந்நி கடிவிஷங் குஷ்டவலி*
*யெய்க்கவரு தாதுநஷ்ட மென்பவைபோ-மைக்கண்ணாய்*
*கட்டி கரப்பான் கனமயக்கு பித்தமுமி*
*லெட்டிமரக் கொட்டையி னாலே.*

(இ-ள்.) *மையணிந்த கண்களுடையவளே! எட்டிக்கொட்டையால் கருமேகம் சந்நி விஷக்கடி குஷ்டம் வாதவலி வீரியநஷ்டம் பிடகம் கரப்பன் மூர்ச்சை பயித்திய மிவைபோம்.* 808

### புரசங்கோட்டையின் குணம்.

*வயிற்றுக் கிருமிகணம் வாதமொடு சீத*
*கியத்தபடர் தாமரையு நீங்கும்-வயிற்று*
*வலியிரைச்சல் வன்கரப்பன் மாறும்பித் துண்டா*
*மலிபுரசங் கொட்டைதனை வாழ்த்து.*

(இ-ள்.) *புரசங்கொட்டையினால் மலப்புழுக்குலம் வாதவலி சீதம் படர்தாமரை குன்மம் வயிற்றிரைச்சல் கரப்பான் இவைகள்நீங்கும். பித்தமாம்.* 809

புன்னைக்கோட்டையின் குணம்.

கன்ன விரணங் கடுஞ்சந்நி பாதமுட
னின்ன லுறு வாதை யேகுங்காண்-புன்னைக்கோட்
டைக்கமட்டோ வென்னி லார்சூதக வாய்வு
மெய்க்கம மிட்டாழ்வாய்வு மில்.

(இ-ள்.) புன்னைக்கொட்டைக்கு செவிப்புண் சந்நி தனுர்வாதம் சூதகவாயு நீரேற்றி அதிலமுந்திய சீதளவாயு இவைகள் நீங்கும்.

இலுப்பை, அழிஞ்சில் இவ்வித்துக்களின் குணம்.

இலுப்பைவிதை யந்தரவாய் விற்கும விஷத்திற்கு
மனுப்பை யுண்டாக்கி யகற்று-நிலத்திற்
றெழுஞ்சுக மோகக் கரப்பில்சொல் லஞ்சனமா
மழிஞ்சில் விதையென் றறி.

(இ-ள்.) இலுப்பைக்கொட்டை அந்தரவாயுவையும்விஷத்தையும் நீக்கும், அழிஞ்சில்விதை உலகவசியத்திற்கும் மறைப்புமைக்குமாகும்

புங்கு காட்டுப்புங்கு-இவ்வித்துக்களின் குணம்.

புங்கின்விதை காற்கிரந்தி புண்கரப்பான் காதெழுச்சி
யங்கசந்நி கண்ணோய்க்கு மாய்பேதி-யுங்கட்டுங்
காட்டுப் புங்கின்விதைக்கு கண்டேதேமற் சொறிமெய்ப்
பூட்டுப் பங்கின்வாய்வும போம்.

(இ-ள்.) புங்கங்கொட்டை கழல்விரணம் கிரந்தி கரப்பான் கர்ண பரிஸ்போடகம் சந்நிகண்ணோய் இவைக்கு கவும், மலத்தை கட்டும் காட்டுப்புங்கம் விதைக்கு தேமலும் புடையும் கீல்களைப்பற்றிவாய்வுபோம்

மருந்தோன்றி, வேம்பு-இவ்வித்துக்களின் குணம்.

மருந்தோன்றி யின்விதைக்கு மாபில்லி சூனியம்
விருந்தாண்ட பேய்பூதம் வீயுங்-கருதுங்கறி
வேம்பின் விதைக்கு விஷஞ்சந்நி பாதமுதற்
றேம்பிவிழுந் தோடுமெனத் தேர்.

(இ-ள்.) மருந்தோன்றிவித்துக்கு பில்லிசூனியமும் பேய்பூதமும் கெடும் வேப்பம் பருப்புக்கு தாவரசங்கம விஷங்களும் சந்நியும்நீங்கும்

கடப்பம்வித்தின் குணம்.

கடப்பம் விதைக்குக் கடிவிஷமு முண்டோ
தொடுப்பு மண்டைநீருந தொலையு-மிடக்கான

வாத வகையொழியு மாந்தங்க ளேகிவிடுங்
கிதமொழி மாதே கேள்.

(இ-ள்.) கிதம்போன்ற மொழியையுடைய பெண்ணே! கடப்பம் வித்துக்கு விஷக்கடி சிரஸ்தாபரோகம வாதரோகங்கள் அக்கினிமாந்த பேதங்கள் ஆகியவைகள் நீங்கும் என்க. 814

மகிழம்வித்தின் குணம்.

தாதுவைநன் மெய்யழகைச் சத்தியையுண் டாக்கிவிடுஞ்
சீதளமென்பார் கவிகைகஞ் செய்மருந்தாம்-வாதை
மலத்தைவிழித தோஷததை வலவிஷத்தை வெப்பை
விலக்கு மகிழம் விதை.

(இ-ள்.) கண்கவிக்கததுக்கான மகிழம்வித்து மலாவிருதவாதம் நேத்திரதோஷம் சர்ப்பவிஷம் சுரம இவைகளை நீக்கும், சுக்கிலத்தை யும் தேகவனப்பையும பலததை விருததிபுமாம் இது சீதளமென்பார்.

தில்லம்வித்தின் குணம்.

தில்லம் விதைக்குச் சிறுவிஷம்போம் பின்விஷமுஞ்
செல்வஞ்செருக்குர திமிர்வாய்வும்-வெல்லங்கொள்
வாரை வருத்துகின்ற வன்கபமுங் குஷ்டமுமிவ்
வூரை விடுத்தேகு மூரை.

(இ-ள்.) தில்லம் விதைக்கு கீடவிஷம் சர்ப்பவிஷம் திமிர்வாதம் இனிப்புச் சுவையாற்பிறந்த கபரோகம் குஷ்டநோய் இவை நீங்கும்.

ஆளிவித்தின் குணம்.

வீக்க மதிவாந்தி யேனிவலி வாய்வுக்
தூக்கு நரம்பினகுத்த றொருவழலை-யோக்காள
மீளி யருகிவிதை வாதமும் போகு
மாளிவிதை தன்னு லறி.

(இ-ள்.) ஆளிவிதையினல் சோபை மிகுவமனம் உடற்கடுப்புவாத வலி நரம்புச்சூலை அஸ்திச்சூடு ஓக்காளம் அருசி பீசவாயுஇவைநீங்கும்

உத்திராக்ஷத்தின் குணம்.

நீளுமதி தாகத்தை நீங்காமுத் தோஷத்தை
யாளும்விக்கல் பித்தத்தை யாற்றுங்கா-ணுரு
மிருத்திரா மற்பகத்தை வீட்டுமே நல்ல
வுருத்திராக் கத்தின்வலி யுன்.

(இ-ள்.) உருத்திராக்ஷமானது அதிதாகம் திரிதோஷம் விக்கல் ரோகம் பித்தகோபம் சிலேஷ்மாதிக்கம் இவைகளைப்போக்கும். 818

முருங்கைவித்து, இலை, ஈர்க்குகளின் குணம்.

நீரான விந்துவுமே நீண்டபிசினைத் தடிக்குஞ்
சீராகமேனி செழிக்குங்காண்-பாராய்
முருங்கையுறு விதையான் மெய்த்தவிலை யீர்க்கோ
டொருங்கையுறு நீரிறக்கு முன்.

(இ-ள்.) முருங்கைவித்தினால் சலரூபமாகக் கரைந்த விந்துவும் பிசினிபோலாகும் சரீரம் பலக்கும் இதன இலையும் ஈர்க்கும் நீரைப் பெருக்கும். 819

மாதுளைவித்தின் குணம்.

சுக்கிலத்தைக் கட்டுமந்தச் சுக்கிலதோஷம் போக்கு
பக்கணமேகக் கடுப்பை யாற்றுங்கா-ணெக்காலுங்
கோதுளத் தெள்ளுறைநமலர்க் கொம்பனையாய் தித்திக்கு
மாதுளத்தின் பீச வலி.

(இ-ள்.) புட்ப கொம்பனைய பெண்ணே இனிப்புள்ள மாதுளம் வித்தானது சுக்கிலத்தை இறுக்கும் அதை தவிர அதிலுள்ள குற்றத்தையும் பிரமேகச் சுறுக்கையும் நீக்கும். பீசம்-வித்து. 820

முந்திரிப்பருப்பின் குணம்.

மெத்த வினிப்பாகு மென்மொழியே தின்றக்காற்
பித்த வனிலம் பிரக்குங்காண்-சத்தியமா
யிந்திரியப் புஷ்டி. யிளைக்காது பாக்கியமுண்டா
முந்திரியி னற்பருப்பான் முன்.

(இ-ள்.) மிகுந்தஉரிசையுள்ள முந்திரிபருப்பைத்தின்னில் பித்த தபிதாக்கம் தாதுவிருத்தி அக்கினிமாந்தம ஆகியவையுண்டாம. ()

வாதுமைப்பருப்பின் குணம்-இதுவே அடப்பம்விதை.

அடப்பம் விதையாம் வாதுமைப் பருப்பினும்
மடற்பெரிய கட்படல மாறுஞ் சடக்கெனவே
புண்மேற் கொழுப்பகலும போகமு முண்டாமென்றே
மண்மேற் றுணியாய் வழுத்து.

(இ-ள்.) அடப்பவிதை என்கிற வாதுமைப்பருப்பினால் விழிப்படலமும் விரணக்கொழுமையும் நீங்கும் கலவியில் விருப்பமுண்டாம்.

சாரப்பருப்பு மிசரிப்பருப்பு இவைகளின்-குணம்.

சாரப் பருப்பாற் றனிமிசரி யின்பருப்பா
னீரப் பருப்பு நீர்ச்சீதங்-தீரத்
தொலையு மிரதந்தந்தி துய்ந்தார்க்கு நன்றாங்
கலையும்விந்து விற்கூக்கங் காண்.

(இ-ள்.) சாரப்பருப்பு மிசரிப்பருப்பு இதுகளால்சிறுநீரைப்பற்றிய கடுஞ்சுருக்கும் மூத்திரகடுப்பும் சலப்பிரமேகமும் நீங்கும் நித்த சுக்கிலம் இறுக்கும் ரசகந்தங்களைத் தின்றவர்க்கும் நலனைத்தரும்இரதம் பாதரசம் தந்தி-கந்தகம். 823

## செடியின் வித்துவகை

துத்திவித்தின் குணம்.

கையிற் காலிற்படர்ந்த காமேகம போயொழிவு
மெய்யினுறு குஷ்டமபோம் வெப்பகலுங்-துய்யதிரை
யத்திதனை யொத்தவிழி யாரணங்கே நாட்டலுறுந்
துத்தி விதையைச் சுவை.

(இ-ள்.) கடல்போன்ற விழியையொத்த வாரணங்கே துத்திவிதையை நீ தின்னககடவை தின்றால கைகால்களினுண்டாகிய கருமேகமும் குஷ்டரோகமும் உட்சூடும் நீங்கும என்க. 824

தகரைவித்தின் குணம்.

வண்டு கடியுடனே வன்கடுவனும் பலவாம்
பண்டுநமை புடையும் பண்டிதர்கள்-கண்டுரையாப்
பித்த கனலும் பெருத்த தகரைவிதைச்
சித்தரைய னில்லா திசை.

(இ-ள்.) தகரைவிதைக்கு வண்டுகடி அரைக்கடுவன் நீங்காததினவுபலவித புடை பிடகருரைத்ததற்கறிய பித்தநோய் இவைபோம்.

நீர்முள்ளிவித்தின் குணம்.

வித்துவுமாந் தாதுவுமா மேகரோகந தொலையு
முந்து மதிசார மொழியுங்காண்-வந்துடவி
லேறிபய நீர்வீக்க மிறங்கு மீளைப்புமறுங்
கூறியநீர் முள்ளி விதைக்கு.

(இ-ள்.) நீர்முள்ளிவித்துக்கு பிரமேகம் அதிசாரம் கபசோகை ஆயாசம் இவைநீங்கும், சுக்கிலமும் சப்ததாதுக்களும் விருத்தியாம்.

### ஊமத்தம்வித்தின் குணம்.

சுரம்போம் விஷம்போந் தொலைபாத சகதி
புரம்போ மதிசார மோடு-நிரம்பவே
மாமத்த முண்டாம் வளரிளங்கொங் கைத்திருவே
யூமத்தை யின்விதையை யுண்.

(இ-ள்.) இளங் கொங்கையையுடைய விலக்குமிபோல்வளே! ஊமத்தைவிதையினால் சுரம் தாவரசங்கம விஷம் சந்நிபாததோஷம் அதிசாரம் ஆகியவைபோம் வெற்றியுண்டாம். 827

### வெங்காயம் துளசி கரிசாலை முள்ளங்கி உருத்திரச்சடை இவ்வித்துக்களின் குணம்.

வெங்காய வித்துக்குன்மம் வீட்டுந் துளசிவித்துக்
கெங்கெமயங் கரிப்பா னின்பழமாற்-றங்கவே
காமாலை முள்ளங்கிக் காழால்விந் தாஞ்சடைவித்
தோமாலை யுள்ளடக்குஞ் சொல்.

(இ-ள்.) வெங்காயவிதை குன்மத்தையும், துளசிவிதை சீதத்தையும் கரிசாலவிதை காமாலையையும் முள்ளங்கிவிதை விந்துநஷ்டத்தையும் உருத்திரச்சடைவிதை மபக்குகின்றகபத்தையும் போக்குமென்க

## கொடியின் வித்துவகை

### பூசினிவித்தின் குணம்.

பித்தம்போ மேகம்போம் போவனனும் போம்
மெத்த வுடலங்குளிரு மேனிபிடு-மித்தலத்து
ளாசினியொன் றில்லா வலர்கதவசனத் தனமே
பூசினி வித்தைத்தின் னுமபோது.

(இ-ள்.) அலர்ந்த புட்பத்தில் சஞ்சரிக்கா நின்ற அன்னம்போல் பவளே பூசினிவித்தினால் பித்தமும் பிரமேகமும் சரீர அழலையும் நீக்கும் தேகத்திற் குளிர்ச்சியும் புஷ்டியும் உண்டாம். 829

### வெள்ளரிவித்தின் குணம்.

கடுப்போடுநீர்க் கட்டுவெருங் கல்லடைப்பு தரை
வெடிப்பு சதையடைப்பு மேக-மெடுத்துரைக்கா
வுள்ளரிவி யென்னு முறைதகிரிச் சுரம் மிவைகள்
வெள்ளரி விதைக்கேகும் விள்.

(இ-ள்.) வெள்ளிரிவிதைக்கு கடுகின்றநீரடைப்பு கல்லடைப்புநீர்த்துவாரவெடிப்பு சதையடைப்பு பிரமேகம் கிரிச்சுரம் இவைநீங்கும்.

கழற்காய் பேய்பீர்க்கு-இவ்விந்துவின் குணம்.

சழற்காய் விதைக்குக் கனவண்ட வாதந்
தழற்பக்கச் சூலைகுன்மஞ் சாக்தி-கழற்காவிற்
காய்ப்பாக்குந் துஷ்டக் கடிவிஷமெலாம போக்கும்
பேய்பீர்க்கின் றன்விதையைப் பேசு.

(இ-ள்.) சழற்காய்விதைக்கு அண்டவாதமும் சூட்டினுல் பிறந்த பக்கசூலையும் வயிற்றுநோயும் நீங்கும், பேய்பீர்க்கம்வித்து காவிற்றழும் பேரும்படிக் கடித்த துஷ்ட விஷங்களை யெல்லாம் நீக்கும். 831

பூனைக்காலிவித்தின் குணம்.

தழுகளை நாற்றத்தோடு சாரிரததப் போக்கும
பழுதுபரி கின்றகரப் பானு-மழுநீதகுந்
தாலமிசை விந்துமாஞ் சாற்றும் கரும்பூனைக்
காலி விதையினுற் காண்.

(இ-ள்.) கருமைநிறப்பூனைக்காலிவிதையினுல். கற்றாழைநாற்றமு ரத்தகிராணியும கரப்பானும நீங்கும தாதுபுஷ்டியுண்டாகும். 832

உகாவித்தின் குணம்.

வாதமுதன் முப்பிணியால் வந்தபிணியை யெல்லாங்
கோதிற் சமப்படுத்துங் கூறவொண்ணுச்-சீத
மகாவனச மண்டபத்தில் வாழ்ந்திருக்கு மாதே
யுகா விதையைநன்று யுரை.

(இ-ள்.) குளிர்ந்த மேன்மைதங்கிய மண்டபத்தில் வாழ்ந்திருக்கும் மாதே! உகாவிதை திரிதோஷம் நோய்களை சாந்தமாக்கும். 833

குன்றிவித்தின் குணம்-இதுவே குன்றிமணி.

நேத்திரநோய் பித்த நிறமழுமாங் காமாலை
வேர்த்திடு தாபச்சோப வெப்புடனே-கோத்திட்ட
வையமும்போம் விந்துவா மாயிழையே காட்டிலுன்ற
செய்யகுன்றி யின்விதையைச் சேர்.

(இ-ள்.) நூல்போன்ற விடையையுடையவளே சிவந்த குன்றிமணிப் பருப்பினுல் கண்ணோய் பித்தநோய் மாறுநிறம் காமிலாரோகம் வியர்வையொடு வெப்பத்தை தருகின்ற மூர்ச்சைச்சுரம் சிலேஷ்மகோபம் இவைநீங்கும் சுக்கிலவிருத்தியாம். 834

நெருஞ்சில் வித்தின் குணம்.

சொல்லவொண்ணு நீர்க்கட்டு துன்பமாமிச மருகல்
கல்லடைப் பெனும்பிணிகள் கண்டாக்கால்-வல்லக்
கருஞ்சினவேற் கண்மதே காசினியிற் றேன்று
நெருஞ்சினறும் வித்தே நினை.

(இ-ள்.) வேற்போன்ற கண்களையுடையமாதே! நல்ல நெருஞ்சில்!வித்துக்கு மூத்திரக்கட்டு சதையடைப்பு மூத்திரகிரிச்சுரம் சர்க்கரா ஸ்மரிரோகம் ஆகியவைநீங்கும். 835

தாமரைவித்தின் குணம்.

மந்தத்துவ மகற்றும் வல்லருசி நீக்கிவிடு
மந்தத் துறைதாது விறகடலே-தந்திடும்பின்
னுன்னி லின் னுக்கோடகுண மியாவுமோட்டுஞ் சலர்
தன்னி லண்ணிக்கிரவஞ் சம்.

(இ-ள்) தாமறைவிதை அலசத்தையும் அருசிமுதலிய சர்வதோஷங்களை நீக்கும் கடைத்தாதுவாகிய சுக்கிலத்தை விருத்திசெய்யன்க.

வெள்ளை அல்லி, செவ்வல்லி இவ்விதைகளின் குணம்.

மிதுனவல்லி வித்துக்களால் விந்துண் டென்றுலு
மதனமரைக்குச் செம்மைக் காரக்க-மதனமிகப்
பேதமின்றி யிரற் பீலிகளுககு வன்மை
யேதமின்றிச் செய்யு மிரண்டும்.

(இ-ள்.) இருவித அல்லிவிதைகளினுலும் சுக்கிலவிருத்தி யுண்டென்று சில மாதாந்தரத்திற் சொல்லப்பட்டாலும் வெள்ளலலிக்குச் சுக்கிலம் அதிகமும் செவ்வல்லிக்குச் சோணிதம் அதிகமும ஆம் இந்தப் பேதமேயன்றி யிரலுக்கும பீலிககண்டங்களுக்கும் இரண்டு சமபலஞ்செய்யும். 837

வித்துக்களின் பொது குணம்.

மிக்கனலி மிக்குநளிர் வித்துகள் விதைப்புரக்கத்
தக்கனவன் ருஞ்சமர சந்தகவர-மக்குறிகா
யாகாய மின்றிபடர்ந் துறைவித் தங்கிகெடு
மாகாய மென்றூர்வித் தாம்.

(இ-ள்.) அதி உஷ்ணமுள்ளவும் அதிசீதளமுள்ளவும் ஆகிய இருவகை விதைகளும் விந்துவை ரக்ஷிக்கத்தக்கவை அல்ல உஷ்ணசீதளம்

சமமாயுள்ள வித்துக்கள் அதை ரக்ஷிக்கத்தக்கனவாம் அவையெவை யெனில் காய்க்குள் இடைவெளியின்றி நெருங்கியிருக்கின்ற தாதுவளை முதலிய விதைகளெல்லாம உஷ்ணமும் இடைவெளி மிகுத்து ஒன்றோடொன்று நெருங்காமலிருக்கின்ற பூசினி முதலிய வித்துக்கள் அதிசீதளமுமாகும் சமமானவை இடைவெளியுள்ளனவும் ஒன்றுசேர்வோர் வித்து உள்ளனவுமான முருங்கை வாதுமைவித்துக்கள் முதலியன.

## நெற்களின் பொதுவகை

செந்நெல் வகைக்குஞ் சிறுதானிய வகைக்கு
மிந்நிலத்தி லுண்டோ விலககென்ப-துன் னுங்காற்
கண்ட மட்டிலே பெயராங் கண்டவரவரவர்க
ளுண்டமட்டிகல சுவையா மோர்.

(இ-ள்.) இக்கவுலகில் விளைகின்ற நன்செய் புன்செய் தானியவருக்கங்களின்பெயரையும் சுவையையும் அளவிடுதற்கரிதேயாயினு மவற்றைப் பார்த்தவகையில் எவரும் புசித்தவரையில் சுவையுமாம் என்க.

**கார் அரிசியின் குணம்.**

காரரிசி மந்தங் கனப்புடலிற் றாவிப்பும்
பாரறிய வாயுவையும் பண்ணுங்கா-ணோரோ
கரப்பா னென்பார் பொருந்திற் காயமுறமெத்த
வுரப்பாகு மென்றே யுரை.

(இ-ள்., மந்தகுணமுள்ள பருத்தகாரருசி சரீரபுஷ்டியையும் தனி வாத விளைவையும் பலதையும் தரும் இதுகரப்பன் பண்டம் என்பர்.

**மணக்கத்தை வாலான் கருங்குறவை என்னும் இவ்வரிசியின் குணம்.**

மணக்கத்தை வாலான் கருங்குறவை மூன்றும்
பிணக்குஷ்டைச் சிலவிஷதைதப் போக்கு-முணக்குமுற
வாக்கியுண்டாற் கரப்பா னுடுமென் பார்கள்சிலர்
பார்க்குளிதை பாய்க்து பார்.

(இ-ள்.) மணக்கத்தை, வாலான் கருங்குறவை என்னும் மூவகை அரிசிக்ளும் விரணகுஷ்டத்தையும் அற்பவிஷத்தையும் நீக்கும், இவ்வகைச் சாதங்களாற் சிலவயித்தியர் கரப்பானுண்டா மென்பார்.

**ஈர்க்குச்சம்பா அரிசியின் குணம்.**

ஈர்க்குச் சம்பாவென் றியம்பு மரிசியது
காக்குக் கதியுரிசை நல்குங்காண்-பார்க்குமிடத்

தெல்லார்க் குங்காத வியற்றுமற்ப பித்தமுமாம்
வில்லாரும் பூசைகட்காம் விள்.

(இ-ள்.) தேவாராதனைக்கான ஈர்க்குச்சம்பா அரிசி நாவுக்குரு சியையும் பார்க்கில் இச்சையையும் தரும், இதில் கொஞ்சபித்தம் உண்டு. 842

புழுகுசம்பா அரிசியின் குணம்.

புழுகு சம்பாவரிசி பூதலத்தி லுண்பார்க்
கழகு மொளியுஞ் சேர்வதன்றி-யழலாம்
பசிதாகந் தீரும் பலமு மிகவுண்டா
மசிவே துடற்சுகமா முன்.

(இ-ள்.) புழுகுச்சம்பா அரிசியை புண்பவர்களுக்கு வனப்பும் காந்தியும் அதிதீபாக்கினியும் பலமும உண்டாம், தாகம் நீங்கும். ()

கைவரைச்சம்பா அரிசியின் குணம்.

கைவரச் சம்பாவரிசி கண்டா லவரவர்த
மெய்வரைபோ லென்று மிகுபலமா-மைய
மடையா தென்பார்க ளடர்சுக் கிலமு
முடையா ததிசுகமா முன்.

(இ-ள்.) கைவரைச்சம்பா அரிசியால் உடற்குமலைபோன்ற வன்மையும் சுக்கிலஸ்தம்பன சுகம் உண்டாம். இதில் பித்தமின்றென்பர்.

செஞ்சம்பா அரிசியின் குணம்.

செஞ்சம்பாத் தண்டுலத்தாற் றீராச் சிறுசிரங்கும்
விஞ்சுபுண்ணும் வன்சொறியு மேகுங்காண்-றுஞ்சா
ததிக பசியாகு மணங்கரசே யிந்தப்
பதியதனி னீயுண்டு பார்.

(இ-ள்.) செஞ்சம்பா அரிசியாற் கிளைக்கின்ற அற்பகிரந்தியும் அதிவிரணமும் யானைச்சொறியும் மிகுபசியும் உண்டாகும். 845

குண்டுசம்பா அரிசியின் குணம்.

குண்டுச் சம்பாவரிசி கொண்டுண்ணும் பேர்களுக்குப்
பண்டையில்லா மந்தநோய் பாரிக்கு-மண்டுபடாத்
தாகமெல்லா மொழியுங் கையலே வன்கரப்பான்
தேகமெல்லாம் பரவுஞ் செப்பு.

(இ-ள்.) பெண்ணே! குண்டுச்சம்பா அரிசிக்கு அக்கினிமாந்த மும் பலமிகுந்த கரப்பான் ரோகமும் உண்டாம். தாகரோகந்தீரும்.

கல்லுண்டைச்சம்பா அரிசியின் குணம்.

கல்லுண்டைச் சம்பாவைக் கண்டருந்தி நின்றவர்முன்
மல்லுண்ட பேரெதிர்க்க வாய்க்குமோ-வில்லுண்டை
போலுரையா நல்ல புசபலமா மின்சுவையாம்
பாலனைய மென்மொழியே பார்.

(இ-ள்.) பாலனைய மிருதுவாகிய பெண்ணே! கல்லுண்டைச் சம்பா அரிசியை உண்பவர்க்கு மல்யுத்தக்காரரும எதிர்க்கக்கூடாத புசபலமும் மிகுவார்த்தையும உண்டாம் என்க. 848

மல்லிகைச்சம்பா அரிசியின் குணம்.

மல்லிகைச் சம்பாவரிசி வாய்க்குரிசை யாயிருக்கு
நல்லது மெய்க்கு நலஞ்செய்யும்-சொல்லாக்
கரப்பானை மேகத்தைக கண்ணழலை நீக்கு
முரப்பாம் பலங்கொடுக்கு முன்.

(இ-ள்.) நாவிற்கு உரிசையாயிருக்கின்ற மல்லிகைச்சம்பா அரிசி சரீரத்திற்குச் சவுக்கியத்தைபம உறுதியையும் தரும், கரப்பான் பிரமேகம் நேத்திரவெப்பம் ஆகியவைகளைப் போக்கும். 847

இலுப்பைப்பூச்சம்பா அரிசியின் குணம்.

பித்தமிகப் பெருக்கும் பேருலகி லியாவர்க்கு
முற்றதலை வலிநோ யுண்டாக்குஞ்-சத்தியமாய்த்
தாக மெடுப்பிக்குந் தழலிலுப்பைப் பூச்சம்பா
வாகமதி னேய்வளர்க்கு மாய்.

(இ-ள்.) இலுப்பைப்பூச்சம்பா அரிசிபித்தாதிக்கத்தினல் விளைகின்ற சிற்சில ரோகம் சிரஸ்தாபம் உபரர்க்கதாகம் உஷ்ணம் இவைகளைச்செய்யும். 849

மணிச்சம்பா அரிசியின் குணம்.

நல்லமணிச் சம்பா நாடுகின்ற நீரிழிவைக்
கொல்லு மிகுந்தசுகங் கொண்டளிக்கு-மெல்லப்
பசியளிக்கு மூத்தோரைப் பாலர்களை நாளு
முசியாமலே வளர்க்கு முன்.

(இ-ள்.) நல்லமணிச்சம்பா அரிசி அதிமூத்திரத்தை விலக்கும், அதிசுகத்தால் உடலையும் விருத்தர் பாலர்களையும் வளர்க்கும் என்க.

வளைதடிச்சம்பா அரிசியின்குணம்.

வளைதடிச் சம்பாவிற்கு வாதபித்த முண்டா
முளையுமடி பொருமி யுப்புங்-கொளகொளெனத்
தானே கரப்பானுந் தாங்கொணு மந்தமுமாந்
தேனே பிதனைத் தெளி.

(இ-ள்.) தேனனையமொழியாளே வளைத்தடிச்சம்பா அரிசிக்கு வாதபித்ததொந்தம் வயிறு உளைதலுடன் உப்பிசம் கரப்பான் மிகு மந்தம் இவை உண்டாம். 851

கோரைச்சம்பா அரிசியின் குணம்

கோரைச் சம்பாநற் குளிர்ச்சியென்பார் பித்தத்தைப்
பேரா வழலைப் பிரிததோட்டுக்-தீராத
மேகமொடுதினவை வீட்டுஞ் சுகங்கொடுக்கு
மேகமுறை குழலாய் விள்.

(இ-ள்.) மேகமுறைகின்ற கூந்தலையுடையாளே! கோரைச்சம்பா அரிசி பயித்தியம் உட்சூடு பிரமேகம் கமைச்சல் இவைகளை நீக்கும் சவுக்கியந்தரும் குளிர்ச்சி யென்பார். 852

குறுஞ்சம்பா அரிசியின் குணம.

குறுஞ்சம்பா பித்தங் குடியிருக்கச் செய்யும்
வெறுங்கரப்பா னுண்டாக்கு மெய்யி-னுறுங்கச்செய்
வாதமருள் வாயுவினை மாற்றும்போகங் கொடுக்குஞ்
சீதவனசத் திருவே செப்பு.

(இ-ள்.) குளிர்ந்த தாமரையையொத்த வனசத்திருமாதே குருஞ்சம்பா அரிசிபித்தம் கரப்பான் சுக்லதாது இவைகளைவிருத்திசெய்யும் சரீரத்தில் குத்துகின்ற வாதரோகத்தை நீக்கும். 853

மிளகுச்சம்பா அரிசியின் குணம்.

மிளகுச் சம்பாவரிசி மென்சுகத்தைச் செய்யு
மளவில் பலநோயை யகற்றுங்-களகளெனத்
தீபனத்தைத் தூண்டிவிடுந் தீராவலி தொலைக்குஞ்
சோபனத்தைச் செய்நகையாய் சொல்.

(இ-ள்.) சோபனத்தை செய்கின்ற நகையாளே! மிளகுச்சம்பா அரிசி சவுக்கியத்தைக் கொடுத்துத் தீபாக்கினியை வளர்க்கும், மகாவாத முதலிய பலவித ரோகங்களைப் போக்கும். 854

### சீரகச்சம்பா அரிசியின் குணம்.

*சீரகச் சம்பாவரிசி தின்னச் சுவைதரும்*
*பேரகத்து வாதமெல்லாம் பேருங்காண்-பாருலகி*
*லுண்ட வுடனேபசியு முண்டாகும் பொய்யலவே*
*வண்டுறுறை பூங்குழலே வாழ்த்து.*

(இ-ள்.) *வண்டுகள் மொய்க்குங் கூந்தலாளே! மதுரமுள்ள சீர கச்சம்பா அரிசியை உண்டவன் மீளவும் உண்பதற்கான தீபன முண் டாம் அற்பவாதரோகங்கள் நீங்கும்.* 855

### காளான்சம்பா அரிசியின் குணம்.

*காளான் சம்பாவரிசி கல்லையொத்த மாபலத்தைக்*
*கேளாமலே கொடுக்குங் கேளின் னும்-நீளு*
*மாவிலத்தைப் போக்கிவிடு மாரோக்கி யத்தை*
*நாளிலக்கிற் செய்துவிடு நாடு.*

(இ-ள்.) *காளான் சம்பா அரிசி சரீரத்திற்கு மலைபோன்ற வுறுதி யையும் சவுக்கியத்தையும் தரும், சிற்சிலவாதரோகங்களை நீக்கும்.*

### மைசம்பா அரிசியின் குணம்.

*மைச்சம்பாத் தண்டுலத்தால் வாயாநீர் போயொழியும்*
*வெச்சென்ற வாதபித்த மெய்யைவிடு-நச்சுந்*
*தனிவாயு விஞ்சரக்குஞ் சர்த்தியும்போ மின்பக்*
*கனிமொழியே நன்றாகக் காண்.*

(இ-ள்.) *இன்பந்தருங் கனிபோன்ற மொழியையுடைய பெண் ணே! மைச்சம்பா அரிசியினல் அரோசகம் வாதபித்ததொந்தம் தனி வாதகோபம் வாந்தி நோய் ஆகியவைபோம் என்க.* 857

### கோடைச்சம்பா அரிசியின் குணம்.

*கோடைச் சம்பாவரிசி கொண்டாற் றிரிதோஷ*
*வாடைக் கதிக வலியுமுண் டோ-நீடு*
*முடம்பினுள்ள நோயெல்லா மோதாம லேகுங்*
*கறுப்பினுயர் வார்குழலே காண்.*

(இ-ள்.) *கறுத்த கூந்தலையாளே! கோடைச்சம்பா அரிசியையுண் ணில் முத்தோஷத்தாற் பிறந்தவாதவலியும் சரீரத்திலுள்ள சிற்சில நோய்களும் விலகும் என்க.* 858

### காடைச்சம்பா அரிசியின் குணம்.

காடைச் சம்பாவரிசி கண்டுதரி சித்தவர்க்கு
நீடுற்ற வேகவன லிற்குமே-மாசடைப்
பறவைபோ னேயும் பறக்கும பலத்தி
னுறவை யெவர்சொல்வா ருறை.

(இ-ள்.) காடைச்சம்பா அரிசிக்கு பிரமேகசுரமும் சில அற்ப நோய்களும் நீங்கும். சுக்கிலதாது விருத்தியும் பலமுமுண்டாம்.

### குன்றிமணிச்சம்பா அரிசியின் குணம்.

குன்றிமணிச் சமபா கொணடா லனிலமறும்
வென்றி தருபல மிருக்குங்காண்-துனறியநோ
யெல்லாம் பறக்குமுறை யிந்திரிய புஷ்டியுண்டாம்
நல்லா ரறிய நவில்.

(இ-ள்.) குன்றிமணிச்சம்பா அரிசியைபுண்ணில் அற்பவாதரோகமுதலிய சிலநோய்கள் நீங்கும் சரீரபலமும் சுக்கிலதாதுவுமுண்டாம்

### அன்னமழகி அரிசியின் குணம்.

அன்ன மழகியரி யாரோக்கியங் கொடுக்குந்
தின்னவெகு ருசியாஞ் செப்பக்கே-ளிநநிலத்து
நோயனைததுக னுளாய் நொறுங்கத் தகர்த்துவிடுத்
தீயனலைப் போசகுந் தெளி.

(இ-ள்.) மிகுமதுரமுள்ள அன்னமழகியரிசி சகல சுரங்களையும் பித்தவெப்பததையும போக்கித் தேகததிற்குச் சுவுக்கியத்தைக்கொடுக்கும் என்க, அரி-அரிசி, நோய்-சுரம. 361

### பச்சை அரிசியின் குணம்.

சுத்த வனிலமந்தத் தோன்றுமெரி பித்தம்போம
பத்தியத்தி லெண்ணுர்கள் பண்டிதர்கண்-மெததவுமே
வைச்சு சுமைதாங்க வலியுண்டாக தேகத்திற்
பச்சரிசியைப் புசிததுப் பார்.

(இ-ள்.)பத்தியத்தில் விலக்கான பச்சரிசியினால் தனிவாதகோபமும் அலசரோகமும் மிகுந்தபலமு முண்டாம் பித்தயெரிச்சல்போம்.

### புழுங்கல் அரிசியின் குணம்.

புழுங்க லரிசியது புத்திரர்க்கு மாகு
மழுங்குகின்ற வாயுவிற்கு மாகு-மொழுங்காய்

நிலைத்த பத்தியத்திற்கு நீட்டலா மெய்க்குப்
பலத்தைக் கொடாததனைப் பார்.

(இ-ள்.)புழுங்கலரிசி குழந்தைகள், வருந்துகின்ற வாதரோகியர் அரும்பத்தியமுள்ளவர் இவர்களுக்குதவும் ஆனாலுடலுக்குறுதியில்லை

பழமை அரிசியின் குணம்.

பழவரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கு மாகு
மழன் மிகவுமாகு மருநதி-விழிலைப்போ
லாகு முடற்குளிர்ச்சி யையமறு நோயுற்றோர்க்
காகும் பன்னோய்போ மறி.

(இ-ள்.) பழய அரிசி விருத்தர் பாலர் ரோகியர்களுக்குமாகும், இவ்வன்னத்தையுண்ணில் பசியும் குளிர்ச்சியுமாம் சிற்சில நோயும் கபமும் நீங்குமென்க. 864

சவ்வரிசியின் குணம்.

மேகமத்தி மேகஞ்சீழ் மேகரத்த மேகமும்போக்
தேகத்திற் றுதவுஞ் சிலேத்மமுண்-டாகுமெழிற்
செவ்வரி படர்ந்தவிழித் தேமொழி மாதேயுலகிற்
சவ்வரிசியின் குணதனைச் சாற்று.

(இ-ள்.)செவ்வரிபடர்ந்தவிழியையுடையதேனனையமொழியாளே சவ்வரிசியினால் பிரமேகம் அஸ்திசிராவரோகம் வெண்மேக மிவை போம் சுக்கிலமும் கபமும் விளையுமென்க. 865

மூங்கில் அரிசியின் குணம்.

உதிரபித்தந் தீர்க்கு மோமங்கு சுரத்திற்கு
மதிரவரு கண்ணோ யதற்கும-புதிதாகக்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ்சிலம்பார் மூஙகி லரிசி.

(இ-ள்.)பாயசம் பலகாரமுதலியவை செய்வதற்கான மூங்கிலரிசி ரத்தபித்தரோகம் விபரீதசுரம் நேத்திரநோய் இவைகளை விலக்கும்.

திப்பிலி அரிசியின் குணம்.

திப்பிலியின் றண்டுலஞ் சிலேத்மத்தைப் போக்கிவிடு
முப்பிசத்தை மேகத்தை யோட்டுங்காண்-தப்பாமல்
வாதசுரந் தணிக்கு மாகபரோகந் தொலைக்குந்
தாதுவை வளர்ப்பிக்குந் தான்.

(இ-ள்.) திப்பிலியரிசி கபம் வயிற்றுப்பிசம் மேகம் வாதசுரம் க்ஷயரோகம் இவைகளைப்போக்கும் விந்துவைப்போஷிக்கும்.

கோதுமை அரிசியின் குணம்.

*கோதுமையி னற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்குந்*
*தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச்-சேதிக்கும்*
*பித்த மளிக்கும் பிரமேகத்தைக் கெடுக்கு*
*முத்தமமா மென்றே யுரை.*

(இ-ள்.) கோதுமை அரிசி நல்லபலம் சுக்கிலம் பித்தம் இதுகளை விருத்திசெய்யும் தனிவாதகோபத்தையும் பிரமேகத்தையும் நீக்கும்.

கேழ்வரகின் குணம்.

*சுத்த வனிலந் தன்னைத் தோன்றுவிக்கு மல்லவெளிற்*
*பித்த மனிலத்தைப் பிறப்பிக்குஞ்-சித்ரமலத*
*தாழ்குழலே நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற*
*கேழ்வரகின் செய்தியிது கேள்.*

(இ-ள்.) அழகிய மலரையணிந்த தாழ்ந்த கூந்தலேயுடைய பெண்ணே! பஞ்சந்தாங்கி யென்கிற கேழ்வரகு சுத்தவாதததை வருவிக்கும் அல்லது பிததவாதத்தையாவது உண்டாக்குமென்க. 869

கம்பு அரிசியின் குணம்.

*கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவர்காண்*
*பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும்-வெம்பு*
*முடலின் கொதிப்பகற்று முட்பலமு முண்டாக்கு*
*மடலயிற்கண் மாதே யறி.*

(இ-ள்.) கொலைத்தொழிலை புரிகின்ற கூறியவேல்போலுங் கண்களையுடையமாதே! கம்பு அரிசி நெருங்கிய நமைச்சலையும் சிரங்குகளையும் வீரியத்தையும் செய்யும சரீரவெப்பமகற்றும் குளிர்ச்சியென்பர்.

சாமை அரிசியின் குணம்.

*உடலிறு தாக சுரமோடு மேகம்போ*
*மடலுறு கால்வீக்க மகலுங்-கடலிவிறை*
*யாமை யணையபதத் தன்னமே மேனியிடுஞ்*
*சாமை யரிசிக்குத் தான்.*

(இ-ள்.) சாமை அரிசிக்கு தாகசுரம் பிரமேகம் மகத்வாதநோய் சோபாரோகம் இவைநீங்கும் தேகபுஷ்டியுண்டாகுமென்க. 871

### தினை அரிசியின் குணம்.

சந்நி சுரகபமுந் தனிவாத முமபோகுந
துன்னுபித் தத்தைமிகத் தூண்டிவிடுந-தின்னப்
பினையும் பசியாம் பெருவிகக நீங்கும
தினையரிசி யினகுணத்தை தேர்.

(இ-ள்.) தினை அரிசி சந்நிபாதசுரம் கபரோகம் சுத்தவாதம் சோபாரோகம் இவைகளைப் போககும் பித்தத்தையும பசியையுமுண்டாக்கும. 872

### செஞ்சோள அரிசியின் குணம்.

செஞ்சோளந் திமிருற சிறுசிரங்கு புண்ணுகளும
விஞ்சு மெழிலான மேனிகெடு-நெஞ்செரிநு
மந்தமிகுந் தீபனம்போ மாறுக் கரப்பானுங்
கநதமலர்ப் பூங்குழலே காண்.

(இ-ள்.) செஞ்சோள அரிசியால் அற்பகிரநதிகள் விரணஙகள் மந்தரோகம் கரப்பான் இவைகளதிகரிக்கும அழகும் பசியுமவிலகும்.

### கருஞ்சோள அரிசியின் குணம்.

சொறியைச் சிரஙகைத் தொலையாத புண்ணை
மறுவிலா மெய்யில் வளர்க்கும-குறியா
வழகை கெடுக்கு மசதியை யுண்டாக்கும
பழகு கருஞ்சோளமது பார்.

(இ-ள.) கருஞ்சோள அரிசி நமைச்சல் கிரந்தி விரணம் அயர்வு இவைகளை உண்டாககும் மாறுதிறமான அழகைத்தருமென்க.

---

## காய்த் தானியவகை

### துவரையின் குணம்.

பஞ்சமுட்டிக் காகுமரும பத்தியவி யஞ்சனமாம
விஞ்சுசுரஞ் சநநிகட்கு மெத்தநன்றும-பஞ்சின்
விழுந துவரையாது மெலிநதாரைத தேற்றுந
கொழுந்துவரை யாயினீ கொள்.

(இ-ள்.) நறுநதுவரை லங்கனமுடிவிற் சேர்க்கிற பஞ்சமுட்டித் தாரக பத்தியத்திற்கும் உப்பில்லாப் பத்தியத்திற்கும் சுரததிற்கும் சந்நிக்கும் பஞ்சணையே கிடையாக எழுந்திருக்கச் சகதியில்லாமல் மெலிநதவர்க்குமுதவும் பஞ்சமுட்டி விவரத்தைகஞ்சிவகையிற்காண்க

உழுந்தின் குணம் இதனை-உளுந்து என்பர்.

செய்ய வுழுந்திற்குச் சிலேத்மவனிலம் பிறக்கும்
வெய்ய பித்தம்போமந்தம் வீறுங்காண்-மெய்யதனி
லென்புருக்கி தீரு மிடுக் கதிபலமா
முன்பு விருத்தியுண்டா முன்.

(இ-ள்.) நல்ல உழுந்திற்கு கபவாதமின்ரம் அலஜம் இடுப்புறதி மிகுவீரிய மிவையுண்டாம் பயித்தியமும் எலும்புருக்கியும் போகும்.

கடலையின் குணம்.

கடலை வயிறாதற் சன்று றகஞ்செய்யுங்
குடலைவலிப் பித்து மலங்கொட்டுந்-திடமருந்தைச்
சேதமுறப் பண்ணுந் தியக்கமொடு வாயுவையுங்
போத வழைக்கும் புகல்.

(இ-ள்.) கடலை வயிறுப்பிசம் பித்ததாகம் குடல்நோயுடன்கூடிய கிரகணி மயக்கம் மூலவாயு இவையுண்டாம் நன்மருந்தை முறிக்கும்.

மொச்சைக்கொட்டையின் குணம்.

அனிலபித்த வைய மனைத்தையு முண்டாக்குந்
தொனியெடுக்க வாயுவினைத் தூண்டுந்-தனிவேள்
குனிக்குஞ் சிலைப்புருவ கோதையே காணு
மினிக்கு மொச்சைக் கொட்டையே.

(இ-ள்.) விற்போன்ற புருவக்கோதையே! இனிப்புள்ள மொச்சக் கொட்டையானது திரிதோஷங்களையும இறைச்சலைத் தருகின்ற ஆவி ருதவாயுவை உண்டாக்குமென்க. 878

பெரும்பயற்றின் குணம்-இதுவே பெருங்காராமணி.

பெரும்பயற்றை மேன்மேலும் பேணியுண வார்க்குப்
பெருஞ்சட ராக்கினிபோம் பின்னும்-வருமந்தம்
பேதி யதிகரிக்கும் பேராக் கபங்கதிக்கும்
வாதகுடி லம்[illegible] வாழ்த்து.

(இ-ள்.) பெரும்ப[illegible]றை அதிகமாகத்தின்பவர்க்கு தீபாக்கினி கெடுவதுமன்றி அசீரணம் அதிசாரம் கபரோகம் வாதப்பிடிப்பு இவையுண்டாம். 879

சிறுபயற்றின் குணம்.

ஐயைப் பித்தத்தை யரோசகத்தைப் போக்கிவிடும்
வெய்ய வாதத்தை விளைவிக்கு-மைய

மறுவொழிந்த தூய வதிவதன மாதே
சிறுபயறு செய்யுஞ் செயல்.

(இ-ள்.) களங்கமற்ற சந்திரனையொத்த முகத்தாளே! சிறுபயறு கபகோபத்தையும் பயித்தியத்தையும் அரோசகத்தையும் போக்கும் பித்தவாதத்தை உண்டாக்குமென்க. 880

பச்சைப்பயற்றின் குணம்.

பச்சைப் பயறதுதான் பாரிற பயித்தியத்தை
யச்சமற நாளு மகற்றுங்காண்-கச்சுலவு
கொங்கைமட மாதே குளிர்ச்சியெனபா ரெப்போதுந
தங்கு வாதத்தைத் தரும்.

(இ-ள்.) கச்சணிந்த கொங்கையையும் மடமைத் தனத்தையுமுடைய மாதே! பச்சைப்பயறு பித்தத்தை நீக்கும் வாயுவைத்தரும் சீதளம் என்பர். 881

தட்டைப்பயறு வெண்பயறு கரும்பயறுகளின் குணம்.

தட்டைப் பயறுமந்தஞ் சன்னிதரும் வெண்பயறு
முட்டியே மெய்யின் முதிர்வாதக்-கட்டருக்குங்
காணுங் கரும்பயறு கம்மு சீர் வாதமுடன்
கோணு வாதத்தையும் போக்கும்.

(இ-ள்.) தட்டைப்பயறு அக்கினிமந்தத்தையும் சந்நிபாதத்தையும் உண்டாக்கும் வெண்பயறு ஓடுவாதத்தைப் போக்கும் கரும்பயறு சிலேத்மவாதத்தையும் பங்குவாதரோகத்தையும் விலக்கும். 882

கொள்ளின் குணம்.

குடல்வாதங் குன்மமுண்டாங் கொண்மருந்தே நாசு
மடலேறு பித்தமிக வாகும்-கடுகடுக்த
வாதசீ ரேற்றமொடு மன் னுகுளிர் காய்ச்சலும்போஞ்
சாதிநறுங் கொள்ளுக்குத் தான்.

(இ-ள்.) நறியகொள்ளுக்கு பீசவாயுவும் பித்தகுன்மம் பயித்பமுமுண்டாம் வாதவலி சீரேற்றம கனிர்ச்சுரம் மருந்துமிவைபோம்.

எள்ளின் குணம்.

எள்ளுமருந் தைக்கொடுக்கு மேறனலாந் திண்மைதரு
முள்ளிலையைச் சேர்க்கு முதிரத்தைத்-தள்ளுமிரு
கண்ணுக் கொளிகொடுக்குங் காசமுண்டாம் பித்தமுமாம்
பண்ணுக் கிடர்புரியும் பார்.

(இ-ள்.) அபத்தியமாகிய எள்ளு உஷ்ணம் பலம் கபம் காசரோகம் பித்தநோய் இவைகளை வருவிக்கும் சூலிதொனியைக்கெடுக்கும் ஸ்திரீகளின் வயிற்றில் கட்டுப்பட்ட உதிரத்தை வெளிப்படுத்தும் விழிகட்கொளியாம். 894

---

## இறைச்சி வகை

---

### வெள்ளாட்டு இறைச்சியின் குணம்.

வெள்ளாட்டு கோயெல்லா மோடுமுடல் பருக்குந்
தள்ளாடு வாதபித்தஞ் சாநதமா-வெள்ளாட்டி
னற்கறியை யுண்பார்க்கு நாடுகய ரோகமும்போ
மற்குரிய வன்பலனும் வாழ்த்து.

(இ-ள்.) வெள்ளாட்டிறைச்சியை உண்பவர்க்கு உட்சுரங்களும் வாதபித்தியமும் க்ஷயமும்போம் சரீரபுஷ்டியும் வீரியமும் விளையும்

### கொடியாட்டு இறைச்சியின் குணம்.

கொடியாடு நற்கறியாங் கொள்ளும் வகைகேளாய்
தடியாமற் பூப்போற் சமைத்து-விடிகாலே
கொண்டா லிடுப்புவலி குற்றிருமல் வெட்டையும்போங்
கண்டாலும் வாதமறுங் காண்.

(இ-ள்.) கொடியாட்டிறைச்சியைப் பூப்போல் பாகஞ்செய்து காலையிலுண்ணில் சகலவிருதவாயு காசம உஷ்ணவாயு இவைபோம்.

### வரையாட்டு இறைச்சியின் குணம்.

பத்தியத்திற் கொவ்வும் பாரரோயைத் தூரத்து
மெத்த மெலிந்தார் மெலிவகற்றுஞ்-சுத்தமண
மூட்டுவரை யொத்தமுலை யொண்டொடியே பன்மூலிக்
காட்டுவரை யாட்டுக் கனி.

(இ-ள்.) மலைகளையொத்த மனம்பொருந்திய முலைகளையுடையப் பெண்ணே! வனமூலிகைகளைத் தின்கிற வரையாட்டிறைச்சி கனத்த ரோகங்களையு மிகுந்த தூர்ப்பலத்தையும் போக்கும் பத்தியக்கறியாம்

### செம்மறியாட்டு இறைச்சியின் குணம்.

அம்புவியிற் செங்கரப்பா னண்டிவது மாத்திரமோ
செம்மறி யாட்டுக்கறியைத் தின்றக்காற்-கொம்பி

*விருந்து மதித்தாற்போ லெப்பிணியு முண்டா*
*மருந்துயர நீங்கா தறி.*

(இ-ள்.) செம்மெறியாட்டிறைச்சியை உண்ணில் செங்கரப்பானும் முன்பில்லாத பலவித ரோகங்களும் சகல துன்பமு முண்டாம்.

### பள்ளையாட்டு இறைச்சியின் குணம்.

*மந்தமிகுந் தீபனம்போ மாறுவரோசகமாந்*
*தொந்தநோ யெல்லாந் தொடருங்காணிந்து நுதன்*
*மானே கபமுயரும வன்பள்ளை யாட்டுக்குத்*
*தானே மிகும்வாயு தான்.*

(இ-ள்.) மூன்றும் பிறையையொத்த நெற்றியை யுடையவளே! பள்ளையாட்டிறைச்சிக்கு அலஜம் மந்தாக்கினி நீங்காத அருசி திரிதோஷமிஸ்ரம் கபகோபம் வாதாதிக்க மிவைகளுண்டாம். 889

### குறும்பாட்டு இறைச்சியின் குணம்.

*குறும்பாட் டிறைச்சிதனைக் கொண்டார்கட்கெல்லா*
*மெறும்பார் சொறிசிரங்கு மெய்து-மிறங்குங்*
*குடல்வாதஞ் சூலை கொடுமெனிலக கூட்ட*
*முடனே யடருமென வோர்.*

(இ-ள்.) குறும்பாட்டிறச்சியை உண்பவர்க்கு எறும்புமொய்க்கின்ற நமைக்கிரந்தியும் பீசவாயுவும் வாதவருக்கமு முண்டாம். 890

### மான் இறைச்சியின் குணம்.

*மான்கறி யுண்டார்தமக்கு மாதொத்த நோய்க்கபநோ*
*யூன்பகந் தரங்கழலி நூதையொடு-தான்பரவு*
*வாதநமையும்விட்டு வாங்குங் கண்ணிற்புகையா*
*மோதுபித்தம் வீறுமென வோர்.*

(இ-ள்.) மானிறைச்சிக்கு தொந்தநோய் ஈளை மாமிசபகந்தரம் கழல்வாயு வாதப்புடை இவைபோம் கண்புகைச்சலும் பித்தமாம்.

### கலைமான் இறைச்சியின் குணம்.

*தேகப் பிடிப்பகலு வெட்டை யனலுமறும்*
*போகமுறுப் பலனும் பூவையரே-தேகத்திற்*
*பித்த வாதங்களறும் போர வழலையும்போந்*
*தத்துகலை மான்கறிக்கு தான்.*

(இ-ள்.) பெண்ணே! கலைமானிறைச்சிக்கு மேகவாதப்பிடிப்பு வெள்ளை சுரம் பயித்தியவாதம் உள்ளழலை இவைபோம் விந்துவும் சரீரபலமு முண்டாம். 392

கடமான் இறைச்சியின் குணம்.

உடல் வலுவாகி யேங்கிப் பருக்குங்
குடலிலதி வாதங் குதிக்கும-வடமார்
கடமா மெனுங்கொங்கைக் காரிகையே கானக்
கடமா னிறைச்சியுணுங் கால்.

(இ-ள்.) கச்சணிக்த குடம்போன்ற தனங்களையுடைய காரிகையே! காட்டிலுள்ள கடமானிறைச்சியை யுண்ணில் சரீரம் வன்மையோடு செழித்துத் தூலிக்கும் குடல்விருத்தி ரோகம் உண்டாகும்.

ஊர்ப்பன்றி யிறைச்சியின் குணம் விருத்தம்.

வாதபித் தங்கள்சேரு மருவிய புண்ணுமுண்டாந்
தாதுவுங் கபமும்பொங் குந் தாங்கொணு-வசதியாகும்
வாதுற வனந்தநோய்கள் வளர்ந்தெழுந் துன்பமெய்து
மோதியுண் மருந்துநாச மூர்ப்பன்றிக்கறி யுண்பார்க்கே.

(இ-ள்.) ஊர்ப்பன்றி யிறைச்சியை யுண்பவர்க்கு வாதபித்ததொந்தம் விரணம் சுக்கிலம் சிலேஷ்மகோபம் விலவிலப்பு முதலியபலவித ரோகங்கள் மனோதுக்கம் ஒளஷதக்கெடுதி ஆகியவையுண்டாகும்.

காட்டுப்பன்றி யிறைச்சியின் குணம்.

ஏறிய வாதம்போகு மெழுப்பிடும் காசநோய்கள்
வீறிடும் விழிநோய்சீதம் விஷக்கடி-கிரந்தியுண்டாங்
கூறிடு மூலங்கிலங் குஷ்குடல் வாதகாசம
மாறிடு காட்டுப்பன்றி மாங்கிசந்தனை யுண்பார்க்கே.

(இ-ள்.) காட்டுப்பன்றி யிறைச்சியைத்தின்பவர்க்கு அதிகரித்த வாயுமூலம் சருமகிலம் குதப்பிரமஸரோகம் குடல்விருத்தி இவைநீங்கும் இருமல் நேத்திரநோய் கபம் விஷக்கடி விரணமிவையுண்டாகும்.

முள்ளம்பன்றி யிறைச்சியின் குணம்.

காட்டுப் பன்றிக்குணமுங் காயமெல்லா முள்ளை
நீட்டுப் பன்றிகுணமு மேயொன்றாய்க்-காட்டுகினு
மிப்பன்றிக் கங்க மிறுகுவதா லிப்பன்றிக்
கெப்பன்றியு மிகரோ வெண்.

(இ-ள்.) காட்டுப்பன்றி முட்பன்றி இவ்விறைச்சிகள் குணத்தில் நன்றாயிருந்தாலும் முட்பன்றியால் வண்மைமிகுதலால் எந்தப்பன்றியும் நிகரல்ல. 896

முசல் யிறைச்சியின் குணம்-விருத்தம்.

கடுகிய நடையுண்டாகுங் கனத்ததோர் பித்தமேகு
மூடிகிய விளைகாச மூதிர்ந்ததோர் சுவாசம்போகுஞ்
சடுதியில் வெருண்டேயோடுந் தனிமுசற் கறியினாலே
கொடுமயிற் கண்ணாய்வாநங் குறைந்திடு மலமிறங்கும்.

(இ-ள்.) கொடுமைபொருந்திய அயில்போலுங்கூறிய கண்ணையுடையபெண்ணே முசல்கறியால் விரைவாகிய நடைகள் உண்டாம், பயித்தியம் க்ஷயம் இருமல் மகாசுவாசம் வாயுவு மலச்சிக்கல் நீங்கும்.

உடும்பு இறைச்சியின் குணம்.

தொன்மைத் துவர்ப்பினிப்பாற் தூர்ப்பலம தடிப்புநன்மை
வன்மைக் கிராணிதலே வலிமிவைக-வின்மையுறு
மேற்றழல்புண் குட்டிகபமேகம்வெட்டை மூலமண்டங்
காற்றழல் விட்டிற்றடிக்குச் சாண்.

(இ-ள்.) இயல்பாகத்துவர்ப்பும் இனிப்பும்உள்ளஉடும்பு இறைச்சியினால் தூர்ப்பலம் வீக்கம் சொறி கிரகணதோஷம் சிரசு காதுகளில் வருத்துகின்ற பிணிகள் கனச்சூடு விரணம் குஷ்டம் க்ஷயம்பிரமேகம் வெள்ளை மூலம் குடல்வாதம வாதபித்தம பேதி இவை விலகும் தடி-உடும்பு. 898

புலி காடி சிறுபுலி இவ்விறைச்சிகளின் குணம்-விருத்தம்.

வருபுலி மாங்கிஷத்தால் மாறுமுன் மாதரோகங்
கரடிமாங் கிஷத்தால்வாதங் கபங்கெடும் வலிப்புநீங்குந்
திரிசிறு புலியிறைச்சி தீர்த்திடுஞ் சிலரோகத்தை
வரிவிழி மாதேயிந்த வகைபறிக தோதுவாயே.

(இ-ள்.) செவ்வரிபரந்த கண்களையுடையபெண்ணே! பெரும்புலியிறைச்சியினால் உன்மாத ரோகம்போம் கரடி யிறைச்சினால் வாயுவும் க்ஷயமும் வலிப்பாகிய மூர்ச்சாரோகமும நீங்கும் சிறுபுலி யிறைச்சிற்சிலரோகங்களை விலக்கும எனக. 899

மாடு முதலே இவைகளின் யிறைச்சித்குணம-வேண்பா.

கோமாங் கிஸத்தைக் குறித்துண்ட பேருடம்பி
லாமாவியாதிக் களவுண்டோ-வாம

மதலைக் குறுகக்கு வானனிவஞ் சீத
முதலைத் தசைக்கிருக்கு மோ.

(இ-ள்.) மாட்டிறைச்சியை உணவாகவுண்டால் சகலரோயும் உண்டாம் முதலை யிறைச்சியால் சிசுக்கள் சுக்கிருமல் வாயுவு கபம் விலகும்.

பூனையிறைச்சியின் குணம்.

பூனைக் கறியைப் புசித்தா லெழிணங்கே
மேனிக் கழகுண்டா மேல்விரணக்-தானகலுஞ்
சூடு மதிசரிக்குஞ் சோறியது மேன்மேனு
நீடுமென நாளு நினை.

(இ-ள்.) அழகிய தெய்வப்பெண்ணை போன்றவளே! பூனைக்கறியையுண்ணில் சரீர அழகும் வெப்பமும் ரத்தவிருத்தியும் உண்டாம் சருமதாதுவைப்பற்றிய கிரந்தி விலகும். 901

புனுகுப்பூனை இறைச்சியின் குணம்.

இடுப்பி லூரத்தி லெழுநோ யகற்றுங்
கடுப்புறு வாதத்தைக் கடுக்குந்-தொடுப்பி
லமிழ் தாதுவுநல் லரும்பசியு நல்குங்
கமழ் புனுகுப்பூனைக் கறி.

(இ-ள்.) மணமுள்ள புனுகுப்பூனை யிறைச்சி சகனவாதம் இருத்வாதம் மூலக்கடுப்பு இவைகளை நீக்கும். தாதுவையும் பசியையும் விளைக்கும். 902

கீரியிறைச்சியின் குணம்.

கிரி யிறைச்சிக்குக் கெம்பீர முண்டாகு
நீரிழிவு மேருமென்பார் நிச்சயமே-வீரியமாஞ்
சில்விஷம் விட்டேகுஞ் சிரங்கு சொரியகலும்
பல்லரணை போகும் பறந்து.

(இ-ள்.) கீரியிறைச்சிக்கு தைரியமும் சுக்கிலவிருத்தியும் உண்டாம், வெகு மூத்திரம் அற்பவிஷம் கிரந்தி சுமை பல்லரணைபோம்.

மரநாய் இறைச்சியின் குணம்.

மரநா யிறைச்சிக்கு வன்கிரந்தி மேக
முரமாவே யோடி யொளிக்கும்-விரைவாதஞ்
சூலைகன வாதந் தொலையுஞ் சுரம்போகு
ஞாலமிசை யிக்குணத்தை காட்டு.

(இ-ள்.) மாகாயிறைச்சிக்கு சிரகரு பிரமேகம் பீசவாயுகுலை நோய் மகா வாதரோகம் சுரம் ஆகியவைகள் ஒழியும் என்க. 904

### எலியிறைச்சியின் குணம்.

எலியிறைச்சி குன்மம் பீலிக முரநோய்
நலிவித் திரப்புண் ணமைச்சன்-மெலிவோடு
மீதுமட் டடாப்புளக மேவச்செய் யும்புரணத்
தாதுவுக்கும் புஷ்டிதருந்தான்

(இ-ள்.) எலியிறைச்சி குன்மம் பீலிகம் மார்புவலி பிளவைதினவு இவைகளை நீக்கும், பூரிப்பு வீரியவிருத்தி இதுகளைத்தரும். 905

### வெள்ளெலி யிறைச்சியின் குணம்.

சிதமையங் குன்மஞ் செரிமூலம் வித்திரிதி
பேதி தொந்தரோகம பீலிகம்போங்-தாதுவுமாஞ்
சேரு மூதிரமது தேகமெல்லாம பரவுஞ்
சாருமென்ற வெள்ளெலிக்குத் தான்.

(இ-ள்.) வெள்ளெலி யிறைச்சிக்கு குளிர்ச்சி கபநோய் குன்மமும் மூலநோய் வித்திரிதிக்கட்டி அதிசாரம கிரகணி முதலிய தொந்த நோய் பிலீகரோகம் இவைபோம் சுக்கிலதாதும தத்ததாதும்விளையும்.

### பெருச்சாளி இறைச்சியின் குணம்.

வாதபித்தங் தாட்பிடிப்பு வன்பீனசங் குஷ்ட
மோதுகிர நோயா டுமைகீடம்-பேதியிவை
போர்ந்தகல வோடும பெருச்சாளி யின்கறியாற்
நீர்ந்தவெழி லோவியமே செப்பு.

(இ-ள்.) அழகிய சித்திரப்பதுமை போன்றபெண்ணே! பெருச்சாளி யிறைச்சியால் வாதபித்தசிதாநதம சமவிஷர்தரசியவாதம் பீநசம் பெருவியாதி ரத்ததாதுவைப்பற்றிய நோய் கிருமி அதிசாரம் ஆகியவைகள் விலகும். 907

---

## பறவைக் கறிவகை

### கோழிக்கறியின் குணம்.

கோழிக்கறி நெருபபாங் கொள்ளின் மருந்துறம்வங்
கூழைக் கபெப்புமந்தங் கூறரச-மாழ்கிப்போம்
ஙீளுற்ற போக நிணக்கிரந்தி பித்தமுண்டாந்
தூளித்த மெய்யினேக்குஞ் சொல்.

(இ-ள்.) சூடுள்ள கோழிக்கறியை யுண்ணில் ஔஷதவேகம்மகா வாதம் சுவாசம் தேகக்கடுப்பு மந்தாக்கினி மூலம் இவைபோம் சுக்கிலம் கொழுப்புள்ள விரணம் பித்தம் இவையுண்டு உடம்பு இளைக்கும்

கருங்கோழிக்கறியின் குணம்.

குட்டங் கடிகிருமி கோரவாதக் கூட்ட
மட்டிடாச் சூலையறு மாதரசே-துட்ட
கிரந்தியொடு புண்வலிபோங்-கேளுட லூரக்கு
மருந்து கருங்கோழியூன் வை.

(இ-ள்.)பெண்கணுயகமே மருந்தாகிய கருங்கோழிக்கு குஷ்டம் காணுக்கடி புழு மகாவாதங்கள் சூலை சிறுசிறங்கு விரணம் வலிப்பு இவைபோம், உடல்வனுக்கும். 909

கானங்கோழிக்கறியின் குணம்.

உத்தமனே நோயனைத்து மோடு மிறுமலறும்
பத்தியமாங் கரப்பான பாருமே-முத்தவொளி
தானுங் கனிமொழியே சார்ந்த மறுவகலுங்
கானுங் கோழிக்கறியைக் காண்.

(இ-ள்.)மதுரம் பொருந்திய மொழியையுடையவளே கறியகானங்கோழிக் கறியால் வாதகபநோயினங்கள் காசம கரப்பான் வியங்கலாஞ்சனம் இவைபோம பததியததிற்குதவும. 910

வான்கோழிக்கறியின் குணம்.

போகுமிகு மெய்யிற் புளகிதம்வான் கோழிதனக்
காக மதிலைய மதிகமுசு-தேகமெல்லாந்
தானே கரப்பானுகுஞ் சாறற வுரிசையுமாந்
தேனே யிதனைத தெரி.

(இ-ள்.) தேனனையாளே! உரிசையையுடைய வான்கோழிகறிக்கு விந்துவும் மகிழ்ச்சியும்சிலேத்மபந்தமும் கரப்பானும் உண்டாமென்க

சம்பங்கோழிக்கறியின் குணம்.

வரட்சி சொறிசிரங்கு வன்கரப்ப னென் னுந்
திரட்சியொடு பலநோய் தீரும்-பொருட்சிகரி
கும்பக் கடாக்களிற்றின் கோடெனச்சொற் பூண்முலையாய்
சம்பக் கோழிக்கறிக்குத் தான்.

(இ-ள்.) மதயானைக் கொம்புபோன்று ஆபரமணிந்த முலையையுடையவளே சம்பங் கோழிக்கறிக்கு சொறிசொறப்பு சொறிகிரந்தி கரப்பான் முதலிய பற்பலரோகங்களும் நீங்கும் என்க. 912

### வாத்துக்கறியின் குணம்.

வாத்துக் கறியருந்த வற்றியுலர் புண்கிரந்தி
கோத்த கபமுங் குதிக்குங்காண்-ராத்திரியிற்
போக முறுதியுமாம பொல்லா வரோசகநோ
யாகமதி லாறு மறி.

(இ-ள்.) வாத்துக்கறியைபுண்ணில், கசிவுவறண்டு சிவந்தாறியவிரணம்கிரந்தி கோழைஅருசி அவை அதிகரிக்கும் சுக்கிலஸ்தம்பனமாம்

### கோழிமுட்டையின் குணம்.

வாதபித்தஞ் சேர்ப்பிக்கும் வன்றோடம் புண்போக்குந்
தாதுவை மெத்தத் தழைப்பிக்கு-மோது
கபத்தை யடக்குங் காப்பனுண் டாக்குவையு
மிபத்தையுறுங் கோழிமுட்டை யெண்.

(இ-ள்.) கோழிமுட்டை வாததோஷம் விரணம் கபப்பிணி இவைகளை நீக்கும் வாதபயித்தியம் சுக்ல தாது கரப்பானிவைகளுண்டாம்.

### காடைக்கறியின் குணம்.

கட்டிற் கிடப்பார்க்குக் காட்டிற் படுங்காடை
மட்டவிழுங் கோதாய் மருந்தன்றோ-விட்டமுறச்
சோறுபுகுஞ் சோபையறுந் துன்னோ யெலாமேகும்
மேறுமறுந் தேற்றுமதேன் விள்.

(இ-ள்.) தேனொழுகின்றமாலையணிந்த கூந்தலையுடையவளே! படுக்கையா யிருப்பவர்களைத் தேற்றுகின்ற காடைக்கறிக்கு அசனஞ் செல்லும் வீக்கமும் மெலிவினால் கிளைத்த சகல நோய்களும் போம்.

### கவுதாரிக்கறியின் குணம்-இதுவே சிவல்.

சிவலிறைச்சி பித்தஞ் சிலேஷ்ம மந்தம்வாதக்
கவலையற வோட்டியுடல் காக்கும்-புவனமதின்
மெய்க்குப் பலஞ்செய்யும் வீரியமு முண்டாக்குஞ்
சிக்கிய மலங்கழிக்குஞ் செப்பு.

(இ-ள்.) கவுதாரிக்கறி பயித்தியம் ஜலமந்தம் வாதவலி மலக்கட்டு இவைகளை நீக்கி வன்மை வீரியம் இதுகளை விருத்திசெய்து உடலை இரட்சிக்கும். 916

### ஊர்க்குருவியின் குணம் - விருத்தம்.

மருவிய திரிதோஷம்போ மறப்புருப புணர்ச்சியுண்டாம்
பெருகிய சுரமேகம்போம் புறந்திடு மிளமைமெய்யிற்
கருகிய வன்னநீக்கிக் கனகமபோ லொளிவுசேரு
முருவமுந் திரமாநாளு மூர்க்குருவி யின்றசைக்கே.

(இ-ள்.) ஊர்க்குருவிக்கறிக்கு வாதபித்தம் கபப்பிரகோபம் சுர வெட்டை கருமைநிறம் இவைநீங்கும் இடைவிடாத கோபம் வாலிபத்தன்மை சுவர்ணச்சாயல் தேகப்புஷ்டி இவை உண்டாம். 917

### வானம்பாடிக்கறியின் குணம் - வெண்பா.

வெட்டை யனலொடு வீறுபல நோயகலு
மட்டிலாக் காமம் வளருங்காண்-மட்டணையுற்
கானம் பாடிக்களிக்குங் காமரசப் பைங்கிளியே
வானம் பாடிக்கறி வறு.

(இ-ள்.) காமரசத்தைத தருகின்ற பசுங்கிளிபோலும் பெண்ணே! பொரித்த வானம்பாடிக் கறியால் ஆண் குறியால விழுகிற கீழ் வெப்புமுதலிய ரோகஙகளும் போம் வீரியவிருத்தி உண்டாம்.

### விச்சுளிக்கறியின் குணம்.

ஐயுடன் பித்த வரோசகத்தை மாற்றிவிடுஞ்
சையோக போகந் தழைப்பிக்கு-மெய்யாகப்
பத்தியம தாகும் பகவிச சுளிககுருவி
புதநமத்தி லுததமமா மோர்.

(இ-ள்.) பததியத்தில் உத்தமமாகிய விச்சுளிககறி கபரோகத்தையும பித்த அருசியையும் நீககும. விந்துவை வளர்ப்பிக்கும். 919

### தூக்கணங்குருவிக்கறியின் குணம்.

ஐய மருசி யகட்டின் மலமும்போககுக
துய்ய பசியையெல்லத தூண்டிவிடு-மெய்வன்
மிஞுத்த வழகுண்டா மென்பத்திய மாக
தனித்தூக் கணங்குருவி தான்.

(இ-ள்.) பத்தியத்திற்கான தூக்குணங் குருவிக்கறி, கபம்,அரோசகம் மலக்கட்டு இவைகளைநீக்கும் பசியையும் வனப்பையும்விளக்கும்

### கருங்குருவிக்கறியின் குணம் - இதுவே வலியன்.

வாதகா மாலையறு மாதே கபமும்போ
மூதுகா மாலைவிழுந் தோடுங்காண்-வாதுசெய்

வந்த கரப்பானுடனே மாறுஞ் சொறியும்போங்
குந்து கருங்குருவி கொள்.

(இ-ள்.) கருங்குருவிக்கறியை யுண்ணில், வாதகாமாலை விஷம் சிலேஷ்மம் ஊதுகாமாலை கரப்பான தீராச்சொறி இவைபோம் 921

சிட்டுக்குருவிக் கறியின் குணம்.

பூவிரணம் போகவிடும பொல்லாக் கிருமிகளைப்
பாவுமலத் தோடிறங்கப் பண்ணுங்காண்-பூவணையிற்
கட்டுற்ற மாதர்களைக் கைகுவிதனுக கொஞ்சுவிக்குஞ்
சிட்டுக் குருவித் திறம்.

(இ-ள்.) சிட்டுக்குருவிக்கறி, ஆண் குறிமலரின் புண்ணையும் மல கிருமிகளையும் நீக்கும, புணர்ச்சியில திருவாசுததையுண்டாக்கும்.

உள்ளான்கறியின் குணம்.

உத்தமாம் பத்தியத்திற் கொவ்வுமுள் ளான்கறிதான்
சத்தியங்காற் பித்ததத்தைச் சாந்திசெய்யு-முத்த
நகையீர் மேகம்போக்கு நற்பசி யுண்டாக்குந்
தகைமந்தந் தீர்க்குமிது தான்.

(இ-ள்.) முத்துப்போலும பற்களையுடைய பெண்ணே! பத்தியத்திற்கு உத்தமமாகிய உள்ளானகறி, வாதபித்ததொந்தம் பிரமேகம் அசீரணம் இவைகளை நீக்கும், நற்பசியைத்தரும். 923

* கோசு உள்ளான்கறியின் குணம்.

கோசுவுள்ளான் நன்கறியைக கூட்டியுண் பார்க்குப்
பசியெழும்பு மேகம் பறக்கும்-பசுபசத்து
நின்ற தினவகலு நீங்காத போகமுறி
மன்றலுறை வார்குழலே வாழ்த்து.

(இ-ள்.) வாசனை பொருந்திய நீண்ட கூந்தலை யுடையவளே! உள்ளான் கறியால் மிகு தீபனமும் சையோகபலமும் உண்டாகும், சிழ்ப்புரமேகமும் நமைச்சலும் விலகும் என்க. 924

கோரை உள்ளான்கறியின் குணம்.

நாட்டிலுள்ள பட்சிகளி னன்கிதுவே பத்தியமாங்
கூட்டிலுள்ள தோஷங் குலையுங்காண்-தாட்டிகமா
யாரென்ன சொன்னாலு மம்புவியி லோயோர்க்குக்
கோரை யுள்ளான்கறியைக் கூட்டு.

(இ-ள்.) பத்தியப்பறவைகளின் உத்தமமாகிய நற்கோரை உள்ளான்கறியால், சப்ததாதுகத தோஷங்கள்விலகும், இது பிணியாளர்க்குதவும். 925

மயில்கறியின்குணம்.

சூலைப் பிடிப்புகளைச் சோரிவளியைப் பித்தை
வேலைச் சிலேட்டுமத்தை வீட்டுமகாண்-ணூலொத்த
வற்பவிடை மாதே யனலா மயிலிறைச்சி
நற்பசி யுண்டாக்கு நவில.

(இ-ள்.) நூலிழைபோலுஞ் சிறிய இடையையுடையபெண்ணே! உஷ்ணமுள்ள மயில்கறி சூலைகளிற்குத்தல் வாதசோணிதம்கபபித்தம் அதிகபம் இவைகளை நீக்கும. தீபனததைததரும. 926

குயில்கறியின் குணம்.

நல்லதொரு பத்தியமா காடாது வாதபித்தஞ்
சொல்லரிது தானே சொறியேகும-வல்ல
குயிலருந்த மேகமபோங் குன்மவலி தீருந்
துயிலிமதி போகமுறுஞ் சொல்.

(இ-ள்.) மான்போலுங்கண்ணையுடையபெண்ணே! பத்தியத்திற்கான குயில்கறியையுண்ணில், வாதபயித்தியம் புடைபிரமேகம்வயிற்றுவலி இவைபோம். வீரிய விருத்தியாம். 927

கோக்குக்கறியின் குணம்.

கொக்கருந்த மேகமுண்டாங் கூடுமரோசக நோய்
மைக்குழலே புண்கரப்பான் வந்துறையு-மெய்க்கு
நியத்தமருந் துண்ணிலித னீள்கவிச் சாகாது
வயிற்றுக் கிருமிபோ மால்.

(இ-ள்.) கறுத்த கூந்தலையுடையவளே கொக்குக்கறியை யுண்ணில் சீழ்மேகம் அருசி விரணம கரப்பான் இவையுண்டாம். அதிகசவிச்சானத.ல் ஔஷததகட்கு இவ்வாடை உதவாது. 928

கருங்கொக்குக்கறியின் குணம்.

கருங் கொக்கின் றன்கறிக்குக்காணுக்கரப்பான்
மருங்கொக்கும் புண்ணும் வளரும்-பெருங்கிரந்தி
யுண்டாஞ் சிலேஷ்மம முலவுமுடல மெலாம்
வண்டார் குழலே வழுத்து.

(இ-ள்.) வண்டுமொய்க்கின்ற கூந்தலையுடையவளே! கருங் சொக்குக்கறிக்கு முன்பு இல்லாத கரப்பானும விரணமும் பருஞ்சிரங்கும் சரீரத்தில் நீரேற்றமும் உண்டாகும. 929

தாராக்கறியின் குணம்.

தாராக் கறியருந்தத் தாதுமிக வுண்டாகும்
போராக் கபம்தளரும் பெண்மயிலே-தீராத
வாந்திய ரோசகமும் வன்கரப்பன் புண்ணுமிகச்
சேர்ந்துவரு மிப்பலனைச் செப்பு.

(இ-ள்.) மயில்போலுஞ்சாயலையுடையவளே! தாராக்கறியையுண்ணில் சுக்கிலம் சிலேஷ்மம சர்த்தி அருசி கடுவன் சிரங்கு ஆகியவைகள் விருத்தியாகும் என்க. 930

நாரைக்கறியின் குணம்.

நாரைக் கறியருந்த நாறுகரப்பான் புண்ணு
மூரைத் தொடர்ந்துதொடர்ந் தோட்டுங்காண்-பாரித்த
மேகமொடு தாதம் விளையுமே நீரிழிவுக்
காகு மென்பார்க ளறி.

(இ-ள்.) நாரைக்கறியைத்தின்னில் சிழ்கரப்பான் கிரந்தி கபமேகம் வாதகோபம் இவை உண்டாம். அதிமூத்திரம்போகும். 931

ஆள்காட்டிப்பட்சிக்கறியின் குணம்.

ஆட்காட்டிப் பக்ஷிக் கடன்மேகம் போயொளிக்குந்
தோட்காட்டு வாதந் தொடராவே-வாட்கண்
ணரிவையே பத்தியத்திற் காகும் புவியிற்
றெரியமறை யில்லாமற் செப்பு.

(இ-ள்.) வாள்போலுங் கண்ணையுடையவளே! பத்தியபதார்த்தமான ஆள்காட்டிப்பட்சிக்கறிக்கு வாதப்பிரமேகமும் அமச்சரவாதரோகமும் ஒழியும் என்க. 932

கிருட்டிப்பட்சிக்கறியின் குணம்.

மருட்டு விழியுடைய மாதே புவிக்குட்
கிருட்டிக் கறியருந்திற் கேளாய்-மருட்டுபித்தம்
வாதங் கடுப்பு வளருமிரத் தக்கழிச்சற்
காதம்போம் வாந்தியறுங் காண்.

(இ-ள்.) கிருட்டிப்பட்சிக் கறியையுண்ணில் பயத்தைதராநின்ற பயித்தியம் வாயுவுகடுப்பு இவையுண்டாம். ரத்தபேதிவமனம்நீக்கும்.

### சூரைப்பட்சிக்கறியின் குணம்.

குட்டங் கிருமிகுன்மங் கோரவாதஞ் சோபை
அட்டம் பகந்தார துடைக்குங்கா-னிட்டமுறப்
பத்தியத்திற் காகும் பருகி லுரிசையுமாங்
கைத்திடாச் சூரைக் கறி.

(இ-ள்.) ருசியுள்ள சூரைக்கறி குஷ்டம் புழு வயிற்றுவலி மகா வாதம் வீக்கம் ஆறுவிரணம் பகந்தரம் இவைகளை நீக்கும். பத்தியத் திற்காகும் என்க. 934

### கிளுவைக்கறியின் குணம்.

பாலிலா மாதர்கட்குப் பாலுமுண்டாம் போகமுமாந்
தாலமிசை பித்தந் தரிக்குமோ-சாலச்
சிரங்குபுண்க ளெல்லாமே சீழ்வற்றி யாறு
மருங்கிளுவை யைத்தின் றறி.

(இ-ள்.)கிளுவைக்கறியைத்தினனில் மாதர்க்கு முலைப்பால்விருத் தியும் அதிகவீரியமுண்டாம. பயித்தியம் சிரங்கு விரணமும்போம்.

### மடையான்கறியின் குணம்.

அன்னநடை பின்னுசடை யங்கண்மட மாதேகேள்
வன்னமடை யான்கறியை மாந்தினர்க்குத்-தின்னு
கரப்பான் சொறிசிரங்குங் காணுமையவாத
முரப்பாக நீடு முறை.

(இ-ள்.) அன்னம்போலும் நடையையு பின்னற்சடையுமுடைய வளே! மடையான் கறியையுண்டவர்க்கு கடுவனும் நமைச்சிரங்கியும் வலுத்தசிலேஷ்மம் வாததொந்தமும் உண்டாகும். 936

### கூழைக்கடாக்கறியின் குணம்.

கெடுகொளி னீரிழிவை கேரரகக் கட்டு
மடலான சூலை யகற்று-மடுவாரும்
கூழைக் கடாக்கறிதான் கோரகரப்பான் புண்ணை
பாழ்த்தேகத் திருத்து மாய்.

(இ-ள்.)மடுக்களிலுள்ள கூழைக்கடாக்கறிநீடித்தவெகு நீரையும் கபச் சூலையையும் நீககும் வாதகரப்பானையும் விரணத்தையும்தரும்.

### நமிட்டேப்பட்சிக்கறியின் குணம்.

நமிடுகரப் பான்வாத காட்சோபை மாற்று
மமிர்தகுண மாமுரிசை யாகுஞ்-சமமுறைக்கி

லெல்லாக் கறிக்கு மிகி தின்பாகு மிக்கறிக்குப்
பொல்லாக் கயரோகம் போம்.

(இ-ள்.) சகலகறிகளைப்பார்க்கினும் ரட்சிக்குந்தன்மையும் மிகு மதுரமுள்ளகமிட்டிகெறி சரப்பான் வாயுவீக்கம் க்ஷயமிவைகள்நீக்கும்

சிவிப்பட்சிக்கறியின் குணம்.

வாராய் மடமானே வாதகப முண்டாகுஞ்
சேராச் சிறவிதனைத் தின்றக்காற்-போராத்
தினவு கரப்பான் கிரந்தி சேருமோ நாளுங்
கனவுறுதியாம் போகங் காண்.

(இ-ள்.) சிறிவிக்கறியையுண்ணில் வாதசிலேஷ்மமிஸ்ரம் புணர்ச்சித்திடமும் உண்டாம் தினவும் கரப்பானும் சிரங்கும்போகும்.

பொன்னுந்தட்டான்கறியின் குணம்.

மேக வழறணியு மிக்கவழ குண்டாகும்
போகமீருங் கரப்பான் போகுங்காண்-பாகான
பொன்னுந் தட்டான்கறியைப் போற்றியுண்ணி னற்சுவையா
மின்னுந் தேகம்புவியில் விள்.

(இ-ள்.) ருசியுள்ளபொன்னுந் தட்டான்கறியால் பிரமேகவெப்பும் கரப்பானும்போம். செழிப்பும் வீரியமும் தேஜசும் உண்டாம்.

கடல்இறைஞ்சிக்கறியின் குணம்.

பத்தியத்திற் கொவ்வுமித்தப் பாரிற் கடலிறஞ்சி
யுத்தமமா நோயனைத்து மோட்டுங்காண்-மெத்தச்
சொறிகரப்பான் வன்சிரங்கு தொன்மேகம் போக்கும்
செறிநரை நீக்குஞ்சுவையாஞ் செப்பு.

(இ-ள்.) பத்தியபதார்த்தமான கடலிறஞ்சிக்கறி நமைகரப்பான் கிரந்தி நீடித்த பிரமேகம் பலிதநோய் முதலிய நோய்களைபோக்கும்.

வெண்புறக்கறியின் குணம்.

வெண்புறு வாதபித்தம் வீறுகப மேகமிவை
திண்புவியை விட்டோடச் செய்யுங்காண்-பண்பரவு
வெண்குஷ்ட நீள்கரப்பான் மேய்வரட்சியும் போக்கும்
பண்புற்ற பத்தியமாம் பார்.

(இ-ள்.) பத்தியத்திற்கான வெண்புறுக்கறி வாதபயித்தியம் ஜலமேகம் விரணவெண்குஷ்டம் கரப்பான் சொறி இவைகள் நீக்கும்.

### பச்சை புறக்கறியின் குணம்.

இச்சைதரும் புன்முறுவ லேந்திழையே மாந்தர்மிகப்
பச்சைப் புறாவூன் பருகினற்-கொச்சைதரும்
வாதபித்த வையம்போ மாபலமுந் தாதுவுமா
மோது சீதங்காக்கு முன்.

(இ-ள்.) புன்னகையுடைய பெண்ணே! பச்சைப்புறாக்கறியை யுண்ணில் திரிதோஷதொந்தமும் பேதியும்போம், தேகபுஷ்டியும் வீரியவிருத்தியும் உண்டாம். 943

### மாடப்புறக்கறியின் குணம்.

உண்டால் பசியா முறைதாது வும்பெருகுங்
கண்டாலும் வாதங் கலங்குங்காண்-வண்டாருங்
காரின்மிகு மைக்கூந்தர் காரிகையே பத்தியமாம்
பாரின் மாடப்புறாவைப் பார்.

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கப்பெற்ற கறுத்த கூந்தலையுடைய வளே! மாடப்புறாக்கறியால் தீபாக்கினியும் சுக்கிலமும்பெருகும் வாத பிரமேகம் நீங்கும், இது பத்தியக்கறியாம் என்க. 944

### வரிப்புறக்கறியின் குணம்.

வரிப்புறாவின் றசையோ மாவுருசி யின்றாற்
றிரிப்புறு வாதபித்தந் தானு-மரிப்பான்
சோப ரோசகங்க டொடரா வெவர்களுக்கு
நீபா ரிலேயிதற்கு நேர்.

(இ-ள்.) உரிசையுள்ள வரிப்புறாக்கறியைத்தின்னில் வாயுவோடு கூடியபித்தமும் பலவித வீக்கங்களும் போகும். 945

### வன்னப்புறக்கறியின் குணம்.

ஈளை யிரைப்போ டிரத்தபித்தம் போக்கிவிடும்
வாளைவென்ற கண்ணாய் மலங்கழிக்கு-நாளுமோ
வன்னமூட்டும் பசியைமூட்டும் மருசியோட்டு நல்ல
வன்னப் புறாவை நுகர் வாய்.

(இ-ள்.) வன்னப்புறாக்கறி கோழை சுவாசம் ரத்தபித்தம் அருசி இவைகளை நீக்கும் அசனஞ்செலுத்தும பசியை தரும் மலந்தள்ளும்.

### மணிப்புறக்கறியின் குணம்.

கணிப்புறு வின்பக் களஞ்சியமே கேளாய்
மணிப்புறாப் பத்தியமாம் வாதப்-பிணிப்பறமுட்

கொண்டாற் கயங்தீருங் குன்ம ரோகங்களறுங்
கண்டாலு மையமபோங் காண.

(இ-ள்.) பத்தியத்திற்கான மணிப்புறுக்கறியைத் தின்னில் வாத பிடிப்பு க்ஷயம் வயிற்றுநோய்கள் கபாதிககம இவைபோம். 947

மனைப்புறுக்கறியின் குணம்.

பத்தியத்திற் காகாது பனமனைப் புறுக்கறிதா
னுத்த கரப்பான்சொறியை யுண்டாக்கு-மெத்தவுமே
நாவுருசி யாயிருக்கு நற்சுக்கிலம பெருக்குந்
தாவு கயல்விழியாய் சாற்று.

(இ-ள்.) பாய்கின்ற கெண்டைபோலுங் கண்ணையுடையவளே! நாவுக்குரிசையுள்ள மனைப்புறுக்கறி மருந்தை முறிப்பதுந் தவிர கரப்பான் சருமச்சொறி தாதுவிருத்தி இவைகளை உண்டாக்கும். 948

தவிட்டுப் புறுக்கறியின் குணம்.

ஓடுகரப்பான் சோபை யுட்சொறி காமாலைபித்த
மாடுபெரு மூச்சடைப்பும் போம்-நீடு
கவட்டுக் கலகவிழிக் காரிகையே நாளுந்
தவிட்டுப்புறுக்கறிககுத தான.

(இ-ள்.) வஞ்சநிறைந்த கண்களையுடையபெண்ணே! தவிட்டுப் புறுக்கறிக்கு பரவுகின்றகரப்பான வீக்கம் உப்புறநமைச்சல் காமாலை பயித்தியம் சுவாசததடை இவைபோம். 949

நீர்க்காக்கைகறியின் குணம்.

பாண்டோடு சோபை பருவயிறும் போங்கரப்பான்
மீண்டு சொறியு மொய்த்தவரை-நீண்டமத
னூர்க்காக்கு மாதரசே யோங்குபுலானாற்றமுறு
நீர்க்காக்கை தன்னை நினை.

(இ-ள்.) புலால்மணம் உளள நீர்க்காக்கைகறியால் பாண்டு வீக்கம் மகோதரம் இவைபோம் கடுவனும் தினவும் உண்டாம் என்க.

அண்டங்காக்கைகறியின் குணம்.

பித்தவெட்டை சோபையறும் பேதித்தெழுந் துடலி
லொத்தபெரும் பாண்டுவகை யோடுங்கா-ணித்தியமோர்
கண்டஞ்செய் காமிலமபோங் காக்கைக்கு ளோர்பிரிவா
மண்டங்காக்கைக்கறியா லாய்.

(இ-ள்.) காக்கையில் ஒருபேதமுள்ள அண்டங்காக்கைக்கறியால் பித்தமேகம் வீக்கம் பாண்டுரோகங்கள் காமாலை இவை போகும்.

கோட்டான்கறியின் குணம்.

கோட்டான் கறிக்குக் கொடும்பசியும் நோய்கடலை
காட்டா தடங்குமிது கைவல்யங்-காட்டானை
மாமதம்போற் காமமுறும் வன்மருந்திற் பத்தியமாம்
பூமியிலே யாவர்க்கும் போதி.

(இ-ள்.) மயிலனையாளே! பத்தியத்திற்கான கோட்டான்கறிக்கு மிருதீபனமும் சுக்கிலமும் அதிகரிக்கும் சிற்சிலநோய்கள் நீங்கும்.

## மீன் கறிவகை

விரால்மீன்கறியின் குணம்.

உடலை வளர்க்கு முறுபிணியைத் தீர்க்குங்
குடலுக் கதிகசுகங் கொடுக்குங்-கடலை
யுழக்கும் விராலைவிட்டிவ் வூர்க்குளத்துச் சேற்றை
யுழக்கும் விராலதனை யுண்.

(இ-ள்.) குளத்துவிரால்பிணியைநீக்கி உடலைவளர்த்துக்குடற்கு சுகந்தரும். 953

குறவைக்கறியின் குணம்.

முட்டு குடல்வலிபோ மூடிருமலேகுமலக்
கட்டிரக்கும் வாயருசி காணுங்காண்-முட்டத்
துறவைப் பெற்றோருந் துதிக்குமெழின் மாதே
குறவைமீனின் குணத்தைக் கூறு.

(இ-ள்.) சந்நியாசிகள் புகழ்கின்ற பெண்ணே! குறவைமீனால் குடலுக்குள் ஓடிக்குத்துகின்றநோயும் காசமும் போம் மலபந்தமும் அரோசகமும் உண்டாம். 954

அயிரைக்கறியின் குணம்.

உயிரை வளர்க்கு முடற்பிணியை நீக்கும்
மயிரை வளர்க்கும் ருசிமாற்றும்-வயிரச்
செயிரையுறுச் சற்குணநற் றெள்ளமிர்தே தேனாரு
மயிரை யெனுமீனது.

(இ-ள்.) அமிர்தமபோன றவளே! அயிரைமீன் உயிருக்குஆதார மாகிய சரீரத்தையும் ரோமத்தையும் வளர்க்கும தேக சாட்டியத்தை யும் அருசியையும நீக்கும். 955

இறல்கறியின் குணம்.

வாதமொடு மந்தமுறு மாருப பொருமன்மிகுஞ்
சீதம் விளையுந் தினவுண்டா-மாதே
யுதிரமிகப பெருகு மோகருமிறு லுண்டா
லெதிரிலகக ராவக்சமா மெண்.

(இ-ள்.) பெண்ணே இறால்கறியையுண்ணில் வாய்வு அக்கினிமாந் தம் வயிற்றுபிசம்சீதளமகமை ரத்தமமாமிசதாது இவைவிருத்தியாம்

கெண்டைமீன்கறியின் குணம்.

அண்டையினிற் பார்களுககு மாரோகிகவ காணும்
பண்டையுள நோய்முதிர்நது பாரிககும்-கெண்டையுண்டால்
வாயுவுமுண்டாகும் வயிறறுவலி யுஞ்சேரு
நீயு மறிவாய் நிசம.

(இ-ள்.) கெண்டைமீனைத்தின்னில் மிகுநதருசிபழமையாயடங்கி யுள்ள ரோகங்கள் வாதப்பிணி குனமம இவைகள் அதிகரிக்கும்.

சன்னக்கெண்டையின் குணம்.

மின்னை நிகருமிடை மெல்லியரே மேனியதா
சன்னமீ னுண்டாற தளராவா-முன்னைக
கரப்பானும புணணுங் கடிய கபமுமபோ
முரப்பாக நாளு முரை.

(இ-ள்.) மெலலியரே சன்னக்கெண்டைமீனை யுண்ணில் தேகத் தளர்ச்சி நீக்குவதுமன்றி கரப்பானுயவிரணமும் சிலேஷ்மாதிக்கமும் விலகும். 958

போராால்கறியின் குணம்.

வாராய் மடமானே வநத பிணியனைத்தும
பேராரான் மீனுக்குப் பினனிடையும்-பேரா
திருந்த பழமலம்போ மெய்துமாரோக்கிய
மருநதோடே யொக்குமென வை.

(இ-ள்.) மானனையவளே! மருந்துக்குச் சமமானபோரால்மீனுக்கு தேகத்திலுள்ள பலவிதரோகங்களும் பழமலக்கட்டும் நீங்கிச்சவுக்கிய முண்டாகும். 959

### சிற்றாரல்கறியின் குணம்.

சிற்றாரான் மீனருநஞ்ச் சிக்கு மலசலம்போ
முற்றகபங் கரப்பா னுண்டாகுஞ்-சற்றேதான்
மந்தமுறுந் தீபனம்போம் வாயிற சலமுறுங்
கந்தமலர்ப் பூங்குழலே காண்.

(இ-ள்.) மலரணிந்தகூந்தலையுடையவளே சிற்றால்மீனையுண்ணில் மலசலபந்தமும் பசியும் நீங்கும் சிலேஷ்மம் கரப்பான் அக்கினிமந்தம் வாய் நீரூறல் இவையுண்டாம். 960

### கச்சற்கருவாட்டுக் கறியின் குணம்.

வாதமது மப்பொழுதே வன்பித்த முண்டாகுஞ்
சீதமகலுந் தினவும்போங்-கோதாய்கேள்
கண்டாற் பசியெழுப்புங் கச்சற் கருவாடு
கொண்டாற் சுரமும்விடுங் கூடி.

(இ-ள்.) பெண்ணே கச்சற்கருவாட்டை யுண்ணில் வாதப் பிணி கபநோய் நமைச்சல் சுரரோகம் இவைபோம் கபபித்தமும் தீபனமும் உண்டாகும். 961

### உழுவைக்கறியின் குணம்.

முழுதும் புசிக்கலா முள்ளுமில்லை யந்த
வுழுவைக் குடர்பிணி விட்டோடும்-வழுவான
முன்மலமுஞ் சாறு முதிர்க்கரப்பா னுண்டாகும்
வன்முலையாய் நீயறிந்து வை.

(இ-ள்.)வலியகொங்கையையுடையவளே முள்ளில்லாப்பதார்த்த மாகிய உழுவைமீனுக்கு சரீரத்திலுள்ள பலவிதநோய்களும் பழைய மலமும்போம் கரப்பான் உண்டாம். 962

### வாளைக்கறியின் குணம்.

ஆளை வளர்க்குமதி யாண்மைதனை யுண்டாக்கும்
வாளையென்ற கன்மாதே வாயுவாம்-வேளை
யறியாம லுண்டா லணுகுமே வாதங்
குறியார்கள் வாளைக் குணம்.

(இ-ள்.) வாள்விழிமாதே! வாதகுணமுள்ள வாளைமீன் தேகத்தைச் செழுமையாக்கித் தாதுவிருத்தியைச் செய்யும் அகாலத்திற் புசிக்கில் வாயுவாம். 963

### சேல்கெண்டைக்கறியின் குணம்.

குடல்வாத சூலை கொடுக்குஞ் சேற்கெண்டை
யுடல்வாத மேகமுண் டாக்குஞ்-சடமீது
புண்ணுஞ் சிரங்கும் பொருந்திநிற்கச் செய்துவிடு
முண்ண மிகுசுவையா மோர்.

(இ-ள்.) அதியுரிசையுள்ள சேல்கெண்டைமீன் குடல்வாதக்குத்தல் வாதப்பிரமேகம் விரணம் சிரங்கு இவைகளை உண்டாக்கும்.

### கடல் கெளிற்றுக்கறியின் குணம்.

நெய்த்திருக்கு நொய்தநிருக்கு நீங்காத சுக்கிலமா
மொய்த்திருக்கும வன்கெளிற்றை யுண்டாககான்-மெத்தக்
கரப்பானும் புண்ணுங் கபமும பெருகுந்
தரைக்குள் ளவருக்குஞ் சாற்று.

(இ-ள்.)நெய்ப்பசையும் மிருதுவுமுள்ள கெளிற்றுமீனையுண்ணில் மாறுவீரியமும் அரைக்கடுவனுமவிரணமும் சிலேத்மமும் பெருகும்.

### ஓலைவாளைக் கருவாட்டின் குணம்.

ஆலைவாய்ப் பித்த மணுகாதா மம்புவிபி
லோலை வாளைக்கருவா டுண்டாக்காற்-சாலப்
பசியாரும பஞ்சாய்ப் பறக்குமே வாதம
புசியார்க் கிதனைப் புகல.

(இ-ள்.) ஓலைவாளைக்கருவாடுண்ணில் விஷத்தை நிகர்த்தப் பயித்தியமும் வாதப்பிணியும் நீங்கும விரையில் தீபனமுண்டாம். 966

### சுறக்கறியின் குணம்.

வாத கபமறுக்கு மன்னுகிடம் போககு
மூது குடலவாத மோடுங்கா-ணுதரவா
பெல்லாப் பிணிக்கு மிதமாகு நல்லசுறு
நல்லா ரறிய நவில்.

(இ-ள்.) நல்லசுறுமீன்கறி வாதகபதொந்தம் கிருமிநோய் குடல் விருத்தி இவைகளை நீக்கும், சகல பிணிகளையுஞ் சாந்தப்படுத்தும்.

### சுறக்கருவாட்டுக் கறியின் குணம்.

சூலை கிராணிகுன்மக் துட்டவதி சாரமிவை
வேலை யுலகை விடுத்தோடுஞ்-சால

வறுப்பசி யுண்டாகு மபத்திய மல்லாத
சுறுக்கருவா டுண்பார்க்குச் சொல்.

(இ-ள்.) பத்தியக்கறியாகிய சுறுக்கருவாட்டை யுண்பவர்க்குக் குத்தல் கிரகணி வயிற்றுநோய் வாதாதிசாரம் இவை நீங்கும் மிகு தீபனமாம். 968

### கொள்ளிக் கருவாட்டுக்கறியின் குணம்.

கொள்ளிக் கருவாடு கொண்டா லுடம்பெல்லாங்
கொள்ளிகொண்டு சுட்ட குறிப்பாகும்-விள்ளக்
கரப்பானும் புண்ணுங் கனசிரங்கும் பைய
வுரப்பா மழகுகெடு முன்.

(இ-ள்.) கொள்ளிக்கருவாடுண்ணில் உடலிற்றீப்பட்டாறிய வடுப் போற்றழும்பு கரப்பன் விரணம்கிரந்தி இவைபெருகும் அழகுநீங்கும்

### சன்னக் கூனிக்கறியின் குணம்.

சன்னக் கூனிக்கறியைத் தானருந்தி லக்கணமே
தின்னப் படுமன்னஞ் சீரணமாம்-பின்னும்
பசிக்கு மதிநெருப்பாம் பாரினிறை யெல்லா
நசிக்கு மெனவே நவில்.

(இ-ள்.) மிகுருசியுள்ள சன்னக்கூனியைத் தின்னில் விரைவில் சீரணமாவதுந் தவிர உடனே பசியுண்டாகும். வாதமந்தநோய் நீங்கும்.

### திருக்கைக்கறியின் குணம்.

வாதமொடு தாதுவும் வளர்க்குள்ளே சேருமென்று
மோதுபித்தஞ் சோபமிவை யோடுமென்றுங்-கீதச்
செருக்கை யடைவாரைத் திருத்துமொழி மாதே
திருச்கைமீ னுண்பார்க்குச் செப்பு.

(இ-ள்.) இனியமொழியாளே! திருக்கைமீனைத் தின்பவர்க்கு, வாததாதுவும் சுக்கிலதாதுவும் அதிகரிக்கும், பயித்திபமும் வீக்கமும் நீங்குமென்க. 971

### மடவைக்கறியின் குணம்.

மடவைமீன் வாதமொடு மந்த முளைமூலங்
குடல்வாதஞ் சூலை கொடிய-வடற்கரப்பா
னுண்டாக்கு மாமிசங்க ளேறு முலகத்தில்
வண்டார்க்கும் வார்குழலே வாழ்த்து.

(இ-ள்.) நீண்ட கூந்தலையுடையவளே! மடவைமீன் வாதப்பிணி அக்கினிமந்தம் மூலமுளை ஆந்திரப்பித்தவாதம் கடுவன் இவைகளைத் தரும் மாமிசம் விருத்தியாம். 972

**சுரும்பக்கறியின் குணம்.**

சுரும்புமீன் பத்தியமாய்ச் சொல்லுவா ருள்ளி
லரும்பிணியை யெல்லா மகற்றும்-பெரும்போகந்
தீபன முண்டாகுமது தின்னச் சுவைகொடுக்குஞ்
சோபனமின் னாரரசே சொல்.

(இ-ள்.) பெண்கள் நாயகமே! உரிசையுள்ள சுரும்புமீன் வயிற்றுப்பிணிகளை நீக்கும் வீரியத்தையும் பசியையும் தரும் பத்தியத்திற்குதவுமென்பர். 973

**உல்லமீன்கறியின் குணம்.**

உல்லமெல்லாஞ் சன்னவெலும் போவியமே யிக்கறிதா
னல்லகறி யாயதனை நாளுமுண்டால்-மெல்லக்
கழிச்சல் பிளவையொடு காணுக் கடியும்
விழிச்சுக் கொண்டாடுமென வீள்.

(இ-ள்.) சித்திரமனையவளே! மெல்லிய முட்களுள்ள நல்ல பதார்த்தமாகிய உல்லமீனை யுண்ணில் பேதியும் விரணமும் காணுக் கடிவிஷமும் அதிகரிக்குமென்க. 974

**கற்றளைமீன்கறியின் குணம்.**

கற்றளைமீன் றன்னைக் கருதிநித முண்பாருக்
குற்ற வயிறூ வுறுமியெழுஞ்-சுற்றொழியாய்
பேதி யெடுக்கும் பிறதுகரப்பா னெழியுஞ்
சாதி மடமயிலே சாற்று.

(இ-ள்.) மயிலையொத்தவளே! தினமுங் கற்றளைமீனை யுண்பவர்க்கு குடலிரைச்சலும் மாறாத கழிச்சலும் உண்டாகும் கரப்பான் விலகுமென்க. 975

**வெள்ளைவவ்வால்கறியின் குணம்.**

வெள்ளை 'வவ்வா றன்னை விருமபிநித முண்பார்க்குத்
தள்ளுகின்ற பித்தம் தரிக்குமோ-துள்ளி
வருங்கரப்பா னேகு மயிலே புவிபி
லரும் பத்தியா மறி.

(இ-ள்.) மயிலையொத்தவளே! வெள்ளைவவ்வால் மீனைத்தினமும் விரும்பித் தின்பவர்க்கு பித்தமயக்கமும் கடுவானும் போம் இது பயித்தியம் ஆகும் என்க. 976

**கருவவ்வால்கறியின் குணம்.**

*செங்கரப்பான் மேகஞ் சிறுசிரங்குமுண்டாகும்*
*வெங்கொடிய வீரிழிவும் விர்த்தியாம்-கொங்கைகளிற்*
*பாலூறு மெத்தப் பருகிற் கருவவ்வான்*
*மேலூறும் போகம் விதி.*

(இ-ள்.) கருவவ்வால்மீனைத்தின்னில், செங்கரப்பான் பிரமேகம் சிறுசிரங்கு வெகுமூத்திரம்வீரியவிருத்தி முலைப்பால்இவையுண்டாம்

**நெய்த்தோலிக்கறியின் குணம்.**

*மந்தமுறுந் தீபனமபோம் வாயிலைப்பு முண்டாகுந்*
*தொந்தமுறு வாதபித்தத தோன்றுமபின்-னெந்தே*
*வயிறுப் பொருமும வலியசெய்த தோலிக்குத*
*துயாமிகு மிதனைச் சொல்.*

(இ-ள்.) நெய்த்தோலின்மீன்கறிக்கு அக்கினிமந்தம் அரோசகம் வாதபயித்தியம் வயிற்றுப்பிசமுதலிய துன்பம் உண்டாம் பசிகெடும்.

**மயறிமீன்கறியின் குணம்.**

*மயறிகரப்பானும் வாத பித்ததோ*
*டியருகின்ற சோப மொழிக்கு-நிபமா*
*யுதரத்தி னுள்ளுறு முறைறவாதம் போக்கும்*
*பதியிலிதனைப் பகர்.*

(இ-ள்.) மயறிமீன் கறி கரப்பானகபம் வாதபயித்தியம் மூர்ச்சை வயிற்றில் தங்கிய விகுணவாதம இவைகளைப் போக்கும. 979

**விலாங்குமீன்கறியின் குணம்.**

*விலாங்குமீன் றன்னை விரும்பிமிக வுண்டாற்*
*குலாங்கிஷமா யையன் குலாவு-மிலங்கருசி*
*போகமொடு சொறியும் புண்கரப்பா னுங்குதிக்கு*
*கோகனக மாதே குறி.*

(இ-ள்.) இலட்சுமியொத்தவளே விலாங்குமீனை அதிகமாகத் தின்றால் சபாதிக்கமும அரோசகம் தாதுவிருத்தி தவளைசொறி விரணம் கடுவன் இவை உண்டாம. 980

கிழங்கான்மீன்கறியின் குணம்.

பத்தியத்திற் கேற்ற பருங்கிழங்கான் மீனருந்த
வுற்ற பிணியனைத்து மோடுங்காண்-மெத்தப்
பசியெழும்புஞ் சேர்க்க பருமலமுஞ் சாடு
முசியா துடல்வளரு முன்.

(இ-ள்.) பத்தியத்திற்கானகிழங்கான் மீனைத்தின்னில்சகலபிணிகளும் பழயமலச்சியும்போம், தீபாக்கினியும் தேகச்செழுமையும் ஆம்

ஆற்றுமீன் கிணற்றுமீன்கறியின் குணம்.

ஆற்றுமீன் தாதுவை யுண்டாக்கு மையவெப்பை
யூற்று மருசியைவிட் டோட்டுங்காண்-சாற்றுங்
கிணற்றுமீன் வாதகுன்மங் கிறுபித்தங் குஷ்டம்
பணைதத பிலீகமுறும பார்.

(இ-ள்.) ஆற்றுமீன்வீரியவிருத்தியைச்செய்யும் சீதசுரத்தையும் நாவில் சுரக்கின்ற அரோசகநீரையும போக்கும. கிணற்றுமீன் வாயு குன்மம் பயித்தியம் குறைநோய்பீலிகரோகம் இவையுண்டாம். 982

மடு குளம் ஏரி இவைகளிலுள்ள மீன்கறியின் குணம்.

ஓடுமடு மீனா லுலவைபித் தங்களறுந்
தாதுமேகங் கபமந்தங் களுண்டா-மோதுகுள
மாருமீன் றன்னா லழற்பிணி மந்தந்தீரு
மேரிமீன் மேகமடு மெண்.

(இ-ள்.) மடுமீனால் வாயுவும் பயித்தியமும் போம், சுக்கிலம் பிரமேகமும் சிலேஷ்மமும் அக்கினிமந்தமும் உண்டாம், குளத்துமீனால் சுரமும் அலஜரோகமுமவிலகும், ஏரிமீனால் பிரமேகம் நீங்கும். 983

கடல் நண்டுக்கறியின் குணம்.

குன்மவலி வாதங் கொடுங்கரப்பா னுண்டாக்குங்
கன்மச் சொறியைத் தருவிக்கும்-பின்னு
முதிரக் கழிச்சறனை யோங்குவிக்கு மாதே
யதிரக் கடனண் டது.

(இ-ள்.) பெண்ணே கடல்நண்டுக்கறி வயிற்றுநோய்வாதகோபம் கடுவன் சருமச்சொறி ரத்தகிரணி இவைகளை உண்டாக்கும். 984

வயல் நண்டுக்கறியின் குணம்.

வயலிலுரு நண்டருந்த வாதக் குடைச்
லயலினா மிருக்கா தணங்கே-துயிலவொட்டா

வன்சயித்தி யங்கரப்பன் மன்குட லிரைச்சலும்போ
முன்பயித்தி யங்கதிக்கு முன்.

(இ-ள்.) மாதே வயல்நண்டுக்கறியைபுண்ணில் வாதக்கடுப்பு தூங்கவொட்டாதகபநோய் குடலிரைச்சல் இவைபோம் பித்தம்பெருகும்.

நத்தைக்கறியின் குணம்.

நத்தைக் கறிதனக்கு நாடாது மூலமத
லொத்தமல ரோகமெலா மோடுங்கா-ணித்தநித்தந்
தின்றாற் செறியாது தேடரிய காதுவிர்த்தி
நன்றாகு மாதே நவில்.

(இ-ள்.) காரிகையே நத்தைக்குறிக்கு மூறமுளையும் மலாசயப் பிணிகளும் நீக்கும், இதை தினமும புசிக்கில் அசீரணமும் சுக்கிலப் பெருக்கமும் உண்டாம். 987

ஆமைக்கறியின் குணம்.

ஆமைக்கறி யருசியையும் பித்தூண் மூலஞ்
சேமக் கனல்சூதிதா மேக-காமரத்தப
பேதி கிராணிமலப் பேதியகற்றும பசியுந்
தாதுவுமே றுங்கொடுக்குந தான்.

(இ-ள்.) ஆமைக்கறி, அரோசகம்பம் பித்தம் உள்மூலம் உட்சூடு கருப்பமேகம் ரத்தாதிசாரம் சீதகிரகணி மலபேதி இவைகளைநீக்கும்.

## கடைச்சரக்கின் வகை

சுக்கின் குணம்.

சூலமந்த நெஞ்செரிப்பு தோஷமேப்பம் மழலை
மூலமிரைப் பிருமன் மூக்குநீர்-வாலகப
தோஷ மதிசாரந் தொடர்வாத குன்மநீர்த்
தோஷமாமம் போக்குஞ் சுக்கு.

இதுவுமது-எண்சீர்ச்சந்தவிருத்தம்.

வாதப் பிணிவயி றூதற் செவியாய்
வலிதலை வலிசூலை வலியிரு விழுநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
சிகமலி முகமக முகவிடி கபமார்

சீதச் சுரம்விரி பேதச் சுரநோய்
தெறிபடு மெனமொழி குவர்புவி தனிலே
யீதுக் குதவு மீதுக்குதவா தெனும்விதி
யிலைகவ சுறுகுண முளவே சுக்கு.

(இ-ள்.) சுக்கினால் விலாக்குத்தல் அசீரணம் மார்பெரிச்சல் புளியேப்பம் தோஷகுணம் வெப்பம் ஆசனநோய் சுவாசம் காசம் ஜலபீனசம் நீரேற்றம் மேகவாதகுன்மம் ஜலதோஷம் சீதகிரகணி வாதநோய் வயிற்றுப்பிசம் செவிக்குத்தல் முகநோய் சிரநோய் குலைவலி கபஸ்ராவம் சீதபேதி பலவித அரோசகம அவிமுகப்பாண்டு வயிற்றுக்குத்தல் கபசீதசுர முதலிய சுரரோகங்களாகிய இவை நீங்குமென்று சொல்லுவர். ஆயினும் இதனாலுண்டாகும் ஆரோக்கியத்தைக் கருதுமிடத்தி லிந்நோய்க்குதவும் இந்நோய்க்குதவாது என்னும நியதியில்லாததால் சகல ரோகங்களுக்கும் உபயோகப்படத் தக்கதாம் என்க.

தேரையர்கூறிய இவ்விரண்டாஞ் செய்யுளில் மொழிகுவர் எனக் குணபாடங்களை கூறியிருப்பதை உன்னிப்பார்க்கில் சுக்கு இந்நோய்க் குதவும் இந்நோய்க்குதவாதெனவும் விதியில்லையென்றும் சொல்லி யிருப்பதுந்தவிர இச்சுக்கு மூர்த்திகள் சொரூபமென்று சொல்லும் திரிகடுகத்தின் முதன மருந்தாயும் ஆயுள்வேதியர் கையிலெடுக்கும் ஆயுதமாயும் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமனைத் தனக்கு அதிதேவதை யாய்ப் பெற்றிருப்பதாயும் பிரமகுலமாயும் பாகபேதங்களினாலனந்த ஔஷத ரூபங்களாயும மகௌஷதம் என்னும் சஞ்சீவியின் பேராகிய கோடதகம என்றும நாமங்களைக் கொண்டிருப்பதாயும் தேவாராதனைக்கும உபயோகப் படுவதாயும் இருப்பதினால் சகலரோகங்களையும் நீக்கும் என்பது கருத்து. 989

### மிளகின் குணம்.

சீதசுரம் பாண்டு சிலேத்மங் கிராணிகுன்மம்
வாத மருசிபித்த மாமூல-மோதுசந்நி
யாசம பஸ்மார மடனமேகங் காசமிவை
நாசங் கறிமிளகி னால்.

### இதுவுமது.

கோணுகின்ற பக்கவலி குய்யரோகம் வாத
சோணிதங் கழுத்திற்குட் டோன்றுநோய்-காணரிய
காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தமென்றீ
ரேதுநோய் காயிருக்கி லீங்கு.

(இ-ள்.) மிளகினலை குளிர்ச்சுரம பாண்டு கபம் கிரகணி குன்மம் வாயு அரோசகம் பயித்தியம் மூலம் சந்நியாசம் அபஸ்மாரம பிரமேகம் இருமல் பக்குவாதம் குய்யரோகம் வாதசோணிதவாதம் களநோய் செவிவலி ரத்தகுன்மம அசீரணம் இவைபோம் கரி மிளகு.

வெள்ளை மிளகின் குணம்.

வெள்ளை மிளகருந்த வீறு கிரகணிபோங்
தள்ளுகப வாதந் தானேகு-முள்ள
சுரமபோகுந் தீபனமாக் தொனமேகம் போமுந்
திரம்பார்த் தெவர்க்குந் தெரி.

(இ-ள்.) வெள்ளை மிளகினல் கிரகணி சிலேத்மவாதம் சூட்சைசிழ்ப்பிரமேகம் இவைநீக்கும் ஜடராக்கினி உண்டாமென்க. 991

வால்மிளகின் குணம்.

வாதபித்த வையம் வயிற்றுவலி தாகஞ்
சீதம் பலநோய் சிதையுங்காண்-போத
வநி தீபனமா மணக்கரசே நாளுந
அதி வான்மிளகருந்தச் சொல்.

(இ-ள்.) பெண்கள்நாயகமே! வால்மிளகினல் திரிதோஷகோபம் குன்மம் விதாகம் வெட்டை முதலிய சிற்சிலரோகங்கள் விலகும் பசியுண்டாகுமென்க. 992

திப்பிலியின் குணம் கட்டளைக்கலிப்பா.

இருமல்குன்ம மிரைப்பசயப்பிணி
பீளைபாண்டு சந்நியாசமரோசகம்
பொருமலூதை சிரப்பிணிமூர்ச்சைநோய்
பூரிக்குளுசல தோஷம்பீலிகமும்
வருமலப்பெருக் கோடுமகோதரம்
வாதமாதிமுத் தோஷஞ்சுரக்குளிர்
பெருமலைப்புரி மேகப்பிடகமும்
பேருந்திப்பிலிப் போக்குமறக்கவே.

இதுவுமது வெண்பா.

ஆசனநோய் தொண்டைநோ யாவரண பித்தமுத
ஞசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய்-வீசிவிடு
யங்கலாஞ் சனஞ்சிதையு மப்பா யழிவிந்தும்
பொங்கலாஞ்ச நக்கையர்கோட் போல்.

(இ-ள்.) திப்பிலியால் காசம் கபகுணமம் சுவாசம் க்ஷயபமகோழை பாண்டு சந்நியாசம் அருசி வயிற்றுப்பிசம் வாயு கிரஸ்தாபம் மூர்ச்சை நீரேற்றம் பீலிகநோய் அதிசாரம் பெருவயிறு திரிதோஷம நடுக்கல் சுரம் மேகக்கட்டி குதரோகம நெஞ்சுநோய் ஆவிருதபித்தம பீநசம் விழிநீர்ச்கம்மல் கர்ணநாதம் கிருமி முகத்தில் எழும்புகின்ற கறுத்த மச்சம் முதலியவை நீங்கும். 993

### யானைத்திப்பிலியின் குணம்.

வாதமறுந் தீபனமா மாருக் கபஞ்சரப்பா
ணேதுகூரந் சுமமலிவை யோடுங்காண்-பூதலத்திற்
சோனையைநேர் காசினீர் கோலாச் சுவாசமும்போம்
யானையினர் றிப்பலியா லாய்.

(இ-ள்.) யானைததிப்பிலியால் வாதகோபம் சிலேஷ்மம் சரப்பான் சுரசாதரோகம் சீர்ப்பீநசம் இரைப்பு இவைநீங்கும் தீபன முணடாம்.

### திப்பிலி மூலத்தின் குணம்.

தாகபித்தஞ் சோகந தணிபாச் சுரமிருமன்
மேகங் குரற்கம்மன் மெய்க்கடுப்பு-மேகுங்காண்
திப்பிலி மூலங்கண்டத் திப்பிலிய காநறுக்குத்
திப்பிலியென்றே யொருகாற் செப்பு.

(இ-ள்.) திப்பிலிமூலததிற்கும் பித்ததாகம்மூர்ச்சை சந்தசுரம் காசம் பிரமேகம சுக்கிலரோகம் சரீரநோவு இவைபோம் திப்பிலி மூலம் கண்டத்திப்பிலி நறுக்குத்திப்பிலி நறுக்குமூலம் தன்மூலம எனவும் வழங்குமாம். 995

### திரிகடுகின் குணம்.

முக்கடுகோ லாகியநோய் மூலங் கொடிறுபிணி
திக்கடு பாண்டோடு சிரதுறுகோ-யக்கடுக்குந்
தாவரநஞ் சென்றுலகிற் சாற்றுகின்ற நோய்முழுதுந்
தீவரநஞ் சுண்டிறக்குந் தேர்.

### இதுவுமது.

திரிகடுகாற் சீதபித்தஞ் சிக்குலைவ நோய்க்கிட
மெரிக்கடுதே லீளையிருமன் முடுக்கு-தெரிசந்நி
யாமழிசி யபஸ்மார மற்புதப்புண
வீசுசர்க் காநோய்போம் விள்.

(இ-ள்.) திரிகடு என்பது சுக்கு மிளகு திப்பிலி ஆம்இவைகளால் ஆகியவாதங்கள் குதாங்குரம் கர்ணரோகம் பாண்டு சிரஸ்தாபம் அஸ்திபைபற்றிய தாவரவிஷம் கபபித்தம் சிக்வாகண்டம் கிருமிமா சர்ப்பவிஷம் தேளவிஷம் கோழை காசம சந்நிதியாசம் அரோசகம் அபஸ்மாரம் அற்புதவிரணம் நாடிவிரணம் இவை விலகும். 996

கடுக்காயின் சிறப்பு.

கடுக்காயுந் தாயுங் கருதிலொன் றென்றாலும்
கடுக்காயத் தாய்க்கதிகங் காணீ-கடுக்காய்நோ
யோட்டி யுடற்றேறற்று முன்றவன்னை யோசுவைக
ளூட்டியுடற் றேற்று முலகத்து.

(இ-ள்.) கடுக்காயுந்தாயும் ஒன்றெனவொருவாறு நினைந்தாலும் தாயைப்பார்க்கிலும் கடுக்காயே அதிகமாம் எனெனில் கடுக்காயானது பிணிகளை நீக்கிச் சரீரத்தைத் தேற்றும் தாயானவள் அறுசுவை உணவை ஊட்டி யுடலை வளர்ப்பாள் எங்கு பிணிகளைநீக்கினுலல்லவோ உணவு பயன்பட்டு உடல்தேறும் என்னும் வகையறியாமல் உணவைமாத்திரம் ஊட்டுந்தன்மையுடையவளாதலால் அத்தாயினும்கடுக்காய்சிறந்ததெனக் கூறினர். 997

கடுக்காயின் பொதுகுணம்.

தாடைக் கழுத்தக்கி தாறி குறிவிடப்
பீடை கிலிபமுதற் பேதிமுட-மாடையெட்டாத்
தூலமிடி புண்வாத சோணி காமாலையிரண்
டாலமிடிபோம் வரிக்காயால்

(இ-ள்.) கடுக்காயினால் கன்னம் களம் கண் நா ஆண்குறி இவ்விடத்துநோய்கள் பாதவன்மீகம் அதிசாரம் பங்குவாதம் அதிதூலம் இடிப்புண் வாதசோணிவாதம் காமிலம் தாவரசங்கமவிஷங்கள் இவை போம் வரிக்காய்-கடுக்காய். 998

கடுக்காய்ப்பிஞ்சின் குணம்.

வனதூர்க்கிச் சேய்க்கு மணித்தயிலம் பூசி
யனலிற் பொரித்தாங் கருந்தத்-தினமுமலச்
சிக்கலக் கடுப்பநின்ற சீதமறுங் காற்றுகைத்த
முக்கலக் கடுப்பிருக்கு மோ.

(இ-ள்.) கடுக்காய்ப் பிஞ்சுக்கு ஆமணக்குநெய் தடவித் தீயில்வறுத்துத் தூள்செய்து அப்போதேஉண்டால் மலச்சிக்கலும் எலும்பைப்

போல வெளுத்துநின்ற சீதமும் நீங்கும் மூலவாயுவினுல் பிறந்தமுக்கலும் ஆசனக்கடுப்பும் இருக்குமோ இராதென்பது கருத்து வனதுர்க்கி-கடுக்காய்மரம். 999

### கடுக்காயின் பேதம்.

*ஆதிவிசய னரோகிணி யோடே பிருதிவி*
*தீதிலமிர்த சிவந்தி மலை-மீதார்*
*திரிவிருத் தியபயன் செப்பிலிவை யேழா*
*மரிதகியின் பேர தறி.*

(இ-ள்.)கடுக்காய் எழுவகைப்படும்அவையாவன விஜயன் அரோகிணி பிரிதிவி அமிர்தை சிவந்தி திரவிருத்தி அபயன் என்பனவாம்.

### 1-வது விசயன் கடுக்காயின் குணம்.

*விசயனெனும் கடுக்காய் வீரியத்தைச் சொல்வோம்*
*நிசமதுதான் வாதத்தை நீக்கு-மிசையுரைக்கப்*
*பேய்ச்சுரைக்காய் போலிருக்கும பேரவந்தி யாதேசம்*
*வாய்ச்சிருக்கு மக்காயை வாழ்த்து.*

(இ-ள்.) பேய்ச்சுரைக்காய் குறியுள்ள விசயன்என்கிற கடுக்காய் வாதரோகத்தைப் போக்கும் இது அவந்திதேசத்தில் உற்பத்தியாம்,

### 2-வது அரோகிணிக்கடுக்காயின் குணம்.

*ஓதுமரோ கிணிக்கா யொன்றுண் டாறுச்சந்நி*
*பாதமொடு சீதம் பறக்கும்காண்-மீது நுறி*
*நான்கு வரியாய்த்தோற்று நங்கா யதன்தேச*
*மாங்கு கன்னியாகுமரி யாம்.*

(இ-ள்.)கன்னியாகுமரிதேசததில்பிறக்கின்ற அரோகிணிக்கடுக்காயால் சந்நிபாதமும் சீதமும் நீங்கும இதன்மீது 4-வரைபோல்குறியிருக்கும். 1002

### 3-வது பிரிதிவிக்கடுக்காயின் குணம்.

*தோற்றும் பிருதிவிதான் றோலாப் பயித்தியத்தை*
*மாற்றும் வயதை வளர்க்குமதன்-மேற்றோலா*
*மெல்லியதா மக்கால் வினைதேச மேதென்னில்*
*வல்ல சவுராட்டிரமாய் வாழ்த்து.*

(இ-ள்.) மெல்லியதோலுள்ள பிருதிவிக்கடுக்காய் பித்தரோயை நீக்கும் ஆயுளைவிருத்திசெய்யும் சவுராஷ்டிரதேசத்தில் உற்பத்தியாம்

4-வது அமிர்தக்கடுக்காயின் குணம்.

அமிர்த மெனுங்கடுக்கா யம்புவியி லுள்ள
திமிர்த சிலேட்டுமத்தைத் தீர்க்கும்-வமிதச்
சதைப்பற்றுண் டாயிருக்குஞ் சாற்றிலதன் றேசங்
கதிக்கொத்த காசியென்பார் காண்.

(இ-ள்.) விசுமித் தசைமிகுந்துள்ள அமிர்தக் கடுக்காய் கண்டத்தில் ஒரு ஒலியைத் தருகின்ற கபத்தை ஒழிக்கும் காசி தேசத்தில் உற்பத்தியாம். 1004

5-வது சிவந்திக்கடுக்காயின் குணம்.

சிவந்தியெனுங் கடுக்காய் செய்குணத்தைக் கேட்பாய்
விவர்ந்த மூலத்தையெலா மேய்க்குஞ்-சிவந்தநிகப்
பொன்னிரம தாயிருக்கும் பூங்குழலே யக்கடுக்காய்
துன்னுவனந் தோறுமுண்டாஞ் சொல்.

(இ-ள்.) மலரணிந்த கூந்தலையுடையாளே! மிகுசிவப்பும் தங்கச்சாயலும் உள்ள சிவந்திக்கடுக்காயானது வாதமூலரோகங்களை விலக்கும் இது வனங்களில் உற்பத்தியாம். 1005

6-வது திரிவிருத்திக்கடுக்காயின் குணம்-இதுவே மோந்தன்.

திரிவிருத்திக் கடுக்காய் தேகத்தி லுளும
வருவிரணம போக்குமதன் வன்ன-மொருவிதமோ
பஞ்சவன்ன மூவரம்பு பற்றி யிருக்குமது
விஞ்சுமலை தோறுமுண்டாம் விள்.

(இ-ள்.) வெண்மை கருமை செம்மை பசுமை மஞ்சள் என்னும் பஞ்சவன்னமும் மூன்றுவரியும் உடைய திரிவிருத்திக்கடுக்காய் சகலவிரணங்களையும் நிவர்த்திசெய்யும் இது மலைகளில் உற்பத்தியாம்.

7-வது அபயனென்னும் கடுக்காயின் குணம்.

அபய னெனுங்கடுக்கா யங்கரோ பெல்லா
மபயமிட் டோட வடிக்கு-மபயங்
கதிக நிறங்கறுப்ப தாகும விளைபூமி
பொதிய மலையாம் புகல்.

(இ-ள்.) கருமைநிறத்தையுடைய அபயன் கடுக்காய் எனும்பைப்பற்றிய ரோகங்களையெல்லாம் நீக்கும் பொதிமலையி லுற்பத்தியாம்.

சங்கராதிக் கடுக்காய் நான்குவகையில் 1-வது கருங்கடுக்காய் குணம்.

பழமலத்தைப் போக்கும் பகரி லுடலுக்
கழகுதரும் புத்தி யளிக்கும்-பழைய

மருங்கடுத்த வாதபித்த வன்கபத்தைத் தீர்க்குங்
கருங்கடுக்கா யென்றுளத்திற் காண்.

(இ-ள்.) கருங்கடுக்காயாவது பழமலக்கட்டையும் திரிதோஷ ரோகங்களையும் போக்கும், அழகையும் அறிவையும் கொடுக்கும்.

2 வது செங்கடுக்காயின் குணம்.

சுத்தியொடு புத்தி சுகமும புகழுமுண்டா
மெத்தவொளிர் பொன்னிறமா மேனியெல்லாஞ்-சுத்தகப
வங்கடுத்த விளைபல வனேகாச மும்மலமுஞ்
செங்கடுக்காய்க் கில்லையெனத் தேர்.

(இ-ள்.) செங்கடுக்காய்க் குமலாசயசுத்தி அறிவு இன்பம்கீர்த்தி சரீரத்தில் பொற்சாயல் ஆகியவை உண்டாம். தவிர சிலேஷ்மக்கோழை பலவித இருமல் மலக்கட்டு ஆகியவை விலகுமென்க. 1009

3-வது வரிக்கடுக்காயின் குணம்.

மிடுக்காக்குந் தேகத்தை விந்துவை யுண்டாக்குஞ்
சடக்கெனவே யுண்டியையுட் சாடுந்-துடுக்கான
வாதபித்த மையகற்றும் வனப்பொடு கவ்விதருஞ்
சாதிவரிக் கடுக்காய் தான்.

(இ-ள்.) வரிக்கடுக்காய், தேகபுஷ்டி தாதுவிர்த்தி அசனசீரணம் வாதபித்ததோஷங்களை யகற்றும், அழகையுண்டாக்கும். 1010

4-வது பால்கடுக்காயின் குணம்.

ஆமங் கெடுங்கா ணழகும் பொலிவுமிகுஞ்
சேமம் பெருமலமுஞ் சேருமே-தாமனெடும்
வேர்க்கடைக்கண் கும்பமுலை மெல்லியலே யெப்போதும்
பாற்கடுக்கா யுண்பவரைப் பார்.

(இ-ள்.) மெல்லியலே! பால்கடுக்காயால் சீதகிராணி நீங்கும், வனப்பு தேஜசு வன்மை இவை விருத்தியாகும். 1011

நெல்விழளையின் குணம்.

ஆகவனலஞ்சசியர்க் கென்புருக்கி கண்ணோய்
தாக முதிரபித்தந் தாதுகட்டம்-மேனகத்தி
னில்விமுள்ளி போலருக லெண்கா மியவியங்க
நெல்விமுள்ளி யாற்போம் நினை.

இதுவுமது.

நல்லநெல்லி முள்ளியது நாவுக் குரிசைதரு
மல்லல் விரிபித்த மகறறுமதை-மெல்லத
தலைமுழுகக் கண்குளிருந தாவுபித்த வாகதி
இலையிழி மேகங்களும்போ மெண்.

(இ-ள்.) நாவுக்குரிசை தாராநின்ற நெல்லிமுள்ளியால் உட்சூடு சோமரோகம் மாதர்கள் ருதுதோஷம் அஸ்திசிராவம் தாம்பிரமதகம் ரத்தபித்தம் விம்மிக்ஷீணம் மூத்திர அருசல் ஆண்குறிக் கொப்பிளம் பயித்தியம் பிததவாக்தி பிரமேகம ஆகியவைகள் விலகும். இதை அரைத்துச் சிரசுக்கிட்டுமுழுக நேத்திரம் குளிருமென்க. 1013

¹தான்றிக்காயின் குணம் இது தானிக்காயென மதவியது.

சிலநதிவிடங் காமியப்புண சீழான மேகங்
கழுநதிவரும் வாதபித்தங் காலோ-டடர்ந்துடலி
லான்றிக் காய்வெப்ப மூதிரபிதமும் காககுர
தானறிக்காய் கையிலெடுத தால.

இதுவுமது.

ஆணிப்பொன் மேனிக் கழகு மொளிவுமிகுங்
கோணிக்கொள் வாதபிததக் கொள்கைபோங்-தாணிக்காய்
கொண்டவர்க்கு மேகமறுங் கூறு வனறறணிபுங்
கண்டவர்க்கு வாதம்போங் காண.

(இ-ள்.) தான்றிக்காயால சிலநதிவிஷம் ஆண்குறிக்கிரந்தி சீழ்ப் பிரமேகம் திரிதோஷசுரம ரததபித்தம வாதபிததமொகதம் பிதத நீர் உட்சூடு வாதகோபம் இவைபோம, அழகும் ஒளியும உண்டாம்.

திரிபலத்தின் குணம் இதுவே கடுநெல்லி தான்றி.

விததிரதி நாசிநோய் வெண்குஷ்ட மாசனப்புண்
குற்றிருமல் பாண்டுகுஷ்டஙகு குன்மமிரைப்-பொற்றுமத
மூர்ச்சை பீலிகம பிரமமோடுறுபுண் சர்வவிட
மூர்ச்சையறு முப்பலத்தான் முன்.

(இ-ள்.) திரிபலததால் வித்திரி பீநசம் வெள்ளைக்குஷ்டம் பகந் தரம் புகையிருமல் பாண்டு பெருவியாதி குன்மம் சுவாசம மதரோகம் மூர்ச்சை பீலிக்கட்டி பிரமேகம் வயிற்றுநோய் விரணம் சர்ப்ப கீட விஷங்களால் வாதகோபம் ஆகியவை நீங்கும. 1014

### பேரீச்சங்காயின் குணம் இதுவே கர்ச்சூர்க்காய்.

*வாயிலுண்டா மூற்றலை மாற்றும பசியில்லை*
*யாயிலுண்டா லுண்டா மதுமேக-நோயுள்*
*பெருநீர் மறுக்குமினும பெண்களைக் கூட்டுங்காற்*
*றருநீர்மை தருச்சூரக்காய் தான்.*

(இ-ள்.) பேரீச்சங்காய் உமழ்நீர்பெருக்கையும் மதுநீரையும் போக்கும் பசியையும புணர்ச்சியில் திருவாகத்தையும் உண்டாக்கும்.

### கண்டுபாரங்கியின் குணம் இதுவே சிறுதேக்கு விருத்தம்.

*கண்டுபாரங்கி யெனுஞ் சிறுதேக் குண்டேற்*
*காலெலுங்கே பித்தமெங்கே கபந்தா னெங்கே*
*தொண்டு தொட்டுத் தொண்டர்சுவாச காசமெங்கே*
*சுரமெங்கே வெறியெங்கே தொனிநோ யெங்கே*
*பிண்டுபுரி பீசநீர்க் கோவை யெங்கே*
*வெளிநீருண் ணீரெங்கே விரற்கா லெங்கே*
*யண்டுபடாச் சீதசுரங் கடுப்பு மெங்கே*
*யழலையக நோயெங்கே யறைகு வீரே.*

(இ-ள்.) கண்டுபாரங்கியென்கிற சிறுதேக்கினால் திரிதோஷ விகுணம் கசச்சுவாசகாசம் ரூட்சை பயித்தியம் சுரசாதம் நாசிநோய் சலதோஷம் மூர்நீர்க்கோவை பின்னீர்க்கோவை புச்சாவர்த்தவாதம் குளிர்ச்சுரம் உடல்வலி உடலகாந்தல மனச்சங்கடம இவைபோகும்.

### அரத்தையின் பொதுக்குணம் வெண்பா.

*தொண்டையிற் கடடுங்கபத்தைத் தூரத்தூரத்திவிடும்*
*பண்டைச் சீததைதைப் பறக்கடிக்குங்-கெண்டைவிழி*
*மின்னே கரப்பனை வேரறுக்கும பசிகொடுக்குஞ்*
*சொன்னே மரத்தைச் சுகம்.*

### இதுவுமது.

*மார்பை படர்பிணி மாசுவாச காசமூலஞ்*
*சேர்சோபை தட்டச சூர்வாத-சோணிதகி*
*சுரத்தை யடுபடாமற் றூறுக ணேரி*
*னரத் தெடுத்துகளி தாம்.*

(இ-ள்.) கெண்டைமீனைப்போன்ற கண்களையுடையவளே! அரத்தை நெஞ்சுக்கோழை சீதளம் கரப்பான் இருத்ரோகம் ஈளை பிருமல்

மூலம் வீக்கம் தந்தரோய் வாதசோணிதம தீச்சுரத்தால் பிறந்தகபம் தந்தமூலம்பிணி இவைகளை நீக்கும பசியைத்தரும். 1017

### பேர் அரத்தையின் குணம்-இதுவே தும்ராஷ்டகம்.

வாத பிசிவுவலி சந்தி பிததையும்
சீதசுரந் தாவிரணஞ் சொன்னநீ-ரோதுபல
வாங்கடுப் பூப்படரு மாறு மொளியாரு
மீங்கடரும பேரரததை யால்.

(இ-ள்.) பேரரத்தையினால் வாதரோய் பின்னிசிவு வலிப்பு சந்தி பாதம் பிததகபம் கடுககநசுரம கிளாககின்றபுண் சிரசில் நீரேற்றம் சலவிஷம் ஸ்திரீகள் ருதுதோஷம இவையொழியும தேஜசுண்டாம.

### சிற்றரத்தையின் குணம்.

வாந்திபித் தங்கரப்பான வாதஞ சிராரோகஞ்
சேர்ந்தகப முத்தோஷஞ் சீதமொடு-நேர்ந்தசுர
மற்றரததைக் காட்டி வருமிருமலுந் தீருஞ்
சிற்றரத்தை தன்மருநதாற் றேர்.

(இ-ள்.) சிற்றரத்தையால் சர்த்தி பயித்தியம் கரப்பான் வாயு சிரஸ்தாபம் சிலேஷ்மம் சிரதோஷம் சீதளம் பலசுரம் காசமும்போம்.

### வசம்பின் குணம் கட்டளைக்கலித்துறை.

பாம்பாதி நஞ்சற்புதப் புண்வலிவிட பாகங்குன்மஞ்
சூமபாரிரத்த பித்தம் முகநாற்றம் வன்சூலைசந்நி
வீம்பாம பைசாசம் பிலீகஞ்சிலி பதம்வீறிரு
ரும்பாக்கிருமி யிவைபோகு மாசி வசமபினுக்கே.

(இ-ள்.) வசம்பை விரும்புவையாகில் சர்ப்பகீட தாவரசிதத்திரம் முதலியவிஷங்கள் அற்புதவிரணம ஐவகைவலி விஷபாகரோகம் குன்மம் ரத்தபிததம் வாய்நாற்றம சூலை சன்னிபாதம் பிசாசம் பீலிகம் பாதவன்மீகம் காசம் வயறுப்பல் நீண்டமலககிருமி இவைபோம்.

### வட்டத்திருப்பியின் குணம்.

ஐயகஞ் சூதைபித்தத் திக்கறைவ மாபிரமி
வெய்யசுரம் பேதி விரணமெலாம்-வையம்விடுத்
தெட்டத் திரும்பிவிடு மென்பை யூணுக்குமன்றி
வட்டத் திருப்பிவிடு மால்.

(இ-ள்.) வட்டத்திருப்பி சிலேத்மகோபம் விஷம் வாததோஷம் பித்தநோய் அஸ்திசிராவம் பிரமியம் பித்தசுரம் அதிசாரம் சிரங்கு ஆகியவைபோம் மாமிசதாதுவை விருத்திசெய்யுமென்க. 1021

கோஷ்டத்தின் குணம்-விருத்தம்.

திட்டிகவுள கடுகளஞ் சென்னிநாவா
தெறிபினவெப்ப தைப்புதா வர்த்தமூதை
முட்டியெழு மூளைவிரணஞ் சுவாசகாச
மூடிகத்தோ டரவுமரவிடங்கண் மேகக்
கட்டியஜ கல்லிவிட பாகம்பூத
கணம்பால கிரகமொடு தாதுநட்டஞ்
சொட்டிவரு பிரமிபித்த மிவையொருங்கோ
தொலையும் விராணரிக்குச் சுகப்பேராமே.

(இ-ள்.) கோஷ்டத்தினால் கண் தாடை வயிறு கழுத்து சிரசு நாவாய் இவ்விடங்களினேய்க்கள் தோஷசுரம வீக்கம் உதாவர்த்தகம் கம்பவாதம் மூளை மூலசம் ஈளை இருமல் எலி சர்ப்பம நாவிமுதலிய விஷங்கள் மேகப்பிடகம் அஜகல்லிகாரோகம விஷபாகம் 18-வகைபூத கணங்கள் பாலகிரகதோஷம் வீரியநஷ்டம் வெள்ளை வீழல் பயித்தியம் ஆகிய இவைவிலகும் சுகப்பிரசவம உண்டாம் என்க, விரணாரி-கோஷ்டம். 1022

அதிமதுரத்தின் குணம்-இதுவே மதூகம்-விருத்தம்.

சத்தியரி முப்பிணியால் வருப்புண் டாகுங்
கண்ணேயுன் மாதம்விக்கல் வலிவெண் குட்டம்
பித்தமெனும் புருக்கிரிச் சரமா வாத்த
பித்தமத மூர்ச்சைவிட பாகம் வெப்பந்
தத்திவரு வாதசோ ணிதங் காமாலை
சருவவிடங் காமியநோய் தாதுநஷ்டம்
குத்திரும லாசியங்க மிதன்றோ யிந்து
குபப்புணும்போ மதுகமெனக் கூறுங் காலே.

(இ-ள்.) அதிமதுரத்தினால் ஆயுதங்களாற்சனித்த சத்தியோ விரணம் வாதாதிகளாற்பிறந்த நிஜவிரணம் நாவறட்சி நேத்திரநோய் உன்மாதம் இத்தியாதிரோகம் 5-விதவலிகள் வெண்குஷ்டம் பயித்தியம் அஸ்திசிராவம் மூத்திரக்கிரிச்சம் அவர்த்த பயித்தியம் மதம் மூர்ச்சை பித்தவிஷபாகம் சுரம் வாதசோணிதவாதம் காமிலம் தாவர சங்கம் விஷங்கள் குப்யரோகம் சுக்கிலநஷ்டம் புகையிருமல்முகபாகம்

சிரநோய் ஒஷிடரோகம சோமரோகம ஸ்தனவித்திரிக்கட்டி இவை கள் போம் என்க. 1023

அதிவிடயத்தின் குணம்-வேண்பா.

அதிவிடயஞ் சருக்கரார்ப் புதநோய் வெப்பு
கொதிமருவு பேதியொடு கோழை-யெதிர்வாகதி
யென்றுரைக்கு நோய்க்கூட்ட மில்லா தகற்றிவிடுக
குன்றைநிகர் முலையாய் கூறு.

(இ-ள்.) மலைபோலு முலைகளையுடையவளே! அதிவிடயம் சருக்கரார்ப்புதவிரணம் சுரம் நேகமுள அதிசாரம் ஈளை மேல்நோக்கிய சர்த்தி முதலிய நோய்களை விலக்கும். 1024

அக்காரகாரத்தின் குணம்.

அக்கார கார மதனபே ருரைததக்கா
வுக்கிர காலத்தோஷ மோடுங்காண்- முக்கியமாய்
கொண்டாற் சலமூறுங் கொம்பனையே தாகசுரங்
கண்டாற் பயகதோடுங் காண.

(இ-ள்.) கொம்பனையாளே. அக்காரகாரத்தால் பயங்கரமானகால தோஷமும தாகசுரமும நீங்கும் இதைவாயி லடக்கிக் கொள்ளில் சலம் ஊறும. 1025

கடுகுரோகணியின் குணம்.

மாநதஞ் சுரமையம வாயுகரப் பானுமச்
சேர்த்த மலககட்டு திரிதோடம-பேர்நதபோட்சிப்
புண்வயிறு நோயிவைபோம் பொறகொடியே பேதியுண்டாந
திண்கடுகு ரோகணிககுத தேர்.

(இ-ள்.) கொடியிடையாளே கடுகுரோகணிக்கு க்ஷீராலஜகமகண சுரம் கபாதிக்கம் வாதகோபம காப்பான சிதபேதி பழையமலபந்தம் தோஷம விரணம் வயிற்றின்வலி இது விலகும விரேசனமுண்டாம்

பீதரோகணியின் குணம்.

படர் நீலகாசம் படலமொடு பில்லக்
தொடமிமை களிற் றேறுண் றுக்-தோடமரு
மருவியெனச் சொலலுகின்ற வக்கிகோ யேகு
மொருபீத ரோகணியை யுன்.

(இ-ள்.) பீதரோகணியால் கருவிழி நீலகாசம் கிருஷ்ண மண்டலம் இமையைப்பற்றிய நீர்ப்பில்லம் கிருச்சிரோன் மீலனம் முதலிய ரோகங்கள் கபவாதவம் ஆகிய இவைகள் நீங்கும் என்க. 1027

கிரந்திதகரத்தின் குணம்.

சீறுபித்த கோயுந் திரைபெரிதல் போலுமெறிந்
தேறுஞ் சுவாசரோ யென்பதுவும்-வீறிப்
பரந்தசர்க் காப்புதமும் பனனப் புகுங்காற்
கிரந்தி தகரததாற் கெடும.

(இ-ள்.) கிரந்தி தகரத்தால் பயித்தியரோகமும்சுவாசரோகமும் சர்க்காரர்ப்புத விரணம் ஒழியும் என்க. 1028

செவ்வள்ளிக் கொடியின் குணம்.

செவ்வள்ளி யின்கொடிக்குச் சேடித்த குட்டமொடு
கவ்வ குறையோய் கரப்பானு-மிவ்வுலகின்
மானே குடல்வாதம் வல்ல கடுவனுட
னைபரு மூலமும்போ மால்.

(இ-ள்.) மானனையாளே! செவ்வள்ளிக் கொடிக்கு வீறுகுஷ்டம் பெருவியாதி கடுவன் குடலண்டம கசும் குதிக்கால்களைப் பற்றிய கொப்பிளம் மூலம் இவைதீரும். 1029

சவ்வியத்தின் குணம்-இது செவ்வியமெண மருவியது.

சூலை யருசிசன்னி தொல்லீரும் பீளைபித்த
மேலைக் குறற்கம்மல் வெங்களகோய்-மூலசுரங்
கவ்வி யக்கத்தேறு கனதாவர விஷமுஞ்
சவ்வியங் கொள்ளவிடுந் தான்.

(இ-ள்.) சவ்வியத்தால் குத்தல் அரோசகம் சந்நிபாதசுரம் நீடித் தகாசம் கோழைபயித்தியம் சுரசாதம் தொண்டைநோய் புராணசுரம் எலும்பைப்பற்றி யேறுகின்ற தாவரவிஷம்ஆகியவைகள் போமென்க.

சடாமாஞ்சியின் குணம்-இதுவே பருங்கோரை.

குட்டம் சிலந்திவிடங் கோர புராணசுர
மூட்டினங்கால் பேதிகண்ணோ யொட்டிருமல்-சொட்டிரத்த
பித்தமிரைப் பேகும் பெருங்கோரை யென்றுரைக்குஞ்
சுத்தசடா மாஞ்சிதனைச் சொல்.

(இ-ள்.) சடாமாஞ்சியால் குஷ்டம் சிலந்திவிஷம் பழையசுரம் உட்சூடு வாயு பேதி விழிநோய் காசம் ரத்தபித்தம் சுவாசம் போம்.

விலாமிச்சவேரின் குணம்.

மேகம் விழியெரிச்சல் வீறிரத் பித்தமொடு
தாகமத மூர்ச்சைபித்தஞ் சார்மயக்கஞ்-சோகஞ்

சிரநோ யிழவயேகுஞ் செய்ய விலாமிச்சக்
கெரிகிரமு மின்றென் றிசை.

(இ-ள்.) விலாமிச்சினுல் மேகநீர் கண்பெரிவு உதிரபித்தம் தாகம் மதம் மூர்ச்சைபயித்தியம் மயக்கம் சோபம் தலைவலி தீச்சுரம்போம்.

### பறங்கிப்பட்டையின் குணம்.

தாகம் பலவாதந் தாதுநட்டம் புண்பிளவை
மேகங் கடிகிரந்தி வீழ்மூலந்-தேகமுடன்
குட்டை பகந்தரமேற் கொள்வமனம் போம்பறங்கிப்
பட்டையினை யுச்சரித்துப் பார்.

(இ-ள்.) பறங்கிப்பட்டையால் தாபம் பற்பலவாதநோய் விந்துநஷ்டம் விரணம் பிளவை நீரிழிவு கடிவிஷம் சிரங்கு மூலமுளை முடவாதம் குறைநோய் கபம் பகந்தரப்புண் வாந்தி இவைகெடும். 1033

### பிசின்பட்டையின்குணம்-இதுவே மயிலால்க்கடி.

தசையிலுஞ் சோரி தனிலும் பறந்தே
வசிபோற் குத்திக் குடையும் வாய்வை-திசமாகக்
கொல்லு முடம்பின் கொதிப்பை யொருகொடியில்
வெல்லும் பிசின்பட்டை விள்.

(இ-ள்.) பிசின்பட்டை மாமிசத்தையும் உதிரத்தையும் பற்றியிருக்கின்ற ஆவிருவாதத்தையும சரீரவெப்பத்தையும் போக்கும்.

### வெள்ளிலோரத்தின் குணம்.

தாவரநஞ் சென்புருக்கி தாழா மகோதரநோய்
கூவ வொட்டாத குரற்சாதம்-பூவுலகில்
வெல்ல வரிதாய வியங்கமுதா வர்த்தமும்போம்
நல்லவெள்ளி லோரத்தி னல்.

(இ-ள்.) வெள்ளிலோரத்தினுல் விஷவிருக்ஷங்களின் நஞ்சுஎலும்புருக்கி பெருவயிறு குரற்கம்மல் வியங்கரோகம் உதாவர்த்தரோகம் இவைகள் தீருமென்க. 1035

### லவங்கப்பட்டையின் குணம்.

தாதுநட்டம் பேதி சருவவிட மாசியநோய்
மீதகிராஞ் சிலந்திப் பூச்சுவிடஞ்-சாதிவிட
மாட்டுவிரைப் போடிரும்ப லாதியநோய்க் கூட்டமற
வோட்டு மிலங்கத் துரி.

(இ-ள்.) இலவங்கப் பட்டையானது சுக்கிலநஷ்டம் அதிசாரம் பற்பலவிஷயங்கள் வாயையனுசரித்தவாதம் தேவபூதமாகிய கிரகங்கள் சிலந்தி விஷம் பாம்பு விஷம் சுவாசகாசம் முதலிய நோய்களை விலக்கும். 1036

சன்ன லவங்கப்பட்டையின் குணம்.

சன்ன லவங்கப்பட்டை தான்குளிர்ச்சி யுண்டாக்கு
மின்னு மிரத்தக்கடுப்பை யீர்க்குங்காண்-முன்னமுறு
மூந்திக் கடுப்பகற்று மூணமூலப் புண்போக்கும்
கந்தமிகு பூங்குழலே காண்.

(இ-ள்.) மலரணிந்தகூந்தலையுடையவளே! சன்னலவங்கப்பட்டை ரத்தகிரகணி வயிற்றுப்பிடுங்கல் மூன்றும்வலய மூலவிரணம் இவைகளை நீக்கும் குளிர்ச்சியைதரும். 1037

லவங்கப்பத்திரியின் குணம்.

மேகசுரஞ் சீதசுரம் வெட்டைசுவா சங்காசந்
தாகபித்தம் வாந்தி சாவாசியநோய்-வேகத்தின்
கட்டியொடு தாதுநட்டங் கைப்பருசி போக்கிவிடு
மிட்ட விலவங்கத் திலை.

(இ-ள்.) இலவங்கப்பத்திரி பிரமேகசுரம் குளிர்ச்சுரம் வெள்ளை இரைப்பு இருமல் பித்ததாகம வமனம் வுவிர்தாசியம் சம்வுவிர்தகசி மேகப்பிடகம் க்ஷீணசுக்கிலம் வாய்கசப்பு அரோசகம் இவை நீக்கும்.

லவங்கப்பூவின் குணம்.

பித்த மயக்கமறும் பேதியொடு வாந்தியும்போஞ்
சுத்த விரத்தக்கடுப்புந் தோன்றுமோ-மெத்த
வில்வங்கங் கொண்டவருக் கேற்ற சுகமாகு
மலமங்கே கட்டுமென வாழ்த்து.

இதுவுமது.

சுக்கில நட்டங்காணச் சூர்வியங்க லாஞ்சனந்தாட்
சிக்கில்விடாச் சர்வாசி யப்பிணியு-மக்கிக்குட்
டங்கப் பூவோடு தரிபகிருந் தோன்றில
வங்கப்பூ வோடுரைத்து வா.

(இ-ள்.) லவங்கப்பூ பித்தசோபம் அதிசாரம் சர்த்தி உதிரக்கிரகணி ஆசனப்பிடுங்கல் க்ஷீணவிந்து செவிநோய் சிவந்தமச்சம் கறுத்தமச்சம் விவுர்தம் சம்விவுர்தம் என்றவாதங்கள் கண்ணில் பூப்படை முதலிய நோய்கள்போம் மலங்கட்டும் சவுக்கியமும் உண்டாகும்.

### சாதிக்காயின் குணம்.

தாதுநட்டம் பேதி சருவாசி யஞ்சிரநோ
யோது சுவாசங்காச முட்கிரணி-வேதோ
டிலக்காய் வரும்பிணிபோ மேற்ற மயல்பித்தங்
குலக்கா யருந்துவர்க்குக் கூறு.

(இ-ள்.) சாதிக்காய்க்கு விந்துநஷ்டம் அதிசாரம் ஆகியவாதங்கள் தலைநோய் இரைப்பு இருமல் உஷ்ணவாதகிரகணிமுதலிய ரோகங்கள்விலகும் மயக்கமும் பித்தமும் அதிகரிக்கும் என்க. குலம்-சாதி.

### சாதிபத்திரியின் குணம்.

சாதிதரும் பத்திரிக்குத் தாபச் சுரந்தணியு
மோதுகின்ற பித்த முயருங்காண்-தாதுவிர்த்தி
யுண்டாங் கிரகணியோ டோதக் கழிச்சலறும்
பண்டாங் குரையே பகர்.

(இ-ள்.) சாதிப்பத்திரிக்கு அழற்சுரம் கிரகணி சலமர்த்தபேதி இவைநீங்கும் பயித்தியமும் சுக்கிலப்பெருக்கமும் உண்டாம் என்க. சாதி-சாதிக்காய். 1041

### தாளிசப்பத்திரியின் குணம்.

நாசிகளுக்குப் பிணிக ளுட்பட்ட காசஞ்சு
வாச மருசி வமனங்கால்-வீசிவரு
மேகமந்த சுத்திசுரம் விட்டேகுந தாளிசத்தா
லாகுஞ் சுகப்பிரச வம்.

(இ-ள்.) தாளிசாபத்திரியால் பீநசம் கிளரோகம் நாட்சென்ற யிருமல் இறைப்பு அரோசகம் வாந்தி வாய்வு கீழ்ப்பிரமேகம் அசிரணம்அஸ்ததாது கதசுரம் ஆகிய இவைபோம் சுகப்பிரசவம் உண்டாம்.

### முப்பத்திரியின் குணம்.

பத்திரிகண் மூன்றிற் பயிலுங் குணங்கேளாய்
நித்தமலக் கட்டு நீங்கிவிடுஞ்-சுத்தசுரந்
தாகமொடு வாந்திவிக்க றங்காவெக் காலையிலுங்
கோகிலமே யிக்குணத்தைக் கூறு.

(இ-ள்.) குயில்போலும் இனியமொழியையுடையவளே லவங்கம் சாதி சாளிசம் என்றே மூன்றுபத்திரிகளாலும் மலபந்தம் தனிச்சுரம் அதிதாகம் வமனம் விக்கல் இவையொழியும். 1043

கற்கடகசிங்கியின் குணம்-இதுவே கடுக்காய்.

முக்கலையங் காசகப மூடு கிராணிமூல
கக்கிரதத பித்தங் கறைப்பேதி-யுட்குடலிற்
றங்கொலிநீர்ப் புண்சுரஞ் சமீரம்விட வெப்பிவைபோஞ்
சிங்கியினாற் போகமுறுங தேர்.

(இ-ள்.) கற்கடகசிங்கியினால் முக்கல் ஆமம் இருமல் கஷயம் கிரகணி மூலமுளை ரத்தபித்தம் ரததபேதி குடலிரைச்சல் மேகவிரணம் சுரம் விஷசுரம் ஆகிய இவைபோம் வீரியம உண்டாம். 1044

நாகப்பூவின் குணம்-குருவிருத்தம்.

மதமூர்ச்சைபிரமியஞ் சுவாசகாசம புகைச்சல
வுதிர்குறறசுமமல்கிட விடஞ்சருவாசியகதே
எதிகாரங் கமலப்பண்ணே ரத்தமூலமமேகஞ்
சதிநீர்வர்துவிணட் டம்போமரிகாகமலரி ணுக்கே.

(இ-ள.) நாகப்பூவிற்கு மதமூர்ச்சை ரததப்பிரமியம் இரைப்பு இருகல் கண்புகை நடுக்கல் சுரசாதம் எலிமுதலியவிஷம், வாயைப்பற்றிய வாதரோகங்கள், தேள்விஷம் பேதி புண்டரீககுஷ்டம் உதிரமூலம் பிரமேகம் வெப்பு வெகுமூத்திரம கூஷீணசுக்கிலம் ஆகியவைபோம்.

சிறுநாகப்பூவின் குணம்-வெண்பா.

சிறுநாகப் பூவினது செங்கைதனைச் சொல்வோங்
குறியாடு மேகததைக் கொல்லு-நெறியைவிட்டுத்
தீதாற்செல் வாயுவைத் தீர்க்குமிரு மற்போகும
கோதா யிதையறிநது கொள்.

(இ-ள்.) பெண்ணே! சிறுநாகப்பூவானது ஆண்குறியால் விழுகின்ற வெள்ளை மார்க்கந்தப்பிய ஆவிருதவாதம் காசரோகம் இவைகளை நீக்கும். 1046

கண்டில்வெண்ணே கூகைநீற்றின் குணம்.

கண்டில்வெண்ணெய் மாதேகேள் காந்திப் பிரதாபமுமாந்
தொண்டெயினுண் ணீர்க்கட்டு தூறிருமன்-மிண்டிவரு
நீர்க்கடுப்ப கூலதனு ணீர்க்குத்தனும் போக்கும்
பார்க்கு ளறியப் பகர்.

இதுவுமது.

கூகைநீற்றின் மாதர் குய்யநோய் வுத்திரிதி
யாகமெனு மார்பிணே யண்டுமோ-போகமதில்

வீரியமு முண்டாக்கும் வீழ்கிருமி நோயோடுத்
தூரிருமல் விளையும்போம் சொல்.

(இ-ள்.) கண்டில் வெண்ணெயினால் காந்தியும் பிரதாபமும் உண்டாகும். தொண்டையின் நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு இவைநீங்கும். கூகை நீற்றினால் யோனிரோகம் வித்திரிதிக்கட்டி இருத்வாதம் கிரிப்பழு காசம் கோழை இவைபோம. விந்துபுஷ்டியாம. 1047

**நாகத்தின் குணம்-இதுவே நகம்.**

தலைவலி நீரேற்றந் தலையிடிப்புக் குத்தற்
றொலையாம லட்டுநோய் சோமை-நிலைவிழிநோய்
பாகனைய சொன்மின்னே பருமுதர ரோகமும்போ
நாகணத்தி லேநீ நவில்.

(இ-ள்.) பாகன்ன வசனிப்பவளே! நாகணத்தினால் சிரஸ்தாபம் சலதோஷம் தலையிற்குத்தலுடலிடிப்பு மலட்டுநோய் வீக்கம் நீங்காத கண்ணோய் பெருவயிறு இவை ஏகும. 1048

**மாசிக்காயின் குணம்.**

அக்கரங்கள்போக்கிவிடு மாறாத வெப்பகற்று
மெய்க்குறுதி மாசிக்காய் மென்மேலுந்-தக்கதொரு
பாலர்கண் நோய்போக்கும் பன்மேகமுந் தொலைக்கும்
வேலனைய கண்ணாய் விரி.

(இ-ள்.) வேலனையகண்ணையுடையவளே! மாசிக்காய்பித்தசிசுவாகண்டம மாராத உட்சூடு சிசுககளின் கணச்சூடு பலமேகங்கள் இவைகளை நீககும், உடற்குப் பலநதரும. 1049

**வலம்புரிக்காயின் குணம்.**

பூத பைசாசம் பொறுக்கொணா நேத்திரச்சூர்
கீதமிகு செவிநோய் கேவல்விக்க-லோதுகுளிர்த்
தோடமொடு மேகங்கூன் சொன்னவை யெலாநடுக்கி
யோட வலம்புரியை யுண்.

(இ-ள்.) வலம்புரிக்காயால் பதினெண்பூதகணங்கள் சங்கிக்காவிழிநோய் கர்ணநாதரோகம இருமலின தீவரததால் வராநின்ற கேவலவிக்கல் சீதசுரத்தினது ஆயாசமமேகம் கூன்விழுதல் ஆகியவைபோம்.

**வாய்விளங்கத்தின் குணம்.**

பாண்டு குட்டகுன்மம் பருந்தூல நோய்வாதந்
திண்டுதிய விடஞ்சி ரந்துண்ட தீண்டமடி

நோய்விளக்கங் காட்டாத நுண்கிருமி பாசனப்புண்
வாய்விளங்கக் காட்டவிடு மால்.

(இ-ள்.) வாய்விளங்கத்தால் பாண்டு குட்டம் குன்மம் அதிதூலம் வாயு சர்ப்பகீட தாவர விஷங்கள் சிரசு நாசு வயிறு இவைகளில் இப்பிணியுளதென் றறிதற்கரிய சன்னகிருமி பகந்தரம்இவைபோம்.

தக்கோலத்தின் குணம் இதுவே தக்கோலப்பொட்டு.

பாண்டுசுரம் போகும் பகரிற் பலஞ்சேருந்
தீண்டுமுப யாசியமுந் தீருங்கா-ணீண்டதொரு
தாதுவிர்த்தி யாகுந் தளர்ந்த மலமுங்கட்டுங்
கோதகலுந் தக்கோலங் கொள்.

(இ-ள்.) தக்கோலத்தினல் பாண்டுநோய் சுரமும் இருவிதமாகிய வாதங்களும்போம். பலமுமவீரியவிருத்தியும் மலக்கட்டும்உண்டாம்.

விழல் அரிசியின் குணம்.

விழலரிசி யென்றுன் மிகுபித்த மேகு
மழல் குடலின்வாத மகலுக்-குழவு
பரிதோட மேகமிவை சேராவா நீயுங்
குறியா யிதையறிந்து கொள்.

(இ-ள்.) விழலரிசியால் பித்தாதிக்கா் சுரம் ஆந்திரபித்தவாதம் வாதபித்தகபதோஷம் சீழ்ப்பிரமேகம் ஆகியவைவிலகுமென்க.

கார்போக அரிசியின் குணம்.

கார்போக மாவரிசி கண்டாற் கரப்பான்புண்
பீர்சருவ நஞ்சிவை பித்தமுறும்-பார்மீதில
வாதகப நமைச்சல் வன்சொறி சிரங்குமறும்
சீதமலர்க் குழலாய் செப்பு.

(இ-ள்.) மலரணிந்த கூந்தலையுடையவளே! கார்போக அரிசியால் கடுவன் விரணம் பயங்கரமான சர்ப்பகீடதாவரவிஷங்கள் வாதசிலேத்மதொந்தம் தினவு யானைச்சொறி கிரந்தி ஆகியவை விலகும் பயித்தியம் அதிகரிக்குமென்க. 1054

வாலுழுவை அரிசியின் குணம்.

வாயிற்றுக் கடுப்புவலி மாறுக கிராணி
பயித்தியங் காசமல பந்தஞ்-சயிக்கவொணுச்
சூதிகா வாதமும்போந் தொல்வா லுழுவைவிதைக்
காதிரவ சித்தர்மொழி யாம்.

(இ-ள்.) வாலுழுவைஅரிசிக்குவயிற்றுப்பிடுங்கல் கடுப்பையுடையரத்தபேதி பித்தம் இருமல் மலக்கட்டு அசிர்க்கரம் இவைபோம்.

### வெட்பாலை அரிசியின் குணம்.

வெட்பாலை தன்னரிசி வீறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடலவாத-முப்பிசதநை
காணுமலே காளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணுர் முலையாய் புகல்.

(இ-ள்.) ஆபரணமணிந்த முலையையுடையவளே! வெட்பாலை அரிசியானது பயித்தியவாததொந்தம கடுவன் குடல்விர்ததிரோகம் வயிற்றுப்பொருமல் இவைகளை விலக்கும். 1059

### காசினிவிதை, துளசிவிதை-இவைகளின் குணம்.

காசினி விதைக்குக கதிதத வரோசிசர்த்தி
காசினியை விட்டேகுந காணனமே-பேச
மளவி கற்பம்போ மருசி கடுங்குந
துளசி னறுவிதைக்குச் சொல்.

(இ-ள்.) அன்னநடையாளே! காசினிவிதைக்கு அருசியும் வாந்தியும்நீங்கும், துளசிவிதைக்கு சிலேத்மமும் அரோசகமும் விலகும்.

### புத்திரசீவி விதையின் குணம்.

ஆகியதோர் மூலமன லமவெட்டை மேகமும்போம்
போகம் விளையும் பொறுமலமுங-தாகமபோம்
புத்திர சீவியெனப் போற்றும விதைபதனு
வித்தரையுண் மாதே யியமபு.

(இ-ள்.) பெண்ணே! புத்திரசீவி விதையினுல மூலசுரம் வெள்ளை நீர்ப்பிரமேகம் வயிறுறுமபிசம தாவறட்சி இவைபோம சுக்கிலம்விளையுமென்க. 1058

### சமுத்திரசோஷிவிதையின் குணம்.

ஐப மகற்று மரோசகதலைத மாற்றிவிடும்
பையுதிர வாயுவையும பற்றறுக்கு-மெய்யை
யமிழ்த்துகின்ற நீரை யனிலதனைப போக்குஞ்
சமுத்திரசற் சோஷிவிதை தான்.

(இ-ள்.) சமுத்திரசோஷி விதையானது கபதோஷம் சோணிதவாதம் அருசி அதிமூத்திரம் வாதாதிக்க மிவைகளையொழிக்கும்.

### கசகசாவின் குணம்.

கிருமி நகைச்சல் கிராணி யதிசாரஞ்
சிரநீர் நித்திரைபோஞ் செப்பி-லுருவழகும்

காந்தியு முண்டாகுங் கசகசாவின் குணத்தை
தேர்ந்தவர்க்கு விந்துவுமாக் தேர்.

(இ-ள்.) கசகசாவினால் ரசதாதுகிருமி தினவு சீதாத்தக்கழிச்சல் மலபேதி சலதோஷம் நித்திரைபங்கம் இவைபோம் தேகத்தில் சவுந்தரியம் தேஜசு சுக்கிலம் இவைவிருத்தியாம். 1060

பெரிய யேலத்தின் குணம்-கட்டளைக்கலிப்பா.

தொண்டைவாய்கவுடாலுருதங்களிற்
றோன்றுநோயதிசாரம்பன்மேகத்தா.
லுண்டைபோலெழுங்கட்டிகிரிச்சுர
முழலைவாந்திசிலந்திவிடஞ்சுரம்
பண்டைவெக்கைவிதாகநோய்காசமும்
பாழுஞ்சோமப்பிணிவந்துநட்டமுள்
வண்டையீளவன்பித்தமிவைக்கெலா
மலாமாம்பருமேலமருந்தே.

(இ-ள்.) பருத்த ஏலமானது சுறக்கினம் பித்தமுகபாகம் தாளுபாகம் பித்த சிக்வாகண்டகம் சருமகீலம் பேதி அரையாப்புக் கட்டி கிரிச்சரம் வாயுமூலை சர்த்தி சிலந்திவிஷம் ருட்சை உஷ்ணபேதி விதாகம்இருமல் சோமரோகம் வயற்றில்கபநிறைவு நெஞ்சிற்கோழை உரத்தபித்தமாகிய நோய்களை விலக்கும். 1061

சிறுயேலத்தின்குணம் வேண்பா.

மலவாத மோடு வயிற்றுக்கொதிப்பு
சலமூரல் வாயினிப்பு தாகஞ்-சலபேதி
வேர்க்குந் தலைநோய் மிகுருட்சை யையமிவை
போக்குஞ் சிற்றேலமெனப் பேசு.

(இ-ள்.) சிறுஏலம் மலாவிருதவாயு நுறைத்தமலம் உமிழ்நீரூரல் வாயினிப்பு தாகம் சலபேதி வியர்வைத் தலைவலி மிகுசுரம் கபந்தீரும். 1062

மலையேலத்தின் குணம்.

நாவறட்சி தாகசுர நாடா தகற்றிவிடுந்
தீவறட்சி நீர்க்கடுப்பைத் தீர்க்குங்காண்-மூவறட்சி
கூடுமோ ரசத்தைக் கூடாம லோட்டிவிடுந்
நாடு மலையேல நவில்.

(இ-ள்.) மலையேலமானது நாவறளல் வரட்சுரம் பித்தச்சொறி நீர்ச்சுருக்கு திரிதோஷவறட்சியால் பிறந்த அருசி இவைகளைநீக்கும்.

காட்டேலத்தின் குணம்.

தீராத வாந்தி சிலேத்ம மதிசாரம்
போரா வருசிபித்தம் பேருங்காண்-சோருமல்
காட்டேல வார்குழலே காராம் பரிமளஞ்சேர்
காட்டேல மென்றுரைக்குங் கால்.

(இ-ள்.) நீண்டகூந்தலை யுடையவளே! உரைப்பும் மணமும் உள்ள காட்டு ஏலத்தினாலே நீங்காத சர்த்தி கபம் பேதி அரோசகம் பயித்தியம் இவைகள்போம். 1064

சீரகத்தின் குணம்.

வாந்தி யருகுன்மம் வாய்நோய் பிலீகமிரைப்
பேந்திருமல் கல்லடைப்பு லாஞ்சனமுட்-சேர்ந்தகம்ம
லாசன குடாரியெனு மந்தக் கிரகணியும்
போஜன குடாரியுண்ணப் போம்.

இதுவுமது.

வாயுவொடு நாசிநோய் வன்பித்தஞ் சோராது
காய நெகிழாது கண்குளிருந்-தூயமலர்க்
காரளகப் பெண்மயிலே கைகண்ட நித்தனையுஞ்
சீரகத்தை நீதினமுந் தின்.

(இ-ள்.) கறுத்த கூந்தலுடையாளே! சீரகத்தினால் பித்தசாந்தி அரோசகம் வயிற்றுவலி முகரோகம் பிலீகநோய் சுவாசம் காசம் அசமறிமச்சம் சுரக்கினம் சீதரத்தகிராணி வாதாதிக்கம் பீநசம் பயித்தியும் விலகும் சரீரத்திற்குறுதியும கண்ணுக்குக் குளிர்ச்சியுமாம்.

பெருஞ்சீரகத்தின் குணம்-இதுவே சோம்பு.

யோனிநோய் குன்ம முருட்சை மந்தமபொருமல்
பேனமரு காசம பிலீகமிரைப்-பீனவுரை
சேர்க்கின்ற வாதமும்போஞ் சீர்பெரிய சீரகந்தான்
மூக்குநோ யில்லை மொழி.

(இ-ள்.) பெருஞ்சீரகத்தினால் வாமினியோனிரோகம் வயிறுவலி சுரம் அசிரணம் வயிற்றுப்பிசம் நுரைத்தகபயிருமல் பிலீகம்சுவாசம் தொனிகத்தவாதம் அதிஅம்மல் பீனசம் இவைகள் போகும். 1066

கருஞ்சீரகத்தின் குணம்.

கருஞ் சீரகத்தாற் கரப்பனொடு புண்ணும்
வருஞ்சிரய்ப் பீநசமு மாறு-மருந்தினைற்

காச்சல் தலைவலியுங் கணவலியும் போமுலகில்
வாய்ச்ச மருந்திதனை வை.

(இ-ள்) கருஞ்சீரகமானது மண்டைக்கரப்பான் விரணம் சிரப்பீநசரோகம் உட்சூடு சிரநோவு கண்ணோய் இவைகளை நீக்கும். 1067

காட்டுச்சீரகத்தின் குணம்.

கைகறுப்பு மாறுங் கடியமேசம் போகு
மெய்க்குத் தண்ணுயபித்தம் வீறுவாங்-கைக்கரிமாக்
கோட்டுப் பணமுலையாய் குன்ம வாதநகொலையு
காட்டுநற் சீரகதனைக் காண்.

(இ-ள்.) யானைத்தந்தம்போனு முலைகளையுடையவளே! காட்டுசீரகத்தால் உள்ளங்கைக்கரும்புள்ளி பிரமேகம் பயித்தியம் வாதகுன்மம் இவைபோம் குளிர்ச்சியுண்டாம. 1068

பிளப்பு சீரகத்தின் குணம்.

உடலுக் கழகா முறைபித்த மேகு
மடலீறு வாத மதமாங்-கடிசேர்
தளவுநகைக் கோட்டுமுலைத் தையலே நாளும்
பிளவுநறுஞ் சீரகத்தைப்பேண்.

(இ-ள்.) பெண்ணே! பிளப்புசீரகத்தினால் நீங்காப் பயித்தியமும் வாதகோபமும் நீங்கும் சரீரத்திற்கு அழகுண்டாகும். 1069

கொத்தமல்லியின் குணம்-இதுவே உருள் அரிசி.

கொத்தமல்லி வெப்பங் குளிர்க்காய்ச்சல் பித்தமந்தஞ்
சர்த்திவிக்கல் தாகமொடு தாதுநட்டங்-கத்திபெழும்
வாத விகாரமடர் வன்கர்த்தபி விரணம்
பூதலத்தில் லாதகற்றும் போற்று.

(இ-ள்.) கொத்துமல்லியானது உட்சூடு நளிர்ச்சுரம் பயித்தியம் பயித்தியவேகம் அசீரணம் வாந்தி விக்கல் நாவறட்சி க்ஷீணிசுக்கிலம் பெரும்ஏப்பம கர்த்தவிரணம் ஆகிய இவைகளைப் போக்கும். 1068

செங்கடுகின் குணம்.

இடிகாச நாசிச்சூ ரீளைகபம் பித்தக்
கடிவாத சீதங் கடுப்போ-டடலிற்
பங்கோட்டு நோயென் னும பங்கிலைளச் செங்
கடுகோட்டு மேன்மருந்து காண்.

இதுவுமது.

பந்தமயக்கம் வாதம் வாய்நீர்ச் சுழற்றலறு
முந்து சுப்பிரசவங்க ளுண்டா-மிந்துநுதன்
மானே கிரகணிக்குன்ம மாறுமுத் தோஷங்களறுந்
தானே கடுகிற்கு தான்.

(இ-ள்.) பிறைபோலும் நெற்றியையுடையவளே! செங்கடுகு, தலையிடிப்பைத்தாகின்ற இருமல் பீநசம் கோழைக்கபம் பயித்தியம் காணு விஷக்கடி வாதகபம் குடைச்சல் மூடம் அக்கினிமந்தம் வாத தோஷம் குழம்பிய உமிழ்நீர் கிரகணி வயிற்றுவலி திரிதோஷம் இவைகளை விலக்கும் சுகப்பிரசவத்தைத் தரும். 1071

வெண்கடுகின் குணம்.

பாலகிரகம்பூத பைசாச மோட்டிவிடு
மால விஷங்கடிக ளாற்றுங்காண்-கோலமிகு
வள்ளைச் செவிமாதே மாபங்ச நோய் விலக்கும்
வெள்ளைக் கடுகின் விதி.

(இ-ள்.) பெண்ணே வெண்கடுகானது கந்தகிரகம்முதலிய 12பால கிரகங்கள் தேவபூதமுதலிய 18-வகை பூதங்கள் மகாசர்ப்பவிஷம் வண்டுமுதலிய விஷக்கடிகள் பங்குவாதம் இவைகளை நீக்கும். 1072

சிறுகடுகின் குணம்.

தோஷிரத நெய்யூன்மே தோசாது வின்வளிக்கு
மேவிரணப் பூச்சு விடங்கபநோய்-காவிங்
கெறியகடு விழிமனும்போ மேங்கெழிலார் மாதே
சிறியகடுகின் குணத்தைத் தேர்.

(இ-ள்.) அழகியபெண்ணே! சிறியகடுகினுல் விஷம் சிலேஷ்ம நோய் மூச்செறியச்செய்கின்ற வயிற்றுவிம்மல் இவைநீக்கும் இது சருமம் ரசம் ரத்தம் மாமிசம் மேதை ஆகிய இத்தாதுக்களின்வாயு வினுல் பிறக்கின்றபிணிக்கு விரணம் உண்டாகும்படி பூசுகிறலேபன சிகிச்சைகளும் ஆம். 1073

நாய்க்கடுகின் குணம்.

சூதக வாயுவொடு சோணிதத்தின வாதமும்போம்
வாதவலிகுன்ம மடியுங்காண்-மாதுநல்லாய்
பேய்கட் புகைபோடப் பேசா தொழிந்துவிடு
நாய்க்கடுகை நீ விரும்பி னுல்.

(இ-ள்.) மாதே! நாய்க்கடுகினால் வாதசிரக்கம், வாதசோணிதம் வாதகடுப்பு குன்மம் இவைபோம். இப்புகையால் பூதபைசாசங்கள் விலகும். 1074

வெந்தியத்தின் குணம்.

மேதிகண மத்திசுர மேகங் கயஞ்சீத
பேதியதிசாரநோய்ப் பித்திரும-லாதியநோய்
நீக்குமன றணிக்கு நிதமுற விந்துவையுண்
டாக்கு மனமே யறி.

(இ-ள்.) அன்ன நடையாளே! வெந்தியமானது கணமாந்தம் அஸ்திசுரம பிரமேகம் க்ஷயம் சீதக்கழிச்சல் பேதி ரத்தபித்தம காசம் உட்சூடுமுதலிய பிணிகளை விலக்கும். நிரந்தரமாகச் சுக்கிலத்தை விளைக்குமெனக. மேதி-வெந்தியம். 1075

ஓமத்தின் குணம்.

சீதசுரங் காசஞ் செரியா மந்தம் பொருமல்
பேதியிரைச் சற்கடுப்பு பேரா-மோதிருமற்
பல்லோடு பண்மூலம் பகமில்நோ யென்செயுமோர்
சொல்லோடு போமெனச் சொல்.

(இ-ள்.) ஓமத்தினால் குளிர்ச்சிசுரம் இருமல் அசீரணம் வயிற் றுப்பிசம் அதிசாரம் குடலிரைச்சல் ஆசனக்கடுப்பு சீதபேதி சுவாச காசம் தந்தரோகம் தந்தமூலரோகம குய்யரோகம் இவைவிலகும்.

குரோசானி ஓமத்தின் குணம்.

வெகுமூத்திர வாதம் வீரியநட் டம்புண்
ணுகுபேதி யுட்கடுப்பி ளேநீட-மிகுகரப் பான்
தீருக் கபமிவைபோஞ் செய்குரோ சானியென்றால்
வாரா மயக்கமுறு மால்.

(இ-ள்.) குரோசானி ஓமத்தினால் அதிமூத்திரம் வாதாதிக்கம் க்ஷீணவிந்து விரணம் வாதாதிசாரம உடற்கடுப்பு கரப்பான் நீங்காக் கபநிறைவு ஆகிய இவைநீங்கும். அதிமயக்கம் உண்டாகும். 1077

சதகுப்பையின் குணம்.

வாதமொடு சூதிகா வாதஞ் சிரசிநோய்
யோதுசெவி நோய்கபநோய் மூடுசுர-மோதுகின்ற
மூலக் கடுப்பு முதிர்பீநசம் போக்கு
ஞாலச் சதகுப்பை நாடு.

(இ-ள்.) சதகுப்பை வாதரோகம் அசிர்க்கரம் தலைவலி கர்ண சூலை சலதோஷம் கபரூட்சை ஆசனக்கடுப்பு சலபீநசம் இவைகளை நீக்கும். 1078

பெருங்காயத்தின் குணம்-கட்டளைக்கலிப்பா.

தந்தவேதந்த மூலத்தெழுபிணி சருவகாளத் திருட்சிங்கீடமா
யந்தவாத முதாவர்த்தமலகுன்மைப் மார்பணங்கட்ட குன்மமகோதர
மூந்துகெர்ப்பத்தின்விக்கிரஞ்சூலை சூருதிரப்பூச்சிசிலேஷ்மத்தூறுவலி
வந்தமெய்க்கடுப் போடுவை மூற்றுமே மாயுநாறு காயங்கிடைக்கினே.

(இ-ள்.) மணமுள்ள பெருங்காயத்தினால் தந்தரோகம் தந்தமூல ரோகம் சகலசர்ப்பவிஷம் தேள்விஷம கிருமி அசீரணம் வாதாதிக்கம் உதாவர்த்தவாதம் யோனிரோகம் இருதவாயு எண்வகைகுன்மம்உதர த்ராகம் கருப்பவித்திரிதி சூலை ரத்தகிருமி கபரோய் குடைச்சல்தீரும்.

வெள்ளைப்பூண்டின் குணம்-வெண்பா.

சந்நியோடு வாதந் தலைநோவு தாளின்வலி
வன்னிவரு நீர்க்கோவை வங்கித-மன்னமோ
யுள்ளுள்ளிக் காண்பா யுளைமூல ரோகமும்போம்
வெள்ளுள்ளி தன்னால் வெருண்டு

(இ-ள்.) அன்னநடையாளே! வெள்ளைப்பூண்டினால் சந்நிவாத ரோகம் சிலேஷ்மசிரஸ்தாபம் வாய்ப்பூட்டுநோய் நீரேற்றம் சீதபேதி அரசம் இவைநீங்கும். 1080

அபினியின் குணம்.

நல்லபினிக் குணந்தை நாடிய நாம்புகலவ
தல்லல் குன்மவாத ப நஞ்செவிநோய்-பல்லின்வலி
பேதியந்த மதிநோய் பீநசமபோம் வன்மையுண்டாஞ்
சாதி யுதிரச்சுத்தி காண்.

(இ-ள்.) அபினியால வயற்றுநோய் வாதாதிக்கம் கர்ணசூலை தந்த நோய் அதிசாரம் அசீரணம் எலுமபிற்குடைச்சல் நாசிகாரோகம் இவைபோம் சாதிலிங்கநிறமுள்ள உதிரச்சுத்தியும் உண்டாம். 1081

கஞ்சாவின் குணம்.

மூலக் கிராணியறு முன்புள்ள பேதிகட்டுஞ்
சாலமயக்கும் பசியுஞ் சாருங்காண்-தூலஞ்செய்
வாதமொடு வைபமும்போம் வன்கரப்பனுந் தொலையுங்
கோதறு கஞ்சாச் சடைக்கு.

(இ-ள்.) கஞ்சாவிற்கு மூலவாய்வு கிரகணி நீடித்த அதிசாரம் அதிசூலம் கபாதிக்கம் கரப்பான் இவைபோம் மிகுமயக்கமும் அதி தீபனமும் உண்டாம். 1082

### கரியபோளத்தின் குணம்.

மார்புவலி வீக்கம் வயற்றுவலி பக்கநோய்
வார்மேகக் கட்டியொடு மாவாதம்-பாருலகி
னீளங் கைகாலி நிலைசூலியங் கறுத்த
போளந்தனைக் காணிற் போம்.

(இ-ள்.) கரியபோளத்தினால் இருத்வாதம்சோபைகுன்மம்மூடம் சிமசுப்பிடகம் மகாவாதரோகம் கைகால்குத்தல் இவைபோம். 1083

### ரத்தபோளத்தின் குணம்.

விழுந்திறந் தங்கமிக வீங்கு முறுவிக்க
மெழுந்து நிற்கவொட்டா விசுவோ-டழுந்தி
யுரைத்த தமருமவலி யோடு மெதிர்நிற்கா
திரத்த போளத்தை யெடு.

(இ-ள்.) ரத்தபோளத்தினால் விழுந்து ரத்தம்கட்டி அதன்மே லதிகரித்தநோவுடன் வீங்குகின்ற வீக்கமும் எழுந்து நிமிர்ந்து நிற்க வொட்டாத பக்கநோயும், மார்பின உபத்திரவமும் நீங்கும். 1084

### வாலேந்திரபோளத்தின் குணம்.

சூலை சயரோகஞ் சொறிகரப்பான் குன்மமிவை
யாலைவாயின் கோற்போ லாகுங்கா-ணீலசக்ர
வாளமெனத் தோன்றுமுலை மாதரசே வாலேந்திர
போளந்தனை யெடுக்கும் போது.

(இ-ள்.) பெண்கள்நாயகமே! வாலேந்திர போளத்தினால் கீல்பிடிப்பு க்ஷயம் நமைச்சல் கரப்பான் வயிற்றுநோய் ஆகியவைகள் விலகும்.

### வெளிச்சப்பிசின் குணம்.

முகசந்நி பாதமொடு முட்டிவரு நீரு
முகவாத சன்னிகளு மண்டா-மகிழுங்
களிற்றை நிகருமுலைக் காரிகையே நாளும்
வெளிச்சப் பிசினை விளம்பு.

(இ-ள்.) பெண்ணே! வெளிச்சப்பிசினால் வாயுவாற்பிறந்த சிம்ம கம்புகன், நேத்திரம், பிரலாபம், அந்தகம என்னும் சந்நிபாதங்களும் அதிநீரும்போம். 1086

### நாவியின்போதுக் குணம்.

வாதவலி மந்தமறன் மாறுக் கபப்பிணிக
ளோதுகுட்டு குன்மந்தே ளோடுங்காண்-காதலர்தம்
புத்தியோ டாருயிரும் பூவும் வணேகுழலே
சுத்திசெய்த நாவியின்பேர் சொல்.

(இ-ள்.) விரும்பப்பட்ட நாயகருடைய அறிவையும் உயிரையும் கூந்தலொடு முடித்துக்கொள்ளுகின்ற பெண்ணே! சுத்திசெய்தநாவியினால் வாதக்கடுப்பு அசீரணம ஒதமுள்ள ஜலதோஷங்கள் குஷ்டம் வயிற்றுவலி தேள்விஷம் இவைநீக்கும். 1087

### பச்சைநாவியின் குணம்.

கடியதொரு குட்டங் கனந்த விஷசந்நி
கொடியதொரு குன்மங் குலேயும்-படியிற்
றளிரத்தி வெப்புடனே தாகசுரந் தீரும்
வளர்பச்சை நாவிதனே வாழ்த்து.

(இ-ள்.) பச்சைநாவியால் குறைநோய் விஷசந்நிபாதம் வயிற்று நோய் அஸ்திச்சூடு தாகசுரம ஆகியவைகெடும். 1088

### வெள்ளைநாவியின் குணம்.

குட்டங் கடிசூலே கூடுபுரி வனகிருமி
துட்டகுன்ம வாதந் தொலேயுங்காண்-வட்டமுலேப்
பெண்ணே சுரந்தணியும் பேருலகத்தார் பகைக்குட்
வெண்ணுவி தன்னே விரும்பு.

(இ-ள்.) பெண்ணே! வெண்ணவியால் குஷ்டம் காணுக்கடி குத்தல் மார்பை வீங்கச்செய்கின்ற கிருமிரோகம் வாதகுன்மம் ஞட்சை ஆகியவைகள் ஒழியும். 1089

### கருநாவியின் குணம்.

எண்ணுச் சுரம்போ மிறக்கும் பீலிகமறும்
புண்ணு றுமூவரும் புழுக்கள் விழுந்-தண்ணுறும்
வல்லே கவிகையொடு வாத சுரமிவைக
ளில்லேயொரு கார்நாவிக் கே.

(இ-ள்.) கருநாவிக்கு நாவெட்டிக்காய்ச்சல் கழுகிய பீலிகம் விரணம் கிருமிகள் வல்லக்கட்டி மகோதரம் வாதசுரம் இவைதீரும்.

### சூத்திரநாவியின் குணம்.

காய்ச்சல் தலைநோய் கனத்தசக்தி பாதமெரிப்
பூச்சி விடக்கடியுட் புண்குட்டங்-கூய்சசறு
காத்திர தேளுங்குடிபோங் காரளகப் பைங்கொடியே
சூத்திர நாவிக்குத துவண்டு.

(இ-ள்.) சூததிரநாவிககு சுரம் சிரஸ்தாபம சந்நிபாதம் எரிக்கி ருமி சர்ப்பவிஷக்கடி உள்விரணம் குஷ்டநோய் தேள்விஷமிவைபோம்.

### நில ஆவரையின் குணம்.

நிலாவாரை யின்குணநதா னீகேண் மயிலே
பலமூல வாயுவெப்பு பாவைச்-சிலகிரநதி
பொல்லாத குன்மம பொருமுமலக் கட்டுமுத
லெல்லா மகற்றுமென வெண்.

(இ-ள்.) மயிலனையவளே! நில ஆவாரை பற்பல மூலவாயுக்கள் சுரம் சிழ்ச்சிரந்குகள் வயிற்றுவலி வயிற்றை யுப்பச்செய்கின்ற மலக் கட்டு இவைவளை நீக்கும். 1092

### சிவதைவேரின் பொதுக்குணம்.

உள்ள மலமு முதாவர்தத முமவயிறதை
கொள்ளுபிதத வாதமுமபோம கூறுங்காற்-பிள்ளைகட்குச்
செப்பு கிரகமுமபோந தேனே யுலகததுட்
டப்பிற சிவதைக்குத் தான்.

(இ-ள்.) குற்றமற்ற சிவதைககு, பழையமலம் உதாவர்த்தம் பித்தவாததொந்தம பாலகிரகதோஷம் ஆகியவைவிலகும். 1093

### வெண்சிவதை வேரின் குணம்.

கைப்புக் துவர்ப்புங் கலகதிருககும் பித்தத்தை
யிப்புவியி லொட்டா திவ்வளவே-செப்புதாத்
தொள்ளைக் கிருமி தொலைக்குமிகு பேதிதரும்
வெள்ளைச் சிவதைகளை விள்.

(இ-ள்.) கசப்புந்துவர்ப்புமுள்ள வெண்சிவதை, பைத்திய கோபத்தையும் மலாசயக்கிருமியையும் போக்கும், விரோசனத்தைத்தரும்.

### கருஞ்சிவதைவேரின் குணம்.

காரமுடன் கைப்புண்டாங் காணுமெவலி விடத்தைப்
பாரவனற் குன்மத்தைப் பற்றறுக்கும்-பாரிற்

தெரிஞ்சுரைத்தோம் பேதிதருந் தேன்மொழியே கேளாய்
கருஞ்சிவத்தைக் கந்தமது காண்.

(இ-ள்.) தேன்மொழியாளே! காரமும் கசப்புமுள்ள கருசிவதை அறிவதற்கரிய எவி விஷத்தையும் பித்தகுன்மத்தையும் நீக்கும் விரோசனத்தைச் செய்யும். 1095

நேர்வாளக்கோட்டையின் குணம் - இதுவே நேபாளம்.

ஓதிவுரதத் தூறுபலம பன்னேய் விலகும
பேதி மருந்திற் பெரிதாகும்-வாதமறும்
சூர்வாளை யொத்தவிழிச் கொடிபனையே பண்டிதர்சொன்
னேர்வாளக் கொட்டைதனை நீ.

(இ-ள்.) பேதிமருந்தில் முக்கியமாய் நேர்வாளப்பருப்பால் மலாசயப்பழையமலமும் அதைப்பற்றிய பலபிணிகளும வாதநோயும்போம்.

வாளப்பருப்பு சிலநோய்க்கு ஆகும் ஆகாதெனல் விருத்தம்.

உரைதரு திடு வாதநோய்க்கு முறைகெடு விடஞ்சந்நிக்கு
நிறைத்திடு சூலைகுன்மம் நீடிடுமலக் கட்டிற்குங்
கரைத்திடு வாளந்தன்னை சுதித்திடு மேகத்திற்கு
மறைத்திடு பித்தத்தோர்க்கு மசற்றிய வதனைத்தானே.

(இ-ள்.) வாளப்பருப்பை வாதரோகம் விஷம் சந்நிபாதம் தேகக்குடைச்சல் வயிற்றுநோய் மலபந்தம் ஆகிய நோய்க்குபயோகப்படுத்தலாம் அதிமேகநீரையும் பித்தநோயையும் உடையவர்க்கட்கு நீக்கவும்.

நீரடிமுத்தின் குணம் வெண்பா.

நீரடி முத்திற்கு நீங்கா கிரந்தி குஷ்டம்
போரிடு வாதவினை போகுங்காண்-காரடுக்கு
மென்குழலாய் பித்த மிகுபனல முண்டாகு
முன்னிளா நமைச்சலறு முன்.

(இ-ள்.) மெல்லிய கூந்தலையுடையாளே! நீரடிமுத்துக்கு நீராச்சிரங்கு பெருநோய் வாதரோகம் தினவு இவை நீங்கும், பைத்தியம் உஷ்ணமு முண்டாம். 1098

சேங்கொட்டையின் குணம்.

கிருமி கயஞ்சூலை கிரந்தி திமிர்வாதம்
பொருமுகுன்ம முண்மூலம் புண்ணைத்-தருமா
கரிமுகக் குட்டக் கடிவிடபா கம்போ
மெரிமுகிக்குச் சகமா மெண்.

(இ-ள்.) செங்கொட்டைக்கு புழு க்ஷயம் கீல்பிடிப்பு சிரங்கு சருமத் திமிர் மகாவாதம் வாதகுன்மரோகம் உள்மூலம் விரணக்கருங் குஷ்டம் காணுக்கடி விஷபாகம் விலகும். வீரியவிருத்தியுண்டாம். ()

தேங்காய்ப்பிண்ணாக்கின் குணம்.

சொறிசிரங்கு புண்ணுமாந் தோலாக் கரப்பான்
வறுவாகு மேனியெல்லா மாதே-சிறுக
வயிற்றிற் புழுவினங்கண் மாறு தகிக்குஞ்
சுயதமே தேங்காய்ப் பிண்ணாக்கா றசொல்.

(இ-ள்.) பெண்ணே! தேங்காய்ப் பிண்ணாக்கினால் நமைச்சல் சிரங்கு விரணம் நீங்காத கரப்பான் மலாசயக்கிருமிகள் இவையுண்டாம்.

எள்ளுப்பிண்ணாக்கின் குணம்.

உள்ளிற்புண் ணுங்கிரந்தி யூறலுமிககிளை தசேத
வெள்ளின் பிண்ணாக்குக் கெழுமபுங்காண்-விள்ளுக
கரப்பான் விரணங் கதிச்சத நீர்மேக
முரப்பாகு காளு முறை.

(இ-ள்.) எள்ளுப்பிண்ணாக்கு தாதுவைப்பற்றிய விரணம் சிரங்கு நமைச்சல் கரபபான் புண் சலமேகம இவைவிளையும். 1101

வேப்பம்பிண்ணாக்கின் குணம்.

சந்நியுடன் வாதத் தலைநோய்போம வாதமறும்
முன்னின்ற தோஷ முறியுங்காண்-பன்னுதமிழ்
வல்லவரே வேமபினவழி வந்தபிண்ணாக கென்றுருகாற்
சொலல வையம்போமோ தொலைந்து.

(இ-ள்.) சொல்லுகின்ற தமிழ் வல்லவர்களே! வேப்பம் பிண்ணாக்கினால் சந்நிபாதம வாதசிரஸ்தாபம வாதரோகம் திரிதோஷம் சலாதிக்கம் இவைபோகும் என்க. 1102

இலுப்பைப்பிண்ணாக்கின் குணம்.

பொத்திக் கடுவனொடு புண்ணுங் காப்பனும்போம்
விதனைதப்பு தோஷமிவை வீறுவா-மெத்தெனவே
யெண்ணெய்க் கசிவுகளு மேகு மிலுப்பைவிதைப்
பிண்ணாக்குக் கென்றியப் பேசு.

(இ-ள்.) இலுப்பைப் பிண்ணாக்கு கடுவன் விரணம் கரப்பான் பீஜவீக்கம் திரிதோஷம் எண்ணெய்ச்சிக்கு இவை நீங்கும். 1103

### சாம்பிராணியின் குணம்.

வாதசீதங் கண்ணோய் மாருத சென்னிவலி
போதமுறு பீநசத்துன் போட்டுங்காண்-பூதலத்தில்
வேம்பிது தானென்ன மிருகசப்பைத் தானளிக்குஞ்
சாம்பிராணி சரக்குத்தான்.

(இ-ள்.) வேம்மைப்போற்கசப்புள்ள சாம்பிராணி வாதகபம்விழி நோய் நீங்காதசிரநோய் ஜலபீநசம் இவைகளை விலக்கும்.

### கருப்பூரத்தின் குணம்.

கிருமி சலதோஷங் கிளேப்புவலிப்பு சநநி
பொருமுமந்த மங்கிபட்ட புண்ணோ-டெரிசுரங்கள்
வாந்திபித்தஞ் சீதமுறு வாதஞ் செவிமுகநோய்
சாந்திகருப் பூரமொன்றாற் சாற்று.

(இ-ள்.) கருப்பூரத்தினால் கிருமி நீரேற்றம் இசிவு சந்நிபாதம் வாதாசைகம் தீப்புண்கோரசுரம சர்த்திபைபித்தியம் சிலேஷ்மவாதம் கர்ணசூலை சிலேஷ்மமுபாகரோகம் ஆகிய இவைபோகும்.

### பச்சைகருப்பூரத்தின் பொதுக் குணம்.

அட்டகுன்மஞ் சூலையணுகாது வாதமொடு
துட்டமேகப் பிணியுந் தோற்றுவே-மட்டலறுங்
கூந்தன் முடிமாதே கொடிய கபமபோகுஞ்
சார்ந்த பச்சைகர்ப்பூரத் தால.

(இ-ள.) தேனபொருந்திய கூநதலை யுடையவளே! பச்சைக்கருப்பூரத்தினால் 8-வித குன்மங்கள் சிலகளில குத்தல் வாதநோய் சீழ்ப்பிரமேகம் சிலேஷ்மகோபம இவைநீங்கும. 1106

### பச்சைகருப்பூரத்தின் பேதம்.

பச்சைகருப்பூர வகையில் ஈசன் வீமன் பூசுரச்சிறையன் என மூவிதப் பச்சைக்கற்பூரங்கள் உண்டு. 1107

### ஈசன் என்னும் பச்சைக்கருப்பூரத்தின் குணம்.

ஈசனென்னும் பூரம வெண்மையும காரமுமாம்
பேசரிய சீதமுஷ்ணம் பித்தமயல்-வீசுகின்ற
பீநசமுட் டாகமிவை பேர்த்துவிடுங் காந்தி
யானதது வசிய மாம்.

(இ-ள்.) வெளுப்பும் காரமும் தளதளப்பும உள்ளஈசன் என்னும் பச்சைக்கருப்பூரம் வசியத்திற்காகும சிலேஷ்மசுரம பைபித்தியம் மயக்கம் நாசிநோய் தாகரோகம் ஆகிய இவைகளைப் போக்கும்.

வீமன் என்னும் பச்சைக்கற்பூரத்தின் குணம்.

வீமனென்னுங் கர்ப்பூர மேகவெண்மை யாயிருக்குஞ்
சேமமுறுங் குளிர்ச்சி தின்றக்கா-ணுமருபி
நோயகலுந் தாகமறு நுண்மேபதியு மாகுந
தூயமதி முகத்தாய் சொல்.

(இ-ள்.) மதிமுகமாதே! அழுக்கு வெண்மைகலந்த மேகநிறம் உள்ள வீமன் என்னும் பசசை கருப்பூரத்தினல் கந்ததாளிநோயும் தாகரோகமும்போம் சரீரசவுக்கிய மும குளிர்ச்சியும் அற்பவிரோசனமும் உண்டாம. 1109

பூதாச்சிறையன் என்னும் பச்சைகருப்பூரத்தின் குணம்.

பூதாச் சிறையன் எனனும் பூரமஞசள் கைப்பாகுங்
கோதையர்க் காங்காசக் கொடுமேகம்-வாதாதி
யென்னுந் தனித்தோட மேறு முத் தோடஞ்சொறியுந்
துன்விரண மும்போக்குஞ் சொல்.

(இ-ள்.) மஞ்சள்நிறமும கசப்புமுள்ள பூதாச்சிறையன்என்னும் பச்சைகற்பூரம் இருமல் அரித்திரமேகம் வாதபித்தகபம் என்கிற தனித்தனித தோஷங்கள் திரிதோஷம் நமை நெருங்கியபுண்களிவைகளை நீக்கும் ஸ்திரீகளுக உபயோகிக்கின்ற ஔஷதங்களுக்குமாகும்.

புழுகுச்சட்டத்தின் குணம்-விருத்தம்.

ஆகருக் காந்தியுண்டா மசிரண வாதம்போகுந்
தேசுதான் வளருமபித்த சிலேஷ்மமும் விடமுமேரு
மாசறு மாயுளுண்டாம் வனசமா தருளுஞ்சேரும்
வாசமார் புழுகுச்சட்ட மகிமையை யுறைக்குங்காலே.

(இ-ள்.) மணமுள்ள புழுகு சட்டத்தினல் மந்தவாதமும் பித்த கபமும விஷமும்போம ஒளியும் தேஜசும் நிறையாயுளும் திருமகளருளும் உண்டாம. 1111

கஸ்தூரியின் பொதுக்குணம்.

சொல்லரும் வசியங்காந்தி சுகமுத வணுகும்பின்னு
மெல்லியார் தமக்குவாத விருததியாந் தலைநோயேகும்
பல்லுறு கபமுந்தீரும் பகரொணுப் பலமுமுண்டா
மல்லடர் சன்னிருட்டை மாறுங்கஸ்த் தூரிக்காமே.

(இ-ள்.) கஸ்தூரிக்குத் தலைநோய் கபசுரமூலம் சன்னிசுரங்கள் போம் வசியம் தேஜசு சவுக்கியம் மாதர்க்கு நாதவிருத்தி வன்மை இவை உண்டாம். 1112

கஸ்தூரியின் பேதம்-வெண்பா.

கஸ்தூரி யைந்தாங் கரிகைதிலகை குளுந்தை
கைதநபிண்டகைநா யகை முறையே-மொய்த்தசிவப்
பெள்ளு கொளுகட்டி சிறிதுபருமங் களென
விள்ளு மிவைக்கேகும் வினை.

(இ-ள்.) கஸ்தூரி கரிகை திலகை குளுந்தை பிண்டகை நாசகை எனஐவகைப்படும் இவைகளில் கரிகை சிகப்புநிறமும் திலகை எள் ளின் உருவமும் குளுந்தை கொள்ளினது வடிவமும், பிண்டகைகட்டி கட்டியாகவும் நாயகை சிறியபெரிய உருண்டைகளாகவும் இருக்கும் இவைக்கு சந்நிபாதம் அசிரணப்பிரசவ மலினம் முதலியநோய்கள் விலகும். 1113

சவ்வாதின் குணம்.

சுரமுந் தலைவலியுந் துண்டத் தடைப்பு
மூரமுந்து நோயோ டுடற்குட-பரவிமிகக்
குத்துகின்ற வாயுவும்போங் கோதிற் சவ்வாதினுக்கு
மெத்த வசியமுமாம் வினை.

(இ-ள்.) குற்றமற்றசவ்வாதுக்கு வாதகபருட்சை சிலேஷ்மம் சிரஸ்தாபம சலபீநசம் இருத்வாதம் அங்கசலவாதம் இவைபோம் வசிகரமாம். 1114

குங்குமப்பூவின் குணம்.

விந்துநட்டந் தாகமண்டம் மேகசலஞ் சூலைகப
முந்துசுரம் பித்தங்கா லுச்சிவலி-முந்துகண்ணிற்
றங்குமப் பூவோடுறுநோய் சர்த்தியிவை நீங்கவென்றுற்
குங்குமப்பூ வோரிதழைக் கொள்.

இதுவுமது.

குங்கும்ப்பூவைக்கண்டாற் கூறுகொண்ட பீநசநோய்
தங்குசெவித் தோடஞ் சலதோடம்-பொங்கு
மதுர தோடந்தொலையு மாதர் கருப்ப
வுதிர தோடங்களறு மோர்.

(இ-ள்.) குங்குமப்பூவினால் சீரண சுக்கிலம் நாவறட்சி குடல் விருத்தி மேகநீர் கீல்பிடிப்பு கபாதிக்கம் அதிருட்சை பயித்தியம்

விகுணவாதம் மண்டைவலி கருவிழியிற் படர்கின்றபூ கண்ணோவு வாந்தி சலபீநசம் கர்ணமுன்மந்தம் நீரேற்றம் வாயினிப்பு பிரசவமலி னம் இவைதீரும். 1115

கோரோசனையின் குணம்.

நீரழிவு மேகசுர நீங்காக் கனல்வேகங்
கூறிய வுன்மாதங் குழந்தைகணோய்-பாரகபம்
வீறு மசூரியும்போம வேதாந் தனிலிரண்டாய்
கூறுங் கோரோசனை கட்கு.

(இ-ள்.) ஆயுள்வேதங்கூறிய இருவகை கோரோசனைகளுக்கும் மேகநீர் மேகசூட்சை பித்தகோபம் உள்மாந்தம் சிசுக்களுக்குண்டா கின்ற கணமாந்தமுதலிய ரோகங்கள் சிலேஷ்மாதிக்கம் மசூரிகைப் புண்கள் இவைநீங்கும் இது மான்வயிற்றிலும பசுவின் வயிற்றிலும் பிறப்பதாம். 1116

சந்தனத்தின் பொதுக்குணம்.

கோதில்சந்தனஞ் சீதோட்ணங் கொண்டிருக்கு மச்சந்தம்
வாதபித்த வையமனப் பிரமை-யோதுசுரம்
மேகந் தனிதாகம் வெப்பு சொறியும்போ
மாகந் தனக்குருதி யாம்.

(இ-ள்.) குளிர்ச்சியும் வெப்பமும் உள்ள குற்றமற்ற சந்தனம் திரிதோஷம் சித்தப்பிரமை சூட்சை ஒழுக்குப்பிரமேகம் தாவறட்சி உட்சூடு நமைச்சல் இவைகளைப்போக்கும. சரீரத்திற்குப் பலமாம். ()

சந்தனத்தின் பேதம்.

மும்மையெனச் சொல்வார் முருகுசந்தப் பேதமவை
செம்மைமஞ்சள் வெண்மையெனத் தேர்முறையே-ன்மைதரு
முத்தமமு மத்திபமு மோததமமும் மாகுர்
தத்தைமொழி பணங்கே சாற்று.

(இ-ள்.) கிளிமொழியாளே! சந்தனத்தில் மூன்றுபேதம் உண் டென்பர் அவையாவன சிவப்பு மஞ்சள் வெள்ளைஎன்பனவாம். இவற் றுள் சிவப்பு மருந்துகளுக்கு உத்தமம், மஞ்சள் மத்திபம், வெள்ளை அதமம், என்றறிக. 1118

பச்சிலைக்கிச்சிலிக்கிழங்கு இவைகளின் குணம்.

பச்சிலைக்குக் காந்தம் பரிமளிக்கு மவ்விலையோ
வெச்சைக் கிராந்திதனை மெய்ப்புழுவைச்-சொச்சமற
வோடுநற் கிச்சிலியு ளெண்கிழங்குக் கபமும்
பூட்டுமூடமும் புண்ணும் போம்.

(இ-ள்.) பரிமளமுள்ள பச்சிலையானது பித்தகப விரணத்தையும் ரத்தகபம் மலம் இவைகளைப்பற்றிய கிருமிகளையும் போக்கும். கிச்சிலிக்கிழங்குக்கு சிலேஷ்மரோயும் கீல்பிடிப்பும் விரணமும் நீங்கும். ()

உப்பின் பொதுக்குணம்.

அளத்திலுறை நல்லுப் பனல்வாத மாற்றுங்
களத்து நோய்தன்னைக் களையுங்-கிளைத்தகப
வாசுடைய வல்லிநோ யட்டகுன்ம மும்போக்குங்
காசினியுண் மாதே கழற்.

(இ-ள்.) பெண்ணே! அளத்திலுள்ள நல்லஉப்பு உஷ்ணவாதம் கண்ட வாதரோகிணி ஆமநிரண்டவல்லிக்கட்டி 8-வித குன்மம் இவைபோம். 1120

கறி உப்பின் குணம்.

மந்தம் பொருமலரும வாய்வுமபோந் தீபனமாந்
தொந்தித்த வையந் தொடருமோ-சந்ததமு
மக்கினியின் புட்டி யடருங் கறியுப்பாற்
சிக்குகின்ற நீரிறங்குஞ் செப்பு.

(இ-ள்.) கறியுப்பினால் அஜீரணம் வயிற்றுப்பிசம் வாதாதிக்கபம் நீரடைப்பு இவைபோம் பசியும் சாமக்கினியும் விருத்தி ஆம். 1121

கல்லுப்பின் குணம்.

ஐயமறுஞ் சூலை யரோசிபித்தஞ் சர்த்தியொடு
வெய்யபிணி யட்டகுன்மம் விட்டேகும்-பொய்வளையே
வாதமதி தாக மலக்கட்டும் போமுலகிற்
கோதறு கல்லுப்பைக் கொடு.

(இ-ள்.) வளையலணிந்த காரிகையே! கல்லுப்பினால் கபம் குத்தல் அருசி பயித்தியம் வாந்தி உஷ்ணவாயு 8-வித குன்மம் வாத நோய் நாவறட்சி மலபந்தம் இவை ஏகும். 1122

கம்பி உப்பின் குணம்.

மல்லாரு மட்டகுன்ம மாதருதாக் கட்டி
கல்லா மதைப்புநீர்க் கட்டருக-வெல்லாமே
கம்பிகம்பி யென்றுங் கருவுண்டா மங்கிநின்ற
கம்பிகம்பி யென்றுரைக்குங் கால்.

இதுவுமது.

சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்
வாதவலி குன்மமிவை மாறுங்காண்-மீதாங்

கொடிய வயிறிழியுக் கோழை கபமேகும்
வெடியுப்புத் தன்னை விளம்பு.

(இ-ள்.) பஞ்சபூத உப்பில் தேயுவின் கூறுகிய கம்பி உப்பினால் 8-வித குன்மம் கருப்பாயசக்கட்டி சோபை மூத்திரகிரிச்சுரம் நீர்ச்சுறுக்கு சூதிகாவாதம் வாதசோணிதம் சாமானிய வாதபித்த கபகுன்மங்கள் பெருவயிறு ஈளை சிலேஷ்மவாதம் இவை ஒழியும். பேரிளம்பெண் பருவங்கடந்த மாதர்கட்கும் கருப்பம் உண்டாகும். 1123

அட்டேப்பின் குணம்.

பித்தங் குடிவிலகும் போராத சூலையறுஞ்
சர்த்தி யருசியிவை சாராவா-மொத்தகச்சிற்
கட்டுப்படாக் கொங்கைக் காரிகையே சங்கைபற
வட்டுப்பின் பேரை யறை.

(இ-ள்.) கச்சுக்கடங்காத் தனத்தாளே! அட்டுப்பினால் பயித்தியம் குத்தல் வாந்தி அரோசகமும் போம். 1124

வளையல் உப்பின் குணம்.

துளையார் குடல்வாதந் தொந்த வாதத்தோ
டிளையாச் சுவாசமறு மின்னும்-வளையலுப்பாற்
குனமவலி சூலைவெப்பங் கூறுப்பிலிக மிவை
சென்மம்விடுத் தோடுமெனத் தேர்.

(இ-ள்.) வளையலுப்பினால் ஆந்திரபித்தவாதம் வாதபித்தம் இரைப்பு வயிற்றுநோவு கீல்பிடிப்பு சுரம பிலீகம் இவைபோம். 1125

இந்துப்பின் குணம்.

அட்ட குன்மமந்த மசிர்க்கரச்சூர் சீதபித்தக்
துட்டவைய நாடிப்புண் டோடங்கள்-கெட்டமலக்
கட்டுவிட விந்துப்பைக் காமியநோய் வன்கரப்பான்
விட்டுவிட யிந்துப்பை விள்.

இதுவுமது.

சென்னி கண்ணுபற்றார் செவிகள்கண்டம் பகநோய்
சந்நியாசங் காசந் தாகமிரைப் புன்னிரத்த
மூலஞ் சிலந்திநளி மூடிகஞ் சூணீதவலி
சூலஞ் சிதையுமிந்தாற் சொல்.

(இ-ள்.) இந்துப்பினால் எண்விதக் குன்மம் அலசம் அசிர்க்கரகப்பித்தம் கபாதிக்கம் நரம்புச்சிலந்தி திரிதோஷம் மலபந்தம் விஷம்

சுக்கிலம் சிலேஷ்மஉபதமசம் கடுவன் தலைவிழி நாவு தந்தமூலம் காது கழுத்து கண் யோனி இவ்விடத்து நோய்கள் சந்நிபாசம் நேத்திர காசம் தாகரோகம் சுவாசம் ரததமூலம் சிலந்தி தேள் எலி இவற்றின் விஷங்கள் வாதக்கடுப்பு குத்தல் இவை கெடும். 1126

### பஞ்சலவணத்தின் குணம்.

சீராமை யர்ப்புதமை ஜெஞ்சுவலி மாகுன்மம்
போராக் கிராணி பிலீகமந்தக-தீராக்கல்
விஞ்சவுப்பைக் குக்கிநோய் மெய்ச்சூலையும் பறக்கும்
பஞ்சவுப்பைத் தின்பையெனிற் பார்.

### இதுவுமது.

பஞ்சலவணம் பயித்திய குன்மம் போக்கும்
விஞ்சிய சிலேட்டுமத்தை வீழ்க்குங்காண்-கிஞ்சுகமே
தீபன முண்டாக்குந் திரிதோடம் போக்கிவிடுஞ்
சோபனமா மிமமொழியைச் சொல்.

(இ-ள்.) கிஞ்சுகம்போல்பவளே! பஞ்ச உப்பினால் ஆமைக்கட்டி அர்ப்புதவிரணம மார்புநோவு வலிகுன்மம் வாதகிரகணி பீலிகம்ஆமா ஜீரணம் மகாவாதம் மிகவும் பொருமுகின்ற சிலேஷ்மகுணம் தேகக் குத்தல் பித்தகுன்மம் கபாதிக்கம் முத்தோஷம் இவைநீங்கும் பசி யுண்டாம் என்க. 1127

### சந்தியுப்பின் குணம்.

உடல்கரையச் செய்துவிடு முட்டினமாம் பொல்லாக்
குடல்வாதந் தன்னைவெட்டிக் கொல்லு-மடலாருந்
தந்திமந்தி மத்தகையடத் தாவுகொங்கை மாதரசே
சந்தியுப்பை நன்றாய் சழற்.

(இ-ள்.) யானைமத்தகத்தை அடத்தாவுகொங்கைகளை யுடைய வளே! சந்தியுப்பானது அதிதூலரோகத்தையும் குடலண்டவாதத் தையும் போக்கும் ஆனால் வெப்பத்தை யுண்டாக்கும். 1128

### சவ்வர்ச்ச லவணத்தின் குணம்.

சவ்வர்ச்ச மென்னுந் தனிளவணத் தாலுலகில்
வெவ்வச் சுரஞ்சூலை வெப்பமறும்-கவ்வுகின்ற
நாடி விரணமுட னட்பட்ட குன்மமும்போந்
தேடியனமே யிதனைச் செப்பு.

(இ-ள்.) அன்னம்போன்றவளே! சவ்வர்ச்சலவணத்தால் சுரம் கீல்பிடிப்பிற்கிளேத்த உஷ்ணம நரம்புக்கிரந்தி நீடிதகவயிற்று நோவு இவை ஏகும் என்க. 1129

### பிடாலவணத்தின் குணம்.

பிடாலவண மென்ளுருகாற் பேசி னுலகில்
விடாசீ ரிழிவகனு மெய்யே-விடலரிய
மந்தமகலும் வளரு மதிகபசி
கந்தமார் வார்குழலே காண்.

(இ-ள்.) மலர்குழலாளே! பிடாலவணத்தால் அதிநீரும் மந்தமும் போம் பசியுண்டாம். 1130

### வெங்காரத்தின் குணம்.

சொறிபுடை யென்குன்ம நன்மை சொரியரசம்
பறிகிரணி கல்லூனம் பன்னோய்-நெறியைத்
தடங்கணங்க பங்கிருமி சர்ப்பவிடஞ் சந்நி
யிடங்கணங் கலச்சிசம்போ மெண்.

(இ-ள்.) வெங்காரத்தினல் தவளேச்சொறி புடை அஷ்டகுன்மம் தினவு ரத்தமூலம் ஒழுக்குக்கிரகணி அஸ்மரி பங்குவாதம் தந்தநோய் நாளவழியைத் தடுக்கின்ற மூத்திரக்கிரிச்சரங்கள் கபாதிக்கம் பாம்பு புரு விஷம் சந்நிபாதம் ஆகியவை விலகும். டங்கணம்-வெங்காரம்.

### சீனக்காரத்தின் குணம்.

சீனமெனுங் காரமது சிறிவரு பல்லானே
யானைக்கால் கண்ணோ யனிலமொடு-மானிலத்திற்
றுன்மாங்கிசம் வாய்வு தோலாத வுள்ளழலே
குன்மமிவை போக்குங் குறி.

(இ-ள்.) சீனக்காரம் தநதபிரனூனம் சிலிபதம் கஷதசுக்கிலம் வாததிமிர் அதிமாமிசார்மம் வாதப்பிணி உட்சூடு குன்மமிவைநீங்கும்.

### சவுக்காரத்தின் குணம்.

கரப்பானே சீதத்தைக் கண்டிக்கும் பேதி
யுரப்பாக்கும் வாயுவை விட்டோடுங்-தரைக்குள்
வழலே யெனப்பேர் வகித்த சவுக்கார
பழலேகுன்மம் போக்கு மறி.

(இ-ள்.) வழலே என்கிற சவுக்காரம் கடுவன் சீதளம் வாதகோபம் உட்சூடு வயிற்றுநோவு இவைகளைப்போக்கும் விரோசனமாம்.

அப்பளகாரத்தின் குணம்.

குடல்வாதஞ் சீலே கொடிதான வாத
மடல்புரியு மையு மறுக்கு-கெடுவயிற்றி
னுப்பிசத்தினேடே யுயர் குன்ம நோயகற்று
மப்பிளக் கார மது.

(இ-ள்.) அப்பளக்காரம் வாதக்குடல் விருத்தி கிவ்வீக்கம் மகா வாதம் கபாதிக்கம் வயிற்றுப்பிசம் வாதகுன்மம் இவற்றை நீக்கும்.

நவாச்சாரத்தின் குணம்.

குன்மங் குடற்சூலே கொல்லு மகோதரத்தை
வன்மையுறு கல்லடைப்பை மாற்றுங்காண்-சன்மக்
கவிச்சு மூத்தோடங் கனவாத நீக்கு
நவாச்சார மாதே நவில்.

(இ-ள்.) மாதே! நவாச்சாரம் வயிற்றுவலி குடலிற்குத்தல்பெரு வயிறு அஸ்மரி சரீரத்திற் புலால்வாசம் திரிதோஷம் வாதநோய் இவைகளை விலக்கும். 1135

யவக்ஷாரத்தின் குணம்.

குய்யன்களநா கொடிறுவா யிவ்விடநோ
யைய மிரைப்பிரும லாசனப்புண்-பையவுறு
கிடவிடஞ்சோபை கிராணியையும் பம்பரம்போ
லாடவிடு மெய்யவா க்ஷாரம்.

இதுவுமது.

அட்ட குன்மஞ்சூலே யதிசூல முட்டினத்தா
லொட்டி வருவாத மூதரநோய்-துட்டமந்த
நீடுகப நீரடைப்பு நீங்காப் பிலீகமிவை
யோடுமவா க்ஷாரத்தா லுண்.

(இ-ள்.) யவாக்ஷாரம் விரணப்பிரமேகம் களாகம் ஜிக்காலஜகம் தாலுகள் சுண்டிகள் ஊர்த்வகுதம் கபவிருத்தி சுவாசம காசம் பகந்த ரவிரணம் செந்துவிஷம் வீக்கம் வாதகிராணி அவுதவயிற்றுவலி குத்தல் அதிசூலம் சுவாலிதவாதம் சலோதரம் விஷாலஜகம் கபநோய் மூத்திரோச்சகம் வாதபிலீகம் இவைகளை யொழிக்கும். 1136

சத்திக்ஷாரத்தின் குணம்.

மந்தமொடு தங்கு மலசலம் பிலீகமடி
யுந்தி வருகின்ற வொலியிரமல்-குந்தவைக்கும்

வாதவலி குன்ம மகோதரங் கிராணியும்போம்
மோனுசத்தி க்ஷாரத்தை யுண்.

(இ-ள்.) சத்திக்ஷாரத்தினால மந்தாக்கினி சீரணமலமூத்திரம் சிலேத்மபிலீகம் கோழைவிழுமபடிசத்தியுடன் வராகின்றக்ஷபகாசம் உருஸ்தம்பவாதம் வயிற்றுவலி பெருவயிறு கிரகணி இவைபோம்.

தும்பக்ஷாரத்தின் குணம்.

ஈளை யுடனே யிளைப்பு வலிவாத
மாளைவிடாக் குன்மகோ யாவதும்போ-வேளையிமைப்
போதில் வெல்லும்வேழப் புருவச் சிலையிலே
கோதில்தும்ப க்ஷாரத்தைக் கூறு.

(இ-ள்.) மதனை யிமைப்போதில் வெல்லும் வில்லனைய புருவமுடையவளே! தும்பராட்சாரத்தினால் கோழை சிலேத்மசுவாசம் வாயு வினிசயு திரிதோஷகுன்மம் இவைகள் விலகும். 1138

உமிலக்ஷாரத்தின் குணம்.

குடல்வாதஞ் சூலை கொடுங்குன்ம மோடும்
விடலரு நீர்க்கட்டும விலகு-மடவார்
கமல வதனக் கனங்குழலே நாளு
முமிலிட் சாரததை யுரை.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற முகத்தையும் மேகம்போன்றகூந்தலையு முடையாளே! உமிலிட்சாரத்தினால் வாதகுடல்விருத்தி குத்தல் வாதகுன்மம் வாதமூத்திரக்கிரிச்சுரம் ஆகியவைவிலகும். 1139

துத்தின்குணம் இதுவே மடல்துத்தம்.

முற்றிற குறிப்புண் முளைவிரணஞ் சென்னிதனைப்
பற்றிநின்ற வாதம் படர்கரப்பான்-சுத்தவிழிக்
காசங் கணம்பில்லங் கண்ணோய்க் குந்தத்தொலையும்
வாசமிகு துத்தத்தால் வாழ்தது.

(இ-ள்.) துத்தத்தினால் அரிசோரோகம் முளைகளுள்ள புண்கள் வாதிரசஸ்தாபம் கரப்பான் கருவிழிமந்தாரகாசம் சுழிகணம் இமைப்பில்லரோய் கண்ணோய் குந்தரோகம் ஆகியவைவிலகும். 1140

துரிசின்குணம் இதுவே மயில்துத்தம்.

புண்ணாற்றுங் காயத்தின் புண்ணாற்றுங் கண்ணோயை
விண்ணோற்று முத்தோட வீறடக்குஞ்-சண்ணுகின்ற
வாந்தியொடு பூதிதரும் வாய்நோய் சுரந்தணிக்குங்
காந்தி தருந்துரிசி காண்.

(இ-ள்.) திரிசி வாதாதிதோஷவிரணம் அவமந்த குய்யவிரணம் ...றைப் திரிதோஷம் சிலேத்மமுகபாகம் வாதகிதசுரம் இவைகளை ...மனம் விரோசனம் தேஜசு இவைகளையுண்டாக்கும்.

அன்னபேதியின் குணம்.

புளவிரணஞ் சூலைமந்த முட்டாமைக் கட்டி
விளையறன் மகோதரநோய் வீட்டும்-வளைமயிலேபோற்
காட்டு மன்னந்தன்னை கணததிற் சலமாக்கி
காட்டுமன்ன பேதியது காண்.

(இ-ள்.) அன்னததை நீராய்க்கரைக்கின்ற அன்னபேதி, முளை கட்டி குத்தல் அசீரணம் பாய்கின்ற ஆமைக்கட்டி வீறியசலோதரம் இவைகளை நீக்கும். 1142

மாங்கிசபேதியின் குணம்.

துன்மாங்கிசங் கரைக்குஞ் சோபை யழலையொடு
வன்மைமிகு சூடுகப மாற்றுங்கா-ணன்மயிலே
யொப்பறு பிலீகமென வோதுகட்டி யைக்கொடுக்குஞ்
செப்பரிய மாங்கிச பேதி.

(இ-ள்.) நல்லமயில்போல்பவளே! மாங்கிசபேதி விரணாதிகளின் துர்மாமிசம் வீககம் உள்வெப்பம கீல்பிடிப்பு கபதோஷம்பிலீககட்டி இவைகளை விலக்கும். 1143

அம்பரின் குணம்.

அளகமுள வாரமிர்தே யாணுமையை யுண்டாக்கும்
பளபளென மெய்யுரப பாக்குங்-குளகுளத்த
புண்ணுற்று மமபர் பொரிகரப்பனைப் போககும்
விண்ணூர்க்கும் வாசனையாம விள்.

(இ-ள்.) அளகத்தையுடைய ஆரமிர்தனையாளே! பரிமளமுள்ள அம்பர் சுக்கிலவிருத்தியும தேஜசையும பலததையுந்தரும் அளிவிரணத்தையும் காப்பானையும நீக்கும். 1144

குந்திரிக்கத்தின் குணம்.

காச சுவாசங் கனதத மேகக்கட்டி
வீச விடக்கடி விறுச்சுருட்டம்-பேசு
படர்தா மரைசிரங்கு பண்டை விரணங்க
ளிடர்செய்யிற் குந்திரிக்க மேந்து.

(இ-ள்.) குந்திரிக்கத்தினால் இருமல் இரைப்பு மேகம் பிடகம் பலவிஷம் கிருஷ்ணகுஷ்டம் படர்தாமரைக்கிரந்தி நீடித்தசிரங் இவைபோம்.

குங்கிலியத்தின் குணம்.

பெரும்பாடு மேகப்போம் பேரா துடலி
லரும்பிய புண்ணுற்று மிவையல்லாற்-றுரும்பா
கெனும்புருக்கி புண்சீழு மேகு மூலகிற்
சலம்பருகுங் குங்கிலியத் தால்.

(இ-ள்.) நீரைபிழுக்கின்ற குங்கிலியத்தால் அசிர்க்கரம் தந்திமேகம் கிளேக்கிறவிரணம் அஸ்திசிராவம் சீழ்விரணம் இவைவிலகும்.

வெள்ளைக்குங்கிலியத்தின் குணம்.

வெள்ளை யளிந்த விரண நாபிக்கமலத்
தொள்ளை விரணமேகந் தோற்றுகினு-முள்ளே
வருவரசே மேற்புண் வரினுஞ் சுவேதச்
சருவரச மேற்பழியைச் சாற்று.

(இ-ள்.) வெள்ளைக்குங்கிலியத்தால் மேகத்தாற் பிறந்தநாளப் புண் உந்திக்கமலவிரணம் சீழ்மேகம் உள்மூலவிரணம் இவை நீங்கும் சருவரசம்-குங்கிலியம். 1147

தக்கில் குணம்.

காதகர நாசிநோய் கட்டிகடி மேகப்புண்
வாதவித் திரஞ்சூலை வன்குநக-மோதிவைபித்
திக்கி லிருக்கத் திடமுளவோ வுபயக்
குக்கி லிருக்கமக் குள்.

(இ-ள்.) கருமை செம்மை என்னும் இருவிதக்குக்கிலால் கர்ணபூதி திரிதோஷஜுஷ்டம்கிராணிபாகம் பிடகம் காணுவிஷம் மேகாணம் வாதவித்திரிதி கில்பிடிப்பு நகங்களைப்பற்றிய விரணம் இவைபோம்.

அரக்கின் குணம்.

குட்ட மசிர்க்குபித்தங் குன்மமிரைப் பென்புருக்கி
பட்டிடு புண்ணுகச்சூர் பங்கநோய்-கொட்டோ
ராக்கரக்குஞ் சக்கிசுர மையமிவைக் கெல்லா
மாக்கரக்குந் நூலே யறி.

(இ-ள்.) அரக்கு குறைநோய் அசிர்க்கரம் சிலேஷ்ம பயித்தியம் வயிற்றுநோய் சுவாசம் அஸ்திசிராவம் சத்தியோவிரணம் இருதாவிருதவாதம்முடம்சந்திகசக்கிபாதம்கபாதிக்கம்இவைகளைகெடுக்கும்

மெழுகின் குணம்.

அறைபக்க வாத மதைப்பைய மூதை
குறைவிந் திதழ்நோய் தேள்கூளி-கறையைப்
புழுகெடுக்க வங்கமுறு புண்ணிடிப்புண் டீப்புண்
மெழுகெடுக்க வாங்கமது மெய்.

(இ-ள்.) மெழுகினல் பாரிசவாயுவு வீக்கம் கபநோய் வாதகோபம் சுக்கிலகஷ்டம் சிலேஷ்மோஷ்டரோகம் தேள்விஷம் பைசாசம் குஷ்டம் ஆகந்துகவிரணம் இவைபோகும் என்க. 1150

பலவகை மெழுகின் குணம்.

பொன்மெழுகு மாரல்சுரங் கண்ணோய் போக்கிவிடு
நன்மெழுகு கண்ணோய்க்கு நஞ்சாகு-முன்னுங்
கொசுமெழுகு நாளுங் குறித்த வசியதந்திற்
கிசையு மெந்திர தந்திற்கு மெண்.

(இ-ள்.) பொன்மெழுகு திரிபாகிய சுரத்தையும் கண்ணோயையும் போக்கும், நல்லமெழுகு விரணத்தில் உண்டாகின்ற நோயை நீக்கும் கொசுமெழுகு வசியதந்திற்குமு யந்திரதந்திற்கும் உதவும். 1151

அப்பிரகத்தின் குணம்.

அப்பிரகமான் றைந்தா லண்ட மகோதரமு
வெப்பிர மியங்கலமுன் னீரிழிவும்-வெப்பூரற்
பேதமும் போகாமேகப் பித்தமுங் கண்ணோயும்பல்
வாதமும் போக்கா துவுமா மால்.

(இ-ள்.) அப்பிரகத்தில் குடலண்டமபெறுவயிறு பிரமியம் அதிமூத்திரம் சுரம் நமைகள் மேகபித்தியம் கண்ணோய் பாதாக்ஷேபகமுதலிய வாதரோகங்கள் இவை ஒழியும் வீரியவிருத்தி உண்டாம். ()

கல்நாரின் குணம்.

காசபித்தம் வாதம் கடுப்பீறு நோயெரிவு
வீசுசர்த்தி நீரடைப்பு விந்துநட்டம்-பேசுமசை
தின்னுரைக் கூவுமந்தந் தீக்குடர்க்கல் தாக்மிவை
கன்னுரைக் கூவவிடுங் காண்.

(இ-ள்.) கல்நாரினல் பித்தகாசம் வாதரோகம் பற்குடைச்சல் பல்லரணை நீர்க்குமி எரிச்சல் பித்தவாந்தி முத்திராதீதம் க்ஷீதசுக்கிலம் அஜீரணம் பித்தக்குடல்வாதம் பித்ததாகம் இவைநீங்கும். 1153

### சகஸ்திரவேதியின் குணம்.

அத்திசுரந் தாகசுர மசான விரத்தமொடு
குத்திவரு வாந்திகபங் கூறுசந்தி-மெத்த
நிகழ்த்துகண்ணோய் தாதுநட்ட நீட்டமேங்கா மேகம்போஞ்
சகத்திர வேதிக்குத் தளர்ந்து.

(இ-ள்.) சகஸ்திரவேதிக்கு அஸ்திசுரம் தாகபூர்வசந்தி ரத்தபேதி வமனம் கபாதிக்கம் சந்நி கண்ணோய் வீரியக்குறைவு பிரமேகமிவைபோம். 1154

### கல்மதத்தின் குணம்.

கண்டபடி பிணிமேகங் கல்லோடுமீ றூனடைப்பு
வண்டற் கிரிச்சுரநோய் வாபிரமி-புண்டலிறைற்
பன்மதஞ்சேர் தாதுநட்டம் பன்னுமிந்த நோய்க்கூட்டத்துட்
கன்மதஞ்சே ரக்கரக்குங் காண்.

(இ-ள்.) கன்மத்தினால் அரைபுகரோகம் தந்துமேகம் அஸ்மரி மூத்திரபிந்து வாதவஸ்தி சதைய்டைப்பு தடித்த மூத்திரகிரிச்சரம் வாதப்பிரமியம் அதிகொழுப்பினாற்பிறந்த தாதுநஷ்டமிவை தீரும்.

### சிலாசத்தின் குணம் - இதுவே கற்பூரசிலாசத்தாம்.

கல்லடைப்பு மேகங் கனதூலம் வித்திரிதி
சொல்லடைக்கு நீருரகற் சோணிதந்தான்-மெல்லிடையார்க்
கில்லகச்சத் தில்லையெனு மிந்திரிய நட்டமுமாங்
கல்லகச்சத் தில்லையெனுங் கால்.

(இ-ள்.) சிலாசத்தினால் அஸ்மரி சிறுமேகம் அதிதூலம் வித்திரிதிகிரிச்சரமா சோணிதவாதம் சந்ததிக்கு ஏதுவாகிய விந்துநஷ்டம் இவைபோம் இதுமலைக்குள்ளிருந்து வருதலால் கல்லகச்சத்தென்றார்.

### கோமூத்திர சிலாசத்தின் குணம்.

கோமூத் திரசிலாசத்தாற் குறுகிப்
போமூத்திர மெரிவுட் புண்மேகமநாமேவு
வெப்புதிரவெப்புமறும் வீழிமுனி விம்பத்
துப்புமஞ்சு மெல்லிதழாய் சொல்.

(இ-ள்.) மெல்லிதழாய் கோமூத்திர சிலாசத்தால் மூத்திரகிரிச்சரம் நாளத்தெரிவு உள்விரணம் பிரமேகம் காவிற்சூடு ரத்தக் கொதிப்பு இவை நீங்கும் என்க.

### சிலாரசத்தின் குணம்.

தலைவலி நீரேற்றந் தநுர்வாதஞ் சந்நி
சூலைகுலையுந் தும்மற் குடிபோஞ்-சிலைநுதலே

மாசடையி வஞ்சுநிறம் வாய்ந்திருப்ப தன்றிமணம்
வீசு சிலாரசத்தால் வின்.

(இ-ள்.) சிலைநுதலாளே! மலினமேகநிறமும் மணமுமுள்ள சிலா ரசத்தால் சிரஸ்தாபம் ஜலதோஷம் தநுர்வாதம் சந்நி அதிதும்மற் பீனசம் இவைகள் போம். 1158

### நண்டுக்கல்லின் குணம்.

நீரருக நீரடைப்பு நீங்காப் பெருவயிறு
நீரொழுகு மேகம்வெட்டை நீங்குங்கா-ணாரமிர்தே
பைய மறுக்கு மரியதொரு நண்டுக்கல்
செய்யுங் குணமிதுவாந் தேர்.

(இ-ள்.) ஆரமிர்தம்போன்றவளே! நண்டுக்கல் கூிணமூத்திரம் அஸ்மரி மகோதரம் சலப்பிரமேகம் வெள்ளைவிழுதல் கபாதிக்கம் ஆகிய இவைகளை விலக்கும். 1159

### காவிக்கல், கடல்நுரை இவைகளின் குணம்.

அடைஆறுநற் காவிக்க லட்சுநோய் மேகம்
வெடியக்கி வாந்திபித்தம் விட்டுங்-கடனுரையே
நேத்திரநோய் விரண நீடுகபங் குன்மமிவை
தீர்த்திடுங்காண் டப்பாது செப்பு.

(இ-ள்.) காவிக்கல் கண்ணோவு மேகநீர் கிளை அக்கிபித்தவமனம் இவைகளை நீக்கும் கடல்நுரை விழிநோய் புண் கூயம் குன்மம் இவை களைநீக்கும். 1160

### சுக்கான்கல்லின் குணம்.

விரணந் தணியாற்றும் வீறுசந்நி நீக்கு
மரணஞ்செய் வாயுவையும் வாட்டும்-கரணத்தின்
மிக்கான வின்பமருண் மெல்லியலே தூயவெள்ளைச்
சுக்கா னெனுங்கல்லது சொல்.

(இ-ள்.) கரணங்களுக்கு மிகுந்த வின்பந்தரும் மெல்லியளே! சுக்கான்கல் புண்சந்நி மகாவாதம் இவைகளை நீக்கும். 1161

### நான்குவகை நிமிளைகளின் குணம்.

தாதுவை வளர்க்குந் தனிப்பித்தத் தைப்போக்கு
போதுசந்நி பாதத்தை யோட்டுங்கா-ணோத
வொருநாவுறுதே யுயர்பொன் முதலா
மொருநால் வகைநிமிளை யும்.

(இ-ள்.) பொன் வெள்ளி வெண்கலம் செம்பு என்கிற நான்குவித கிளிஞ்சல்களும் விந்துவை வளர்க்கும் அதிபித்தத்தையும் சந்நியையும் நீக்கும். 1162

### வெள்ளைச்சங்கின் குணம்.

கசிவா யிரத்தபித்தங் கண்ணோய்க ளேகும்
பசியாரும் வாதம பறக்கு-மிசிவுடனே
தங்குமு ளைவிரணந் தானகலுமே வெள்ளைச்
சங்கமது வுண்டேயிற் றான்.

(இ-ள்.) வெண்சங்கத்தினால் உதிரபித்தம் விழி ரோகங்கள்வாத தோஷம் இசிவு மூளைக்கட்டி இவை நீங்கும் தீபனம் உண்டாம்.

### முத்துச்சிப்பியின் குணம்.

ஈளை விலகு மிருமல் குடியோடுங்
கோம்விழு நங்காய்நீ கூறக்கேள்-வாளுடலிற்
கப்பிவரு மேகக் கட்டியையும் போமுகத்தின்
சிப்பிதனைக் கண்டவிடத் தே.

(இ-ள்.) முத்துச்சிப்பியினால் கபக்கோழை, காசம், க்ஷயரோகங்கள், மேகப்பிடகம் சிலேஷ்மாதிக்கம் ஆகியவைகள் விலகும். 1164

### பலகரையின் குணம்-இதுவே கவடி.

மாந்தந் தங்கிரணி மாவிடச்சுரங் கண்ணோய்
தொந்தம் பரிகாமச் சூலைகப-மிந்த
வுலகுறையக் காலொடிவை யோடு நரைத்த
பலகறையைக் காணியம பார்.

(இ-ள்.) வெண்பலகறையினால், அஜலம் தாகம் கிராணி விஷசுரம் விஷநோய் வாதகொந்தம் பலவிதக்குத்தல் க்ஷயம் கபவாதம் இவைபோம். நரை-வெள்ளை. 1165

### கலைமான்கொம்பின் குணம்.

அவயவத்தின் வெப்ப மதியத்தி மேகங்
கவிழ்திரி தோடம பெருந்தாகங்க-ளிவைதர
ணிலேக்குமோ மார்புநோய் நேத்திரநோய் நீங்கும்
கலைக்கொம்பாற் பேயுமிலைக் காண்.

(இ-ள்.) கலைமான்கொம்பினால் கைகால்களில் அரிவு அஸ்திமேகம் முத்தோஷம் விதாகங்கள் மருமவலிகண்ணோவு பிசாகம் இவை ஏகும்.

### சோகி பீங்கான் மிருகக்கொம்பு பல் எலும்புகளின் குணம்.

சோகிபீங் கானறுக்குந் துன்மாங்கி சந்தனைக்
கோருதிரை யொட்டைட சூங்கமுவா-வேகப்

பலமிருகப் பல்லெனும் பல்விழிநோய் தீர்க்கு
நலமிகு மாதே நவில்.

(இ-ள்.) நன்மைமிகுந்த மாதே, பலகறை பீங்கானிவைகள் விருத்திமாமி சாதிநோயையும் பசு குதிரை ஒட்டை குரங்கு யானை பன்றிமுதலிய பலமிருகங்களின் நகம்என்புகளும் பற்பலவிழிப்பிணியையும் நீக்கும். சோகி-பலகறை. 1167

பஞ்சலோக ஐந்தெண்ணெய் குதிரைக்குளம்பு
கழுதைக்குளம்பு எருமைக்கோம்பு இவைகளின் குணம்.

பஞ்சலோகச் சார்வ பற்றறுக்குங் கண்ணோயை
யஞ்செண்ணெய் வாதசந்நி யைப்போக்கும்-விஞ்சு
குதிரைக் கழுதைக் குளம்பெருமைக் கொம்பும்
குதிரைவலி நீக்குங் குறி.

(இ-ள்.) பொன் காரீயம் செம்பு இரும்பு துத்தநாகம் என்கிற பஞ்சலோகங்கள் விழிப்பிணியையும், வேம்பு, புங்கு, புன்னை, ஆமணக்கு என்கிற இவற்றின் ஐவிதநெய்கள் வாதசந்நிகளையும், குதிரைவலியையும் நீக்கும். 1168

சீலை கம்பளம் மயிலிறகு இவ்வகைச் சாம்பலின் குணம்.

அத்திபிர மேகம்போ மாடையின்றன் சாம்பலுக்குத்
தத்திவரு ரத்தந் தடைப்படுங்காண-சத்தியமாய்
கம்பளச் சாம்பல்சந்நி காஞ்மைஞ்ஞைத் தோகைபஸ்பங்
கும்புவிக்கல் வாந்தி கெடுக்கும.

(இ-ள்.) சீலைச்சாம்பலுக்கு என்புருக்கியும் கிறிரத்தமும்போம், கம்பளச்சாம்பல் சந்நியையும் மயிலிறகுச்சாம்பல், விக்கல் சர்த்தியையும் நீக்குமென்க. 1169

ஒட்டறையின் குணம் இதனை ஒட்டடை யென்பர்.

குட்டங்கள் கோய் குறுதிமூலம பேதி
யுட்டங் சசீரணமுள் ளுருகுன்மங்-கெட்டசிரா
வற்புதம்புண் சீதசுர மாப்பவகி கஞ்சிவைகள்
புற்புதம்போ லொட்டறையாற் போம்.

(இ-ள்.) ஒட்டறையால் குறைநோய் சிலேஷ்மங்கள் கண்டரோகம் ரத்தமூலம் அதிசாரம் மந்தம் சிலேஷ்மகுன்மம் நரம்புக் கிரந்தி நடுக்கற்சுரம் சிறுபாம்புவிஷம் ஆகியவைகள் போகும். 1170

இந்திரகோபப்பூச்சியின் குணம்.

கருமேகக் தாதுநட்டங் கக்கும்கபம் போக்குந்
தருமே நற்காயசித்தி தன்னை-வருமேக

*சாலமுறை வாளரகத் தையலே நன்மாரிக்*
*காலமுரை மியலது காண்.*

(இ-ள்.) மேகம்போன்ற கூந்தலாளே! இந்திரகோபப்பூச்சி, கரு மேகத்தையும் சுக்கிலக்ஷீணதனதயும், சிலேஷ்ம ரோகத்தையும் நீக் கும். காயசித்தியைச் செய்யும். ஈயல்-இந்திரகோபம். 1171

முசுறுமுட்டையின் குணம்.

*துள்ளு மடல்வாதத துன்பமந்தம் வல்லிசிவு*
*தள்ளு வலிக்குழி சத்கபநோ-யுள்ளில்*
*விகிறுசங்கி பாதம் விலகும் ஆகத்தார்*
*முசுறு முட்டைக்குணத்தை மூன்.*

(இ-ள்.) இலுப்பைமரத்து முசுறுமுட்டையினால் மகாவாதம் மந் தம் இசிவு ஐவிதவலி கீர்க்கபநோய் சக்தி இவைவிலகும். 1172

பூநாகத்தின் குணம்.

*மாதனறு செய்வறட்சி மாறுமடங் காஞ்சக்கி*
*பாதவறுகோ யோடென்றும் பாறுமடல்-வாதபறு*
*குண்டபத மீளுமோக்காள மையமும்போம்*
*கண்டபத மென் னுங் கால்.*

(இ-ள்.) பூநாகத்தினால் மிகவுந் துன்பத்தை விளைக்கின்ற தாக ரோகமும் 7-வித அசாத்திய சந்நிபாதசுரங்களும் ஊருஸ்தம்பமென் கிற மகாவாதமாகிய புலியினால் கவர்ந்துக் கொள்ளப்பட்ட தொடை யும் ஓக்காளமும் சிலேதமரோகமும் ஒழியுமென்க. புலிவாயில் அகப் பட்ட ஆட்டுத்தொடை மீளாததுபோல் இத்தமகாவாதத்திலகப்பட்ட மனிதர்தொடை இவ்வியாதியில் நின்றுப நீங்குவது அருமையாயிருப் பினும் இது இதைநீக்கும் என்னுந் துணிவுதோன்ற அறுகுண்ட பதம் என்றார் அறுகு-புலி, கண்டபதம்-பூநாகம். 1173

கற்பாசியின் குணம்.

*பண்டை மேகத்தைப் பறக்கடிக்கும் பேதிகட்டு*
*மண்டையெறி வாசனையி லாருங்காண்-தொண்டைக்*
*கனிக்குமொழி ஊட்டுமிதழ்க் காரிகையே காரகற்*
*கனிக்குமொரு கற்பாசி தான்.*

(இ-ள்.) ஆதொண்டைக்கனியினுமழகிய விதழையுடையவளே! மழையாற்பிறந்த கற்பாசி நீடித்த மேகத்தையும் அதிசாரத்தையும் நீக்கும் வாசனைத் திரவியங்களி லொன்றாகப் பொருந்தும். 1174

# பாஷாண வகை

### பாதரசத்தின் குணம்.

விழிநோய் கிரந்திகுன்ம மெய்ச்சூலை புண்குட்
டழிகாலில் விக்குவி ஞலக்தை-வழியாய்ப்
புரியும் விதியாதும் புரியினே யெல்லா
மிரியும் விதியாது மிலை.

(இ-ள்.) சிவவீரியம் என்கிற ரசத்தை ஜீவரட்சாமிர்த சாஸ்திர முறைப்படி செய்யத்தக்க சுத்தியெல்லாஞ் செய்து பிரயோகித்தால் நேத்திரநோய் கரம்புக்கிரந்தி அஷ்டகுன்மம் கீல்பிடிப்பு மகாவிரணங்கள் பெருவியாதி க்ஷீணவாதம் இவைமுதலிய ரோகங்களும் விலகும் இதைச்சொல்லாத சாஸ்திரம் யாதொன்றுமில்லை. 1175

### பாதரசதோஷத்தின் குணம்-விருத்தம்.

கலையைக்கிழிக்கு மவிழ்த்தெரியுங் கல்லைத்தேடி யெடுத்தெரியு
மலையிற்குதிக்கும் புனன்மூழ்கி மருள்சேர்பித்தந் தனைக்கொடுக்கும்
முலையினனல்போ லுடல்வெதுப்பு மோயாவுழலை வியர்வாக்கும்
பலகாலமுமே வாய்பிதற்றும் பாதரசதோஷமு மிஃதே.

(இ-ள்.) பாதரசத்தைச் சுத்திசெய்யாமையால் வருந்தோஷங்களாவன, துணியைக்கிழித்தல் அதனை யவிழ்த்தெறிதல், கல்லாலடித்தல், மலையினின்றுங்குதித்தல்; தண்ணீரில் முழுகிமுழுகிக்கிளம்பல், மயங்கிப் பித்துக்கொள்ளல், தேகத்தில் அழலையுண்டாகுதல் மாறுது வாயில் சலமூறல், அதிவேர்வை பெருகல், எப்போதும் பிரலாபித்தல் இவைகளாம். 1176

### எண்வகைத்தோஷம் நீங்காதரசத்தின் குணம்-வெண்பா.

சர்ப்பம்வங்கங் கந்திவன்னி சஞ்சல மலங்காள
மொப்புண்மந்த மெண்டோட மோட்டிரத்தத்-தைப்புசிப்பார்
கொப்புளங் குட்டங்கிபெரி போதுவிந் திளைப்பிரத்த
லப்புளமூர்ச்சைக் குமரி யார்.

(இ-ள்.) ரசத்திற்கு எண்வகைத்தோஷமுண்டு அவையாவன:—சர்ப்பம் வங்கம் கந்தி வன்னி சஞ்சலம் மலம் காளம் மந்தம் என்பனவாம் அனைகளை நீக்காமல் அந்த ரசமருந்தை யுண்பவர்கள் முறையே விரணம் பெருவியாதி தீச்சுவாலை தபித்தல் உதிரப்பசையற்ற தேகநிறம் வீரியநாசம் மரணம் சோபம் என்கிற 8-வித ரோகங்களையும் அடைவார்கள். 1177

### ரசாஞ்சனத்தின் குணம்.

அரியர சாஞ்சனத்தா லம்புவிழி லுள்ள
விரிவிழி நோயெல்லா மறையு-மருவி
வருகாமிய விரண மாறும் புண்ணுறு
மொருமா மயிலே யுரை.

(இ-ள்.) மயில்போன்ற சாயலாளே! ரசாஞ்சனத்தினல் பூ படலம் விழிப்புண் குய்யாரோகப்புண் ஆறுக்கிரந்திகளும விலகுமென்க.

### ரசகர்ப்பூரத்தின் குணம்.

இடைவாத சூலே யெரிசூலே-குன்மந்
தொடைவாளே வாதமாஞ் சோணி-யிடையாதேர்
கெடுக்கும் ரசகர்ப்பூர மொன்றே யளவொடுநல்
லிக்குவெல்லத் தேழுநா ளீ.

(இ-ள்.) சுத்தித்த ரசகருப்பூரத்தைப் பிணிகளின் வன்மைக் கொப்ப நல்லவெல்லத்தில் பிரமாணமாகவைத்துப் பத்தியத்தோடு ஏழுநாள் கொடுக்கச் சகனுவர்த்தவாதப்பிடிப்பு பித்தசூலே வயிற்றுநோய் சிலேஷ்மவூரல் தம்பவாதம் வாதாதிக்க சோணுவாதம் இவை போம். 1179

### சாதிலிங்கத்தின் குணம்.

பேதிசுரஞ் சந்நி பெருவிரண நீரோடுதல்
காதிகடி காசங் கரப்பான்புண்-ணேத
வுருவிலங்க சங்கமதா யூறுகட்டியும போங்
குருவிலங்க சங்கமதைக கொள்.

### இதுவுமது.

ஆதி யிரதவுருக் காதலாற் சாதிலிங்க
மோதி விரத்குண முற்றுடலிற்-றீதுபுரி
குட்டங் கிரந்தி கொடுஞ்சூலே வாதமுத
லுட்டங்கு நோய்களே யோட்டும.

(இ-ள்.) சிவந்தசாதிலிங்கம் முதலில் பாதரச உருக்காகையால் அந்தரசகுணத்தைக்கொண்டு அதிசாரம் சூட்சைசந்நிபாதம் அற்புத புண் அதிமூத்திரம் காணுவிஷம் இருமல் கரப்பான் சிரங்கு நாணுக் காய்க்கிரந்தி மண்டலகுஷ்டம் பாமை சரீரகுத்தல் வாதநோய் அந்தர் முக ரோகங்கள் ஆகிய இவைகளே விலகும் என்க. 1180

### சவ்வீரத்தின் குணம்.

குன்மமொடு சூட்டங் கொடியவனிலத் திரட்டு
துன்மாங்கிசப் பெருக்கஞ் சூலேநோய்-வன்மையுறு

காமியப்புண் ணாதியநோய் கண்டாற்சவ் வீரனெனுஞ்
சாமியினு மத்தையுச் சரி.

(இ-ள்.) சவ்வீரத்தினால் குன்மம்முறைநோய் மகாவாதங்கள்வள
ருகின்ற தூர்மாமிசங்கள் கீல்பிடிப்பு அரிசோரோகம் இவைநீங்கும்.

நெல்லிக்காய் கந்தகத்தின் குணம்.

நெல்லிக்காய் கந்திக்கு நீள்பதினெண் குட்டமந்தம்
வல்லே கவிகைகுன்ம வாயுகண்ணோய்-பொல்லா
விடக்கடி வன்மேகநோய் வீறுசுரம் பேதி
திடக்கிரக ணீபம்போக் தேர்.

(இ-ள்.) நெல்லிக்காய்க் கந்தகத்துக்கு 18-குட்டம் அலஜம்வல்லே
கட்டி கவிகை மகோதரம் குன்மம் குந்தநோய் மகாவிஷ மேகவியாதி
வாதசுரம் வாதாதிசாரம் கபகிரகணி கபாதிக்கமிவைபோம். 1182

வாணகந்தகத்தின் குணம்.

வாணக் குழாய்க்கந்தி வாசனையை கண்டவுடன்
காணக் கிருமிசொறி காணுவாங்-கோணும்
பெருவியாதிக் கூட்டம் பேருமத னூலின்
மருவியாழுங் கொடியே வாழ்த்து.

(இ-ள்.) மதன நூலின் வகைகளறிந்தவளே வாணமருந்துக்கான
குழாய்கந்தகத்தால் ;ரசரத்ததாதுகளிற் பிறந்த சிறுகிருமி நமை
குஷ்டங்கள் இவைபோம். 1183

தாளகத்தின் குணம்.

தாளகத்தின் பேருரைக்கத் தாலுகவு நோய்குட்டம்
நீளக் குளிர்க்காய்ச்ச னீர்பக்கங்க-ளுளகங்கொள்
துட்டப் பறங்கிப்புண் சூழுமுகண் மண்டைநோய்
கிட்டப் படுமோ கிளத்து.

(இ-ள்.) தாளகத்தினால் அதிசிக்வாரோகம் தாளுகச்ச கபநோய்
குட்டரோகம் நடுக்கற்சுரம் க்ஷபகாசசுவாசம் துஷ்டவிரணம் ஜலஸ்
ராவம் சிரஸ்தாபரோகம் ஆகிய இவைகள் விலகும் என்க. 1184

சிவந்த அரிதாரத்தின் குணம்.

சிவந்த அரிதாரமது செஞ்சிலைபோற் காட்டு
முவந்தனே யுண்முறையோ டுண்டா-லிவர்ந்தாழ்
கரங்களிற் மாவாதமுடற் சூலைநமை குட்ட
மிரங்குமென நாளு மிசை.

(இ-ள்.) சிவந்த கல்லைப்போலிருக்கின்ற அரிதாரத்தைச் சுத்தி செய்து கிரமமாகவுண்டால் குளிர் சுரம் மாவாதரோகம் சரீரகுத்தல் தினவு கிடிபகுட்டரோகம் ஆகிய இவைகள்போம் என்க. 1185

மடல் அரிதாரக்கரடுகள், மனேசிலை இவைகளின் குணம்.

மடலரி தாரத்தில் வருங்கர டிரண்டு
முடல்விடங் களைக்களையு மூண்மை-கொடியகுட்டம்
காய்ச்ச னடுக்கலஜ கள்ளியிரைப் புச்கிலந்திப்
பேச்சறு மனேசிலைக்குப் பேசு.

(இ-ள்.) மடலரிதாரத்தில்பலவகைகட்டியென்கிற 2-விதக்கரடுகளாலும் உடலிலூறிய விஷங்கள்நீக்கும். மனேசிலையில் சருமகுட்டம் களிர்சுரம் அஜகள்ளிகாரோகம் சுவாசம சிலந்திவிஷம் இவைபோம்.

மடலரிதாரத்தின் குணம்.

ஈளை யுடனேயிருமல் குடிவிலகுக்
கோழை மலமகலுங் கொம்பனையால்-நாளு
மடலூறு கயக்கரப்பா னுருப் புண்ணும்போம்
மடலரி தாரத்தை மதி.

(இ-ள்.) புட்பக்கொம்பனையாளே! மடலரிதாரத்தினல் தமக சுவாசம் காசம் சிலேஷ்மமலாவாததம் யக்ஷம் ரோகம் கரப்பான் விரணம் இவை ஏகும். 1187

அரிதாரத்தின் குணம்.

காசமுடனே கயநோய் கபவாதம்
பேசரிய குன்மமெட்டும் பேருங்காண்-மாசகன்று
கீற்று மதிநுதலே கேளாயுள் வேதமது
சாற்று மரிதாரத் தால்.

(இ-ள்.) பிறையையொத்த நெற்றியையுடையவளே! அரிதாரத்தினல், க்ஷயகாசம ரோகராஜம், சிலேஷ்மவாதரோகம் அட்டகுன்மம் ஆகிய இவைகள் போகுமென்க. 1188

பொன் அரிதாரத்தின் குணம்.

மந்தாரத் தாலே வளருஞ் சுவாசநோ
யுந்திவரு தீச்சுரநோ யோடுங்காண்-முந்து
தொனிக்கயஞ் செய்பான்கடியுந் தோற்குட்டு மேகுந்
தனிப்பொன் னரிதாரத் தால்.

(இ-ள்.) பொன்னரிதாரத்தினல் மந்தாரசுவாசம் வாதசுரம் சத்திக்கிறக்ஷயம் செய்யான்விஷம் சருமதலகுட்டம் இவைநீங்கும். 1189

### மிருதாரசிங்கியின் குணம்.

மிருதாரசிங்கெனவே மெல்ல வுரைததாலு
முருவா ருடைகரப்பா னோடு-மொருவிதமோ
சாலச் சிரங்குபுண்ணுந் தப்பாம லாறிவிடும்
வேலொத்த கண்மயிலே விள்.

(இ-ள்.) வேலொத்த கண்ணுளே! மிருதாரசிங்கியினால் உடம்பெங்கும்பரவுகின்ற பித்தவிரணம கரப்பான் சிரங்கிகூட்டம் மகாவிரணம் இவைவிலகுமெனக. 1190

### வெள்ளைப் பாஷாணத்தின் குணம்.

வெள்ளைப் பாஷாணம் விடங்கடி தீரும்பூசக்
கொள்ளைச் சுரந்தோடம் கோரசன்னி-தொள்ளையுறு
நாசிப்புண் வாய்ப்புண் ணிளைசிரந்தி போமுண்ண
வாசிக்குங் கும்பமுலையாய்.

(இ-ள்.) பரிமளிக்கின்ற கும்பமுலையாளே! வெள்ளைப்பாஷாணத்தைப் பச்சையாக அரைததுக் கடிவாயில் பூசினால் சர்ப்பவிஷந்தீரும். கிரமாகவுண்ணில் கபசுரம திரிதோஷசந்நிபாதம் துட்டபீநசம் முகபாகம் சிழ்ப்புண் இவை நீங்கும. 1191

### கௌரிபாஷாணத்தின் குணம்.

அவுரியொடு பாகலிலை யாற்சுததி செய்த
கவுரி பாஷாணததைக் கண்டாற்-சவுரியஞ்செய்
வாதநோய் மந்தமொடு வந்தசுரங்க ளெலாம்
காதிவிழுந் தோடுமெனக காண்.

(இ-ள்.) அவுரி பாகல் இவ்விலைகளின் சாற்றால் சுத்தித்தகௌரிபாஷாணத்தினால் மகாவாதமும் அசலமும் வாதகபசுரங்களும்போம்.

### நீலாஞ்சன பாஷாணத்தின் குணம்.

வன்னியரு வெட்டுப்புண் மாபிரமி யக்கிச்சூர
சந்நியனல் கீடவெட்டு தாகஞ்சூ-டுன்னசிரக்கு
நீங்கு நிலாஞ்சனத்தா னீடொளிதண் ணேருக்க
மோங்கு நீலக்குயிலே யோர்.

(இ-ள்.) நீலக்குயிலனையபெண்ணே! நீலாஞ்சனத்தால் ரசவன்னிதோஷம் ஆகந்துகவிரணம் பிரமேகம விழிப்பிணி சந்நிச்சுரம் புழுவெட்டு விதாகம் உட்சூடு ரத்தபித்தம் இவைவிலகும். தேஜசு குளிர்ச்சி அழகு பலம் இவை மிகும். 1193

### தொட்டிபாஷாணத்தின் குணம்.

*தொட்டிப் பாஷாணமெனச் சொன்னாற் சுரங்கிரந்தி*
*யெட்டிப் பார்க்கவா மிடருறுக்க கிட்டிவரு*
*வாயுவின் றன் பெருக்குமகத மூளைக்கட்டி யும்போ*
*மாயினது வா தவிததைக் காம்.*

(இ-ள்.) தொட்டிப் பாஷாணத்தினால் ரூட்சை சிரங்கு வாதாதிக்கம் அசீரணம் மூளைவிரணம இவைபோம. இதுவாதத்தொழிற்காம்.

### பஞ்சபாஷாணத்தின் குணம்.

*பஞ்சபா ஷாணமெனப் பாரினுரைத் திட்டாலும்*
*வெஞ்சதை யெணிப்புட்டும் வீறுங்காண்-விஞ்சுவார்*
*கண்புற்றுத் தீருமதி காய்ச்சல்குளிர் மேகம்போம்*
*பண்புற்று மாதே பகர்.*

(இ-ள்.) மேன்மையுடையாளே! பஞ்சபாஷாணத்தால், ககரம் சிலீபதமுதலிய ரோகங்கள் விழிசதைப்புறறு மிகுசுரம் ஈளிர்மேகமபோம்

### நவபாஷாணத்தின் குணம்.

*நவபாஷா ணந்தன்னை நற்சுத்தி செய்தங்*
*குவகையாய்ச் சிந்தூரித் துண்டா-னவமாகக்*
*காய மிருகுங் கனத்தநோயும போகு*
*மாயுநோ யெலலா மதி.*

(இ-ள்.) சுத்தித்த நவபாஷாணத்தைச் சிந்தூரஞ்செய்து உண்ணில் தேகவண்மை உண்டாகும் மகாவாதமும் பலசுரங்களும் போம்.

---

## உலோகவகை

### பொன்னின் குணம்.

*அடற் றூவரவிடங்க ளக்கொளி மங்கல்*
*தடத்தாமுத் தோடகயங் காச-முடற்றூபஞ்*
*சேகையிருந் தாதுகட்டங் திட்டிநோ யீளையிவை*
*யீகையிருந் தாலேகு மெண்.*

(இ-ள்.) பொன்னினால் தாவரவிஷங்கள் தேஜசுமருங்கல் அபிநியாச சந்நிபாதம் பித்தக்ஷயம் தேகவெப்பு முதிர்ந்த கபதோஷம் க்ஷீணசுக்கிலம் விழிநோய் கோழைகட்டு விலகும் ஈகை-பொன்.

### வெள்ளியின் குணம்.

பாய்க்கூட்டங் காட்டப் பழையசுரந் தாருவிடம்
வாய்க்கூட்டாச் செய்மேக வாதமுத-னோய்கூட்ட
மண்டாது காணிகொளு மத்திமேகக் கசிவும்
வெண்டாதுகாணி மெய்யை மேல். வெண்தாது-வெள்ளி.

### இதுவுமது.

இரத்தங் கயம்பித்த மீளைகண்ணோய் காச
முரத்தைய மட்டகுன்மம் மூதை-வருத்தும்
விரணஞ் சிலேட்டுமநோய் மெய்ப்புளிப் புண்ணூரண
மரணமுறும் வெள்ளியினால் வாழ்த்து.

(இ-ள்.) வெள்ளி பாயலுக்குப்பளுவுகாட்டாது தூர்ப்பலஞ்செய்கிறபுராணசுரம் மரவிஷம் ஒருவரால் உணவை ஊட்டஞ்செய்கிறமேக வாதப்பிடிப்புமுதலிய நோய்கள் ஒழுக்குவெள்ளை உதிரபேதி க்ஷயம் பைத்தியம் கோழை விழிநோய் இருமல் மார்புச்சளி அஷ்டகுன்மம் வாதகோபம் கிரந்தி நீர்க்கோவை லாஞ்சனம் சிரங்கு சொறி இவைகளை விலக்கும். 1198

### தாம்பரத்தின் குணம்.

தாம்பரத்தாற் சோறிபித்தஞ் சந்நி வழுவைகபம்
வீம்பார பீலிகமந்தம வெண்மேகங-தேம்பமலை
ஞூதகநோய் புண்கிரந்தி தோடகவா சக்கிருமி
தாதுநட்டங் கண்ணோய்போஞ் சாற்று.

(இ-ள்.) தாம்பரத்தினால் ரத்தபித்தம் சந்நிபாதம் வழுவை மகோதரம் கபாதிக்கம் பிலீகம் அஜீரணம் வெண்குஷ்டம் பித்தகபம் ரத்தகுன்மம் விரணம் திரிதோஷநாசம் கிருமி தாதுநட்டம் விழிநோய் இவைபோகும் என்க. 1199

### பித்தளையின் குணம்.

தாதுவிர்த்தி யுண்டாகுந் தாபச்சுரம் போகுஞ்
சீதளமாம் வாதஞ் சிதையுங்காண்-பூதலத்துண்
மாட்டியதோர் பித்தகுன்ம மாறுமலர்த் திருவே
நாட்டியதோர் பித்தளை யினால்.

(இ-ள்.) மலர்மேல்வசிக்கும் திருமாதனையாளே! பித்தளையினால் சுக்கிலம்பெருக்கும், குளிர்ச்சியும் உண்டாகும் தீச்சுரம் வாதாதிகபம் பயித்தியகுன்மம் இவைநீங்கும் என்க. 1200

### வெண்கலத்தின் குணம்.

நேத்திரநோய் சோமவினை நீர்பெருக் கிரத்தபித்தம்
வீழ்த்து சுவாசம்மந்த மோகமோ-டார்த்தகுகப
வாதவலி சூலை மகோதரம்போம் பித்தமொடு
தாதுவுமாம் வெண்கலத்தாற் றான்.

(இ-ள்.) வெண்கலத்தினால் விழிநோய் சோமரோகம் வெகு மூத்திரம் உதிரபித்தம இரைப்பு அஜீரணம் கபவாதபிரமேகம் குத்தல் பெருவயரு இவைபோம். சுக்கிலமும் பித்தமும் விருத்தியாம் என்க.

### தாரவின் குணம்.

சூலையொடு மேகத்தை தோன்றும வோட்டிவிடு
மேலை வருகாலை விலக்குமகா-ஞால
வாரமேவிய வல்கு லாரணங்கே வேட்டைத்
தராவென்னு மூலோகமது தான்.

(இ-ள்.) விடத்தையுடைய சர்ப்பத்தின் படம்போன்ற அல்குலானே! வெட்டையாகிய தராவானது கீல்பிடிப்பு வெள்ளை வீழ்தல் கபவாததோஷம் ஆகியவைகளைப்போக்குமென்க. 1202

### வெள்ளீயத்தின் குணம்-இதுவே வெண்ணாகம்.

தாகங் கரப்பான் சலமேகம் பித்தகப
மேகமொளி மங்கல் வெப்புபல-மாகிரந்தி
துள்ளிய மந்தார சுவாசமுமந் தாக்கினியும்
வெள்ளீய மன்போக்கும் விதி.

(இ-ள்.) வெள்ளீயம் ராகூஷதாகரோகம் சலப்பிரமேகம் பித்தகபதோஷம் மேகமூத்திரம் தேஜசுகுன்றல் சுரம தூர்ப்பலம் விரணம் மந்தாரசுவாசம் கபஞ்சேர்ந்தமந்தாக்கினி இவைகளை நீக்கும். 1203

### காரீயத்தின் குணம்.

பன்மரகஞ் சக்கிநோய் பாகர்த் தபிவிரணங்
குன்மங்கால் சூலங் குதவிரணஞ்-சன்மம்
பெருநாக மேகப் பிணிசுர மிவற்றைக்
கருநாகமே நீக்குங் காண்.

(இ-ள்.) காரீயம் கரவீரமுதலிய பற்பலதாவரவிஷம் கண்ணோய் கர்த்தபிரோகம் வலிவாதகுன்மம் குத்தல் பகந்தரவிரணம் கஜசருமகுஷ்டம் ரூட்சை ஆகியவைகளை யொழிக்குமென்க கருநாகம்-காரீயம்.

### துத்தநாகத்தின் குணம்.

மேகங்கிளர்பேதி வெட்டையழலைத் தணிக்கும்
வேகங் கிறுணி விலக்குங்காண்-போகாப்
பரியழுளைப் புண்ணைப் பயித்தியத்தைப் போக்கு
மரிய துத்தநாக மது.

(இ-ள்.) துத்தநாகம் விரணபிரமேகம் அதிசாரம் வெள்ளை உட்சூடு சீதரத்தக்கழிச்சல் மூளைவிரணம் பித்தம் இதுகளை நீக்கும்.

### இரும்பின் குணம்.

பாண்டு வெண்குட்டம் பருந்தூதநோய் சோபை
மாண்டிடச் செய்மந்தங் காமாலை குன்மம்-பூண்ட
பெருந்தாது நட்டமும்போம பேதிபசி யுண்டாம்
கருந்தாது நட்டமிடுங் கால்.

(இ-ள்.) இரும்பினால் பித்தபாண்டு சிலேஷ்மவெள்ளைக் குஷ்டம் அதிதூலரோகம் வீக்கம் விஷாலஜகம் காமிலம் வயிற்றுநோய் சுக்கில நஷ்டம் இவைவிலகும் மலவிருத்தியும் தீபனமும் உண்டாம். 1206

### எஃகுவின் குணம்.

தந்தமந்த மூலவுரு தாதுநட்டஞ் சோபைகண்ணோய்
வந்தமந்தம் பாண்டுவினை வன்மைகுன்றன்-முந்த
பெருக்கிடையாய் நீட்டுகப பேத மிவைகட்
குருக்கிடையா தோட்டு மூரை.

(இ-ள்.) எஃகு தந்தரோகம் தந்தமூலநோய் க்ஷீணசுக்கிலம் வீக்கம் நேத்திரரோகம் அலஜம் உடல்வெளுப்பு துர்ப்பலம் படுக்கையே கெதியாக வீழ்த்தாநின்ற க்ஷயரோகங்கள் இவைகளை யொழிக்கும் உருக்கு-எஃகு. 1207

### காந்தகத்தின் குணம்.

காந்தத்தாற் சோபைகுன்மங் காமிலமேகம் பாண்டு
சேர்ந்திரி தோஷம்வெட்டை சீதங்கா-லோய்ந்தபசி
பேருதரங் கண்ணோய் பிரமிய நீராமையும்போ
மோரினிறை யாயுளுறு மூன்.

(இ-ள்.) காந்தத்தால் வீக்கம் குன்மம்காமாலை பிரமேகம்பாண்டு முத்தோஷம் வெள்ளைவீழல் சீதளம் வாதநோய் மந்தம் மகோதரம் விழிநோய் ஜலமேகம்நீராமைக்கட்டி இவைபோம் பூர்ணயுளுண்டாம்.

மண்டூரத்தின் குணம்.

கிட்டமொன்றுற் சோபை கிளை வீக்கம் மத்திசுரங்
குட்டவி டபாகஞ் சுவாசசயங-கெட்டகொடும்
பாண்டிரும நீராமை பாழும் பிரமியமுங்
தாண்டிவிடு முண்டிரத்த தாது.

(இ-ள்.) மண்டூரத்தினால் வாதசோபை முதலியவீக்கங்கள் அஸ்திசுரம் கொடியவிஷப்பாகம இரைப்பு க்ஷயரோகம் தேகவெளிறல் காசம் நீராமைக்கட்டி அசிர்க்கரம் இவைநீங்கும் உதிர விருத்தியாம்.

# நவரத்தினவகை

மாணிக்கத்தின் குணம்.

சுரரோகஞ் சந்நிகளின் தோட மதிதாக
முரமான மேக மொழியுக்-கிரமாக
வூணிக்கோ ணேத்திரகோ யோடுமர வீன்றவொளி
மாணிக்கத்தால் வசிய மாம்.

(இ-ள்.) சர்ப்பங்கக்கிய மாணிக்கத்தினால் சீதாதி சுரங்கள்சந்நிபாததோஷங்கள் திரிதோஷதாகரோகம் வாதபிரமேகம் கண்ணோய் ஆகிய இவைகள் ஒழியும் வசீகரம் உண்டாகும் என்க. 1210

வயிரத்தின் குணம்-இதுவே வச்சிரம்

ஆறுவித மாம்வயிர மவ்வவற்றுண் மாரசங்கள்
வீறிநிலைத் திருக்கு மேன்மையினுற்-கூறுமவைக்
கெப்பிணியு நீக்கு மிணையிலை வனப்புமுண்டாஞ்
செப்பிணையின் மாமுலையாய் செப்பு.

(இ-ள்.) செப்பைப்போன்ற முலையாளே தேவ பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர சங்கர எனகிற ஆறுவகை வயிரங்களிலும் மகாரசங்கள் தங்கியிருப்பதால் அவைகளுக்கு நேத்திரரோக முதலிய பற்பல ரோகங்கள் விலகும் சீர அழகுண்டாம். 1211

வைடூரியத்தின் குணம்.

சீத வாதத்தொடு சிலேஷ்மம் புளியேப்பங்
காதுசூலைப் பிணிக ளத்தகுணம-மோதுபித்த
மென்றுரைக்கு நோய்களறு மெப்போதுந் தோடமிலை
நன்று வைடூரியத்தி னால்.

(இ-ள்.) வைடூரியத்தினால் சிலேஷ்மவாததோஷம் கபம் புளி யேப்பம் வருத்துகின்ற கீல்பிடிப்பு வாதகுன்மம் பயித்தியம் அபத் தியமுதலிய சப்ததோஷங்கள் ஆகிய இவை நிவர்த்தியாகும். 1212

கோமேதகத்தின் குணம்.

வாதபித்த கோபத்தை மாற்றுமலச் கட்டறுக்கு
மோதுமந் தாக்கினியை யோட்டுங்காண்-மீதி
லழநரு விகார மகற்று மொளிசெய்யுங்
கழறுகின்ற கோமேதக கம்.

(இ-ள்.) கோமேதகம் வாதபித்தமிஸ்ரம் மலபந்தம் சுரத்தால் பிறந்த துர்க்குணம் இவைகளை நீக்கும் மினுமினுப்பைத்தரும். 1213

புட்பராகத்தின் குணம்.

வீரிய விர்த்தியது மேன்மேலு முண்டாகுங்
கூரியநற் புத்தியுண்டாங் கூறுங்காற்-பாரிற்
பிணிவருக்க மேகும் பெரும்புட்பராக
மணியாற் புகழுமுண்டாம வாழ்த்து.

(இ-ள்.) புட்பராகத்தினால், விருத்தி சுக்கிலமும், நல்லறிவும், கீர்த்தியும் உண்டாகும் மேகமுதலிய நோய்க்கூட்டம் நீங்கும். 1214

பவளத்தின் குணம்.

சுரதோட மையமுத் தோட சுரங்காச
மருசி கிடத்தாலா மாதம்-பெரும்விந்து
நட்ட மதிதாக நாவறட்சி போமொளியுங்
கிட்டும் பவளத்தாற் கேள்.

(இ-ள்.) பவளத்தினால் ரூட்சையின் விகாரம் கபம்சந்நிபாதசுரம் இருமல் அருசோகம் கிடவிஷம் சுக்கிலக்ஷீணம் விதாகம் நாவில் வற றப்பு ஆகிய இவைவிலகும் சரீரகாந்தி உண்டாகும். 1215

முத்தின் குணம்.

அத்திசுரஞ் சோபை யருசிதூர்ப் பலங்கண்ணோய்
பித்துவிடஞ் சீதளநோய் பேசுகபஞ்-சத்தத்
தயிரிய நட்டத்தோடு தாதுநட்ட முஃபோ
முயிறுநண் முத்திருந்தா லோது.

(இ-ள்.) ஜீவரத்தினம் என்கிற முத்தினால் அஸ்திசுரம் வீக்கம் அரோசகம் மெலிவு விழிநோய் அக்கினிகீடவிஷம் சுட்கசிலேஷ்மம் குரல்வளையிற் சத்திக்கிற கோழை அதைரியம்வீரியநாசமிவைபோம்.

மரகதத்தின் குணம்.

தாதுதரும் பூதபை சாசந் தமையோட்டு
மீதுவரு புண்ணை விலக்குங்காண்-ஊதுபுரி
மச்சை யகற்றும் மதுமேகம் போக்கும்
பச்சை யதுமதுரம் பார்.

(இ-ள்.) இனிப்புள்ள மரகதம் விந்துவை விளைக்கும் 18-விதபூத பைசாசங்கள் விரணம் பலவிஷங்கள் மதுமேகம் இவைநீக்கும் என்க.

நீலத்தின் குணம்.

குதிவலி மேகபித்தங் கூறரிய பாண்டு
மதிமயக்க மெல்லா மருளு-மதிநுதலே
புததியோடு மேன்மேலும போகசுக மூண்டாகுஞ்
சுத்தநறு நீலத்தாற் சொல்.

(இ-ள்.) மதிநுதலாளே! நீலத்தினால் குதிகால்நோவு மேகநீர் அதிபித்தம் பாண்டு மனச்சோர்வு இவைபோகும் நல்லறிவும் மிகுசுகமும் உண்டாகும். 1218

---

# வைத்தியாங்கம்

மருத்துவன் குணம் கழிநெடில் விருத்தம்.

தெய்வவுபாசனைபலநூ லெல்லை காண்டற்
றிரிகரணசுத்திபனனோய் தீர்த்துனுரு
வைகன்றதீரமதி நுட்பஞ்சான்றோ
நட்பொழுக்கமேன்மைகுண மன்புள்ளானாய்
மெய்வசுதைவிகலையணங் குறைபதார்த்த
விதியுடற்காதார மடலக்கிமாநதற்
கைவருமெண்பேதமெலா மூணர்ந்துற்றானாய்க்
காணிவந்தமருத்துவன்கைக் காணியுண்ணே.

(இ-ள்.) தேவவுபாசனை பலசாஸ்திரங்களை நன்றாக ஆராய்ந்தறிகுதல் மனவாக்குக்காயமென்னும் திரிகரணசுத்தியால் பலவியாதிகளைத் தீர்க்குதல், நாளும் வியாதியைக்கண்டு அஞ்சாத தீரத்துவம் மிகுந்த புத்திநுட்பம் பெரியோர்சிநேகம் ஆசாரம்மேம்பாடு நற்குணம்அன்பு இத்தன்மைகளுள்ளவனுகித் தேகம் தேசம் காலம் ரோகம் ஔஷதம் பதார்த்தகுணம் உடம்புக்காதாரம் உதராக்கினி தேகபலம் ஆகாரம்

கைபாகம் செய்பாகம் இன்னநோய்க்கு இத்தனைநாள் ஔஷதங் கொடுக்கவேண்டுமென்கிற கால அளவு என்னும் இப்பேதங்களெல்லாம் அறிந்திருப்பவனாகத் தெரிந்தால் அந்த வைத்தியன் கொடுக்குஞ் சஞ்சீவியையொத்த மருந்தை உண்ணக்கடவை என்க. சரீரத்துக்குள்ள ஆதாரபேதமானது வாதம் பித்தம் சிலேஷ்மம் ரசதாது மாமிசதாது மேதோதாது அஸ்திதாது மகமைதாது சுக்கிலதாது மலம் மூத்திரம் முதலிய 102-ம் உதாரக்கினி பேதமாவது சாமாக்கினி விஷமாக்கினி தீக்ஷணாக்கினி மந்தாக்கினி முதலிய 1004-ம் தேகபலமாவது சகசபலம் காலபலம் யுத்தகிருதபலம் என்னும் சாஸ்திரத்தில் தோஷபேதபடலத்தில் காண்க. 1219

கைபார்த்த மருந்துவன் நடத்தை-வெண்பா.

கன்மவுரு நோயதைமுக் கண்கொடறி வுற்றறிந்தார்
தன்ம நீராடற் சகத்துடனெட்-டின்மையெனி
லங்கைபதத் தூய்மையின்றே வங்குலிபூ வெற்றலின்றேற்
கங்கை பதம்புனிறு காண்.

(இ-ள்.) நோயானது கன்மரூபமாகையால் அந்தநோயை மூன்று விரலைக்கொண்டு பிணியாளனுடைய கைமுதலாகிய தசவிதநாடிகளையும் தொட்டறிந்து அதுவுமன்றி அஷ்டவித பரிக்ஷையினாலும் அறிந்த மருத்துவர்கள் முக்கியமாக நடந்துகொள்ளத்தக்க ஒழுக்கமாவது 108-ஸ்நானஞ்செய்தல் அல்லது கைகால்களைச் சுத்தஞ்செய்தல் அவ்விரலைப் பூமியில் தட்டுதலாம். இப்படி செய்யாவிட்டால் சகல பாவங்களையும் நிவர்த்திசெய்யுங் கங்காநதியையொத்த வைத்தியருக்கும் பக்குவமாகச் செய்யப்பட்டிருக்கிற ஔஷதங்களும் ஆரூசம் உண்டாம் என்க. கண்போலத் தெரிவிக்கின்றமையால் விரலைக் கண்ணென்றார். இவ்வொழுக்க மில்லாத வைத்தியர்கள் கைமருந்து பிணியை நீங்காதென்பது கருத்து. 1220

பிணியாளன் குணம் கழிநெடில் விருத்தம்.

அருப்பமுனரசெனினுந் தீர்ப்பானைக்கண்
டழைத்தவனையாதியரு மவனெனன்றோர்தல்
விருப்பமுறத் தவசிருத்தன் மெய்யன்பாடல்
வேண்டுடலீந்திட லுறைபேற றுண்டலத்தைத்
திருப்பவருந் துயராற்றற் சாதங்கூறற்
செப்புளோடுங் கற்பன்மருந்தெழித்தனூழா
மிருப்பகற்றுமுறைகுயிற்ற லிவையுள்ளாளே
லிவனும்புகலுகர்க்கு மின்றுநோயே.

(இ-ள்.) இராசனேயானாலும் தனக்கு வியாதிசம்பவித்தால் வைத்தியரை உபசாரத்துடன் அழைத்தல், தாய்தந்தை குருதெய்வம் இந்த வைத்தியரே என்று நினைக்குதல், விருப்பமுண்டாகும்படி ஆசனங்கொடுத்திருக்கச்செய்தல், உண்மையான அன்புவைத்தல், ஔஷதத்துக்குவேண்டிய திரவியங்கொடுத்தல், அவர்கொடுக்கின்ற மருந்தை இரண்டு கைபினாலும் வாங்கி உண்ணுதல், ஔஷத்தை வேண்டாமென்று மாற்றும்படியுண்டாகும் வருத்தத்தைச்சகித்தல், ஔஷதஞ் சாப்பிடுவதனாற் றனக்கிருக்கும் குணாகுணங்களை யுண்மையாகக் கூறுதல், அன்றியுமவர்சொல்லுக்குள் அடங்கியிருத்தல், கண்ட ஔஷதங்களையுண்ணாமல் நீக்குதல், பூர்வகர்மததினால் வியாதி சம்பவிப்பதாகலால் அந்தக்கர்மத்தை நிவர்த்தி செய்துக்கொள்ளுதல் என்னும் இந்தக்குணங்களை யுடையவனா யிருப்பானால் இவன் பேரை யுச்சரிப்பவர்களுக்கும் வியாதியணுகாது என்க. 1221

பாகஞ்செய்வான் குணம்-வெண்பா.

பிணியர்க் குரியர் பிருக்குளத்தை யொப்ப
ரணியிற் சிறந்தகட்ப ராம்பற்-பணியர்குட்
டெப்புறையை யுண்மைமிகு தூய்மையிவை யார்ந்தாரை
யொப்புறையை யாடற் குவந்து.

(இ-ள்.) பிணியாளர்களிடத்திலிருநது ஔஷதபாகஞ் செய்கிறவர்கள் அவர்களுக்கு உரிமையுள்ளவர்களும் மிகுந்த நன்மையுள்ள சிநேகிதரும் வைத்தியர் மனதை ஒத்தவர்களுமா யிருக்கவேண்டும், அதநன்மையர்களில்லாதபட்சததில் மற்ற ஏவலாளிகளுக்குள் தேகபலம் பிணியாளர்களுடைய ஆயுசு விர்த்தியைவிரும்புதல புத்திநுட்பம் சத்தியம் பரிசுத்தமென்னும் நற்குணமு உள்ளவர்களை பரிசோதித்து ஔஷதபாகஞ்செய்ய வைத்துககொள்ள வேண்டுமென்க இந்த 4-பாடலும் தேரையர்செய்த இலவருக்குச் சுருக்கம் என்னும் சாஸ்திரத்திலிருந்து சேர்க்கப்பட்டவை. 1222

கருமை, செம்மை, வெண்மை, மஞ்சள் என்னும்

நிறத்தையுடைய கலுவங்களின் குணம்.

கருங்கற் கல்வத்தவுழ்தங் காணிலுடற் கின்பா
செருங்கிவந்தக் கற்றேடநீக்கு-மொருங்குவெள்ளைக்
கண்மருந்தோ வீரமொடு காரமுமீன் மஞ்சளம்மி
யினமருந்தோ கோய்விலக்கா வெண்.

(இ-ள்.) கரியநிறமுள்ள கலுவத்தி லரைத்தமருந்து உடலிற்கு நலஞ்செய்யும், சிவப்புநிற அம்மியினதுமருந்து சகலதோஷங்களையும் நீக்கும், சுத்தவெண்மைநிறக் குழிக்கல்லினது மருந்திற்கு வீரமும் சுவையும இன்மையாம், மஞ்சள் நிறக்கல்மருந்து பிணிகளை நீக்காதென்றெண்ணுவாயாக. 1223

மருந்தினது பக்குவதுணம்.

பக்குவ பாகத்தை யுறுமருந்தும் பிறழ்
பக்குவ பாகதனுப் பருமருந்து-மெய்க்குறுங்கா
லக்கால மும்பருணவாழி வருந்துன் சிநனுசேடன்
கக்காலமும் பொருந்துங் காண்.

(இ-ள்.) தருமானமுறையினுற் செய்யப்பட்ட ஔஷதங்களே யானுலும் பக்குவபாகத்தைபொருந்துமானுல் அதுதேவர்களுண்ணத் திருப்பாற்கடலில் உண்டான அமிர்தத்துக்கொப்பாம் கனமானமுறையினுற் செய்யப்பட்ட ஔஷதங்களேயானுலும் செய்யப்பாகங் கெடுமானுல் அக்காலத்தில் ஆதிசேடன் கக்கிய விஷத்துக்கொப்பாகுமெனக.

மறுபாகக் குணம்.

மாகமொட்டிக் குளிர்ந்த பாணியிர சாயனநல்
வேகவிவேகங் குடிநீர் மெய்ச்சுரச-மேகுமிரா
மீந்தவெஞ் சனுதிகளை மீளவொரு காவானடி
மாந்தநஞ்சம் வேறிருக்கு மா.

(இ-ள்.) பக்குவபாகக்காய்ச்சி ஆறினவெகநீர் ரசாயனம் நல்லவீரியமுள்ளலேகியம் கஷாயம் தனியே இடித்துப்பிழிந்து முறித்தசுரசம் சென்ற இரவில் மீந்த பதார்த்தம் முதலியவைகளை மறுபடியும் ஒருதரம் அடுப்பில்வைத்துப் பாகஞ்செய்து புசிக்கில் இதுவே விஷமாம்.

மருந்துவைக்கும் பாத்திரத்தின் குணம்.

தெங்கின் குடுக்கை திகிரிதகநப் பாத்திரத்தார்
நன்கிராப் பன்மருந்து நன்மருந்தாம்-வெண்கலந்தான்
மையிரும்பாற் கட்டைகளாற் கொம்பாற் பாத்திரங்கட்
செய்யினிரண் டாம்பட்சஞ் செப்பு.

(இ-ள்.) தேங்காய்க்குடுக்கை மூங்கிற்பரணை தந்தச்சிமிழ் இவைகளில் வைக்கிற நலமில்லாத அற்பமருந்தும் உயர்ந்த மருந்தாம், வெண்கலம் இரும்பு மரம் மிருகங்களின் கொம்பு இவைகளாற் செய்த பாத்திரங்களில் ஔஷதங்களை வைப்பது மத்திமபட்சமாம். 1226

### மருந்தூட்டும் பாத்திரபேதம்.

*வாதமுதன் முப்பிணியோர் வைததிரயுண் பாத்திரத்தின்*
*பேத முறையேகேள் பெருங்கஞ்சஞ்-சாதகும்பந்*
*தாமபரமா மின்றென்னிற் சக்கரிகைப் பாத்திரநன்*
*றும்பரமாட் கொடுக்கு மாற்கு.*

(இ-ள்.) வாதரோகிகளுக்கு வெணகலப்பாத்திரத்திலும், பித்த ரோகிகளுக்குத் தங்கப்பாததிரத்திலும் சிலேஷ்ம ரோகிகளுக்குத் தாம்பரப்பாத்திரத்திலும் மருநதிளைத் துண்ணக் கொடுக்கவேண்டும் இவைகளில்லையெனில் குயப்பாத்திரமே உத்தமமாகும் இது பூரணயுளேத்தரும. 1227

### மருந்தூட்டுங் காலம்.

*அனிலகோ யர்க்கசன மாகா முன்பிறந்த*
*துனியர்க கசனநடு னுயை-யெ னுநோயர்க்*
*கரகரப் பின் னுமருந்தி னுறையப் பிணியாற்*
*சரசரப் பின்னுலகிற் றுன்,*

(இ-ள்.) வாதரோகிகளுக்கு போஜனம் செய்யுமுன்னும் பித்த ரோகிகளுக்குப் போஜன நடுவினும் சிலேஷ்மரோகிகளுக்குப் போஜனஞ்செய்தபின்பும் ஔஷதம் உண்ணக் கொடுத்தால் அந்தவியாதியினுலே சமுத்திரஞ் சூழ்ந்த உலகத்தில் அவர்கள் இரக்கார்கள். ()

### மருந்தருந்தியபின்பு வாயிலிடும் வஸ்துக்கள்.

*சீவற் கனமதுதிராட்சை தம்பை மூக்குடிராகம்*
*பூவற சரநெற் பொரிச்சத் தூள்-பூவி*
*லிருந் துண்ட நீர்மைகுன்ற தேற்றுமேன் மக்கண்*
*மருந் துண்ட வாய்க்கிவையா மால்.*

(இ-ள்.) கொட்டைப்பாக்குச் சீவல் நாகப்பூ தேன்திராட்சைப் பழம் வெற்றிலைக்காம்பு கிராம்பு ஒருவருஷஞ்சென்ற நெற்பொறி பச்சைக்கர்ப்பூரத்தூள் இவைகள் உண்டமருந்தின் தன்மையைக் கெடுக்காத வஸ்துக்களாதலாலும் வெகுட்டிலை முகத்தின் சுபாவத்தன்மை மாறுமலிருக்கும்படிச் செய்யததக்கவை யாதலாலும் அதுகளிலொன்றை ஔஷதம் உண்டமேன்மகன வாய்க்குக் கொஞ்சங்கொடுக்கவும்.

### பகல் உறக்கத்தைநீக்கி மருந்தூட்டும் வுபாயம்.

*வேசையர் கூத்தொன்றெருத்த வேறுவேறுங் கூத்தா*
*லாசியத்தாற் கீதத்தா லற்புதத்தால்-வீசபுகழ்*

றாக்கமரு ணீக்கியுரை துப்புத்தணங்கை யுள்ளார்க்
கூக்கமருள் வார்மருத்து வர்.

(இ-ள்.) பண்டிதர்கள் கணிகைமாதர் பாதக்கூத்து ஒன்றுதவிர பலவித நாடகக்கூத்து விகடம சங்கீதம் அதிசயம் ஆகிய இவைகளினால் பகல் நித்திரைமயக்கத்தைவிலக்கி நோயாளிகளுக்கு மருந்தூட்டிப் பலம் வரச்செய்வார்கள். 1228

சிகிச்சையின் பேதம்.

சூதகந்தி காருபஸ்மஞ் சொர்ண்ன நாட்டார்சிகிச்சை
யோதரிய மூலியிம்மண் ணூர்ச்சிகிச்சை-வேதடருஞ்
சத்திராட்ச ராக்கினி நிசாசரஞ் சிகிச்சையென்றே
முத்திராட்ச தாகுமொழி.

(இ-ள்.) சிகிச்சையென்பது ஒன்றாயிருந்தாலும் அது மூவகைப்படும் அவையாவன ரசம் கந்தக பாஷாணம் பஸ்பம் ஆதிகளைக் கொண்டு வைத்தியஞ்செய்வது தேவகணச் சிகிச்சை, விருக்ஷமுதலிய ஔஷதிகளைக் கொண்டு சிகிச்சைசெய்வது மனுஷகணச் சிகிச்சை அறுத்தல் காரம்வைத்தல் அக்கினியாற் சுடல் முதலிவைராட்சதகணச் சிகிச்சையாம் என்க. 1229

காலபேத விரோசனம்.

குடிநீர் கற்கத்தயிலுங் கோடைக்காம் பேதி
கடுமாரி மூடுபனிக் காயுங்-கெடுமிவைகள்
சோபிக்கு மெக்களிக்குஞ் சூதமுப்பிற்கும் பேதி
சோபிக்கு மெக்காலஞ் சொல்.

(இ-ள்.) கஷாயம் அரைத்த கலக்க மருந்து ஆமணக்குநெய் என்னும் இம்மூன்றும் கோடைக்காலத்துப் பேதி மருந்துகளாம், மழைக்காலம் பனிக்காலங்களில் கொடுக்கில், அவைகளின் குணங்கெடும் மேற்கூறிய 3-காலங்களிலும், நேர்வாள பலவிதக் கள்ளிப்பால் ரசம் உப்பு இவைகள்சேர்த்தமருந்துகளைகொடுக்கில் கிரமமாக பேதியாகும்.

---

## மருந்து வகை

---

அயச்செந்தூரத்தின் குணம்.

அயத்தில் வருசெந்தூர மையமொடு சோபை
வயிற்றிலுரு காமாலை மாற்றும்-புயத்திற்குச்
செய்யபல முண்டாக்குந் தீபனத்தைத் தானெழுப்பும்
வெய்ய பாண்டோட்டமிது மெய்.

(இ-ள்.) அபச்செகனூரம், கப்பிணி வீக்கம் காமாலை பித்தபாண்டு இவைகளை நீக்கும, புஜபலத்தையும பசியையும் தரும் தீனிப்பையின் நரம்புகளைப்பற்றிய மஞ்சள் நிறததால் பிறப்பதால வயிற்றுலுறு காமாலையென்றூர். 1231

காந்தச்சிந்தூரத்தின் குணம்.

காநதச் சிந்தூரங் கருகரிய வுந்திவலி
போகத வதிசாரம் பொங்கிவரு-வாகநிகப
காசச் சுவாசம் காமாலைப் பாண்டுவொடு
பூசல் வினைநீக்கும் புகல்.

(இ-ள்.) காந்தசசெந்தூரம் நாபிவலிபேதச்சுரம் வமனம்க்ஷயம் இருமல் இரைப்பு காமிலம பாண்டு நீங்காநோய் இவைகளைவிலக்கும்.

தாம்பரபஸ்பத்தின் குணம்-சந்தவிருத்தம்.

உருவங் குறுபசியும் பெறுமூரமும பெறுமிராமா
மிருகண்ட ருடாயன் பெறுமிகையும் பெறுகுவரே
வறுசெம் புறுமலினந் தெறிவகையும கபாடிவகையும்
மருகும் பெருவிதமூந் தெரிபவரம் புவிமிசையே.

(இ-ள்.) செம்பில்பொருந்திய களிமபைநீக்கும் வகையும் பஸ்மஞ்செய்யும் வகையும் இதனை உண்ணும் பெரிதானவகையும் அறிந்தவர்கள் வயிற்றுலுண்டாகும் பசியையும பலததையும் தவத்தில் உயர்ந்த மிருகண்ட மகாரிஷி புததிராாகிய மார்க்கண்டேயர்போல ஆயுசுக்குருத்தியும அடைவார்கள் என்க. உண்ணும்போது பிரமாண அனுபான பத்தியவகைகளை அறிநதுண்ணவேண்டு மென்பதைப் பற்றிப் பருகும் பெருவிதமென்றூர் என்க. 1233

இதுவுமது-வெண்பா.

தாமர பஸ்பஞ் சகலகுட்டங் குறைநோய்
சோமபு குட்டமெல்லாந் தூரத்துமென்பார்-தேமபி
மிருகின்ற பிததமுட னிலை சுரஞ்சந்நி
குருக்கின்ற வாயுவும் போக்கும்.

(இ-ள்.) தாம்பிரபஸ்பம் குன்மங்கள் பெருவியாதி மூர்ச்சை பல குஷ்டம் அதிபித்தம் சுவாசம சுரம் சந்நி மிகுவாயுஇவைகளைநீக்கும்.

வங்கச்சிந்தூரத்தின் குணம்.

வங்கச் சிந்தூர மதுமேக நீரிழிவோ
டங்கமுறு தாப மகற்றுங்காண்-பொங்கிவரு

மோத வுதிரத்தா லுருவிரண நோய்போக்குந்
தாதுவை யுண்டாக்குமது தான்.

(இ-ள்.) வங்கச்சிந்தூரம் மதுநீர் அதிமூத்திரம் சுரம் ரத்த விர்த்தியினுற்பிறந்தபுண் இவைகளை ஒழிக்கும். சுக்லத்தைவளர்க்கும்.

ஆனந்தபைரவம் சுத்தபைரவம், சொர்னானந்தபைரவம், பிரமானந்த பைரவம், ஆனந்தரசம், விநோதபைரவம் இவைகளின் குணம்-விருத்தம்.

ஆனந்த பைரவம்பி னடர்சுத்த பைரவஞ்சொர்
ணானந்த பைரவம் பிர்ம்மானந்த பைரவம்மா
வானந்த ரசம்விநோத மாம்பைரவ மிவற்றால்
வானந்த மேவுருட்சை வருதிரி தோடமபோமே.

(இ-ள்.) ஆனந்தபைரவம் சுத்தபைரவம் சொர்னானந்தபைரவம் பிர்மானந்தபைரவம் ஆனந்த ரசம் விநோதபைரவம் இவைகளினால் முக்கியமான சுரமும் திரிதோஷாரம்ப ரோகங்களும் போகும். 1235

சுத்தமண்டூரம் மகாமண்டூரம் சித்தமண்டூரம் திரிகடுகாதிமண்டூரம் நாராயணமண்டூரம் இவைகளின் குணம்-வெண்பா.

சுத்தி மண்டூரக் ககுதிமகா மண்டூரஞ்
சித்த மண்டூரந் திரிகடுக-மொத்திடுமண்
டூரநா ராயணமண் டூரமிவைக்கு வெகு
தூரமாம் பாண்டொடு சோபை.

(இ-ள்.) சுத்தமண்டூரம் மகாமண்டூரம் இவைகளுக்கு ஐவகைப் பாண்டு நோய்களும் ஆறுவித சோபரோகங்களு மொழியும். 1236

வாதராக்ஷசமாத்திரைதசவித, அக்கினிகுமாரம் இவைகளின் குணம்.

இகல்வாத ராக்ஷசனுக் கெண்பது வாய்வும்
புகலாம லோடும் புறகதே-யிகலார்
தசவித வக்கினிக் குமாரர்க்குச் சந்நி
நசிசுரங்களும்போ நவில்.

(இ-ள்.) வாதராக்ஷசமாத்திரையினால் 80-வித வாதநோய்களும் தசவிதஅக்கினிகுமாரத்தினால சந்நியுமஅசாத்திய சுரங்களும்போம்

கோரோசனாதிக்குளிகை, தாககோப சமனமாத்திரை இவைகளின் குணம்.

கோரோச னாதிக் குளிகைக்குப் பித்தசுரந்
தீராத தாகஞ் சிறுவர்சுர-நோராது

*தாககோபச்சமனந் தன்னாற் சுரஞ்சந்நி*
*தாகபித்தம் போமே தணிந்து.*

(இ-ள்.) கோரோசனாதி மாத்திரைக்கு பயித்தியசுரமும்நீங்காத நாவரட்சியும் குழந்தைகள் சூட்சையும்விலகும். தாககோபசமனமாத்திரையினால் சுரரோகமும் சந்நிபாதமும் பித்தவிதாகமும்தீரும்.

**குன்மகுடாரஞ், சுயம் அக்கினி, பாஷாணபின்னவச்சிராசம் இவைகளின் குணம்.**

*குன்ம குடாரமெனக் கூறிலட்ட குன்மமும்போம்*
*வன்னிசுய மக்கினிக்கு வாதமந்தம்-பின்னுமுறும்*
*பாடாண பின்னவச்சிர பாரசதத்தைப் பார்க்கவுடன்*
*கோடாகுங் கல்லடைப்பிற் கே.*

(இ-ள்.) குன்மகுடாரமாத்திரையினால் 8-விதக் குன்மங்களும் சுயம் அக்கினி மாத்திரைக்கு தனிவாதசீரணமும் பாஷாண பின்னவச்சிராசத்தினால் 4-வகை அஸ்மரி ரோகங்களும் கெடும் என்க.

**மேகதுலாந்தகன் சர்வசித்திரசம் இவைகளின் குணம்.**

*மேக குலாந்தகனுன் மேகுலம் போமரிச*
*யோகசர்வ சித்திரச மொன்றுக்கே-போகும்*
*பெருமூத்திர மென்ற பேரும் போதித்து*
*வருமூத் திரமுமறி வாய்.*

(இ-ள்.) மேககுலாந்தக மாத்திரையால் 20-வித மேகங்களும்சர்வசித்திரசத்திற்குவெகுமூத்திரம்பலசொட்டு மூத்திரங்களும்நீங்கும்

**கோடாசலக்குளிகை மகாவன்னிரசம் இவைகளின் குணம்.**

*கோடா சலத்தாற் கொடும்பாண்டு சோகைமுத*
*லோடாக்கிரகணியு மோடுங்கா-ணீடுமகா*
*வன்னிரச மெனவுரைக்கில் வாடாச் சலோதரமும்*
*பின்னிடையுந் தப்பாது பேசு.*

(இ-ள்.) கோடாசலக்குளிகையால் பாண்டுநோயும் வீக்கமும்நீங்காதகிரகணியும்போம், மகாவந்நிசுரத்திற்கு சலோதாரரோகம்வகும்.

**உலோகத்தமரசம், வங்கேசுவரம் நாரசிங்கரசம் இவைகளின் குணம்.**

*உனாத வுலகோத்தம ரச்ததா லுன்னும்*
*வினோத மெனும்பேதி விளையுங்-கனமான*

வங்கேஸ் வரத்திற்கு வல்லிகுன்மம போம்நார
சிங்கம் மூலச்சுரந் தீர்க்கும்.

(இ-ள்.) உலகேசாத்தமரசத்தால் பற்பல வியாதிகள் நீங்கும், விஷேதபேதியுண்டாம், வங்கேஸ்வரத்திற்கு வல்லிக்கட்டியும் குன்மக்கட்டியும்போம், நாரசிங்கத்திற்கு புராணசுரம் விலகும், இது நகங்களில் உத்தியில் தடவினுனும புஷ்பச்சென்டில் தெளித்து மோந்தாலும் பேதியாகும்படி செய்வதினுல் விஷேதபேதி யென்றார்.

**சிந்தாமணி திரிலோகசிந்தாமணி என்னும் இக்குளிகையின் குணம்.**

சிந்தா மணிக்குளிகை சேர்ந்தமலக் கட்டறுக்கு
மூந்துசுர வாயுவையு மோட்டுங்கா-ணந்தாத
திரிலோக சிந்தா மணியென்னிற் சந்நி
திரிலோகத் தப்புரம்போந் தேர்.

(இ-ள்.) சிந்தாமணிக்குளிகை பழையமலச்சிக்கலையும் உஷ்ணவாயுவையும் நீக்கும், திரிலோகசிந்தாமணி மாத்திரைக்குச் சந்நிவிலகும்.

**திரிலோகசூடாமணி, திரிலோகாக்ஷாமணி இவைகளின் குணம்.**

திரிலோக சூடா மணிக்குந் திறல்சேர்
திரிலோக ரட்சா மணிக்கு-மூரவுநோய்
காசம் விக்கல்சந்நி சுபந்தலைநோய் மந்தஞ்சு
வாசம் பாண்டும்போ மதி.

(இ-ள்.) திரிலோகசூடாமணி மாத்திரைக்கும் திரிலோகரட்சாமணிக்குளிகைக்கும் மார்புவலி இருமல் காசம் சந்நிபாதம் க்ஷயம் சிரஸ்தாபம் அலஜம இறைப்பு சரீரவெளிறல் ஆகிய இவை நீங்கும்.

**ராஜமிருகாங்கம், மகாராஜமிருகாங்கம் இவைகளின் குணம்.**

ராஜமிரு காங்கமது ராஜநோய் போக்குமகா
ராஜமிரு காங்கமது ராஜநோய்க்-காசகபம்
பாண்டு காமாலை பலபீநசஞ் சோபை
தாண்டுபித்த நோயகற்றுஞ் சாற்று.

(இ-ள்.) ராஜமிருகாங்கமாத்திரை ராஜரோகம் என்கிற க்ஷயத்தையும் மகாராஜ மிருகாங்கமாத்திரை க்ஷயகாசம் சுவாசம் பாண்டு காமிலம் பற்பலபீநசம் வீக்கம் பித்தகோபம் இவற்றை விலக்கும்.

**ராஜகண்டேச்சுரம் ராஜராஜேச்சுரம் ராஜகேசரிவடகம்**
**இவைகளின் குணம்.**

ராஜகண் டேச்சுரமும் ராஜராஜேச் சுரமும்
வீசுசுர மெல்லாம் விலக்குங்காண்-ராஜாற்

கேசரிய தாம்வடகங் கேதஞ்செய் தோடசுர
நாசமுறக் காட்டுமெதை நாடு.

(இ-ள்.) ராஜாண்டேச்சுர மாத்திரையும் ராஜராஜேச்சுர மாத்திரையும் வாதசுரமுதலிய சகல சுரங்களையும்போக்கும் ராஜகேசரிவடகம் திரிதோஷங்களிற்பிறந்த 13-சந்நிபாத சுரங்களையும் கெடுக்கும்.

சந்திரோதயம் சந்திரகாசரசம் சந்திரபிரபாவவடகம் பூரணச் சந்திரோதயம் இவைகளின் குணம் விருத்தம்.

சந்திரோ தயத்தாலெப்பந் தணியுஞ்சந் திரகாசத்தார்
பிந்துழுத் தோடஞ்சந்திர பிரபாவ வடகமோதான்
கைநதுநீர் போகரும்பூர்ண மாஞ்சந்தி ரோதயத்தால்
விநதுவு மதிகரிக்கும் வீறுநோய் குழுவுமபோமே.

(இ-ள்.) சந்திரோதய மாத்திரையால் தாபச்சுரமுதலிய சகல சுரங்களும் சாந்தமாம், சந்திரகாச மாத்திரையினால் திரிதோஷவிகுணம் நீங்கும், சந்திரபிரபாவ வடகமானது 20-வித மேகங்களையும் விலக்கும், பூரணசந்திரோதயத்தினால் வீரியவிருத்தியாகும், பற்பல நோய்களும்போம் என்க. 1248

வசந்தகுசுமாகர மாத்திரையின் குணம்-வெண்பா.

வசந்தகுசு மாகரத்தால் வல்லசயங் காச
முசந்தவிட பாண்டுகுன்மம் மூற்றுய்க்-கசிந்தநீர்க்
கட்டுபுளி யேப்பமொடு கல்லடைப்புத் தாகமிவை
விட்டு விடுங்காண் விரைந்து.

(இ-ள்.) வசந்தகுசுமாகர மாத்திரையால் க்ஷயம் இருமல் விஷ பாண்டு குன்மம் சொட்டுமூத்திரம் புளியேப்பம் அஸ்மரி தாகநோய் இவைகள் நீங்கும். 1249

மகாவசந்த குசுமாகர மாத்திரையின் குணம்-விருத்தம்.

மகாவசந்த குசுமா கரத்தால் வாத
வாயுகபம் பித்தமந்தம் வயிற்று நோய்கள்
விகார வுன்மாதங் காமாலை பாண்டு
விடுசிறுநீர் கட்டுசந்நி குன்மஞ்சோபை
யாகாத க்ஷயகாச சுவாசம் பிரமேக
மதிசார மெலும்புருக்கி விக்கன் மூலஞ்
சிகாவாதஞ் சுருங்கக்குட்ட மார்பு நோயுந்
தீருமதற் கனுபானந் தெரியுங் காலே.

(இ-ள்.) மகாவசந்த குசுமாகரமாத்திரையை கொடுக்கிற அனுபானமறிந்து கொடுக்கில் திரிதோஷத்தின் குணம் அசலம் உதர நோய்கள் உன்மாதம் காமிலம் பாண்டு விஷபேதி மூத்திரபிந்து வாத வஸ்துசந்திகுன்மம் வீக்கம் க்ஷயம் காசம் சுவாசம் மேகநீர்பேதி அஸ்திசிராவம் இத்மாமூலம் சிரஸ்தாபம் குறைநோய் மார்புவலி இவை தீரும். 1250

லங்கேச்சுரம் பிரதாபலங்கேச்சுரம் இவைகளின் குணம்-வெண்பா.

இலங்கேச் சுரத்திற் கெழுசூதி சைககுர
விலங்கு கிரகணியு மில்லை-கலங்சொள்பிர
தாபலங் கேச்சுரத்திற் சாகதமாஞ் சீதசுரம
சோதமூறு நோயினமுஞ் சொல்.

(இ-ள்.) லங்கேச்சுரத்திற்கு சூதிகாவாதமும் கிரகணியும்பிரதாபலங்கேச்சுரத்தினால் சீதசுரமும் மூர்ச்சைமுதலிய பிணிகளும்போம்.

ஏகாதசருத்திரமாத்திரை, சிந்தூர பூஷணம்-இவைகளின் குணம்.

ஏகாதச ருத்திர மென்னு மாத்திரைக்குப்
போகாத சந்நிசுரம் போகுங்காண்-வாகான
சிந்தூர பூஷணத்தார் சீர்கருப்ப மாதருக்கு
வந்தசுரம போமுணரு வாய்.

(இ-ள்.) ஏகாதசருத்திர மாத்திரைக்கு அசாத்திய சந்நிபாதசுரமும்சிந்தூரபூஷணமாத்திரையால் கருப்பஸ்திரீகட்குற்றசுரம்நீங்கும்.

பூபதிமாத்திரையின் குணம்.

நாவிலிட வன்னமுறு நாளும் விடமேபோகு
மேவுசுரஞ் சந்நிகளுமே விட்டுப்போம்-காவிவிழி
மாதர் வசியமது வாய்க்கு மிலையனமாக்
தானேகேள் பூபதிக்குத் தான.

(இ-ள்.) பூபதி மாத்திரைக்கு விஷம் சுரம் சந்நிபாதங்களும் விலகும் தீபனமும் ஸ்திரீவசியமும ஆண்குறியெழுச்சியும் உண்டாம்.

நவலோகபூபதி, சூலைப்பூபதி இவைகளின்-குணம்.

நவலோக பூபதிக்கு நண்ணுசுரஞ் சந்நி
புவலோக வாழ்க்கைவிட்டுப் போங்கா-ணுவுசூலைப்
பூபதிக்குச் சூலைசந்நி போங்கனலந் தென்றிசைவாழ்
பூபதிக் காளாகும் புகல்.

(இ-ள்.) நவலோகபூபதி மாத்திரைக்கு சந்தசுரம் சந்நியும் விலகும் சூலைப்பூபதிக்கு கீல்பிடிப்பு சந்நியும் தாபச்சுரமும் கெடும்.

### பூபதிரசம் ரசபூபதி இவைகளின் குணம்.

பூபதி ரசத்திற்கு போஞ்சன்னி மந்தம் மிரத
பூபதிக்கு சந்நி பொருச்சிநோய்-கோபமிகு
காசங் சுவாசங் கடுஞ்சூலை பாண்டுமுத
ஞசங் கபவாய்வு நாடு.

(இ-ள்.) பூபதிரசத்திற்கு சந்நிபாதமும் அலசரோகமும் போம் ரசபூபதிக்கு சந்நிபாதசிரமும் சோமரோகம் இருமல் இரைப்பு சில் பிடிப்பு பாண்டுரோகம சிலேஷ்ம வாதநெரிங்கம் இவைகள்கெடும்.

### மருந்தருந்துங் கால அளவுகூறல்-விருத்தம்.

தாதுநட்ட பஸ்மமாரஞ் சுவாச காசந்
தனியுன்மா தன்னிவைக்காண் டுறையா மென்பர்
மோதுசிறிச் சரம் விரணங் கல்லடைப்பு
முதிர்மேக நீர்க்கு மருந் திரைந்திங்க
ளோதுமுதா வர்த்தமா தங்களேழென்
றுரைவித் திரிதிக்கு மருந்தலராயாண் டன்றி
மீதுவேன் டாவுரைத்த விம்மட் டுண்ணின்
விலகுமவை சடமற விருமபிக் காணே.

### இதுவுமது.

சோகபகந்தரமூல முதிரச்சூலை
சூலைகுருதிக்குன்ம மசிர்க்குநோயா
நாகமுபயாட்டில் மெய்திமிரங்குன்ம
நாறுகயமிவைக் குசைசேணுன்காந்திரங்க
ளாகமகுமூர்ச்சை தவுல்லியகிரத்தி
யாமமிலபித்தஞ் சீதபித்தமுட்டி
யேகவருமதிமந்தஞ் சோமரோக
மிவைக்குறைமும் மதியுண்ணிளினிமீளாவே.

### இதுவுமது.

வாந்திவிக்கல் சுணமாந்தம் பேதிகட்கு
மண்டலமென் றுரைவாதங் காமிலங்கட்
கேந்திரு மண்டமுறை பற்பாண்டுசோபை
யென்மகோதரம்பிரி துனிக்கட்கூக்க
மோய்ந்திடமும்மண்டல நல்லுரைநாட்சென்று
மொழிவில்சுரங்கட்குறை மண்டலநான்குன்னி
மாந்திடபோமித்திரனே சகலநோய்க்கு
மருந்தூட்டின்மீட்டுமவை வாட்டாவாரே.

(இ-ள்.) சுக்கிலநட்டம் அபஸ்மாரம் சுவாசகாசம் உன்மாதம்என்னும் பிணிகளுக்கு ஒவ்வொரு வருஷகாலமும் கிரிச்சுரம் அஷ்டவிரணம் அஸ்மரிமதுமேகம இவைகளுக்கு 10-மாதமும், உதாவர்த்தம் பக்ஷகாதம் 7-வகை வித்திரிதிக்கட்டிகள் இவைகளுக்கு 6-மாதமும், பகந்தரம் மூலம் ரதநசூலை வாதசூலை ரத்தகுன்மம் அசிர்க்கரம் ஆநாகம் அஷ்டிலம் பிரத்தியஷ்டிலம் நிபிரம் குனமம் சயம்இவைகளுக்கு 3-மாதமும், வாந்தி விக்கல் கணம் மாந்தம் அதிசாரம இவைகளுக்கு 3-மண்டலமும் வாதம் காமாலை இவைகளுக்கு 2-மண்டலமும், பலவகைப் பாண்டு சோகை அஷ்டமகோதரம துனிபிரதிதுனி இவைகளுக்கு 3-மண்டலமும், புராணசுரத்துக்கு 4-மண்டலம் ஔஷதங் கொடுக்கவேண்டும. இவ்வாறே மற்றரோகங்களுக்கு எண் என்கிற சாஸ்திர விதிப்பிரகாரம் ஔஷதம் ஊட்டில் மறுபடியும் அப்பிணிகள் ரோகியை வருததாவாம் என்க. 1256

---

# பத்திய வகை

கஷாயம் சுரசம் ஸ்நானபானங்களுக் குரியசலம்
இவைகளின் உஷ்ணநிதானம் விருத்தம்.

சுத்தநற்குடிநீர்காண்டஞ் சுரசமுண்டிடினுதைக்கு
மெத்தவுஞ்சூடாம்பித்தம் வெப்பிரத்கஞ்சந்நிக்கு
முத்தமங்குளிர்ச்சியாகு மோங்கைக்குச்சிறிய சூடாங்
கொத்தடர்தொந்தநோய்க்குக் குறிசமோட்டினமாங்கூரே.

(இ-ள்.) பரிசுத்தமாகிய நல்ல கஷாயம் வெந்நீர் சுரசம் முதலியவைகளை அருந்துமிடத்து வாதநோய்க்கு மிகுந்த உஷ்ணமும்பித்தம் சுரம சத்தியோவிரண ரத்தம் சந்நிபாதம் இவைகட்குக் குளிர்ச்சியும் அதிகரித்த சிலேஷ்மநோய்க்கு அற்பச்சூடுகையும் தொந்தநோய்க்குச் சமவெப்பமும் உத்தமமாம் என்க. சமவெப்பம் என்பது அதிக உஷ்ணம் குளிர்ச்சி இளஞ்சூடுகை என்னும் மூவகை நீரையும் சமமாகக் கலப்பதாம். 1257

பிணியாளர்க்குத் துயர்தோய்க்கும் விதி-வெண்பா.

காற்றொழிக்கக் கோட்டையுமக் காலொடு சேரையென்னுங்
கூற்றொழிக்கச் சுக்கும் குறுமிள-மூற்றநோபித்
தம்மொழிக்க கட்டியும்பா றன்னிதிட்டுத் தோய்ப்பர்பத்தி
யம்மொழிக்க மாட்டாத வர்.

(இ-ள்.) தயிரை மோரை நீக்காதரோகிகள், வாயுவை நீக்குதற்கு இஞ்சியும் வாதகபத்தை ஒழித்தற்குச்சுக்கும்சிறுமிளகும்பித்தத்தை விலக்குதற்கு வெல்லமும பாலிலிட்டுக்காய்ச்சி தயிர்தோய்ப்பார்கள்.

பிணியாளர்க்கு மோர்சேர்க்கும் விதி.

கிரிச்சரந் தனக்குவெல்லங் கேள்பாண்டு நோய்க்கு
மரிப்பேதி கட்குஞ் சுக்காகு-மெரிப்பான
மேகந் தனக்குத்தேன் மிக்குபிணி கட்களை யு
ளூகங் கொடிவேலி யூட்டு.

(இ-ள்.) கிரிச்சரத்துக்குவெல்லமும், பாண்டுவாதாதிசாரம்முதலியநோய்கட்குச் சுக்கும், மேகத்துக்குத்தேனும் மந்தாக்கினியாற் பிறந்த ஏனையரோகங்களுக்குச் சித்திரமூலப்பட்டையும், தயிரில் பிரமாணமாக ஊரவைத்துக் கடைந்தமோரைக் கூட்டவேண்டும். 1259

மருந்துண்பார்க்கு ஊறுகாய்வகை.

சுண்டைநெல்லி தேருகளா தூதுளை பாவட்டையா
தொண்டை நாரத்தங்கச் சமிஞ்சி-பண்டைநாட்
சென்ற வருணக்காயுஞ் சேருறு காயென்னிற்
தின்ற மருந்தினமுரா தே.

(இ-ள்.) சுண்டை நெல்லி தேற்றான் களா தூதுளை பாவட்டை ஆதொண்டை எலுமிச்சை இக்காய்களும் நாரதம்பிஞ்சும் இஞ்சியும் நாட்பட உப்பில் ஊறவைத்துப் புசித்தால், தின்ற மருந்தின் குணங் கெடாது. 1260

அயச்செந்தூரத்தின் பத்தியம்-விருத்தம்.

பத்தியந் திலங்கூஷ்மாண்டம் பாகலிகொள் கடுகுதோரை
கத்திரி பிரமபத்திரி கட்கஞ்சா வயினிமாதர்
சுத்தமா காதுபானெய் துய்திடலாம புளிப்புப்
புத்தம மகற்றலாறு ளுத்தமம் பழுதுமின்றே.

(இ-ள்.) அயச்சிந்தூரத்துக்கு பூசினிகொள் கடுகுமூங்கிலரிசிகத்திரி புகையிலை கெஞ்சாஅபினிஇவை ஆகாவாம் புணர்ச்சியோவெனில் பரிச்சேதங்கூடாது. பசுவின்பாலும் ஆகும்; இதில் புளிப்பும் உப்பும் நீக்கினல்உத்தமம், அன்றியும்உத்தமமாகியஅம்மருந்துபழுதுபடாது

காந்தச் சிந்தூரத்தின் பத்தியம்-விருத்தம்.

பத்தியம் புளியுப்பின்றேற் பலிதமாம் வாரத்துள்ளே
நத்திடி லிரண்டுமோர நவிலுமிச்சா பத்தியங்கொள்

கத்திரிக்கா யகத்தி கடுகுகூஷ்மாண்ட மெள்ளு
கொத்தவரைக் காய்மாங்காய் கூலக்கா யிவையாகவே.

(இ-ள்.) காந்தச்செந்தூரந்துக்கு புளி உப்பு நீக்கில் அது 1-வாரத்துக்குள் பயனைத்தரும். அவைகளை விரும்பினால் இச்சாபத்தியத்துடன் 2-வாரம் உண்ணவேண்டும், இச்சாபத்தியமாவது கத்திரி அகத்தி கடுகு பூசனி திலம் கொத்தவரை மாங்காய் பலாக்காய் இவைநீக்கவும்.

தாம்பரபஸ்பத்தின் பத்தியம்-விருத்தம்.

புளியொன்று தவிரவெல்லாம புசிக்கினு நவையுறுது
இளைபெரு நெருப்புக்கீர மில்லையென்பது போலாகு
மளைமுசலி குசங்காடி யாமிலமடாது பாகற்
சுளையற மகட்பழம்நெய் சுதைசருக்கரை மானன்றே.

(இ-ள்.) தாம்பரபஸ்பத்திற் புளிப்பு ஒழிந்த மற்ற சுவையுள்ள பதார்த்தங்களையெல்லாம் உண்ணினும் குற்றம்வராது, ஏனெனில் நீரைவறட்டுகிற பெரு நெருப்பிற்கு ஈரமில்லை என்பதுபோலாம், ஆனால் புளித்ததயிர் முயற்கறி எலுமிச்சம்பழம் காடி நெல்லிக்காய் இவை கூடாது, பலாச்சுளை வாழைப்பழம் பசுநெய் பால் சர்க்கரை இவை நலமாம், என்க. 1263

பாதரசத்தின் பத்தியம்-வெண்பா.

மற்சமுப்பு சீதோட்டின மந்தாதிவத் தெண்ணெய்
துற்ச மத்தியங்கைப்பு தொக்குபுளியைச்-சற்றுங்
கூட்டாமற் சூதங் கொடுப்பருண்டாரை நமன்பாற்
கட்டாமற் றுமிருத்தக் காண்.

(இ-ள்.) ரசத்திற்கு மீன் லவணம் சீதளவெப்பமுள்ள பண்டம் அக்கினிமந்தவஸ்து எண்ணெய்கள் கசப்பு புளிப்பு இவைகூடாவாம்.

பறங்கிப்பட்டையின் பத்தியம்-விருத்தம்.

மஞ்சளோ டெண்ணெய்பாக்கு மாங்கிச மனுவாகார
மிஞ்சிகார் கடுகுகைதத விழிவுறு புளிமண்ணுப்பு
மஞ்சுறு வாளைகோலா மடவைமீன் சன்னைவெளவால்
சிஞ்சித மருந்தினுலுங் கெடும்பறங்கித் தோன்மாதோ.

(இ-ள்.) பறங்கிப்பட்டைக்கு கறிமஞ்சள் நல்லெண்ணெய் களிப்பாக்கு மிருகமாமிசம் காரம இஞ்சி கடுகு கசப்புபுளிப்புலவணம்இவைகளும் கோலா மடவை சன்னை வெளவால் முதலிய மீன்களும் லவவேசமும் சேரலாகாது, சேரில் அம்மருந்தின் தன்மை கெடும்.

### தைலங்களின் பத்தியம்-விருத்தம்.

புலர்த்திய பின்பருந்து போசனந் தனிற்புளிப்பு
சலத்தூறு ததிபால்பாகல் சரசம்மீ னிறைச்சியச்ச
நிலத்தெழு பிரமபத்திரி நித்திரை மடவாரின்று
நலத்துறு வகைநீக்குப்பின் னுளும்பத் தியத்துணில்லே.

(இ-ள்.) தைலமாடி யிரந்துவட்டியவுடன் றீ உணவில் புளிதயிர் பால் பாகற்காய் இலைக்கறி மச்சவகை மாமிசங்கள் அகத்தி புகையிலை பகல் நித்திரை புணர்ச்சி யின்னும் தகாதநடத்தை இவைகளை நீக்கு வதுந்தவிர மறுநாளிலும் பத்தியமா யிருக்கக்கடவை என்க. 1266

### முக்கியமாக மருந்துகளுக்குதவாத வஸ்துக்கள்-வெண்பா.

சிந்தக் கனிமிகுந்த சீவனந்தாம பூலம்வெல்லம்
பந்தப் பயற்றுப் பருப்புமோர்-சிந்து
கடலை யிவையற் றுரைகறித் திடார்தங்க
ளுடலை யிவையத்திருந்தா ருன்.

(இ-ள்.) எவ்விதமருந்துகளுக்கும் முக்கியமாக உதவாத பதார்த் தங்களாவன புளி அதிகஜீலபானம் அடைக்காய் கன்னல் வெல்லம் காராமணிப் பருப்பு மோர் கடலைப்பயறு ஆகிய இவைகளாம். 1267

### பத்தியபதார்த்தங்கள்-விருத்தம்.

பொன்னுங்காணிசிறுகீரை புதியகறுநெல்வரால்குறவை
சொன்னுங்கோவைகாய்வற்றல் சுண்டையவரைப்பிஞ்சுடனே
பன்னுவப்பைவெள்ளுள்ளி பரியமுருங்கையிளம்பிஞ்சும்
நன்னீர்விளைத்தசிறுபயறு நன்மாங்காய்க்குட்பிஞ்சான்றே.

### இதுவுமது.

அத்திப்பிஞ்சுகருவாழை யதன்றன்பிஞ்சுபூவாகுங்
கத்தித்திரியுமூக்குருவி காடையுடனேசிவலாமை
சுத்தமாங்காய்கறும்பருப்புஞ் சுறுமீன் றிருக்கைக்கருவாடாம்
பத்தியத்திலிவைதவிறப் பச்சைமீன்கள்பகையாமே.

### இதுவுமது.

வேண்டியமருந்துண்பார்கள் விராலொடுகுறவைதேளி
யாண்டிமெயிரையூடா னுசன்னையுஞ்சுதும்பு
மீண்டுமிருநோய்த்தோஷி யிவைகளைபருந்துங்காலை
மீண்டிவையுலர்த்தாகும் விரைமலர்க்குழலினாளே.

### இதுவுமது.

காடையுடும்புகவுதாரி காட்டினெலியுமூர்க்குருவி
யாடுவிரும்பில்வெள்ளாடா மதுவுமூலர்த்திக்கறிகொள்ளு
நாடுதனில்வாழ்வரால்குறவை நலமாமிவையுமூலர்த்திக்கொள்
கூடுங்கூடாதென்னுமே கூட்டின்மருநனுங்குணந்தருமே.

(இ-ள்.) வாசனைபொருந்திய கூந்தலாளே! பத்திய பதார்த்தங்களாவது பொன்னாங்காணி சிறுகீரை அன்றுருக்கிய பசுநெய்கோவை சுண்டை முதலிய வற்றல் அவரைப்பிஞ்சு அப்பைக் கோவைக்காய் வெள்ளைப்பூண்டு முருங்கைப்பிஞ்சு பனிப்பயறு மாவடு அத்திப்பிஞ்சு கருவாழைக்கச்சல் ஷை பூ மாம்பருப்பு ஆகிய இவைகளுள், எரி வரால் குறவை சிட்டுக்குருவி காடை கவுதாரி ஆமை விலாங்கு கடல் குறவை தேளி அயிரை ஊடான் சன்னை சுறும்பு சிறியநெய்த்தோலி பெரிய நெய்த்தோலி உடும்பு காட்டெலி இவைகளின் கறிகளும் சுறா திருக்கை காடை கவுதாரி ஊர்க்குருவி வெள்ளாடு இறா குறவை இவற்றின் கருவாடுகளும் ஆகும் என்க. 1268

### பேதியைக் கட்டுகிற பதார்த்தங்கள்.

மானேவயிறுகழிவார்க்கு வாழைக்கச்சலத்திக்காய்
தானேதிரியுமூர்க்குருவி காடையுடும்புகவுதாரி
தானேயாகுமுயலுலரிற் றக்குளத்துக்கருவாடா
மீனேவிரும்பித்தின்பீரால் வீணேயுயிரையிழந்தீரே.

(இ-ள்.) அதிசாரரோகிகட்கு வாழைப்பிஞ்சு அத்திப்பிஞ்சு சிட்டுக்குருவி காடை உடும்பு கவுதாரி முயல் குளத்துக்கருவாடு என்னு மிவைகள் ஆகும். பச்சைமீனையருந்தில் உயிருக்கு அபாயம். 1269

### பேதியாகிற பதார்த்தங்கள் வெண்பா.

கார மணிக்கீரை காட்டுப் பறங்கியிலை
போராம் பெரும்பயற்றின் பேரிலைகள்-சீரா
ரகத்தி பெருங்கத்திரிக்கா யாயிழையே மீன்கள்
பகைத்ததிக பேதிதரும் பார்.

(இ-ள்.) ஆபரணமணிந்தபெண்ணே! காராமணி பறங்கி பருங்காராமணி அகத்தி என்னும் இக்கீரைகளும் கத்திரிக்காயும் பச்சை மீன்களும் மிகுபேதியை உண்டாக்கும். 1270

### பத்தியாபத்திய பதார்த்தங்கள்-விருத்தம்.

மயறிகுறவைவரால்தேளி மற்றாக்குறவைநாய்க்கெளிறு
அயிரைசன்னைபத்தியமா மகரமீன்களினிக்கேளு

முபரும்வாளையிறால்கூனி யோங்கும்செளிறுவிலாங்குசெண்டை-
கயலோடிவைகளாகாவாங் காரார்குழலேகேண்டுரையே.

(இ-ள்.) கறுத்த கூந்தலாளே! பத்தியபதார்த்தமாவன மயறி குறவை வரால் தேளி ஆற்றுக்குறவை நாய்க்கெளிறு அயிரை சன்ன என் னும் மீன்களாம். அபத்தியமீன்களாவன வாளை இறா சன்னக் கூனி பருங்செளிறு பருமவிலாங்கு பருங்கெண்டை சேற்கெண்டை என் னுமிவைகளாம் என்க. 1271

அபத்திய பதார்த்தங்கள்.

கொள்ளுகாடிகுமட்டிக்காய் கோழிபன்றிகொக்குடனே
முள்ளிற்பெரியபாகற்காய் முதிருமவரைபயற்றங்காய்
பள்ளத்தொழுக்தமட்டற்சேபபு படரும்வள்ளிபாலேயிவை
யெள்ளத்தனைதான்றின்பிறே லெல்லாமருந்துமிழந்தீரே.

இதுவுமது.

மாங்காயிளநீர்மாதுளங்காய் மாவின்பண்டம்புளிகடுகு
தேங்காய்நெய்பால்கிழங்குபழங் தின்னுங்காயமவெங்காய
மீங்காதரிக்குஞ்சாராபான மீச்சங்கள்ளுபனங்கள்ளு
மாங்கேயிவற்றுளொன்றேனு வருந்தாதிருந்தால்மருந்தாமே.

(இ-ள்.) அபத்திய பதார்த்தங்களாவன கொள்ளு காடி குமட் டிக்காய் சேவல் வராகம் கொக்கு கொம்புப்பாகல் முத்தின அவரைக் காய் காராமணிக்காய் சேப்பங்கிழங்கு வள்ளிக்கிழங்கு பாலைக்கீரை மாங்காய் இளநீர் மாதுளங்காய் மாப்பலகாரம் புளி கடுகு தேங்காய் எருமைநெய் கிழங்குகள் முப்பழங்கள் பெருங்காயம் வெங்காயம் கள்ளு ஈச்சங்கள்ளு பனங்கள்ளு என் னும் இவைகளாம். 1272

வாதரோகாரி வஸ்துக்கள் வெண்பா.

செங்கழுநீர் கோட்டந்தேன் மிளகுகல் லெண்ணெய்
தங்குபெருங் காயந் தழுதாழை-யெங்கெங்குங்
கூட்டுசிறு முத்துநெய் கோதிலுழுந் திவைகள்
வாட்டும் வாதத்தை மதி.

(இ-ள்.) செங்கழுநீர்க்கிழங்கு கோஷ்டம் குறிஞ்சித்தேன்மிளகு எள்ளின்நெய் பெருங்காயம் தழுதாழையிலை சிற்றுமணக்கு யெண் ணெய் உளுந்து ஆகிய இவைகள் வாதரோகததைதப்போக்கும். 1273

பித்தரோகாரி வஸ்துக்கள்-விருத்தம்.

கொம்மட்டிவாழைப்பன்னன் கொளுத்தியகரியினோடே
விம்மியதண்ணீர்விட்டான் வேரொனுங்கிழங்குசாநதஞ்

செம்மைசேர்நெல்லிமுள்ளி சேருமிம்மருந்தெல்லாமே
கம்மியபித்தத்திற்குக் காலனென்றோதுவாரே.

இதுவுமது.

செம்புநாவல்பீத்தாருச் சருமமுழுத்தக்காசுஞ்
செம்பருத்தியுற்செறித்த தெங்கிளமபூவுங்கன்ன
லம்புயத்தாதினோடே யதனுறுவளையநெய்தல்
வெம்பியசிலைச்சாம்பல் வெள்ளைப்பூசினிக்காயென்னே.

(இ-ள்.) கொளுஞ்சி காரத்தம்பழம் வாழைச்சருகுசுட்டகரிதண்ணீர்விட்டான் கிழங்கு சந்தனம் நெல்லிமுள்ளி சமபுநாவல் பெருமரபட்டை கோரைக்கிழங்கு செம்பருத்தி தென்னம்பூ கருப்புதாமரைப்பூவினது காந்தம் மேற்படிவளையம் செங்குவளைக்கேசரம் வஸ்திரஞ்சுட்டசாம்பல் சவியாணப் பூசினிக்காய். இவை பித்தசதை நீக்கும்.

சிலேஷ்மரோகாரி வஸ்துக்கள்-வேண்பா.

ஆவினது பாலரத்தை முள்ளங்கி மயிற
ராவிசுறுஞ்சாம்பல் தூதுளந்தேன்-மாவோமந்
துய்ய சருக்கரை தூளாய்விதை விளாம்பழமு
மையதை யோட்டு மறி.

(இ-ள்.) பசும்பால் தும்பராஷ்டம் முள்ளங்கி மயிலிறகுச் சாம்பல் தூதுளைச்சமூலம் மலைத்தேன் ஓமம் வெள்ளைச்சருக்கரை துளசிவிதை விளாம்பழம் முதலியவைகள் சிலேஷ்மரோகத்தை விலக்கும்.

மூலரோகாரி வஸ்துக்கள்.

மருள்சா ரணைகருணை வச்சிரவல்லி காட்டுக்
கருணை விளிநாளை காராக்-கருணை
மெருகோடு வெள்ளறுகு வெண்சித் திரமூலம்
மருமூலம் போக்கு மருந்து.

(இ-ள்.) மருட்கிழங்கு வெண்சாரட்டை சமூலம் கருணைகிழங்கு பிரண்டை காட்டுக்கருணை புளிநாளை காராக்கருணை மெருகின்கிழங்கு வெள்ளறுகு வெண்சித்திரமூலம்முதலியவை மூலரோகத்தைநீக்கும்.

விஷாரி வஸ்துக்கள்.

பேய்ச்சுரை பேய்க்கொமட்டி பேய்பீர்க் கொடுதுமட்டி
பேய்ப்புடலை யுங்கழிஞ்சிற் பேரறிவு-வாய்த்தமலை
வேம்பு சிவனார்வேம்பு வெள்ளெருக்கு வெள்ளருகு
சோம்புவிடம் போக்குமெனச் சொல்.

(இ-ள்.) பேய்ச்சுரை பேய்க்கொமட்டி பேய்ப்பீர்க்குதும்மட்டி பேய்ப்புடல்புங்கு அழிஞ்சினல் காட்டவுரி மலைவேம்புசிவனார்வேம்பு வெள்ளெருக்கு வெள்ளெருகு இவைகள் விஷவேகத்தை நீக்கும்.

### பித்தசமதிரவியம்.

மொச்சை கடலைபெரு முற்கமுந் தேலம்வெந்தி
மெச்சுமிளகு சுண்டை வெண்ணெயிஞ்சி-பச்சைநிறக்
காட்டுமப்பைக் கோவை கருநிம்பஞ் சீரகங்கள்
கூட்டுக்கறி பித்தசமங் கூறு.

(இ-ள்.) வெள்ளை மொச்சைக்கொட்டை கடலைபெருங்காராமணி உளுந்து ஏலம வெந்தியம மிளகுசுண்டைககாய் பசுவின்வெண்ணெய் இஞ்சி அப்பைக்கோவைக்காய் கருவேப்பிலை சீரகம் முதலியவைகள் சேர்ந்த பதார்த்தங்களால் பிததகோபம சாந்தியாகும் என்க. 1278

### திரிதோஷசம திரவியம்-விருத்தம்.

ஒன்றியவா தபித்த கபமிவையுராவண்ண
நன்றுறுகறிகளெல்லா நாளுமேசமைப்பராய்ந்தோர்
தின்றிடுமிளகுமஞ்சள் சீரகமுயர்நதகாயம்
வென்றிகொள்சுக்கோடேலம வெநதயமுள்ளிசேர்த்தே

(இ-ள்.) மிளகு மஞ்சள் சீரகம் பெருங்காயம் சுக்கு ஏலம் வெந்தியம் வெள்ளைப்பூண்டு இவைகளை நல்லபதார்த்தங்களில் விதிப்படி சேர்த்துத் தினமுமுண்ணில் திரிதோஷம ஒன்றுக்கொன்றுமீறாவாம்

### அறுசுவைகளின் மிகுதிக்குணம்-வெண்பா.

புளிதுவர் விஞ்சுங்கறியாற் பூரிக்கும் வாதந்
தெளியுவர்கைப் பேரில்பித்தச் சீறும்-கிளிமொழியே
கார்ப்பிணிப்பு விஞ்சிற் கபம்விஞ்சுஞ் சட்டிமாதச்
சேர்ப்புணரி னேயனுகா தே.

(இ-ள்.) கிளிமொழியாளே! புளிப்பும் துவர்ப்பும அதிகரிக்கில் வாதம் அதிகரிக்கும் உப்பும் கசப்பும் அதிகரிக்கில் பித்தம் அதிகரிக்கும் உறைப்பும் தித்திப்பும் அதிகரிக்கில் சிலேஷ்மம் அதிகரிக்குமாதலால் அறுசுவை களையுங் கிரமமாகப் பதார்த்தங்களில் சேர்த்துண்ணிற் பிணிகள் சாராவாம் என்க. 1280

### காலைக்கறிக்கான பயறுமுதலியவை.

காலைக் கறிக்காகுங் காராமணி யுளுந்து
தூலக் கடலை துவரைஎள்ளு-கோலமொச்சை

*தட்டைச் சிறுபயறு தாழ்வில் கடுகுகறி*
*யிட்சு சுக்குகாய மிவை.*

(இ-ள்.) காலைப்பதார்த்தங்களுக்குதவும் பயறு முதலியவையா வன காராமணி உளுந்து கடலை துவரை நிலம் மொச்சைக்கொட்டை தட்டைப்பயறு கடுகு மிளகு சுக்கு பெருங்காயம் இவைகளாம். ()

### மத்தியானகாலக் கறிவகை.

*கந்த வருக்கங் கனிவருக்கம் வாதமெழு*
*மந்தவருக்க மாநதமாம் வருக்கங்-கந்தமுறு*
*தண்ணடைவருக்க ததிமோ ரிவையென்று*
*வுண்ணடையாற் றோடமறு மோர்*

(இ-ள்.) மத்தியான போஜனத்தில் கிழங்குவகைகள் பழங்கள் வாதவஸ்துக்கள் மந்தபதார்த்தங்கள் மணமும்சீதளமுமுள்ள இலைக் கறிகள் எருமைத்தயிர் மோர் முதலியவைகளையுண்ணினும்சூரியவெப் பத்தினாலும் தேக உழைப்பினாலும் அவைகளின்தோஷம் நீங்கும். ()

### இராக்காலக் கறிவகை.

*அவரைப் பிஞ்சுஅத்திக்கா யாப்பான் முருங்கை*
*துவரைப் பருப்பாற்றுத் தோணி-யெவரையுமோ*
*கண்டா விழுக்குங் காட்டத்தூ துணமிவையா*
*லுண்டா விழுக்குமிலை யுண்.*

(இ-ள்.) அவரைப்பிஞ்சு அத்திக்காய் பசுவின்பால் முருங்கைப் பிஞ்சு துவரம்பருப்பு ஆற்றுமுள்ளிக்காய் யாரையுமுட்களாவிழுக் கின்ற காட்டுத் தூதுளங்காய் முதலியவைகளை மாலைக்காலக் கறிகளாக வுண்ணில் குற்றமின்று. 1283

### காலைமாலைபோஜனத்தின் நெய் மோர் பேதம்.

*காலைக் கெருமைநெய்மோர் காரத்தோ டுண்ணலாம்*
*மாலைக்காவின் நெய்மோர் வார்த்துணலா-மேலையண்ட*
*வெப்பப்புக் காலம விரவிவர லாற்றுகளி*
*லொப்பப் பகற்கனற்கண் டுண்*

(இ-ள்.) அண்டவெப்பம் பகற்காலத்திலும் குளிர்ச்சி இராக்கா லத்திலும் ஆக மாறிவருதலால் வாயுவான எருமைநெய் மோர் கார வஸ்து யிவைகளைப் பகற்காலத்தில் பசியைக்கண்டுண்ணலாம் உஷ்ண சம்பந்தமான பசுவின் நெய்மோர் இவைகளை இராக்காலத்தில் உண்ண லாம் குற்ற மில்லை. 1284

**வாதமுதலிய மூன்றுதேகிகட்கும் உப்புவகை.**

வாதபித்தக யெனமேற வருதேகர்க்குக் கல்லுப்
போதவுப் பிந்துப்பா முணர்முறையோ-யோதவெள்ளம்
வற்றியவிந் துப்பதனை வாதமுத லோருந்தக
குற்றமிலைக் குற்றமிலைக கூறு.

(இ-ள்.) வாததேகிக்குக் கல்லுப்பும் பித்ததேகிக்குக் கடலுப்பும் சிலேஷ்மதேகிக்கு இந்துப்புமாகும் வாதமுதலிய மூன்றுதேகிகளும் லவணத்திற்குபதில் இந்துப்பை சேர்த்துண்ண தோஷமில்லை.

**வாததேகிகட்குக் கறிவகை.**

மாட்டுப் பறங்கிவங்க மாமுருங்கை வெள்ளவரை
நாட்டுச் சூரபிஞ்சு நரகருணை-காட்டுருறை
மாகருணை புகைகருவில வாதத தெழுந்துவரத
தேகருணு நற்கறியாந் தேர்.

(இ-ள்.) வாததேகிகளருந்தும் கறிகளாவன கலியாணப்பூசினிக் காய் கத்தரிக்காய் வழுதுளங்காய் முருங்கைப்பிஞ்சு வெள்ளவரைக் காய் மிதிபாகல் பிஞ்சு காராக்கருணை காட்டுக்கருணை என்பனவாம்.

**வாததேகிகட்கு கீரைவகை.**

மேனிமுன்னை யாரைநறும வேளைமணத்தக்காளி
யானைநெருஞ் சின்முசுக்கை யப்பைநெடுங்-கானிலுறை
மூக்குரட்டை கலவசலை முன்பிவைக ளாறகீரை
யாக்குவர் வாயுதேகர்க காயந்து.

(இ-ள்.) வாததேகிகளுக்குக் கீரைகளாவன குப்பைமேனி முன்னை ஆரை நலவேளை மணத்தக்காளி யானைநெருஞ்சில் முசுமுசுக்கை அப்பைக்கோவை காட்டுமூக்குறட்டை கலவசலை இவைகளாம். 1287

**வாததேகிகட்கு ரசவகை.**

சக்கரவர்த்தி வெள்ளைச் சாறடை பாகன்முருங்கை
தெக்கிலினந் தண்டுநறுந் தூதுணைமவார்-மைக்குழலே
சீதமுறு காணியிவை செகதனிர்க ளிற்றினமும்
வாததேகி கர்க்கிரசம வை.

(இ-ள்.) கருத்தகூந்தலாளே! வாததேகிகளுக்கு சக்கரவர்த்திக் கீரை வெள்ளைச்சாரடை பாகல் முருங்கை முளைக்கீரைநல்லதூதுணம் பொன்னாங்காணி இவ்விலைகளில் நித்தியமும் ரசஞ்செய்வாயாகவென்க.

### வாததேகிகட்கு வற்றல்வகை.

*சுண்டைக்காய் பேய்ப்புடற்காய் தூதுளங்காய் நெல்லிக்காய்*
*தொண்டை மணத்தக்காளி தூதுவளை-பண்டைமுள்ளிக்*
*காயிவற்றின் வற்றல்களின் காண்பிரண்டை வற்றலுமாம்*
*வாயுதேகர்க் கறிந்து வை.*

(இ-ள்.) வாததேகிகளுக்கு சுண்டை பேய்ப்புடல் தூதுணம் நெல்லி ஆதொண்டை மணத்தக்காளி வெள்ளவரை முள்ளி ஆகிய காய்களும் காட்டுப்பிரண்டையும் வற்றல்செய்வாயாக. 1289

### வாததேகிகட்கு ஊறுகாய்வகை.

*நாரத்தை தான்றிகடு நற்றேற்றான் வீடுகளா*
*வேரோதக புனகளா விவ்வகைக்காய்-காருப்பப்*
*பூறிய காயாகு முயரிஞ்சியும் பழையுங்*
*கூறனில தேகிகளுக் கு.*

(இ-ள்.) வாததேகிகளுக்கு நாரத்தை தான்றி கடு தேற்றான் பருங்களா சிறுகளா ஆகிய இவ்வகைக்காய்களும் இஞ்சியும் உப்புநீரி லூறியதாகும். 1290

### பித்ததேகிகட்குக் கறிவகை-விருத்தம்.

*வெள்ளரி யிரண்டுபாகல் விரிபுடல் பீர்க்குசிம்பை*
*முள்ளரி பூசினிகத்தார் முருங்கைமா களவரம்பை*
*வெள்ளிலிக் காய்களவள்ளி யீருள்ளிக் கதலிபூதண்*
*டள்ளியுண் ணுணஞ்செய்வ ரரும்பித்த தேகர்க்கென்றே.*

(இ-ள்.) பித்ததேகிகளுக்கு வெள்ளரி கொம்புபாகல் மிதிபாகல் நீளப்புடல் பீர்க்கு அவரை ஆற்றுமுள்ளி கல்யாணப்பூசினி கத்தரி முருங்கை பருகளா வாழையாகிய இக்காய்களையும் வள்ளிக்கிழங்கு வெங்காயம் வாழைப்பூ ஷை தண்டு இவைகளைச் சாப்பிடலாம். 1291

### பித்ததேகிகட்குக் கீரைவகை கலித்துறை.

*புளியாரை கோவை முருங்கைவசலை நற்பொன்முசுட்டை*
*மிளகப்பையோரிதழ்த் தாமரைபாலை வெளிமுசுக்கை*
*வளர்தூதுணஞ்சுரை வல்லாரைசில்லி மணத்தக்காளி*
*தளிரிளங்கீரைகள் புத்தசுதேகிக டாமுண்பரே.*

(இ-ள்.) பித்ததேகிகள் புளியாரை கோவை முருங்கை வசலை நல்பொன்முசுட்டை மிளகு அப்பக்கோவை ஓரிதழ்த்தாமரை பாலை காட்டுமுசுக்கை தூதுணம் சுரை வல்லாரை சிறுகீரை மணத்தக்காளி யாய இக்கீரைகளைப் போசனத்திற் சேர்த்தருந்துவர். 1292

பித்தரோகிகட்கு ரசவகை-வெண்பா.

கொத்து வசலை கொடிவசலை நல்லகத்தி
தத்துபுனல் வழுக்கை தைவேளை-செய்த்தராச்
சாகங்களை யவித்துச் சாறுவைத் துண்பார்பித்த
தேகங் களையுடையார் தேர்.

(இ-ள்.) பித்ததேகிகள் கொத்துவசலை கொடிவசலை வெள்ளையகத்தி பிரமியவழுக்கை தைவேளை தரா ஆகிய இலைகளை வேகவைத்து இறுதத சலத்தில்செய்த ரசத்தை உணவுடன் சேர்த்தருந்துவார்.

பித்ததேகிகட்கு வற்றல் வகை.

சுத்தமுள்ளி பேய்ப்புடல் தூதுணங்காய் சுண்டைகண்டங்
கத்திரி பயற்றைமணத் தக்காளி-நித்தமுறு
கஞ்சம் வல்லாரையிவை காய்த்தகறுங் காய்வற்றல்
விஞ்சுபித்த தேகிகட்காம் விள்.

(இ-ள்.) பித்ததேகிகளுக்கு வெண்முள்ளி பேய்ப்புடல் தூதுணம் காட்டுச்சுண்டை கண்டங்கத்திரி பயற்றங்காய் மணத்தக்காளி தாமரை வல்லாரை ஆகிய இவ்வகைக்காய்களின் வற்றல்களாகும்.

பித்ததேகிகட்கு ஊறுகாய்வகை கலித்துறை.

பச்சைமிளகிஞ்சி தூதுளங்காய்மூப் பலநாரத்தங்
சச்சைதமரத்தம்புன்னை வடங்கவிலரிகற்றான்மா
கொச்சையிளம்பிஞ்சு மாகாளிக்கந்தங் கொளுஞ்சியெலு
மிச்சையுப்பூறியகாய்பித்த தேகர்க்குமிக்குநன்றே.

(இ-ள்.) பித்ததேகர்க்கு பச்சைமிளகு இஞ்சி தூதுணம் கடுநெல்லி தான்றி நாரத்தை தமரத்தை புன்னை ஆல் விலா தேற்றான் மா ஆகிய இவ்விளம்பிஞ்சுகளும் பருகன்னாரிக்கிழங்கு கொளுஞ்சி நாரத்தங்காய் எலுமிச்சங்காய் இவைகளும் உப்பில் ஊறில் மிகவுத்தமம்.

சிலேத்மதேகிகட்குக் கறிவகை-விருத்தம்.

கத்தரிபேய்ப்புட லவரையிருபாகல் பருங்களாகண்டங்காரி
யத்திக்காய்களும்வருக்கைமரபயற்றைசுசையால்பீர்க்கரும்பிஞ்சுவேர்
மொய்த்தசூரணங்கதலித்தண்டோடப் பூமுளங்கிமுருக்கரும்பு
மத்திபூசினிக்காயீருள்ளிவள்ளி யுங்கபதேகர்க்காணமாமே.

(இ-ள்.) சிலேத்மதேகிகளுக்கு கத்திரி பேய்ப்புடல் அவரை கொம்புபாகல் மிதிபாகல் பெரியகளா கண்டங்கத்திரி அத்தி ஆகிய

இந்நான்கும் பலா பயற்றம்பிஞ்சு சுரை ஆல்பீர்க்கு இவற்றின்பிஞ்சுகளும் கருணைக்கிழங்கு வாழைத்தண்டு ஷெடி பூ முள்ளங்கி முள்முருக்கினரும்பு கூஷ்மாண்டம வெங்காயம் வள்ளிக்கிழங்கு என்னுமிவைகளாகுமாம். 1296

### சிலேத்மதேகிகட்குக் கீரைவகை.

காரையிருகோவைமுன்னைசெம்மைபுடலை துயிலிவழுக்கைநெருஞ்சிலாரைபுளியாரைமுல்லைமருதநெய்தன் மேனிகல்வல்லாரைபொன்னுவாரைமுசுக்கைபெருங்கையிருபீன்னுங் கோடுபண்ணைமணலிபிள்ளைக்கீரைமுசுட்டையுங்காராமணிமாடங் சடலைபுளிக்கிரிக்களாவே.

### இதுவுமது-வெண்பா.

வேளைமணத் தக்காளி மென்சீதை சக்கிரவர்த்தி
பீளைவசலை சுக்கு பொன்சுணங்கன் வேளையிவைச்
செந்தளிர் காளைக்கீரை செய்வர்கப தேகர்கிதம்
வந்தளி யுணத்தான் மகிழ்ந்து.

(இ-ள்.) சிலேத்மதேகிகளுக்கு காரை அப்பக்கோவை வரிக்கோவை பசுமுன்னை கருஞ்செம்பை பேய்ப்புடல் துயிலி பிரமி வழுக்கை நெருஞ்சில் சீராரை புளியாரை முல்லை மருதம்நெய்தல் குப்பைமேனி வல்லாரை பொன்னுவாரை முசுமுசுக்கை பெருபின்னுக்கு சிறுபின்னுக்கு பண்ணை மணலி முளைக்கீரை முசுட்டை காராமணி உளுந்து கடலை புளிப்புள்ளமலைக்களா வேளை மணத்தக்காளி பொன்னுங்காணி சக்கிரவர்த்தி பீளை வசலை சுக்கு கற்றுழை நாய்வேளை வேளை ஆகிய இக்கீரைகளைச் சமைத்துப் போசனத்தில் உண்பார்கள். 1297

### சிலேத்மதேகிகட்கு ரசவகை.

கந்தவோமஞ் செங்கடுகு சதகுப்பை தரா
வெந்தியங் கொத்தமலி வேளைசுக்கு-மூந்தகத்தி
தூறு குறிஞ்சாபாக றும்மையிச் சாகங்கள்வெந்த
சாறுகப தேகர்க்காஞ் சாற்று.

(இ-ள்.) சிலேத்மதேகர்க்கு ஓமம் செங்கடுகு சதகுப்பை வெந்தியம் கொதத்துமல்லி வேளை சுக்கு அகத்தி குறிஞ்சா பாகல் தும்பை ஆகியவற்றின் இலைகளை அவித்திறுதத சலங்களில்வைத்த ரசங்கள் ஆகுமென்க. 1298

### சிலேத்மதேகிகட்கு வற்றல்வகை.

சுண்டைமணத் தக்காளி தூதுணம் புரண்டையா
தொண்டைமுள்ளி பேய்ப்புடலை தொண்டைசிம்மை-கண்டபுரு

கத்திரி நெல்லிப்பிஞ்சு கானரந்தம் பிஞ்சிலவை
யொத்த வற்றலைபகதேகர்க் குண்.

(இ-ள்.) சிலேஷ்மதேகர்க்கு சுண்டை மணத்தக்காளி தூதுவளம் புரண்டை கோவை முள்ளி பேய்ப்புடல ஆதொண்டை அவரை கண்டங்கத்திரி இக்காய்களும் நெல்லி காட்டுநாரத்தைப் பிஞ்சுகளும் வற்றல் செய்யலாம் என்க. 1299

### சிலேஷ்மதேகிகட்கு ஊறுகாய் வகை.

மஞ்சள் மிளகுசுண்டை வாழைத்தண் டோடுமாம்
பிஞ்சாலம் பிஞ்சத்திப் பிஞ்சுகளுங்-கிஞ்சுகப
நாசனியுந் தூதுணமு மெய்ப்பாகற் பிஞ்சு
மூறுகாயத் தேகர்க் கோர்.

(இ-ள்.) சிலேஷ்மதேகிகளுக்கு பஞ்சமஞ்சள மிளகு சுண்டை வாழைப்பிஞ்சுத்தண்டு மாமபிஞ்சு அத்திப்பிஞ்சு கபநாசனி என்கிற தூதுணம மிதிபாகற்பிஞ்சு ஆகிய இவற்றின் ஊறுகாய்கள் ஆம். ()

### காலதேகங்களுக்கு அவிரோத பதார்த்தம்.

எல்லாக் கறிகளுமே யெல்லுக்கா மல்லுக்கா
மெல்லாக் கறிகளுமெல் லாகமாமே-யெல்லாக்
கறிகளுக்குச் சத்துரு கலந்தமைத்து நன்றாங்
கறிகளுக்குள் வைத்தருந்துங் கால்.

(இ-ள்.) தோஷமுள்ள பதார்த்தங்களை அவைகளுக்குச் சத்துருவாகிய வஸ்துக்களால் தோஷத்தை நீக்கி அந்த பதார்த்தங்களை நற்குணங்களையுடைய பதார்த்தங்களுடன் வைத்துக்கொண்டு உண்ணில் பகல் இரவு என்னும் இரண்டு காலங்களுக்கும் வாதமுதலிய மூன்று தேகிகளுக்கும் விரோதஞ்செய்யாமல் அவைகள் சவுக்கியந்தரும். ()

### இவ்விதநோய்க்குத் தாம்பூலங்கூடாதெனல்.

மதமூர்ச்சா ரோக பரசன்னிபாத
மதிருட்சை சுட்கரோ யாறு-முதிர்விடங்கள்
பித்தங் கயஞ்சிரநோய் பேசுமிவைக் காகாது
சுத்தந் தாம்பூலமெனச் சொல்.

(இ-ள்.) மதரோகம் மூர்ச்சை அபிநியாச சந்நிபாதம் தாபச்சுரம் அதிசுஷ்கரோகம் தேகத்திலூறிய விஷங்கள் பயித்தியம் க்ஷயம் சிரஸ்தாபம் ஆகிய இவைகளுக்குப் பரிஷ்காரமாகத் தாம்பூலங் கூடாது.

இவ்விதநோய்க்கு நெய் கூடாதெனல்.

தருண சுரஞ்சந்நி சலதோடந் தோட
பருணம மகோதரமா காசம்-வருணவதி
சாரங்க வினைவுரை தாவரிக்குன் மங்களுக்கா
தாரங்க வினைவுரை தள்.

(இ-ள்.) தருணசுரம் சன்னிபாதம் நீர்க்கோவை சப்ததோஷம் பெருவயிறு ஆநாசம் ரோசப பங்கி தொனிக்கத்தவாதம் குன்மம் என்னும் இவை அதிகரிப்பதற்கு நெய்யே காரணமாதலால் அதனைத்தள்ளுவாயாக என்க. 1303

இவ்விதநோய்க்குத் தயிர் கூடாதெனல்.

குட்டமதைப் பக்கிநோய் குன்மங் காமாலைமந்தந்
துட்ட விடுசிக் களத்குர் சோபைகபம்-கெட்டசுர
மீரமிளை பீநசமதி லீகப்புண் பாண்டொடதி
சாரமிவைக் கிலலைத் ததி.

(இ-ள்.) குறைநோய் வீக்கம நேத்திரரோகம வாதகுன்மம்காமிலம் அலசம் விஷஉசி களப்பிணி சோபை சலதோஷம் விஷம சுரம் பீனசம் பிலீகம் கிரந்தி பாண்டுபேதி இவைகளுக்குத் தயிர்கூடாது.

தற்காலபலாபல பதார்த்தம்.

திரிபதார்த்தம் பலமே செய்யு முடனே
திரிபதார்த்த பபலஞ் செய்யுந்-தெரிமுறையே
சிசுவம் புணர்ச்சியூண நீறணுசோறி நறுமபா
லாதவம் புணர்ச்சி தைலம்.

(இ-ள்.) குளிர்ந்தசலம் நாவுக்கு ருசியைத் தெரிவிக்கின்ற மாமிசம் பசும்பால் இந்த 3-ம தற்காலபலத்தைச் செய்யும் கடுரவெய்யில் புணர்ச்சி நற்றயிலஸ்நானம் இந்த 3-உடனே துர்ப்பலத்தைசசெய்யும்.

---

## வீட்டின் வகை

சோர்ன வீட்டின் குணம்.

மேனிதனிற் காந்தியெழில் வீறுமுத ராக்கினியு
ஞானமுமே தோதாது நண்ணுங்காண்-வானே
மிகைசேர் சகலகுண விர்த்திகளும் விர்த்தி
தகைசோர்சொர் னத்தினில்லத் தால்.

(இ-ள்.) மான்போன்ற விழியாளே! சொர்ணவீட்டில் வசிப்பவர்களுக்கு சரீரத்தில்தேஜஸ் அழகு ஜடராக்கினி அறிவு மேதோதாது பற்பலசிறப்பு இவைகள் விருத்தியாம். 1306

கருங்கல் வீட்டின் குணம்.

அலங்காரமு மதமு மக்கினியு நீங்குந்
துலங்கா தவமுந் துலங்கா-இலங்க
வருங்கலகப் பித்து மனத்துயர நோயுஞ்
சருங்கலகப் பித்தார்க்குக் காண்.

(இ-ள்.) கருங்கல்வீட்டில் வாசமாயிருக்கும் பெரியர்களுக்கு உலகில் விளங்குகின்ற சூரியகிரணமுஞ் சந்திரகிரணமுமில்லை, அதனால் அழகும் வீரியமும் உதராக்கினியும நீங்கிவிடும், கலகஞ்செய்கின்ற பித்தமும மனத்துன்பமும சிலேஷ்மரோகமும்மிகுதியாக உண்டாம்.

மேல்வீடு, ஓட்டுவீடு, புல்வீடு-இவைகளின் குணம்.

நீட்டையுரு மேல்வீடு நீணிலவெப் போடுபல
வேட்டை யொழிக்குமகாண் மிகமிகழிலா-லோட்டையுரு
கல்வீ டுபர்வெண னுவ காவிமஞ்சாரா லதத்தாற்
புல்வீ டுயர்வாம புகல்.

(இ-ள்.) உயர்ந்த மெத்தைவீடானது பூமியின் உஷ்ணத்தோடு விஷஜெந்து மிருகமுதலியவைகளால் உண்டாகிறபலவித துன்பங்களையும நீக்கும் ஓட்டுத்தடுக்குள்ள கல்வீடானது அழகினுயர்வினும் காற்றுமபனியும் சாராததன்மையினால் விழல்தடுக்குவீடே உயர்வாம்.

காலை விழிப்பின் குணம்.

புத்தி யதற்குப் பொருநது தெளிவளிக்குஞ்
சுத்த நரமபினற்ற தூய்மையரும-பித்தொழியுந்
தாலவழி வாதபித்தந் தத்தமிலே மண்ணுமதி
காலைவிழிப் பின்குணத்தைக் காண்.

(இ-ள்.) உதயகாலத்தில் விழிப்பவர்களுக்கு புத்திக்குத்தெளிவையுணர்த்துகின்ற சுத்த நரம்பு என்னும ஒருவித நரம்பினது துவாரத்தில் நிறைந்திருக்கின்ற நீரானது கலங்கலின்றிப்பரிசுத்தமாயிருக்கும பத்தகோபம நீங்கும உலகத்தில் வழங்குகிறவாதமும் பித்தமும் சிலேஷ்மமும் தங்கள இடங்களிலேயே பொருந்துமென்க.

விழித்தவுடன் சுத்தஜலம் அருந்தலின் குணம்.

தூங்கி விழித்தவுடன் சுத்தோதக மருந்தி
லோங்கிநின்ற பித்தமொழிவதன்றித்-தேங்கு

மல மூத்திரந் தங்கா வாதியுக்தந்
தலமாத் திரமுலவுந தான.

(இ-ள்.) நித்திரைசெய்து விழித்தவுடன் சுத்தோதகமென்னும் நீராகாரம் அல்லது கல்லசலம் இவைகளில் ஏதேனும் ஒன்றைப்பிர மாணமாகப்பருகில். பயித்தியதோஷம் விலகும், அன்றியும் மலஜல பந்தங்களும் நீங்கும் வாதமுதலிய மூன்று தோஷங்களும தத்தம் நிலைகளிற சஞ்சரிக்கும். 1310

விழித்தவுடன் பார்க்கத்தக்க வஸ்துக்கள்.

கஞ்சந் தங்கந்தீபங் கண்ணாடி யெல்லங்கி
செஞ்சந்த நீர்மண சிவலிங்க-மஞ்சங்கல
கற்றூத மதுவலகைகை மனைகடாரி யிவை
யுமுறல விழிப்பினுத தமம.

(இ-ள்.) நித்திரைசெய்து விழித்தவுடன், தாமரைப்பூ தங்கம் தீபம் கண்ணாடிசூரியன புகையொழிந்தநெருப்பு செஞ்சந்தனம் கடல் வயல் சிவலிங்கம முகில்சூழ்ந்தமலை கன்றையுடைய பசு தமது வலக் கை மனைவி மிருதங்கம இவற்றுள் ஏதேனும ஒன்றை பார்க்கில் உத்தமமாம். 1311

விழித்தவுடன் கண்ணாடிபார்த்தலின் குணம்.

தானுவுங் களிப்புஞ் சகல வசீகரமும
போத வறிவுமுண்டா பூதலத்து-ஞானமுறும்
பண்ணாடிப் பாக்கும பனிமொழியே நீவிழிப்பிற்
கண்ணாடி பார்த்திடினக் காண.

(இ-ள்.) பனிமொழியாளே! தூங்கிவிழித்தவுடன் கண்ணாடிபார்த்தலினால் வீரியவிருத்தியும் மகிழ்ச்சியும் சர்வவசியமும ஞானமும் அதிகரிக்குமெனக. 1312

விழித்தவுடன் பார்க்கத்தகாத வஸ்துக்கள்-விருத்தம்.

ஊனமவத்திரம பவங்கலலாடைசங்கை
பூமைதடடை செவிடிரகைகல்சடைநிராசை
கூனமுகக்குமேனிவிரி முர்த்தநதூக்கம்
குட்டமறகெய்ததலையா குலமுன்மாதந்
தீனமறற்கயமிவையுள் ளார்முகதது
தீட்டமுகைவிதவை வஞ்சியர்முகத்துங்
கானவாவிகநிபலி மூரிமாறு
கபிநலக்கை முறத்திடத்தும விழிததற்தே.

(இ-ள்.) நித்திரைசெய்து எழுந்தவுடன் அங்கவீனம் வஸ்திரவீனம் பாவம் காவிவஸ்திரம் கிரகசங்கைஊமை மொட்டைத்தலை செவி அழுகைசடைமணிதரிடத்தில் விருப்பமில்லாமை கூன் அழுக்குமேனி விரிந்த மயிர்த்தலை சதாநித்திரை குஷ்டம் கொல்லை எண்ணெய்த்தலை மனைவியாகுலம் உன்மாதம தரித்திரமக்ஷயரோகம இவைகளை புடையவர் முகததையும் பாமபு பூனை சாமபல எருமை விளககுமாறு உலக்கை முறம் என்னும் இவைகளையும் பார்ததால் அன்றைக்குக் கெடுதியுண்டாகும். 1313

### சிலம்பம் மல்யுத்தம் குதிரையேற்றம் பாதநடை இவைகளால் உண்டாகும் குணம்

சிலம்பமுதன் மல்யுத்தந் தேசிநடை கொள்ளிற்
பலம்பரவு மெய்யிருக்கும பன்னத் துலங்குபசி
யுண்டாங் கபவாத மோடுவலி சூலையுமபோம
பண்டா மலமிறக்கும பார்.

(இ-ள்.) காலையில் சிலம்பம் மல்யுத்தம் இவைகளைப் பழகுவதாலும், குதிரையேறிச்செல்லுதல் பாதசாரியாகிய நடக்குதல் ஆகிய இச்செய்கைகளினாலும் வன்மைதளர்ந்த உடல் இறுகுதல் அதிகதீபனம் இவை உண்டாம். கபவாததொந்தமும் வாதசூலையும் பழையமலசந்தமும் நீங்கும். 1314

### மிதாமிதவார்த்தையின் குணம்.

மிதவார்த்தைக் குள்ளறிவு மெய்ச்சுகமுங் குன்று
மதிவார்த்தைக் கவ்வுரை கெட்டப்போ-முதிரமிவை
சுண்டும் பொங்குபித்தஞ் சூழுதலா லையவினை
யண்டும் பொங்கும் புண்ணோய்.

(இ-ள்.) மிதமாக வசனித்தால், உள் அறிவும் சரீரசவுக்கியம் உண்டாம அதிகமாகவசனித்தால் முற்கூறிய அறிவும் சவுக்கியமும் கெடும். அன்றியும் சரதாதுவும் ரத்ததாதுவுஞ்சுண்டும். இவைகுறைவதினால் பித்தம் அதிகரிக்கும், அதனால கபநோய் பிறக்கும நீர்ரோகம் உண்டாம். 1315

### வெயிலால் உண்டாகும் குணம்.

வாதமொடு காந்திகெடு மாதுயரம் வேர்வைபல
மோறுபசி பித்தமிவை யுண்டாங்-காண்மேதக்
குயிலினிசை பழிக்குங் கோதின் மொழிமாதே
வெயிலினுறு குணத்தை விள்.

(இ-ள்.) குயின்மொழி மாதே! வெயிலினால் வாதாதிக்கமும் அழகும் விலகும் வருத்தம் வியர்வை வன்மை ஐடராக்கினி பித்தகோபம் இவை அதிகரிக்கும் எனக. 1316

காலை மாலை வெயிலால் உண்டாகுங் குணம்.

காலைவெயிற் காய்ந்தார்க்குக காணும்பிணி யனைத்தும்
பாலைவெயிற் போலப் பரவுங்காண்-மாலைவெயிற்
காய்ந்தார்க் குறுபிணிமுற் காசறுமிலக் கணநூ
லாய்ந்தார்க் குறுவழிச்சொ லாம்.

(இ-ள்.) உதயகாலவெய்யலில் காய்நதவர்களுடைய சரீரத்தில் முன்பில்லாத வியாதிகளெல்லாம் பாலைநிலத்து வெய்யலைப்போல் உக்கிரமாகப்பரவும் மாலைக்காலவெய்யலில் காய்ந்தவர்களுக்குப் பொருந்திய பிணிகள் பழமையாகிய குற்றமற்ற இலக்கணநூல்களை ஆராய்ச்சிச்செய்த புலவர்களுக்குக் காட்சியிற்பட்ட வழுச்சொற்கள் நீங்குவதுபோல நீங்கிவிடும். 1317

நிழலால் உண்டாகுங் குணம்.

மேனி தடிக்கும் விவர்ண்ணவழ குண்டாகும்
போனவலி வாதமாதம பூரிக்கு-தானே
வளர்ந்தேறுஞ் சோம்பல் மதிவதன மாதே
குளிர்ந்த நிழலின் குணம.

(இ-ள்.) மதிவதனமாதே! குளிர்ந்தநிழலை விருப்பவர்களுக்கு சரீரந்தடித்தலும் வேறுநிறமான அழகும் நீங்கிய கப்புவாதமும் அலசமும் அசதியும் அதிகமாம். 1318

மழைமந்தாரத்தின் குணம்.

நித்திரை காந்தி கெடியபசி தாகம்போ
மொத்த மகிழ்ச்சிகுளி ருதைமொடு-மெத்த
வழைலங் கிடச்செயிரைப் பாதியநோ யுண்டா
மழைமந் தாரத்தால் வழுத்து.

(இ-ள்.) மழைமந்தாரத்தினல் தூக்கம் ஒளிவு தீபனம் தாகமிவை போம் சளிப்பு நடுக்கல் சீதவாயுவு சுவாசமுதலிய பிணிகளுமுண்டாம்.

தீக்காய்வதின் குணம்.

திக்காயில் வாதமொடு சீத நிவையகமா
மூக்கமிரு தாகமதி யுட்டினமு-நீக்கா

விரத்தபித்த நோயு மிரத்தக்கொதிப்பு
மூரத்தெழும்பு மென்றே யுரை.

(இ-ள்.) தீக்காய்தலினால் வாதக்கடுப்பும் சீதமூம விலகும் உபசர்க தாகமரூடு இரத்தபித்தம உதிரககொதிப்பு இவை அதிகரிக்குமென்க.

### வேள்விப்புகை சுடுகாட்டுப்புகை தயிலப்புகை இவைகளாலுண்டாகுங் குணம்.

மகத்தூம மியாயுள் வளர்க்குஞ் சவஞ்சா
ரத்தூம மத்தை யழிக்கு-மகததா
மருந்தயிலத் தூம மடர்வாத வனேறய்
விருந்தயினு மெனறே விதி.

(இ-ள்.) வேள்விப் புகையானது தீர்க்காயுசு கொடுக்கும் சுடுகாட்டுப் புகையானது உள்ள ஆயுளையும கெடுக்கும் மகா தயிலப் புகையானது வாதரோகத்தை விருந்தாக உண்டுவிடும் என்க. 1320

### மலசலம்விடுத்தலின் குணம்.

இருமலங் கூடங்கா வுறக்குங்காண் மூன்று
மிருமலங்கா டங்கணிலே பெய்து-மிருபச்
சமனுக்கினி சாருஞ் சாராநோய் கூட்டம்
நமனுக்கினி சாரா தாம்.

(இ-ள்.) மலம சலம் இரண்டையும் சிக்கமின்றிக் காலைமாலைக் காலங்கடோறும் விடுப்பவர்களிடத்து வாதபித்த கபங்கள் தத்தம் நிலைகளிலுலவும் ஜடராக்கினி அதிகரிக்கும நோய்க்கூட்டம் ஒழியும் எமனுக்கினையும் செலலாவாம். 1321

### பல்விளக்குவதின் குணம்.

துகளிலே காட்டமிவை தொட்டுத் துலக்கிற்
றுகளிலே காட்டாது தோடந்-துகளிலேகண்
மெய்துவரை யோததிருக்கின் மேனுள் வரைமூரன்
மெய்துவரை யோததிருக்கு மே.

(இ-ள்.) தூள் இலே கொமபு இவைகளால் பல் விளக்கினால் பல்லுகளுக் கூனமில்லை வாதபித்த கபங்களால் பல்லினிடத்தும் அவ்வேரினிடத்தும் பிறக்கின்ற 23-ரோகங்களும் உண்டாகாது ஆனால் அந்த தூளும இலேயும கொம்பும இபல்பாகத துவர் உள்ளதுகளாயிருந்தால் இறுதிநாள்வரைக்கும் பல்லுகள் மலையைப்போல் அசைவற்றுநியாகும்

### பல்விளக்கத்தக்க கொம்புகள்.

வேலுக்குப் பல்லிறுகும் வேம்புக்குப் பற்றுலங்கும்
பூலுக்குப் போகம் பொழியுங்கா-ணாலுக்குத்
தண்டா மரையாருஞ் சாருவளை நாயுருவி
கண்டால் வசீகரமாங் காண்.

(இ-ள்.) கருவேலங்குச்சியால பற்களுக்குறுதியும் வேப்பங்குச்சியால் பற்களுக்கொளிவும நீர்ப்பூலாங்குச்சிக்கு வீரியவிருத்தியும்ஆலம் விழுதுக்கு லட்சுமிகடாட்சமும் நாயுருவிவேருக்கு முகவசீகரமும் உண்டாமென்க. 1323

### பல்விளக்கத்தகாத வஸ்துக்கள்.

கல்லு மணலுங் கரியுடனே பாளைசளும
வல்லதொருவைக்கோலும் வைக்கோ றிகம-பல்லதனைத்
தேய்த்திடு வாராமாயிற் சேராளே சீதேவி
வாய்திடுவள் மூதேவி வந்து.

(இ-ள்.) செங்கல்மா மணல்கரி தென்னம்பாளை வைக்கோலிவைகளால் தினமும் பல்துலக்குவரிடத்தில் லட்சுமிநீங்கி மூதேவிசேர்வாள். 1324

---

## ஸ்நாநவிதி வகை

### சுத்தஸ்நாநத்தின் குணம்.

சுத்தப்புனலாடத் தொன்னமைச்ச லாயாசந
தொக்கெரிச்சற் பாரிப்பு தோஷுறுவா-மெத்தனவுந
காந்தி பலம்பசியுங் கட்டழகு முண்டாகு
மேந்துமுலை மாதே யியம்பு.

(இ-ள்.) பெண்ணே! ஆறு மடுக்களில் அதிகாலையில் தினம் சுத்த ஸ்நானஞ்செய்பவர்க்கு தினவு சோர்வு வொயாம தேநக்கனதி இவை நீங்கும். தேஜசும் வன்மையும தீபனமும் நல்லவனப்புமுண்டாம். ()

### காலைமாலை துளியலின் குணம்.

காலைக்குக் கடும்பசி யுண்டா நோய்போ
மாலைக் குளிக்கவினை மத்திபமே-சோலையுடை
வாசநீர் சுத்தசலம வனனிநீ ராங்கால
தேசமுடற் பேதமுன்னிச் செப்பு.

(இ-ள்.) மா செல்வி முதலிய இலைகளை ஊறவைத்த ஜலத்தையாவது சுண்ணப்பொடிதூவிய பரிமளஜலத்தையாவது அது கலவாத

சுத்த ஜலத்தையாவது வெந்நீரையாவது தங்கள் இருப்பிடங்களில் வைத்துக்கொண்டு காலதேச தேக பேதங்களையுணர்ந்து அவைகளுக்குப் பொருந்தியவாறே அதிகாலையில் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு ஜடராக்கினி புஷ்டியுண்டாம், சகல வியாதிகளும்போம் இவ்வண்ணம் மாலைக் காலங்களில் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு மேற்சொல்லிய குணங்கள் மத்திமமாம். 1327

### மஞ்சட்குளியலின் குணம்.

மஞ்சட் குளிதனக்கு மாறுத்தூர்க் கந்தமொடு
விஞ்சுமுக சாட்டியமும் விடகனுந-தொஞ்சனுறு
மைய மொழியு மடர்விபர்வுங் காணுது
வையமதனூல் வருந்து.

(இ-ள்.) பரிமளசகலவையுள்ள மஞ்சள் காப்பிட்டுக்கொண்டு ஸ்நானஞ் செய்பவர்களுக்கு கற்றாழை நாற்றமும் முகத்திலுண்டாகின்ற ரோகமும் சிரணசிலேஷ்மமும் விபர்வையும் நீங்குமென்க. 1328

### பஞ்சகற்பத்தின் குணம்.

மிருகமதம் பித்தமணி வேப்பு கடு நெல்லி
கருகுறுதும் பாலரைத்துக் காய்ச்சி-யொருமிட
விங்கற்ப நோய்க்கு மிடமின்று மெய்ஞ்ஞான்று
மைங்கற்ப மீதே யறி.

(இ-ள்.) கஸ்தூரிமஞ்சள் மிளகு வேப்பம்வித்து கடுக்காய்த் தோல் நெல்லிப்பருப்பு இவைகளைக் கிரமப்பிரகாரம் காராம்பசுவின் பால்விட் டரைத்துக் கொதிக்கவைத்து ஒப்பற்ற சிரசிற்றேய்த்துக் கொண்டு ஸ்நானஞ்செய்தால் எந்நாளும் பிணிகளுக்குக் கிஞ்சித்தேனும் இடமில்லை. இதுவே பஞ்சகற்பவிதி யென்றறியக்கடவை. 1329

### அப்பியங்கனத்தின் குணம்.

தலைமுழுக்காற் சென்னிமுழுக் தாளிமைக்கு நீங்காப்
பலமுண்டாங் கேசம் படருந்-தலைநோய்போம்
பஞ்சேந் திரியம் பலதருந் தெளிவையுறு
மெஞ்சாத் தொனியுமெழி மென்.

(இ-ள்.) அப்பியங்கனத்தால் மெய் வாய் கண் மூக்கு செவி என்கிற பஞ்சேந்திரியங்களும் பலத்துநதெளிவுறும். சிரசு முழங்கால்கட்குப் பலமும் ரோமவளர்ச்சியும் நற்றொனியுமுண்டாம் தலைவலிவிடும்.

### நித்திய அப்பியங்கனத்தின் குணம்.

தினமப்பி யங்கனமே செய்யிற் சரும
மினுமினுக்குஞ் சோம்பல் விலகுந்-தனியான
ஐயமுத்தோட மருசிகந்த நோயொழியு
மெய்யுமிகப் புட்டியிடு மே.

(இ-ள்.) தினமும் அப்பியங்கனம் செய்வதினால் தொக்கென்கிரி யப்பளப்பும் தேகபுஷ்டியும் உண்டாம் சோருதல் தனிக்கபநோய் திரிதோஷதொந்தம் அரோசகம் உபகிருசரோகம் அவைநீங்கும். 1331

### பசுவினது நெய் முழுக்கின் குணம்.

மைந்தர்முதல் முப்பருவ மாந்தர்க்கு மாமுடலின்
முந்தெரிச்ச லுன்மாத மூர்ச்சைகப-முந்திரத்த
பித்தம் மாதாகமொடு பேசுமிவா ரவர்களுக்கு
முத்தமமா நெய்முழுக் குன்.

(இ-ள்) பசுவினது நெய்முழுக்கு பால்ய குமாரவிருத்தர்களுக்கும் ஆம். ரசதாதுவின் கொதிப்பாற்கண்ட எரிச்சல் உன்மாதம் மூர்ச்சை மூளைபைப்பற்றியகபம் ரத்தபித்தம் விதாகம் இவைகளை நீக்கி நன்மையைத் தரும். 1332

### தைலாதிகளின் குணம்.

எள்ளினெய்பு முக்கூட் டெணுநெய்பு மாநெய்யும்
வில்லுதயி லாதிபென விருநெய்யு-முள்ளபடி
வாரந் தனக்கிருநாள் வைத்தாடி நோய்களதி
காரந் தனக்கிடமிற் காண்.

(இ-ள்.) எண்ணெய் முக்கூட்டுநெய் பசுவின்நெய் உயர்ந்ததயிலம் முதலியவைகளை எட்டுதினத்திற்கு இரண்டுதரம்ஸ்நானம் செய்யில் சகலரோகங்களும் தேகத்தை வருத்துதற்கு அதிகாரம் இன்றும். ()

### தைலம் தேய்க்குமவிதி-விருத்தம்.

எடுத்தநற் றயிலநாசிக் கிரிரண் டாறுகாதுக்
கடுத்திடத் துளிவிட்டுச்சி யங்கநதா ளடிகளிறகு
கொடுத்திடாத் தேய்த்தூறச்செய் திப்புறஞ்சிகைக்காய் வெந்நீர்
விடுத்துட னுடிநீருவ் வியர்ப்புமற் றிடப்புலத்தே.

(இ-ள்.) நல்லதயிலங்களைமூக்கில் 4-துளியும் காதில 6-துளியும் விட்டு சிரசு உடம்பு பாதத்தினடி இவைகளிலிட்டுச் சுடுகை பிறவாமல் தேய்த்து ஊறவைத்துப்பின்பு சிகைக்காய் தேய்த்து வெந்நீரில் ஸ்நானஞ்செய்து அந்தநீரும்வியர்வையும் நீங்கும்படி உலர்த்துவாயாக.

பாதாதிகளில் தைலமிடலின் குணம்-வெண்பா.

பாதத்திடிற் கண்ணோய் பாறுமக்கிட் டிடினே
காதுற் றெழுநோய் போங்-காதிடினல்
தலைநோ யகலுந் தலைக்கிடினே யெல்லா
நிலைபா வறலாடி னெய்.

(இ-ள்.) எண்ணெய் முதலிய தயிலங்களை உள்ளங்காலிற் றேய்க்கில்கண்ணைபற்றிய நோய்களும் கண்ணுகருக்கட்டினால்செவிரோகங்களும செவியிற்குத்தினால் சிரஸ்தாபங்களும் சிரசில் தேய்த்துஸ்நானஞ்செய்தால் சரீரத்திலுள்ள சகலரோகங்களும நிவிர்த்தியாகும்.

அரைப்பு வகை.

சிகைக்ராக தூள்விரண ம்துவர்க்க கரைப்பாகு
மாக்கிலுமைபைக் கட்டிசொறி யாளர்க்குத்-தூக்குமணிப்
புங்கரைப்புநோ யீய்க்காயும போககடிக்கு மெண்ணெய்களைக்
கங்குலுறை கூந்தன்மினனே காண.

இதுவுமது.

பருப்பரைப்புக் கோடிநெய் பண்ணுமெண் ணெய்யாதிக்
கரைப்புச் சிகைக்காயு மாகுந்-தெருப்பன்றி
நெய்யாதி பாநெய்க்கு நீளரைப் பூண்டாதி
மெய்யாரைப் பாகும வில்.

(இ-ள்.) மேகமபோன்ற கூந்தலாளே! விரணத்தேகிகட்கு உசிலத்தூளும் சொறிதினவை உடையவர்களுக்கு இலுப்பைப்பிண்ணாக்கும் எண்ணெய்முதலிய தயிலங்களுக்குப் பொன்னாங்காயும் சிகைக்காயும் பசுவின்னெய்க்குப் பச்சைபபயறும் பன்றி காகமுதலிய நெய்கட்குக் காரைச்செடிகளின் தூளும அரைப்பாகும். 1336

ஸ்நானகாலவிதி-கலித்துறை.

அயமானிவைக்கைம்பதற்றுளியாழ் குளிர்க்கட்டமததுன்
வயமாகனிக்குங்கோல்கேட்டுகக நான்குவின்மானிரண்டே
பயமார்கடமர்ச்சத்திற்குந திரிகருட்பகர்திங்களி
னயமாந்தயிலங்களாடவரோகமெய நண்ணுவரே.

(இ-ள்.) சித்திரை வைகாசிமாதங்களில்சூரியன் உதயமானஐந்து நாழிகைக்குள்ளும ஆனி ஆடிமாதங்களிலெட்டு நாழிகைக்குள்ளும் ஆவணி புரட்டாசி ஐப்பிசி கார்த்திகை மாதங்களில் நாலு நாழிகைக் குள்ளும் மாசி பங்குனிமாதங்களில மூன்று நாழிகைக்குள்ளும் பக்

ருவ பாகமுள்ள தைல ஸ்நானஞ்செய்தால் அரோ தேகத்தைப் பொருந்துவார்கள் என்க. 1337

கூடிவாத்தின் குணம்-வெண்பா.

தூக்கம் விரணந் தொடைவலி சூலங்காசந்
தற்கால சாந்தஞ் சவரத்தால்-மிக்குடற்குச்
சாந்திமனப் பூரிப்பு கண்ணொளிரு காமமுமாஞ்
சேர்ந்ததிங்க ளுக்கிரண்டாக தேர்.

(இ-ள்.) ஒரு மாதத்திற்கு இரண்டுதரஞ்செய்து கொள்ளுகிற க்ஷவரத்தினால் மனத்துபரம் புண் தொடைநோவு குத்தல் இருமல் ஆகிய இவைகள் உடனே கொஞ்ச சவுக்கியமாம் வேகவொளியும்மனச் சந்தோஷமும் விழிக்குப் பிரகாசமும் தாதுவிருத்தியும் உண்டாகும்.

## வஸ்திர வகை

சாலுவையின் குணம்.

சலதோடம் போகுந் தலைவலியு மேகு
மூலவிவரு நோய்வாத மோடும்-வலிய
வயிற்றுவலி போங்குளிரை மாறுப் பனியைச்
சயித்ததொரு சாலுவைக்குத் தான்.

(இ-ள்.) நல்ல சாலுவைக்கு நீரேற்றம் சிரோரோகம் வலிவாதம் வாதகுன்மம் குளிர் மூடுபனி இவையொழியும் என்க. 1339

பட்டுவஸ்திரத்தின் பொதுக்குணம்.

பித்த கபமகலும் பேரா மகிழ்ச்சியொடு
புத்திமிகும் வியர்வை பூணுங்கா-ணித்தியமும்
காந்தியது வுண்டாங் கனஞ்சேர் பட்டுத்துகிலுங்
கேந்துமுலை மாதே யியம்பு.

(இ-ள்.) பெண்ணே! உயர்ந்த பட்டு வஸ்திரத்தினால் பயித்திய சிலேஷ்மம் விலகும் மனக்களிப்பு ஞானம் வியர்வு தேஜசு இவை யுண்டாகும். 1340

வெண்பட்டுவஸ்திரத்தின் குணம்.

வெண்பட் டுடையால் விரிசுரமும் சீதமும்போம்
பண்பட்ட வாதம் பறக்குங்காண்-பெண்கிட்டுங்
காந்தியு முண்டாகுங் கதித்த அழகுமுண்டாங்
காந்திமதி முகத்தாய் காண்.

(இ-ள்.) பிரகாசமுள்ள சந்திரவதனியே வெள்ளைப் பட்டுவஸ்திரத்தால் அதிசுரமும் குளிரும் வாதரோயும்போம் ஸ்திரீவசியமும் ஒளியும் வனப்பும் உண்டாம் என்க. 1341

நாருமடியின் குணம்.

சளியொடு நீரேத்தந் தங்கா தகனும
வளியொடு சந்நியும்பின வாங்கு-மளியினங்கள்
சேருமடிக் கூந்தன்மின்னே தேகமிகச சுததியதாம்
நாருமடிக் கென்றே நவில்.

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கும வாசனை பொருநதிய கூந்தலையுடையவளே நாருமடிக்கு கபக்கட்டு சலதோஷம் குடல்விருத்தி வாதம் சந்நிபாதசுரம் ஆகிய இவைபோம சரீரஞ் சுசிகரமாம். 1342

வெள்ளை வஸ்திரத்தின் குணம்.

ஓடுந் திரிதோட மோங்கா யிசுப்பெருகும்
கூடுந் திருவழகுங் கூர்களிப்பு-நீடுமதி
போதமுறும வெற்றிவரும் பூரிக்கு மெய்வியர்வு
பேதமறும் வெண்டுகிலுக் கே.

(இ-ள்.) வெண் துகிலுக்கு வாதாதி தோஷங்களும் வியர்வும் விலகும் ஆயுசுவிருத்தி லட்சுமிவிலாசம் வனப்பு மகிட்சி அறிவு பலம் இவையுண்டாம். 1343

சிவப்புவஸ்திரத்தின் குணம்.

எந்துபித்த முட்டின மெதிர்ந்த தருணசுரம
வாந்தி யருசிகப மந்தமிவை-சேர்நதிடுங்கா ற்
செய்ய கடுஞ்சிவப்புச் சிலையுடுத்தா லவைகள்
பைய வதிகரிக்கும் பார்.

(இ-ள்.) அதிபயித்தியம் உட்சூடு தருணசுரம் வமனம் அரோசகம் சிலேஷ்மகோபம் அலசம் என் னுமிவைகளில் ஏதேனும் ஒருரோகம் அனுசரித்திருக்குங் காலத்தில் மிகவும் சிவநத வஸ்திரம் உடுக்கலாகாது உடுத்தால் மேற்சொல்லியரோகங்கள் விருத்தியடையுமென்க.

மஞ்சள் வஸ்திரத்தின் குணம்.

நீர்க்கடுப்பு காசமொடு நீடுவிஷ சுரமுந்
தீர்க்கமையும் வெப்பஞ் சோமலமும்-பார்க்குண்மிக
வஞ்சியே யேகுமஞ்சளாம் வத்திரம் புனைந்தால்
வஞ்சியே நன்றாய் வழுத்து.

(இ-ள்.) பெண்ணே மஞ்சள்வஸ்திரத்தினால் வாதநீர்சுருக்கு இருமல் விஷசுரம் மாறாத்தினவு தனிச்சுரம மலபந்தம் இவை நீங்கும். ()

பச்சைவஸ்திரத்தின் குணம்.

மெய்யழலை யேகும் விழிகதுக குளிர்ச்சியுண்டாம்
பொய்யி லுடலமெல்லாம பூரிக்கு-மையமுறு
நஞ்சை நிகரு நளினவிழிப் பெண்ணமிர்தே
பச்சையுடை யின்குணத்தைப் பார்.

(இ-ள்.) நஞ்சையொதத கண்ணாளே! பச்சை வஸ்திரத்தினால் உட்சூடு சிலேஷ்ம தோஷமும்போம கண்ணுக்குக குளிர்ச்சியும் தேக பூரிப்பும உண்டாம் என்க. 1346

கருப்புவஸ்திரத்தின் குணம்.

காசமொடு வெப்புங் கறுத்த கொடுவிடமும்
பேசுமந் தாக்கினியும் பித்தமும்போ-நேச
வெறுப்புறு வின்பநய மெல்லியலை நீலக்
கறுப்புநிற மாந்துகிற்குக் காண்.

(இ-ள்.) வெறுப்புறுவின்பமுடையாளே! கறுப்புவஸ்திரத்திற்கு இருமல் சுரம் மகாசர்ப்பநஞ்சு அக்கினிமந்தம் பயித்தியமும்போம். ()

அழுக்குவஸ்திரத்தின் குணம்.

நோயடருங் காந்திகெடு நுண்ணறிவும் போயொளிக்குந்
தீயகுளிர் தூக்கந் தினவுசங்கை-வாய்பேசக்
கூசுதலு முண்டாகுங் கோதாரு மாசுடைக்குப்
பேசுதலு மியாதிதற்குப் பின்பு.

(இ-ள்.) அழுக்குவஸ்திரம் தரிப்பவருக்கு பற்பலதுன்பம் மிகுகளிர் துயரம் நமைச்சல் கிரகசங்கை நாணம் ஆகியவைகள் உண்டாகும். சரீர ஒளியும் நுட்பமாகிய அறிவும் விலகும். 1348

கம்பளத்தின் குணம்.

பெரும்பா டசீரணங்கள் பேராக் கிராணி
யருஞ்சூலை பேதி யகற்றுங்-கருஞ்சீழைப்
போக்குங் குளிர்வாடை பொலலாப் பனிபீக்கிக்
காக்கும் பருங்கம் பளம்.

(இ-ள்.) சீதளக்காட்டையும் மூடுபனியையும் விலக்கி உடலைக் காக்காநின்ற பெரியகமபளம் அஜீர்ககரம அசீரணங்கள் திரிதோஷ கரகணி கீல்பிடிப்பு அதிசாரம் கறுப்பாகஒழுகுகிற சீழ் இவைபோம்.

**முண்டாசு கவசம் நடுக்கட்டு இவைகளின் குணம்.**

முண்டாசு வாதபித்த முன்பொழிக்கு மெய்க்கவச
மூண்டாயிற் காத்திபுட்டி யுண்டாகுந்-திண்டாடு
பித்தமறுந் தீயாம் பிணைத்தநடுக் கட்டுக்குக்
தொற்றமுறு வீரியமாங் கூறு.

(இ-ள்.) சிரசிற்கட்டுகின்றமுண்டாசு, வாதபித்ததொந்தத்தைப் போக்கும் கவசம் என்கிற அங்கியினால் தேக ஒளியும் புஷ்டியும் உதராக்கினியும் உண்டாவதுந் தவிர பித்தகோபமும் நீங்கும். நடுக்கட்டு என்கிற அரைக்கச்சைக்கு பலம்பொருந்திய ஆண்மையுண்டாமென்க.

**ஆபரணத்தின் குணம்.**

ஆபரணஞ் சூடி லரியலீ லாலயமா
மாபரண மெய்க்குமகி மங்கலங்காண்-சோபமனத்
துக்கத்தோடு நோய்போஞ் சொல்ல வசியமும்
மிக்குக் களிப்படரு மெய்.

(இ-ள்.) ஆபரணம பூணில், அனுமதன்கூத்துக்கு ஓரிடமாயிருப்பதுந்தவிரச் சரீரத்துக்கு அழகியபரணம் என்கிற கவசமுமாகும். இதனால் மங்களகரமும் வசிகரமும் மகிழ்ச்சியும் உண்டாகும். சோர்வு மனத்துயரம் வியர்த்தியுன்மாதம் முதலியரோகமும் நிவர்த்தியாகும்.

---

## புசிப்பு வகை

**பசியின் குணம்.**

பசியா லழகாண்மை பூரிப்பு மோகம்
ருசியாவி வார்த்தை யிவைசோரும-பசியாலாந்
தாதினத்தின் சிரணமுந் தன்னு கிழத்தனமு
மோதினத்தின் பேதமுமாமோர்.

(இ-ள்.) பசியினால் வனப்பு பலம் மகிழ்ச்சி ஆசை ஆகாரம் உயிர் பேச்சு இவைநீங்கும். அன்னரசத்தால் வளருகின்ற சப்தாதுகளுக்கு விகற்பமும் மூப்புத்தன்மையும் சுற்றத்தார்விரோதமும் உண்டாகும்.

**போஜன காலவிதி.**

தன்மமிரண் டேயூண் தப்பிமுக்காற் கொள்ளினினண்
சின்மதலே காளைமுற்றற் சேர்பருவ-நன்முகூர்த்த
மொன்றுக்கு ளன்குக்கு ளோதுமிரண்டுக் குளுநண்பர்
நன்றுக்குத தீயோர் நயந்து.

(இ-ள்.) தருமசாஸ்திரத்திற்கூறிய இரண்டுகாலபோஜனமே நலமாம், அதுதப்பி மூன்றுகால போஜனங்கொள்ள வேண்டுமானால் சூரியனுக்கிளம்பருவமாகிய உதயமுதல் 3¾-நாழிகைக்குள்ளும், காளைப் பருவமாகிய 15-நாழிகைக்குள்ளும், மூப்புப்பருவமாகிய இரவில் 7½-நாழிகைக்குள்ளும் நலம் பெறுதற்குச் சாமாக்கினியை யுள்ளவர்கள் கொள்ளுவார் என்க. 1353

காலாகாலபோஜன குணம்.

மூன்றுநான் காறென் முகூர்த்தங் களின்முறையே
ஞான்றுள் ளூண் ணுமந்த நறுமுணவே-தோன் றுடலுக்
கொக்மித நோயருமு ரோகமுயிற் கந்தரஞ்செய்
விக்குமித மாராய்ந்து விள்.

(இ-ள்.) சூரியனுதயமாகிய 11¼-நாழிகைக்குள் உண்கிற நல்லவுண்டி தேகத்திற்குப் பொருந்தும் 15-நாழிகை உணவுமிதம் என்கிற அளவிட்டு பிணிகளை விலக்கும் 22½-நாழிகையில் புசிக்கில் ரோகசம்பவமாம் 30-நாழிகையிலருந்தும் அசனம் உயிருக்கு முடிவைத்தரும். இந்த 4-முதல் 2-ம் காலபோஜனமும் மற்றவை அகாலபோஜனமாம்.

போஜனம்செய் விதி.

ஆதி யினிப்பு நடு வரம்பிரீ ருப்பொடுசா
காதியுறைப் பப்பா லந்தத்திற்-கோதிநுமாப்
பாத்தியும் பூறியகா யாதிவகை சேருணவை
மாந்தி சகத்தையுறு வாய்.

(இ-ள்.) போஜனமுதலில் மதுரவஸ்துவும் மத்தியில் புளிப்பு உப்பு உரைப்பு இலேகறிகளும்; முடிவில் துவர்ப்புச்சம்பந்தமான புளித்ததயிர் ஊறுகாய் நீ யுண்ணக்கடவை; உண்ணில் இன்பமுண்டாம்.

போஜனவுளவைக்கூறல் கலிநிலத்துறை.

முக்கா லுணவன் றியெதகேகிகட்கு முழுவுணவி
லக்கா ரணமன்ன ராகாதிகூடி யரையதிற்பால்
சிக்காவமுதம் புதக்கிரங்காலுண்டி சேடமுறை
வைக்காவீடி லுண்டி வேகதனலும் வளியுமின்றே.

(இ-ள்.) சகலதேகிகளுக்கு ¾-வயிற்று உணவேயன்றி முழுஉணவு இல்லை அதன்விவரம் அன்னமுக்கறிகளுங்கூடி ½-பால் மோர் சலம் கூடி ¼-ஆக முக்கால் வயிற்றுணவேயாம். இன்னும் ¼வயிறு இடைவெளிவைத்ததற்கு காரணம் சமானவாய்வும் அனல் பித்தமும் சொலித்து அவ்வுண்டியைப் பஸ்மஞ்செய்வதற்கேயாம் என்க. 1356

புசித்தபுசிப்பின் பிரிவுகூறல் வெண்பா.

பிலத்தமரு முண்டுப் பிரிவை யுருக்கிற்
பலத்த கிருமிகட்கோர் பங்கு-மலத்திற்கோர்
பங்குமுமாய் வில்லனற்கோர் பங்குமுட லினுக்கோர்
பங்குமுமாய்த் தங்குமுன்னிப் பார்.

(இ-ள்.) துவாரத்தையுடைய தீனிப்பையிற் றங்கியஉணவானது 4-பிரிவையுறும். அவையாவன ஒருபங்கு கிருமிகளுக்கும ஒருபங்கு மலத்திற்கும் ஒருபங்கு ஜடராக்கினிக்கும் ஒருபங்குதேகத்திற்காம்.

புசித்த அன்னசாரச் செய்கைகூறல் விருத்தம்.

ஒருநாளுண்ணனவிரதபிரத்தாது வைகனைத்தங்கூறிகிற்கு
மிருநாளுண்டிடினம்ஃதங்கிரத்ததாதுவிலேறுமிவ்வாறேபின்
வருநாளுண்ணெமூநாலுமாழினகுதெழுதாதுவையம்வளர்த்தே
தருநாளுஞ்சோராதவலிவுதனைபெட்டாநாட்சடத்திலுக்கே.

(இ-ள்.) ஒருநாளுண்ட வுணவில் நின்றும் பிரிவுற்ற அன்னரசமானது அன்றைக்கு ரசதாதுவைகனைதது ஊறித்தங்கும் 2-ம் நாள் உண்ட அன்னரசம் அந்தரசதாதுவிலேற முன்புவூறினின்றரசம்ரத்த தாதுவிற்பாயும் இவ்வாரே 3-ம்நாள் மாமிசதாதுவிலும் 4-ம்நாள் மேதோதாதுவிலும் 7-ம்நாள் சுக்கிலதாதுவிலு மாகச்சென்று அத் தாதுக்களை விருத்தியடையச் செய்து 8-ம்நாள் தேகத்திற்குக் குன்றுத வன்மையைக் கொடுக்கும். 1358

---

## உண்கலவகை

தங்கக்கலத்தின் குணம்-வெண்பா.

தங்கக் கலத்திலுண்ண தாதுவிர்த்தி யும்பசியும்
பொங்க மிகுதிடமும் பூரிப்பு-மங்குறையும்
பித்தசோபைப் பிணியிப் பேருலகை விட்டகலுஞ்
சுத்தரசத் தீங்கினியே சொல்.

(இ-ள்.) தங்கப்பாத்திரத்திற் புசிக்கில் சுக்கிலவிருத்தியும்சமாக்கினியும் வன்மையும் உச்சாகமும் உண்டாம். பித்தசோகை நீங்கும்.

வெள்ளிக்கலத்தின் குணம்.

வெள்ளிக் கலத்திலுண்ண வீறிவரு கசமுந்
துள்ளியெழு பித்தமும்போஞ் சொல்லவோ-விள்ளிய

காந்தியுண்டா நாளுங் களிப்புண்டாந் தேகத்திற்
சேர்ந்துவரும் வாதமுண்டாஞ் செப்பு.

(இ-ள்.) வெள்ளிப்பாத்திரத்தில் அருந்த சிலேஷ்மகோபம்பித்த கோபமும் நீங்கும், தேஜசு மகிழ்ச்சி வாதாதிக்கமும் உண்டாம். ().

**செம்புக்கலத்தின் குணம்.**

செம்பு கலத்திலுண்ண தேகா ரோக்கியமாம்
பம்பிரத்த தோடம் பறக்குங்கா-ணைம்புவியி
லண்ணியிடுங் காந்தி யணங்கே விழியொளியாம்
புண்ணியமு நண்ணும் புகல்.

(இ-ள்.) தேவமகளிரையொத்தபெண்ணே! செப்புப்பாத்திரத்திலுண்ணில் சரீரசவுக்கியம் தேஜசு கண்ணுக்கொளிவு சுகிர்தம் இவையுண்டாம். ரத்த பித்த ரோகம் விலகும். 1361

**வெண்கலத்தின் குணம்.**

தாம்பரத்தில் வெள்ளீயந் தான்கலக்க வெண்கலமென்
றாம்பெயர் பெறுங்கலத்து ளண்ணமுண்ணிற்-றேம்புகின்ற
சோபமொடிரத்த பித்தந் தோன்றவறி யாதனங்கள்
சாமமெனச் சொன்னுதலே சாற்று.

(இ-ள்.) மதன்வில்லீனைய புருவத்தாளே! வெண்கலப் பாத்திரத்திற் புசிக்க சோர்வும் உதிரபித்தமும் போம் என்க. 1362

**தாம்பரம், வெள்ளி, கலப்புவெண்கலம் இக்கலங்களின் குணம்-விருத்தம்.**

தக்கதாம்பரத்தின்வட்டிற் றுனதிரத்தபித்த
மெய்க்குறு தகற்றும்வெள்ளி விலக்கிடுமையந்தன்னை
யொக்கவேகலப்புவட்டி லூறுதிரிதோடம்போக்குங்
கக்கியவுதிரமேறுங் கனத்தவெண்கலத்திற்கன்னே.

(இ-ள்.) செப்புக்கலம் சததபித்தத்தைவிலக்கும், வெள்ளிக்கிண்ணிகபத்துன்பத்தை நீக்கும், கலப்புலோகவட்டில் திரிதோஷங்களைமாற்றும் வெண்கல உண்கலத்தினுல் குறைந்த ரத்ததாது விருத்தி.

**உண்கலத்தில் இவைகள் முக்கியமெனல்-வெண்பா.**

வாழைவெள்ளைப் பன்னநன்று மற்றிலைகண் மததிமமா
மாவைவெள்ளி வெண்கலமு மாநன்றாங்-கோழை
கயப்பாண்ட நோய்போகுங் கருதினிவைக் கெல்லா
மெப்பாண்ட மேலசனங் கொள்.

(இ-ள்.) மனைசசாகபோஜனத்திற்கு வெள்வாழையிலை நன்று, மற்றைய இலைகள் மத்திமமாம். தங்கம் வெள்ளி வெண்கலம் இவைகளாற்செய்த உண்கலங்கள் மிகவுநலமாம். இவைகளை விட மட்கலமே சிறந்தது, இதில்புசிக்கில், க்ஷயரும பாண்டுரோகத்தாற்பிறந்த நீர்ச்சுரப்பும் விலகும் என்க. 1364

வாழையிலையின் குணம்.

தொக்கி னுறுமின் னுஞ் சுகபோகமு மன்னு
மக்கினி மந்தம் மபலமொடு-திக்கிடுகால
பாழை யிலைப்புமறும் பன் னுபித்த முஞ்சமனும்
வாழையிலைக் குணறு வாய்.

(இ-ள்.) வாழையிலைக்கு சருமதாதுவிற் பளபளப்பும்சுகபோகங்களும் பொருந்தும், மந்தாக்கினி துர்மலம் க்ஷிணவாதம் சிலேஷ்ம அரோசகம் இவைநீங்கும். பித்தகோப சாந்தமாம் என்க. 1365

பலாயிலையின் குணம்.

பலாவிலையி லுண்ணப் பதுங்கிநின்ற பித்தங்
குலாவி யெழும்பிக் குதிதது-துலாவிவரு
குன்ம மகோதரநோய் காணு தகலாத
குன்ம மகலுங் குறி.

(இ-ள்.) பலா இலையில் உண்டால் அடங்கியபித்தமும் அதிகரிக்கும் ஊழால்வந்த பெருவயிறும் குன்மரோகமும் நீங்கும். 1366

பாலுள்ளமரத்திலைகளின் குணம்.

பாவிருக் கின்றமரப் பவனங்களி லுண்டாற்
கோவிருக்கச் செய்வாதங் கோழைக்ஷயங்-கால
வசிர்க்குபித்தக் தாகமிவை யணடா தகலு
முசிக்குமதி சீதனமா மோர்.

(இ-ள்.) பாலுள்ளமரததின் இலைகளில் உண்ணில் பங்குவாதம் க்ஷயம் அசிர்க்கரம பயித்தியம தாகம் இவைநீங்கும். அதிகக்ஷுதீர்ச்சியுண்டாம். 1367

தாமரையிலையின் குணம்.

தாமரைப் பன்னத்தலுண்டாற் றுங்கரிய விட்டினமாம்
நாமவா தஞ்சினத்து நண்ணுங்காண்-தூமமுறு
வக்கினிமந் தங்களுண்டா மன்றே மலர்த்திருவத்
திக்கினி லிராளெனவே தேர்.

(இ-ள்.) தாமரையிலையிற் புசிக்கில் வெப்பமும் வாதரோகமும் மந்தாக்கினியும் உண்டாகும். சம்பத்துநீங்கிவிடும் என்க. 1368

### கரபாத்திரத்தின் குணம்.

கைப்பாத் திரத்திற் கலந்தன்னங் கொள்ளுங்கால்
வைப்பா மனச்சேட்டை மாறுங்கா-ணிப்பாற்
சருவ கிலேசமும்போஞ் சாற்றவவன் றுவின்னும்
பெருவருசி நோயும்போம் பேசு.

(இ-ள்.) சகலகறிகளுங்கலந்த அன்னத்தைக் கைப்பாத்திரத்தி லுண்ண மனச்சேஷ்டையும் மனோதுக்கமும பல அரோசகமும்போம்

## சோற்றின் வகை

### அதிசுடுகையன்னத்தின் குணம்.

அதிசுடுகை யன்ன மரத்தபித் தந்தாகம்
பிதிரோறு பித்தப் பிரமை-மதரோக
மென்றுரைக்கு நோய்கட்கிடங்கொடுக்குந் தப்பாது
குன்றுரைக்கும் பூண்முலையே கூறு.

(இ-ள்.) ஆபரணத்தையணிந்தகுன்றனையமுலைகளையுடையவளே நித்தியமும் புசிக்கின்ற மிகுசுடுகை அன்னமானது உதிரபித்தம்தாக பிரமை மதரோகம் இவைகளை யுண்டாக்கும் என்க. 1370

### அற்பச்சுடுகையன்னத்தின் குணம்.

அற்பச்சூட் டன்னமவா தாதிகளாற் பீனசத்தா
லுற்பவித்தநோயை யொழித்துடாக்கு-நற்பலத்தைச்
செய்யு மருசிதனைத் தீர்க்குஞ்சர் வோத்தகம்
பெய்யும் வளைக்கமாதே பேசு.

(இ-ள்.) வளையலணிந்த கரங்களையுடையவளே! கொஞ்சஞ் சுடுகையுள்ள அன்னமானது உத்தமத்திலுத்தமமாம் அதுவாதபித்தகபங்களிலும் பீனசத்தாலும் விளைகின்றநோயையும் அரோசகத்தையும் நீக்கும் சரீரத்துக்கு வண்மையைத்தரும் என்க. 1371

### புழுங்கலரிசி யன்னத்தின் குணம்.

தென்புவிநாளுஞ் செழித்துவள ருஞ்சாலி
வன்பு புழுங்கல் வடிசாத-முன்புணவே
வாயுவிலை யத்தால் வலியும்வன் னேயுமின்
நோயுடையார்க்காகு நவல்.

(இ-ள்.) புழுங்கலரிசி அன்னத்தைப்புசிக்கில், வாதகோபமும் பலமும் வலிரோகங்களும் இல்லை இதுநோயாளருக்குதவும் 1372

பச்சையரிசி யன்னத்தின் குணம்.

பச்சரிசிச் சோறு பலங்கொடுக்கும் வாயுவென்பார்
நிச்சயமாகப் பித்தை நீக்குங்கா-ணச்சமற
மூத்திரக் கிரிச்சரத்தை முன்பொழிக்குஞ் சேய்க்குமந்த
மாத்திர முண்டாகும் வழுத்து.

(இ-ள்.) பச்சரிசியன்னமானது பலத்தையும் குழந்தைகளுக்கு மாந்தத்தையும் உண்டாக்கும், பித்தகோபத்தையுங்கிரிச்சரத்தையும் நீக்கும் இதில் வாயுவுண்டென்பார். 1373

நன்றாகச் சமையாத அன்னத்தின் குணம்.

நன்றாகச் சமையா நடுத்தண் டுலச்சோறு
தின்றால் மலஜலமுஞ் சிக்குமென்ப-தோன்றாகேண்
மற்றைநநா ளுஞ்சரிக்க மாட்டா ததுவுடலிற்
சற்றும் வியாபிக்கா து சாற்று.

(இ-ள்.)நட்டரிசியன்னத்தைப்புசிக்கில்மலசலம்சிக்குவதுந்தவிர அதுமறுநாளும்சீரணசக்தியாகாது அவ்வன்னரசம் உடலில்பரவாது.

குழந்தை அன்னத்தின் குணம்.

குழந்தை சோறுண்ணிற் கொடுமேகங் காசு
மருந்து மந்தாக்கினியு மாறும்-விழுந்திடச்செய்
தூர்ப்பலமும பீநசமுந் தோன்று மரிவையர்க்குட்
பொற்படரு மாதே புகல்.

(இ-ள்.) மாதருக்குள்சிறந்தமாதே! அளிந்த அன்னத்தைப்புசிக்கில் வாதபிரமேகம் இருமல் அகக்கினிமந்தம் தூர்ப்பலம் பீநிசம்இவை உண்டாகும் என்க. 1375

சுத்த அன்னத்தின் குணம்.

சுத்தவன்னங் குற்றமிலைத் தோஷங்களை யகற்றுநின்
முத்தாத தேகிக்குமது முக்கியங்காண்-பத்தியத்திற்
காகுமது முப்பிணிக்கு மாமலிய சனங்கலந்து
ணேகுமுண் ணேயெல்லா மிரங்கி.

(இ-ள்.) குற்றம்நீக்கிய அன்னத்தைநற்கறிகளோடுண்ணில்அது வாதபித்தசிலேஷ்மம் என்னும் மூவிதரோகங்களுக்கும் முக்கியமாக உதவும் பத்தியத்திற்கும் வாதாதி மூவிதரோகங்களுக்கும் ஆகும் அன்றியும் குடல்நோய்கள் முழுமையும் விலகும் குற்றமில்லை என்க.

சுத்தன்னம் என்பது, பழைய அரிசியைத்தவிடுநோய் முதலிய வைபோம்படி நன்றாகத்தீட்டி முழுஅரிசியாக ஆராய்ந்து எடுத்து இள வெந்நீராற்கழுவி வஸ்திரத்திற்கொட்டிச்சற்றே ஆறவைத்து ஒரு பாண்டத்தில் அரிசிக்கு மூன்றுபங்கு சலம்விட்டு அடுப்பேற்றி அது நுரைகட்டிக் கொதிக்கும்பொழுது அந்த அரிசியை அதிற்போட்டு முக்காற் பாகமாக வெந்தவுடன் கரண்டியால்துழாவி வடித்துக்கொண்டு மறுபடியும் தணலில்வைத்து பக்குவப்படுத்தி இறக்கிக் கொள்வதாம். 1376

போங்கல் அன்னத்தின் குணம்.

பொங்கலெல்லா மந்தம் பொருமலெனு நோய்விளக்கு
மங்கமெலாம் வாத முண்டாக்குமன-லங்கொடுக்குஞ்
சம்பாநெற் பச்சரிசித் தன்பொங்கற் றாதுவிர்த்தி
யென்பார் பெரியோர்க ளெண்.

(இ-ள்.) பச்சரிசிப்பொங்கல் அன்னமெல்லாம் சகல அலசரோகம் வயிற்றுப்பிசம அங்கசனவாகம் வெப்பம் இவைகளை உண்டாக்கும் சம்பா பச்சரிசிப்பொங்கலன்னம் விந்துவை வளர்ப்பிக்கும். 1377

பாலும் அன்னமும் புசித்தலின் குணம்.

பாலுமன்ன மும்புசிக்கிற் பன்னுபித்தந் தாகமறு
மேலுமற்ப மந்தமென்பார் மேனியிடு-ஞாலமதி
லெப்பொழுதே தாதுவிர்த்தி யாகுஞ் சிசுவாதி
யெப்பருவத் தர்க்குமா மெண்.

(இ-ள்.) பாலுஞ்சோறும் உண்டால் பித்தகோபமும் தாகமும் விலகும் கொஞ்சமந்தம் தேகபுஷ்டி உடனே வீரியவிருத்தி இவைகள் உண்டாகும் இது பால கவுமார விருத்தர் பரியந்த முதவும். 1378

பசும்பாலின் பத்தியம்.

ஆறின் முதனடுவா காவாப்பாலே வளர்க்கு
பீறின்சுவை யிரண்டேற் றெனபர்கார்ப்-பூறினுறுங்
கண்டொக்கு முண்ணென் கனையொழிபாத தோடருந்தப்
பண்டாக்கு முண்ணி பகர்.

(இ-ள்.) பசுவின்பாலைச் சாப்பிடவேண்டுமானால் புளிப்பு துவர்ப்பு உவர்ப்பு கைப்பு கார்ப்பு இனிப்பு என்னும் 6-சுவையில் 1-வதும் 2-வதுமாகிய 4-சுவையுள்ள வஸ்துக்கள் எதனையும் அநுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ணலாகாது சுக்கிலத்தை விருத்தி செய்யும்படியான கடைசியிற் சொல்லிய 2-சுவையுள்ள வஸ்துக்களை அநுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ணச்சிலர் சொல்லுவார்கள். 1379

ஆனாலும், அந்த 2-சுவையில் 1-ஆகிய கார்ப்புள்ள பொருள் நோயுற்றபோது அனுபானமாகக் கொள்ளலாகும் மற்றகாலத்தில் பாலை தனியே உண்ணவேண்டில் அதற்கு அனுபானம் கற்கண்டுப் பொடிபொருந்தும் 8-வகைகருற்றங்கள் நீக்கிய அன்னத்துடன் உண்ணவேண்டில் மதுரமுள்ளபழம் அனுபானமாக பொருந்தும் ஆகலால் இவ்வாறு முறைப்படி உண் என்று சொல்லுவாயாக என்க. அன்னத்திற்கு எப்போதுங் குற்றமேயில்லை யாகினும் பாகபேதங்களுமானல் 7-வகைத்தோஷங்களுண்டாகின்றன. அவைபாவன 1-வது அஸ்னத்தோஷம என்பது கஞ்சி சிககிக்கொள்வதாம். இதனல் தூமம் வினுமம என்கிற அசிரணங்கள் பிறப்பனவாம. 2-வது பிச்சில் தோஷம் அதாவது அன்னங்குழைநதுபோவதாம. இதனல் ஜடராக்கினியணைந்துவிடும். 3-வது அசுசிதோஷம். அதாவது, மயிர்க்கிருமி உமி முதலியவைகளோடு சமைப்பதாம். இதனல் அரோசக ரோகமுண்டாம். 4-வது கொதித்தோஷம். அதாவது, நருக்கரிசி யன்னமாம் இதனல் அலசரோகமுண்டாகும். 5-வது சுஷ்கிலதோஷம. அதாவது, ஆறி உலர்ந்த அன்னமாம் இதனல் விதுமரோகமுண்டாகும். 6-வது தத்ததோஷம். அதாவது, காநதின அன்னமாம் இதனல் சீரணரோகமுண்டாகும். 7-வது விரூபதோஷம். அதாவது, கொழிபலரி யன்னமாம் இதனல் ஆயுள் முதலானவைகள் கெடும். 8-வது அனர்த்துஜ தோஷம் அதாவது நொந்து ஜலம்பிறந்து நூவிழைந்த அன்னமாம் அதனல் அதிநித்திரையும் சீதாதிரோகங்களு உண்டாகும். 1379

பால் அருந்தற்கு நாழிகையளவு கூறல்.

அன்பான் முகூர்த்தத் துளாகடிகைக் குள்ளுனது  
மிப்பான் மனுவர மிர்தாகு-மூப்பாயி  
னஞ்சத்தான் காண்டற் கரியா னகிலமுன்  
தஞ்சத்தா னுண்டவிருந் தாம்.

(இ-ள்.) பசுவின்பால் கறநத மூன்றேமுக்கால் நாழிகைக்குள் அல்லது 5-நாழிகைக்குள் உணணககடவை இவ்வாறுண்டால் அந்தப் பால் தேவாமிர்தததை நிகராகும அக்காலங்களுக்கு மேற்பட்ட பாலையுண்டால் பிரமன் அறிதற்கரிய ஸ்ரீ கயிலாயபதி உண்ட விஷத்தை ஒப்பாகும் என்க. 1380

காலையில் பச்சைப்பால் உண்பதின் குணம்.

கையெரிவு காலெரிவு காமில மிரததபித்த  
மெய்யெரிவு பாண்டுநோய் விந்துநஷ்டம்-வெய்ய

விதயகபம் போம்புட்டி யெய்துஞ்சேய்க் கொவ்வு
முதயமதிற் பச்சைப்பா லுண்.

(இ-ள்.) சூரியன் உதயகாலததில் பருகும் பசுவின்பாலினல் கை கால் உடம்புகளில் எரிவு காமாலை ரத்தபித்தரோகம பாண்டு சிரண சுக்கிலம் உஷ்ணத்தால்பிறந்த மார்புச்சளி இவைநீங்கும், மேனியிடும் அன்றியும் குழந்தைகட்கும் பொருந்தும என்க, இதனைத் தாரோஷ்ணச் சிகிச்சை யென்பர் அதாவது சுறநத சூடுகை ஆறுவதற்கு முன் உண்பதாம். 1381

நெய் அன்னத்தின் குணம்.

வெறுநெய்யுஞ் சோறுமுண்ணில் வீறுபல நண்ணுங்
கிறுகிறுத்த பித்தநோய் கிட்டா-தறிவிக்குங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி கட்டுமிகச் சீரணமா
முண்ணற்குப் பத்தியமா முன்.

(இ-ள்.) நெய்யும்அன்னமும் கலந்துண்ணில் வன்மைவிழிக்குளிர்ச்சி சீரணம் இவை உண்டாகும் பித்தவிகாரம் விலகும் இதுபத்திய உணவாம் இந்தக்கிருதபோஜனசிகிச்சைவிருத்தர் கட்கேமுக்கியமாம்.

எண்ணெய் அன்னத்தின் குணம்.

எண்ணெய்யுஞ் சோறுமுண்ணி லொன்றைக்கு மாபலமாம்
பெண்ணுக் கிளையாத பீடுமுறுஞ்-சண்ணுகின்ற
வாதகப மேகம்போ மாறாப் பசியெழும்பும்
பூதலத்து ளாளும் புகல்.

(இ-ள்.) அன்னத்தில் நல்லெண்ணெய் சேர்த்துண்ணில்வன்மையும் புணர்ச்சியில் திடமும் நல்லதீபனமும் உண்டாம் வாதகபபிரமேகம் நீங்கும். 1383

மாங்கிசங்கலந்துசமைத்த அன்னத்தின் குணம்.

ஊன்மைத்த வனனமுண்ணி லுண்டா மதிகபலம்
போனமே தோதாதும் பூணுங்கா-ளானல்
விரணநோய்க் காகா மிகுமநதச் சீணங்
தருணகப் பிததசம னம்.

(இ-ள்.) மாமிசஞ்சேர்த்துப் பாகஞ்செய்த அன்னத்தை புசிக்கில் மிகுபலமும் விர்த்தி மேதோதாதுவும அதிமநதமு முண்டாம் க்ஷிணஞ்செய்யாகின்ற கபாரமபமும் தத்தமும் சாந்தியாம்; விரணத் தோருக்காகாது. 1384

சமைத்த துவரம்பருப்பின் குணம்.

தண்ணக் குறிஞ்சித தலத்தாடகிப் பிளப்பை
வண்ணச் சுடறற்குள் வைத்தாக்கி-யுண்ணற்
கடிக்கும் பசுவின்று மாச்சிபத்தோ டுண்ணிற்
பிடிக்குப் பிடிசதையாம பேசு.

(இ-ள்.) சீதளமுள்ள மலைநாட்டுத் துவரம்பருப்பைவெந்நீரிலிட்டுச்சமைத்துப் போஜனமுதலிய பசுவிநெய்யுடன் அன்னத்திற் கலந்துண்ணில் ஒருபிடி அன்னத்திற்கு ஒருபிடிசதைவளரும் என்க குறிஞ்சி நிலவஸ்துக்கள் மிருவன்மையுள்ளவை யாதலால் அந்நிலத் துவரையை விசேஷமாக கூறினர். 1385

நெய்ச்சேர்த்துண்பதின் குணம்.

பருப்பிலெழு வெப்பும் பருங்குடன் முறைப்புந்
திருப்புறு முன்மலத்தின் சிக்குந்-தரிப்புறு
மெய்க்குள்ள காந்தி விலா தழகுறுநன்
னெய்க்குள்ள வுண்மை நெறி.

இதுவுமது.

புத்தியுங் சிக்குவைநோய் போயொழியு நேத்திரத்தின்
மெததவொளியும விளங்குங்காண்-பித்தமொடு
வாதகப மாறு வறட்சியெல்லா-நீக்கும்
கோதின்று நெய்யைக் குடி.

(இ-ள்.) போஜன ஆரமபத்தில் நெய்சேர்த்துண்பதில் துவரம் பருப்பினது உஷ்ணம குடல் விருத்தல் பழைபமலபநதம் சிக்வாகண்டரோகம் பித்தாதிக்கம் வாதகபதோஷம் நீங்காச்சொறி இவைநீங்கும், அதிஞாபகம் தேஜசு வனப்பு கண்ணுக்கு ஒளிவுண்டாமென்க.

பொரியலின் பேதகுணம்.

காரமிகு பொரியல் காயகதனிற் கபத்தைச்
சேற வுறவாக்குந் திண்ணமே-சோரப்
புளியிட்டிடும் பொரியல் போர்மந்தத் தோடு
வளியிட்டிடு மனத்துள் வை.

(இ-ள்.)உறைப்புசுவையதிகரித்தபொரியல்கபத்தைதரும் புளிச்சுவைமிகுந்தபொரியல் அலசநோயையும்வாதபிணியையும் விளைக்கும்

### வாலின்பேத குணம்.

இளவருப் பானமந்த மெழுப்புங் கருக
ளுளவறுப்பான் முத்தோட மோங்கு-மளவருத்த
மையுவறற் பிணிக்கும வாதமடு மாயினஃ
தைவறற் பிணிக்கு மாம.

(இ-ள்.) இளவருப்பாகவறுத்த பதார்த்தத்தினல் மந்தமும் கருகும்படி வருக்கில் வாதபித்த கபதோஷங்களும் உண்டாகும் இவற்றில் இரண்டிற்கும் நடுத்தரமாக வறுத்தகறிகள் தொந்தவாதத்தை நீக்குவதுமன்றி கபசம்மந்தமான சகலதோஷங்களுக்கும் உதவும்.

### பச்சடியின்பேத குணம்.

புளிப்பான பச்சடியாற் போம்பித்தங்கார்த்தல்
விளைப்பான பச்சடிக்கை வாத-மிளைக்கு
மினித்த பச்சடிக்கருசி யேகுந் துவராற்
சனித்த பச்சடிக்குறும் வாதம.

(இ-ள்.) புளிச்சுவையுள்ள பச்சடியால் பித்தபிரகோபமும் உறைப்புப் பச்சடியால் சிலேஷ்மவாதமும், இனிப்புப்பச்சடியால் ஆரோசகமும் நீங்கும், துவர்ப்புள்ள பச்சடியால் வாதாதிக்கம் உண்டாம்.

### துவையலின் பேதகுணம்.

புளிப்பாமுலைத்துவையல் போக்கும பித்தத்தைப்
புளிப்பா லமைதுவையல் பொல்லா-புளிப்பில்
வெறுந்துவையா னன்றதற்கு மிக்க வுறைப்பிட்ட
நறுந்துவைய னன்றினு நன்று.

(இ-ள்.)புளியாரைமுதலிய புளிப்பிலைத்துவையல் பித்தகோபத்தைநீக்கும். வெறும்புளித்துவையல ரத்தத்தை முறிப்பதால் நன்மையன்று புளிசேராத்துவையல் நலமாம், அதிககாரம் சேர்ந்த நல்ல துவையல் பசியையெழுப்புவதால் உத்தமத்திலுத்தமமாம் என்க.

### குழம்பின் பேதகுணம்.

சொல்ல வுறைக்குங்குழம்பாற் ரோனரு தனிலமஃ
தில்லையெனில் வாத மிருக்குங்காண்-தொல்லுலகி
னீர்த்த காரக்குழம்பா னீடுமுத்தோட முன்பின்
பார்த்தோடு மென்றே பகர்.

(இ-ள்.) உறைப்புள்ள கொழம்பால், வாததோஷம் சனிக்காவாம் அவ்வாறில்லாக்குழம்பால் வாதசின்னம் உண்டாம், காரத்தோடும் நீர்க்கவைத்தகுழம்பால் வாதாதி முத்தோஷங்களும் விலகும். 1391

துவரம்பருப்பின் ரசகுணம்-கலிப்பா

நவரைவாழைக்கனி பலவின் கனி
நல்லமாங்கனி பாலொடுநெய்க்கறி
சுவரிலப்பொழுதே மந்தமாம்பரி
காரங்கேட்கும் பயித்தியக்காரரே
யெவருங்காண்க வறைகுதுமன்னத்தி
லிட்டுனுங்கரி தன்னுடன்கூடவே
துவரைநீர்மிளகுள்ளி யிட்டுக்கொளீர்
துவட்டவாதமுக துஞ்சிடுமுண்மையே

(இ-ள்.) வாழை பலா மாஎன்கின்ற முப்பழங்களையும் பால்நெய்க் கறிகளையும் மிதமின்றிப்புசிக்கில உடனே அக்கினிமந்தம் பிறக்கும், அதை நீக்குதற்கு வகையரியாது சிகிச்சைவினவுகின்ற பித்தர்களே கேளுங்கள், துவரம்பருப்புக் கட்டிறுக்த சலத்தில் மிளகு வெள்ளைப் பூண்டுமுதலிய சம்பாரங்கள்சேர்த்து ரசம்வைத்து அதை நற்கறிகள் சேர்த்தவுணவுடன் சேர்த்துண்ணில் மேற்கூறிய அக்கினிமந்தமும் வாதபிரகோபமும் நீங்கும். 1392

காடைச்சாற்றின் குணம்-விருத்தம்.

பொற்றொடிமாதேகண்ணின் புண்ணோடுபிணியல்லாம்போம்
வற்றியவுடற்பருக்கும் வாதபித்தகையுமேகுஞ்
சுற்றியகிராணிகுன்மஞ் சுரம்பலசுவாசகாச
மாற்றிடுங்காடைச்சாற்று லாவியும்வளருங்காணே.

(இ-ள்.) பொன்னாலாகிய வளையல்களை யணிந்த பெண்ணே! காடைச்சாற்றினால் போதகிவர்த்தமமுதலிய சிலநேத்திரரோய்கள் சந்நிபாததோஷங்கள் கிரகணி வயிற்றுநோய் சுரம் சுவாசம் காசம் இவைபோகும் இளைத்தவுடம்பு பருக்கும் ஆயுளும் வளரும் என்க.

கொள்ளுச்சாற்றின் குணம்-விருத்தம்.

வற்றியவுடம்புதூணும் வாதமும்பித்துங்குக்கி
சுற்றிய கிராணிகுன்மஞ் சுரம்பவசுவாசகாச
முற்றடர்கண்ணின்புண்ணோ டுறுபிணியொழியும்வெப்பைப்
பெற்றிடுகொணச்சாற்றாற் பெருஞ்சலதோடம்போமே.

(இ-ள்.) சூடுள்ளக் கொள்ளுச்சாற்றால் சுட்கியதேகம் பருப்பது மன்றி ஸ்தம்பம்போல் உரக்கும், வாததோஷம்பித்தகோபம் கிரகணி குன்மம் ருட்டை சுவாசம் காசம் விழியைப்பற்றிய விரண முதலிய சிலரோய்கள் ஜலதோஷம் ஆகிய இவைநீங்கும்என்க. காணம்-கொள்.

**போஜன முடிவில் தயிர் உப்பு சேருவதின் குணம்-வெண்பா.**

மூத்த தயி ருப்புமுண்ண முண்பிறங்கு வத்துகளின்
கோத்த திரி தோடங் குடிவிலகும்-பூர்த்தியா
யுண்டபிறகு மூற்குநடு வுற்றவையெல் லாம்புழுக்கம்
கொண்டாடச் சீரண மாகும்.

(இ-ள்.) போஜன அந்தத்தில் புளித்த தயிரும் லவணமும் கூட்டி யுண்ண அத்தயிருக்கும் நெய்க்கும் நடுவாகத் தீனிப்பையி லிரங்கியிருக்கிற சகலபதார்த்தங்கூடிய உண்டியிலுள்ள திரிதோஷங்கள் நீங்குவதுந்தவிர அவ்வுண்டி புழுக்கங்கொண்டு நெருக்கமுற்று சீரணமாகும்.

**மோரும் அன்னமும் போசிப்பதின் குணம்.**

மோருமன்ன மும்புசிக்கின் மூலநும் பசிமேக
நீருங்கு தரங்குராமு நீள்பாண்டும்-போராத
தாகஙகிராணி சலமேறு வீக்கமும்போம்
மாக விரணத்தில் விலக்கம்.

(இ-ள்.) மோரும் அன்னமும் கலந்துபுசிக்கில் ஜடாக்கினி அதிகரிப்பதுமன்றிப் பித்தமேகமூத்திரம் மூலமூலம் பாண்டு தாரம் கிரகணி சிலேத்மசோபை இவை விலகும் ரணங்களுக்கு ஆகாது. 1396

**ஊறுகாயின் குணம்.**

உறுகா யெல்லா முதராக்கினி வளர்க்கு
வீறருசி யென்பதையும வெல்லுங்காண்-கூறுகின்ற
வையமொடு பித்த வனிலத்தையுந் தொலைக்குஞ்
செய்யவடி வேற்கண்ணாய் செப்பு.

(இ-ள்.) வேற்கண்மாதே! போசனத்துடன் கூட்டிப்பொசிக்கிற நெல்லிக்காய் முதலிய பற்பல ஊறுகாய்களும் தீபாக்கினியை வளர்க்கும் அரோசகம் சிலேத்மபயித்திய தொந்தம வாததோஷம் இவைகளை ஒழிக்கும். 1397

**உண்டபின் வேந்நீரருந்தலின் குணம்.**

உண்டபின் வெந்நீ ரொருதரமாக் கொண்டாக்கால்
மிண்டுசுரம் வாதம் விதாகமந்த-மண்டுரகத்
தார்ந்த பொருமலும்போ மாயுளுண்டா மாதர்தமைச்
சேர்ந்தணையத் தாதுவுமாகு தேர்.

(இ-ள்.) போசனாந்தத்தில் திருப்தியாகும்படி வெந்நீரை யொருதரமாக உண்டால் ருட்சை வாதாதிக்கம் விதாகம் அசலம் வயிற்றுப்பிசம் ஆகிய இவைபோம ஆயுசும் சுக்கிலமும் விருத்தியாகும். 1398

நீரருந்துஞ் சிரமம்.

தண்ணீரண் ணுண்துண்டாற் சாருஞ் செவிமந்தங்
கண்ணகுனிந் துண்டாற் காசமுண்டாந்-தண்ணீர்
குடிக்கவென்றாற் பாத்திரத்தைக் கோதரவே வாயாற்
கடித்தருந்தத் துன்பமருங் காண்.

(இ-ள்.) நீரை அண்ணாந்துண்ணில் பாதிரியவாதமும் குனிந்தருந்தில் இருமலும் உண்டாம் பாத்திரத்தை வாயாற்கடித்து அருந்தில் ஒருரோகமுமில்லை. 1399

---

# கஞ்சிவகை

பால்கஞ்சி பொரிசேர்ந்தகஞ்சி சுடுகைகஞ்சி இவைகளின் குணம்.

விருத்தம்.

சுரைதருபாலில்வெந்த சோறுகஞ்சிகொள்ளி
லெரிதருபித்தந்தாழு மெழுமதிவிந்துவுந்தான்
பொரிதருகஞ்சிபித்தம் போக்கிடுஞ்சுடுகஞ்சிக்குத்
தரிதருமலமும்வாய்வுந் தாகமும்போகுங்காணே.

(இ-ள்.) பசும்பாலில் பச்சரிசிசேர்த்துக் காய்ச்சிய கஞ்சியால் பித்தஎரிவுநீங்கும் புத்தியும் சுக்கிலமும் விருத்தியாம் நெற்பொரிக் கஞ்சி பயித்தியதோஷத்தைப் போக்கும் சாதத்தில் வடித்த சுடுகஞ்சிக்கு, பலமும் வாதரோகமும் தாகவிடாயும் விலகும் என்க. 1400

கொள்ளுக்கஞ்சியின் குணம்-வெண்பா.

கொள்ளுந் தண்டுலமாய்க் கூட்டியடும் கஞ்சியது
கொள்ளுங்காற் றீபனதனைக் கூறுவதே-யெள்ளே
நசுக்கிப் பிழிபலமு நல்விந்து விந்துவுமே
வசிக்கும் கிழவர்கட்கும் வை.

(இ-ள்.) கொள்ளும் அரிசியும் சேர்த்துக் காச்சிய கஞ்சியைக் குடிக்கில் அதிகபசி எள்ளேக்கையாற் கசக்கிப் பிழியும்படியான பலம் வீரிய விருத்தி ஆகிய இவைகள் கிழவர்களுக்கும் உண்டாகும். 1401

ஏவர்க்கஞ்சியின் குணம்.

துன்பன்றி யின்பருளச் சுட்க கபத்தோரு
மென்பன்றி மூன்பசை யிழந்தோரும்-போத
போய்ச்சுலுடன் வீழ்வாரு முன்னேயடுப் பாரென்னிக்
காய்ச்சேவாக் கஞ்சியுரை காண்.

(இ-ள்.) துன்பமேயன்றி யின்பந்தராத சுட்க பகரோகிகளும்சரீரமுழுதும் எலும்புதவிர மாமிசப்பசையிழந்தவர்களும் பலமற்றுக்கைகால் ஓய்ந்துவிழுகின்றவர்களும உனனைப் பிரார்த்திப்பாரேயாகில் அவர்களுக்கு ஏவா அரிசிக்கஞ்சியையே மருந்தாகக்கொடுப்பாயாக.

கோதுமைக்கஞ்சியின் குணம்.

கோதுமைக் கஞ்சி கொடுஞ்சுர நீரேற்றமிவை
காதுமைக்குஞ் சங்கிக்குங் காதரமே-போத
வுடலுக் திடமாமெலிவண்டுமே கூற்றுங்
கடலும் பணிவிழியே காண்.

(இ-ள்.) வண்டும் சமனும் கடலும வணங்கும் விழியாளே! கோதுமைக்கஞ்சியானது, வாதசுரட ஜலதோஷம கபம் சந்நிபாதம் இவைகளை விலக்கும் தேகத்திற்கு வன்மையைத்தரும். 1403

சிறுபயறு உளுந்து பச்சரி இவைகளின் கஞ்சிக்குணம்.

சிறுபருப்புக் கஞ்சிபித்தந் தீர்க்கு முழுந்தி
னுருபருப்புக் கஞ்சிவளிக் கூக்க-முறியகபம்
பச்சரிசிக் கஞ்சி பவனகபத்தைப் போக்குங்
கச்சிறுக்குங் கொங்கையின்னே காண்.

(இ-ள்.) வாறினைவிறுக்கிய கொங்கைகளே யுடையவளே! சிறுபயறும் பச்சரிசியும் சேர்த்துக் காய்ச்சியகஞ்சி பித்தகோபத்தை விலக்கும். உழுந்து சேர்ந்தகஞ்சி வாதத்திற்கு உரப்பாம். பச்சரிசிக்கஞ்சி வாதசிலேஷ்மததைப்போக்கும் என்க. 1404

கஞ்சி அன்னத்தின் குணம் விருத்தம்.

கஞ்சியன்னத்திற் காயமபருத்திடு
மஞ்சிவெப்பமகலுஞ் சிலேஷ்மமோ
டுஞ்சிற்றிடு மேனியினுத்திடும
பஞ்சிபோலப் பறந்திடும்பித்தமே.

(இ-ள்.)வடித்தகஞ்சியும்அன்னமுமாய்க்குடிக்கில், தேகந்தூலித்தலும் ஒளிவும்கபாதிக்கமுண்டாகுமு; வெப்பமும்பித்தகோபம்போம்

புனர்பாகத்தின் குணம்-வேண்பா.

புனற்பாக முத்தோடம் போக்கு மருந்தி
னனற்பாகந் தனனை யடக்குக்-தனிக்குணங்க
ளும்மட்டோ வாய்க்கிதமா மாரோக்கியங் கொடுக்குங்
கம்மிட்ட பூவனமே காண்.

(இ-ள்.) இலக்குமியனையாளே! புனர்ப்பாகமான துவாதாகிமூன்று தோஷங்களையும் சுரவெப்பத்தையும் போக்கும்; குடிப்பதற்கு இதத்தையும் சரீரசவுக்கியத்தையும் தருமென்க. புனர்ப்பாகம் என்பதுஒரு தரம்வடித்த அன்னத்தை மறுபடியும் வெவ்வேறு உலையிலிட்டுவடித்தும் வடித்து அதை மறுவுலை பாய்ச்சிச் சலரூபமாகக் கொடுப்பதாம். இதனைத் தாரகபத்தியம் என்பர். 1406

பஞ்சமுஷ்டிக் கஞ்சியின் குணம்.

பஞ்சமுட்டிக் கஞ்சிநெடும் பட்டினிற் கொள்ளுங்கால்
விஞ்சனில பித்தகபம் வீறுவாம-விஞ்சு
மிளைப்பகற்றுந் தாரக விலஙகணத்திற் கேற்கும்
திளைப்பவெழும பூண்முலையே செப்பு.

(இ-ள்.) அனுபவிக்கப் பூரித்தெழுத தனங்களையுடையாளே! தாரகபத்தியத்திற் குதவாநின்ற பஞ்சமுஷ்டிக்கஞ்சியை, நீடித்தலங்கனமுடிவில் அருந்தில், திரிதோஷவிகாரம் அதிகரிக்காது ஆயாசம் நீங்குமென்க. பஞசமுஷ்டிக் கஞ்சியாவது துவரைஉழுந்து கடலைசிறுபயறு பச்சரிசியிவை 5-ல் 1-கது ஒருபிடியெடுத்துத தனித்தனியே மெல்லிய சீலைகளில் முடிந்து ஒருபாத்திரத்திற் போட்டு அதில் ஆற்றுச்சலம் 2-படிவிடுத்து 8-ல் ஒருபங்காகக் காய்ச்சுவதாம். 1407

முடிச்சுக்கஞ்சியின் குணம்.

வாயுசுர நீரிரத்த மாறும் பசியெழும்பு
மேயுமப லந்தணிக ஞண்மையே-யாயுங்கா
ளுண்டி பருத்திடுமெய் யுண்ணுமேல்கும் முடிச்சுச்
சுண்டியநீர்க் கஞ்சினுற் சொல்.

(இ-ள்.) அரையாழாக்கு அரிசிக்கு இரண்டுபடி சலம்விட்டு அரைப்பலம் சுக்கை சிவிக்தரித்துத்துணியில்முடிந்து அதிற்போட்டு நாவிலொருபங்காகக் காய்ச்சிய கஞ்சியின்தெளிவைக் குடிப்பதினால், வாதசோகம் வெப்பம்வெந்து இறங்குகிறமூத்திரம் பித்தாதிக்கத்தாலுண்டாகிய சிற்சிலநோய்கள் குடலைப்பற்றிய செரியாமைத்ம்முதலிய ரோகங்களும்நீங்கும், உதாராக்கினிவிருத்தியும் போஜனபெருக்கமாம்.

வடிகஞ்சி உறைகஞ்சி கோதிகஞ்சி இவைகளின் குணம்.

கஞ்சியெலா மந்தமவை கண்ணுக்குத் தான்குளிர்ச்சி
விஞ்சிவரும பித்தமது விட்டகலு முஞ்சு
மதிகஞ்சி வாயுவதி சீதஞ் சேர்க்குங்
கொதிகஞ்சி வெட்டையைப் போக்கும்.

(இ-ள்.) சாதத்தினின்று வடிக்கப்பட்ட கஞ்சிகளெல்லாம்மந்தமே யானாலும். விழிக்குக்குளிர்ச்சியாம். இவற்றால் பித்தகோபம் நீங்கும். காலாதீதப்பட்டுத் தயிரைப்போலுறைந்த கஞ்சியானது, வாதாதிக்கத்தையுங்கபப்பெருக்கையும் உண்டாக்கும. சாதம்வேகும்போதுமீட்கின்றகொதித்தண்ணீரென்கிற கஞ்சி, நீர்ச்சுருக்கைப் போக்குமென்க.

### பழஞ்சோற்றின் குணம்.

பழஞ்சோற்றை யுந்தப் பழைய நீராகாரக்
கொழுஞ்சேர்க்கை யோடுதயங் கொள்ளி-லெழுந்தாது
பித்தவாதம்போம பெருப்பசியா மெய்யெங்கு
மெத்தவொளி யுண்டாம விரி.

(இ-ள்.) இரவில்நீர்வூட்டிய அன்னத்தை அந்நீராகாரத்துடன்சூரியோதயகாலத்தில் அருந்தில், சுக்கிலவிருத்தியும் உஷ்ணாக்கினியும் சரீரமுழுவது தேஜசும் உண்டாம். பயித்திய வாதவிகாரமும் விலகும்.

### மோர்சேர்ந்தபழையதின் குணம்.

மோரும் பழையதுமாய் மோரெடுக்க வுண்டார்க்குத்
தீரு மெரிவெல்லாஞ் சேயிழையே-தீராத
பித்தப் பிணியும் பிரமைநோயும் பறக்கு
முற்றகபந் தாக்குமிகு முன்.

(இ-ள்.) புராதன அன்னத்தில் மோர்சேர்த்துத் திருப்தியாகவுண்பவர்களுக்கு தேகஎரிச்சலும் பித்தரோகமும் பிரமைமுதலியநோயும்நீங்கும் சிலேஷ்மாதிக்கமும் நித்திரையும் அதிகரிக்கும். 1411

### புளித்தசோற்றின் குணம்.

புளித்தபழங் காடியன்னம பொங்கனலா னாளுந்
தளிர்த்தபித்த கோபத்தைச் சாடும்-வெளுத்தமல
மந்தத்தை நீருக்கும் வாதத்தினையொழிக்கு
மந்தமுறு மணங்கே யாய்.

(இ-ள்.) புளித்த பழைய கடிச்சாதம் உஷ்ணமாய்ப் பித்தாதிக்கம்மந்தத்தினால் வெளுப்பாக இறங்குகிறமலம்வமனம் இவைநீங்கும்

### ஊசியசோற்றின் குணம்.

ஊசலன்ன முண்டாலுடனே வருமுறக்கம்
பேசுவதேன் வாதம் பிரபலமா-மாசித்துச்
சீதளமும் பித்தமும் விசேடிக்கும் வள்ளையொத்த
காதளவு நீள்விழியாய் காண்.

(இ-ள்.) நீண்டவிழியாளே! ஊசிய அன்னத்தை உண்ணில் உடனே நித்திரைவாதகோபம்சீதாதிக்கம் பித்தவிருத்தி இவையுண்டாம்.

கூழ், களி இவைகளின் குணம்.

கேழ்வரகின் கூழாற் கிளர்வாத பித்தமொடு
வூழ்வயிறுஞ் சாந்தமென விள்ளுவர்காண்-காழாங்
களிக்கும் பலமுண்டாங் காணிலதிவாதந்
தளிர்கரு முலகிளைதைச் சாற்று.

(இ-ள்.) கேழ்வரகின் கூழினுல் வாதபித்தமிஸ்ரம் உதரரோகமும் நீங்கும் என்பர் மேற்படி களிக்கு வன்மையும் வாதகோபமும் உண்டாம் என்க. 1414

கம்புசாதத்தின் குணம்.

கம்பினது சாதத்தாற் காச்சுவாசஞ் கிரங்கும்
பம்பு முடலமிகப் பாரிக்குஞ்-செம்பாலோ
வற்றவது மன்றிநிற மாறுமென்பார் வாமமெலா
முற்று முலைமாதே மொழி.

(இ-ள்.) பெண்ணே! கம்பஞ்சாதத்தினுல் உதிரஞ் சுண்டுவது இருமல் இரைப்பு விரணம் சரீரந்தூரித்தல் விவர்ணமிவையுண்டாம்.

தினையின் மாசாதம், கஞ்சி இவைகளின் குணம்.

தினைமா கபவாதந் தீர்க்கு மதன்சாதம்
புனைபித்த மாயினுநற் போகந-தனைகொத்து
வாதம் போக்குங்கஞ்சி மாசோபைத் தோடமிதன்
பேதம் போக்குமெனவே பேசு.

(இ-ள்.) தினைமா சிலேஷ்மவாததொந்தத்தைவிலக்கும் மேற்படி சோறு பித்தகுணத்தை யுறறிருந்தாலும் வீரியத்தைவிருத்திசெய்துவாதகோபத்தை நீக்கும கஞ்சி வீக்கதோஷவருக்கங்களை ஒழிக்கும்

சாமைச்சாதம், அதன்கஞ்சி இவைகளின் குணம்.

சாமைச்சோ றுண்டாற் றனிவாதங் கோழைகபந்
தீமைக்கா தாரமாய்ச் சேர்சோபை-போமெத்தப்
பித்தமொடு தாதுவுமாம் பேசுமதன் கஞ்சிக்கு
முத்தோடம் போகு மொழி.

(இ-ள்.) சாமைச்சாதத்தை உண்ணில் வாதரோய் க்ஷயம் சிலேஷ்மவிருத்தி வீக்கம் இவைபோம பித்தமும் சுக்கிலமும் விருத்தியாம் அதன்கஞ்சிக்கு வாதாதி மூன்றுதோஷங்களும் விலகும் என்க.

வாகுச்சாதத்தின் குணம்.

எரிகபத் தோடேபலநோ யெய்தும்வ றட்சி
சொறிசிரங்கு பித்தக தொடரு-நிறையுங்
கரகமெனப்பூரித்த கச்சுமுலை மாதே
வரகரிசிச் சோற்றால் வழுத்து.

(இ-ள்.) பொன்கரகமன்ன புனர்முலையாளே! வரகுச்சாதத்தினால் மூச்செடுகின்ற சுவாசம் இதைச்சேர்க்க சிலநோய்கள் புடைநிணவு கிரகதி பித்தாதிக்கம் இவை உண்டாம். 1418

சோளச்சாதங்களின் குணம்.

கம்பினது சாதத்தாற் காச்சுவாசஞ்சிரங்கும்
பம்பு முடலமிகப் பாரிக்குஞ்-செம்பரலோ
வற்றுவதுமன்றிதிற மாறுமெண்பார் வாமமெலா
முற்று முலைமாதே மொழி.

(இ-ள்.) பெண்ணே! கருமைவெண்மை செம்மை என்னும் சோளச்சாதங்களினால், தினவும் விரணமும் காப்பானும் அதிகரிக்கும் நல்லௌஷதமும் கெடும். 1419

காடைக்கண்ணிச்சாற்றின் குணம்.

எரிவொடு பித்த மெழும்புமைய வாதங்
கருகிமுடிக்கோடிக் காக்கு-மரியசந்த
வாடை பொடிமணக்கு மாமுலை மாதேயுலகில்
காடைக் கண்ணிச்சோற்றைக் கண்டு.

(இ-ள்.) களபமணக்கு முலையாளே! காடைக்கண்ணிச் சாதத்தினால் சரீர எரிச்சலும் பித்தாதிக்கமு முண்டாகும். கபவாததொந்தம் ஒளிக்குமென்க. 1420

சித்திரன்ன பாற்பொங்கலின் குணம்-விருத்தம்.

ஒப்பில்லாப் பாலில்வெந்த வுயர்சுவை யன்னமுண்ணில்
வெப்பில்லா வாதமுண்டாம் வெவ்வழற் பித்தந்தாழுந்
தப்பிலா விதிநெய்வெல்லஞ் சார்ந்திடுந் தன்மையாலே
செப்பிலக் கபமேலாடுஞ் செம்பித்தமொடுங்குங்காணே.

(இ-ள்.) உருசியுள்ள பாற்பொங்கலருந்துவதினால் தனிவாத கோபமும், இதில்நெய்யுஞ் சருக்கரையுஞ் சேருவதால் சிலேஷ்மாதிக்கமும் உண்டாகும். சுராந்தத்தில் சனித்தபித்தமும் நீங்குமென்க.

### பருப்புப்பொங்கலின் குணம்-வெண்பா.

போகமிக வுண்டாகு பொங்கிய பித்தந்தணியு
தேகமதில் வாதமிகச் சேருங்காண்-வாகார்
பொருப்புப்போல் விம்முமுலைப் பூங்கொடியே பச்சைப்
பருப்புப் பொங்கற்சோற் றதைப் பார்.

(இ-ள்.) குன்றனைய தனத்தாளே! பச்சைப்பருப்புப் பொங்கல் அன்னத்தினால் வீரியவிருத்தியும் வாதப்பெருக்கமும் உண்டாகும். பித்தகோபமும் விலகுமென்க. 1422

### சருக்கரைப் பொங்கலின் குணம்.

வாயினரோ சகத்தை மாற்றிபவமனம் போக்கு
மாயில்பித்த கோபத்தை மாற்றுங்காண்-நேயச்
செருக்கரை செங்கோளாற் றிருத்துமட மாதே
சருக்கரைப் பொங்கற்சாதங் காண்.

(இ-ள்.) பெண்ணே! சருக்கரைப்பொங்கல் அருசி வாந்தி பயித்தியம் இவைகளை நீக்கும். 1423

### மிளகோதனத்தின் குணம்.

மிளகோ தனமருந்த விமமுகின்ற வாத
மிளகும் பசியு மெழும்புங்-களகளெனக்
கூவும் வயிற்றின் குடலிரைச் சலுங்கபமுந்
தாதுபித்தமுந் தணியுஞ் சாற்று.

(இ-ள்.) மிளகோதனம் உண்பதினால் பொருமுகின்ற வாயுகுடலிரைச்சல் சபாதிக்கம் பித்தகோபம் இவைவிலகும் தீபனமுண்டாம்.

### புளியோதனத்தின் குணம்.

வாந்தி யுரமொழிய வாய்நீர்ச் சுரப்போகுஞ்
சாந்தியுறப் பித்தமது சாந்தியாம்-வாய்கத
வளியோ வயிலோ வெனவையுறச் செய்கணணாய்
புளியோ தனத்தால் புகல்.

(இ-ள்.) வண்டோ வேலோவென்றையுறுங்கண்ணாளே! புளியோதனத்தால் வமனவேகம் அருசி பயித்தியமும் போம். 1425

### கடுகோதனத்தின் குணம்.

உரியகடுகும் புளியு மொவ்வக்கலந்தே
யரியமனத்தோ டமைத்த வன்னம்-பருகினல்
வாதமொடு வையமும் பின்வாங்கி விழிகதோடுஞ்
சீதமலர் திருவே வோது.

(இ-ள்.) கடுகும் புளியும் சேர்ந்தமைத்து அன்னத்தை உண்டால் வாதமோஷம் சிலேஷ்மமும் ஒழியுமென்க. 1426

### என்ளோதனத்தின் குணம்.

செப்பரிய வாதபித்தத் தீமை யகலுங்கபம்
அப்பி வளரு முடலிருகு முப்பாழத்தின்
கள்ளோதுஞ் செய்ய களிமொழியே நீ கேளா
எள்ளோ தனத்தினு லே.

(இ-ள்.) என்ளோதனம் உண்டால் வாதபயித்திய தொந்தம் விலகும். சிலேஷ்மாதிக்கமும் தேகவலுவும் உண்டாகுமென்க. 1427

### உழுந்தோதனத்தின் குணம்.

எஞ்சுகப வாதமிக வேறுமதி மந்தமும்
விஞ்சுபித்தர் தாழு மெய்யுரக்கு-மஞ்சு
மெழுந்தோதம புக்கு மினியநடை மாதே
வுழுந்தோ தனத்திற் குறை.

(இ-ள்.) இனியநடையாளே! உழுந்தோதனத்தால் சிலேஷ்மவாத தொந்தம் அலஜரோகம் சரீரதிட மதிகரிக்கும் பித்தகோபம் நீங்கும்.

### ததியோதனத்தின் குணம்.

ஆறு வழலகற்று மாந்தபித்த நோய்போக்குந்
தேறுத மெய்யைமிகத் தேற்றுங்காண்-மாறு
மதியோதை கொள்ளுங் வதன மயிலே
ததியோ தனமெலாஞ் சாற்று.

(இ-ள்.) சந்திரவதனியே! ததியோதனமானது மாறு உட்சூட்டையும் பித்தரோகத்தையும் விலக்கும், உடலையிரட்சிக்கும் ஆதலால் இது சிறந்ததெனக் கூறுவாயாக. 1429

### கட்டமுதின் குணம்.

சூலைசுக்கி லாஸ்மரி சுவாச காசங்கண்ட
மாலை முதலியநோய் வந்தணுகு-யாலுலகிற்
றுட்ட பிரதமொடு தொனமேக மும்பறக்குங்
கட்டமுதை யேயுண் ணுங்கால்.

(இ-ள்.) கட்டமுதை நிதநியமும்புசிப்பையாகில் தேகமுற்றினுங் குத்தல் சுக்குலாஸ்மரி இரைப்பு இருமல் கண்டமாலை முதலியரோகங்கள் உண்டாகும், ரத்தபிரமேகமும் ஒழுக்குவெள்ளை நிவிர்த்தியாம்.

---

# பலகார வகை

### உளுந்துவடையின் குணம்.

மேறுமுழுந்திற் செய்வடைக்கு மென்மேலும் வாத
முறும்பித்தஞ் சற்றே யொடுங்கு-நறுநதீ
பனம்போம் புசிப்பிற் பருககனருய் வாவி
பயனம்போ னடையா யறி.

(இ-ள்.) அன்னநடையாளே! சுத்தஉழுந்திற்செய்தவடைக்கு வாதாதிக்கமாம் பித்தகோபமும் உதிராக்கினியும்கெடும், இதை உண்டியோடுண்ணில் நலமாம்.

### தயிருழுந்தின்வடைக் குணம்.

உழுந்தின் பருப்பை யுலர்த்தி யூறச்செய்
தழுந்தா தரைத்து வடையாக்கிச்-செழுந்தேனிற்
கூட்டியுண வையபித்த சோபையறு மூதையிலே
நீட்டிவேர் கண்மாதே தேர்.

(இ-ள்.) வேற்கண்மாதே! உளுந்தம்பருப்பைப் புளித்ததயிரில் ஊறவைத்துப்பெரும்படியாக அரைத்துபாகமாகசுட்டவடையை நல்ல தேனில் தோய்த்து உண்ணிற் சிலேஷ்மபயித்திய ரோகமும் வாத தோஷமும் நீங்கும் என்க. 1432

### பேயன்வாழைக்கனிசேர்ந்த வடைக் குணம்.

பேயன் கதலியுலம் பெய்தமா ழுந்தின்வடை
கேழுயற வமைத்து நித்தலுமே-கோபமுடன்
றுனருந்தில் வாதபித்தந் தாகமிலே கொண்டமருந்
தேனருந்தாத தேனே தெளி.

(இ-ள்.) தேன்போன்றவளே! பேயன்வாழைக்கனி சேர்த்த உழுந்துவடையை செய்த்தொட்டுத் தினமுண்ணில் திரிதோஷங்கள் அதனதன் இடத்தை உற்றிருக்கும். 1433

### தோசையின் குணம்.

மிருகத் தெழுந்த பித்தத்தை வீறுதடக்கு
மகத்துள்ளனில் கப மாற்றுஞ்-சகலத்திலுறு
தோசை பெருமயிலே தின்னரிசேர் மாழத்தின்
றோசைக் குணமிதனைச் சொல.

(இ-ள்.) அழகுபொருந்திய பெண்ணே! உழுந்தும் அரிசியும் சேர்த்துச்செய்ததோசையானது பித்தகோபத்தையும் வாதசிலேஷ்ம தொந்தத்தையும் நீக்கும் என்க. 1434

### சம்பாரதோசையின் குணம்.

காயமிள கிஞ்சி கருவேப் பிலை முதலாஞ்
தூயபல காரமிட்ட தோசைக்கு-வாயுவிலை
பித்தகப வேகப் பெருக்கொழியுந் தாதுவுமாஞ்
சுத்தவன சத்திலிலே சொல்.

(இ-ள்.) இலக்குமியாளே! பெருங்காயம் மிளகு இஞ்சி கருவேப்பிலை முதலியபரிசுத்த முள்ளபலசம்பாரஞ் சேர்த்ததோசைக்கு வாததோஷமும் பயித்தியசிலேஷ்மகோபமும் விலகும், சுக்கிலவிருத்தி. ()

### சுத்த இட்டிலி, சம்பார இட்டிலி-இவைகளின் குணம்.

வெறுமாக்க விட்டலிக்கு வேகமறுங் காரப்
பெறுமாக்க விட்டலியைப் பேசி-லறுமனில
மைய பித்தங்க ளதிகரிக்கு மோமார
னையவெய்யுங் கண்ணாய் நவில்.

(இ-ள்.) மதனைவெய்யுங்கண்ணாளே! உழுந்தரிசி இம்மாவுகளாற் செய்தசுத்த இட்டிலிக்குபித்தகோபமநீங்கும் காரஞ்சேர்த்தமேற்படி மாவுகளாற்செய்த சமபார இட்டலிக்குதிரிதோஷங்கள் அதிகரிக்கும்

### முருக்கின் குணம்.

ஐயமொடு பித்த மதிகரிக்குந் தாழாத
செய்ய வினிலஞ் சிறிகடங்கும்-வைய
கிறுக்குமிரு கற்பையுறு நேரிழையே நாளு
முறுக்கின் குணமா மொழி.

(இ-ள்.) கறபிற்சிறநதவளே! முருக்குளனகிற ஒருவிதபலகாரத்தால் சிலேஷ்மமும் பித்தமும் விருத்தியாகும். வாதகோபங் கொஞ்சந்தணியுமென்க. 1437

### தேன்குழலின் குணம்.

ஓங்குங் கபவாத முட்டினமு மீறிவரும்
வாகுஞ் சலங்கொஞ்ச மந்தமுமாந-தேங்குமிசை
யான்குழலு மியாழுமிக வஞ்சுமொழிக் கிஞ்சுகமே.
தேன்குழலுங் காங்குணத்தைத தேர்.

(இ-ள்.) யாழினிய மொழியாளே! தேன்குழலுக்கு சிலேஷ்மவாதகொந்தமும் வெப்பமும் அதிதாகமும் உண்டாகும்; பசிகொஞ்சம் மந்தப்படுமென்க. 1438

### அதிரசத்தின் குணம்.

ஐயமொடு பித்தமிகு மகாநது திக்க வுறுந்
துய்ய வனிலஞ் சுழிக்குங்காண்-வையத்
தெதிரசத்தை யூர்வோ னெனுங்கற்பு மாதே
யதிரசத்தை நன்று யறி.

(இ-ள்.) கற்புள்ளமாதே! அதிரசத்தினாற் கபமும் பித்தமும் விருத்தியாகும்; தேவரட்சணைக்குரிய சுத்தவாதம் வுள்ளடங்கும். ()

### பிட்டின் குணம்.

செம்புனலும் கட்டுந் தெளியுமுர மாகும்
வெம்பினில முட்புறத்தில் வீருங்காண்-செம்பழத்தை
வட்டைப் பழிக்கும் வன்முலைமா தேயரிசிப்
பிட்டைப் புசிப்பார்க்குப் பேசு.

(இ-ள்.) வன்னமுலைமாதே! அரிசிமாவின் பிட்டு என்கிறபலகாரத்தை உண்பவருக்கு வன்மையும் உள்ளில்வாத வெப்பமும் உண்டாம் மாதர்கட்கு ருதுகாலத்தில் மிதமன்றி ஒழுகுகின்ற உதிரம் கட்டுப்பட்டுத் தெளிவையுறுமென்க. 1440

### மோதகத்தின் குணம்-இதுவே கொழுக்கட்டை.

வாதமுறு மந்தமிகு மாருத வெப்பமுமாஞ்
சீத கபவிருத்தி சேருங்காண்-தீதுறுகட்
போதமுகஞ் செப்பும் பொருப்புநிகர் முலையாய்
மோதக முண்பார்க்கு மொழி.

(இ-ள்.) ஆனை செப்புமலை இவற்றை நிகர்த்த முலையாளே! மோதகத்தை யருந்துவர்க்கு வாதவிருத்தி உதராக்கினி மந்தம் சிலேஷ்மாதிக்கம் ஆகியவைகள் உண்டாகும. 1441

### கோதுமை அடையின் குணம்.

தேகம்பலக்குமதி தீபனமுண் டாகுநிறை
மோகம் பெருபைய மூர்க்கமறும்-கோபமிக
வோதி யடையு முயர்கொங்கை மாதரசே
கோதி யடையைக் கொடு.

(இ-ள்.) சிறந்த கொங்கையாளே! கோதுமை அடையினால் சரவண்மையும் உதராக்கினியும் சுக்கிலதாதுவும அதிகரிக்கும். சிலேஷ்ம கோபம் நீங்கும். 1442

### பொரியுண்டையின் குணம்.

சாந்திபித்த வாதந் தணியும் வனுதகெழுந்த
சுத்தகப வாதந் தொலையுங்காண்-மெத்த
வரியுண்ட வேல்விழியாய் வையகத்திற் சாவிப்
பொரியுண்டை நன்றாய்ப் புசி.

(இ-ள்.) வேல்விழியாலே! பாகிற் சேர்த்துப்பிடித்த நெற்பொரி யுண்டையை யுண்பாயாகில் நலமாம. வாநதி பயித்தியம் வாதகோபம் கபவாத மிஸ்ரம இவைபோம். 1443

### சேர்க்கை அவலின் குணம்.

பானெய்சேர்த் துண்ணிற் பலமாந் ததிகன்மந்தத்
தானெய்து மோரயர்வு தாகமெரி-தேனிருக்கு
மப்புளிய மஞ்சுங்கா லாகுமிரை யொழியு
மெமபுளியும பிததி லவலில்.

(இ-ள்.) அவலில் பாலும் நெய்யும் சேர்த்துவுண்டால் சரீரத்துக் குப்பலம உண்டாகும்; அதை தயிர்களில் கலந்து உண்டால் மந்தம உண்டாகும்; மோரில் உண்டால் கோபமும் எரிவும விலங்கும; சலத் திலூறவைத்து உண்டால் உளியால் வெட்டினால் அதுவும் வாய்மடங் கத்தத்தக்க உறுதியான வாயுவு உண்டாம; ஆகாரமுமவற்றுக்கொள் ளாது ஏதாவது புளிகளில் சேர்த்து உண்டால் பித்தரோகம் நீங்கும்.

### நெற்பொரியின் குணம்.

நெற்பொரியைத் தின்றா னெடுக்தாகம் வாந்திமந்த
மற்பித்த வாத மதமூர்ச்சை-பற்பலவாம்
பேதி யரோசிகை பேருலகை விட்டொழியுஞ்
சாதி மடமயிலே சாற்று.

(இ-ள்.) மயில்போன் றவளே! நெற்பொரியைப்பாகப்படிக்குதின் னில் அதிதாகம் வமனம் மந்தாக்கினி பயித்தியவாத தொந்தம்மத ரோகம் மூர்ச்சை அதிசாரவருக்கம் அரோசகம் இவைகநிவர்த்தியாம்.

### அப்பளம் சோத்தப்பளம் இவைகளின் குணம்.

வாதத்தை யுண்டாக்கும மாபலத்தை யுங்கொடுக்கும்
சீதத்தை மேவுகபந் தீர்க்குங்கா-ணோதுமுழுந்
தப்பளஞ் சோற்றப்பளங்கா லாதிகளவிஞ் சாதுநிலே
யொப்பவளஞ் செய்யு முறை.

(இ-ள்.) உழுந்துமாவின் அப்பளம் வாதப்பெருக்கையும் உடற்குறுதியையும் தரும். ஆமதனைப்பற்றியகபத்தைநீக்கும், அரிசிமாவினுற்செய்த சோற்றப்பளம திரிதோஷங்களை விரைவோட்டாமற் சமப்படும். 1446

**பாயசத்தின் குணம்.**

பாயாசங் கொண்டாற் பழையமலம வாந்திபித்த
மாயாசம் போங்கூறி லற்பமந்தந்-தூயசர்
வேந்திரிய நம்மை யெழில்வலி மனத்தெளிவோ
டாந்தபசி மேதையு மூண்டாம்.

(இ-ள்.) பாலில் நெய்முதலியவை சேர்த்துக் காய்ச்சியபாயசத்தினல் மலபந்தம் வாந்தி பித்தம் இளைப்பு இவைநீங்கும், அற்பமந்தம் பஞ்சேந்திரியங்கட்கு நலம் அழகு பலம் மனத்தெளிவு தீபனம் புத்தி இவை உண்டாம் என்க. 1447

**பரமானத்தின் குணம்.**

பரமானத் தாற்பயித்தி யந்தாக மும்மபோ
மூரமான ரூட்சை யுரக்குந-திரமான
வங்கம் பருககு மதிகபல முண்டாம்
பொங்குமூறு மாதே புகல்.

(இ-ள்.) சிறப்புற்ற பெண்ணே! பரமானத்தால் பித்தகோபமும் தாகமும்விலகும், சுரமும் சரீரபுஷ்டியும மிகுவன்மையும் உண்டாகும்

**அன்னபின்னத்தின் குணம்.**

சோருக்கேண் கூறாக்கந் தூமா வவலிவைக்கண்
கூருக்க நற்பழப்பால் கொள்ளிவைக்கெண்-கூருக்க
மூன்பல மிவைக்கெண் கூருக்கஞ் சுசாசுகத்துந்
தான்பல வகைத்துப்புந் தான்.

(இ-ள்.) அருசுவையோடு மிக்கப்புசிக்கின்ற அன்னத்தால் உடலுக்குண்டாகின்ற பலத்தைவிட, 8-பங்குபலம் மாவும் அவலும் ஆம், இவ்விரண்டைப்பார்க்கிலும 8-பங்குபலம்பாலும் பழமும்ஆம், இவைகளைவிட, 8-பங்குபலம் மாமிசமுமகிழங்கும்ஆம், இவைகளுக்குமேல் 8-பங்குபலம் பற்பலநெய்களும்ஆம், இந்தநெய்கள் இவ்வாறே பலத்தையும் மிதந்தப்பினல் தீமையையும் செய்யும. 1449

**உண்பதற்கு முன்பின் உண்ணுங்கனிகளின் குணம்.**

அருந்தற்கு முன்பருந்த லாமா மகல
மருந்தற்குப் பின்பிலந்தை யாகும்-பொருந்தியயெங்

காலுங் கபித்தக் கனியாகு மாகாவெக்
காலுங் கதலிக் கனி.

(இ-ள்.) புசித்தற்குமுன் கெவிக்கனி பின்பு இலந்தைக்கனி இவ்விரண்டு காலங்களிலும விளாங்கனியும புசிக்காலம், வாழைக்கனி எப்போதுங் கூடாது என்க. 1450

### உண்டபின்பு குறுநடை கொள்ளுதலின் குணம்.

உண்டபின்பு நூரடிவைத் தோங்காக் குறுநடையை
கொண்டவர்க்கு முணபுகுடர் கொண்டபருந்-திண்டியெலாஞ்
சேர்ந்தொன்றாய்ச் சீரணிக்குந் தீயமுத தோடங்களதி
லார்கதோன்ற மாட்டா வறி.

(இ-ள்.) இராப்போஜனம் செய்தவுடன் தனதுகாலால் சிறுநடையாக 100-அடிஉலாவியபின் நித்திரைகொள்பவர்களுக்குமுன்புவுண்ட அன்னத்திற்சேர்ந்தவிஷம், பதார்த்தஙகளெல்லாம ஒன்றுறக்கலந்து சீரணிப்பதுந்தவிர அவ்வுண்டில் திரிதோஷமுஞ் சாராதென்றுணர்க.

---

## பரிமள வகை

### மணக்குழம்புப் பூசுதலின் குணம்.

பூசுமணத் தாலின்ப பூணு மணுக்கிருமி
நாசமுறு மூட்டிக்கு நலம்பலியாந்-சீதசமுறு
நாதவிந்துவும் விரைததீ நண்ணமிக விளையுஞ்
சீதவிந்துவின் குளிர்சிபோக் தேர்.

(இ-ள்.) புசித்தவுடன் பகலிரவிலும் பூசப்பட்ட மணக்குழம்பினால் மகிழ்வும் உதராக்கினிக்கு வன்மைவு இவ்வாசனைபின் சூட்டினல் சோணிதசுக்கிலவிளைவும் உண்டாகும் ரசதாதுவில் ஊறுகின்ற அணுக்கிருமிகளும் சகதிரகிரணததால வராநின்ற சீதளக்குளிரும் நீங்கும். 1452.

### கார்காலமணப்பூச்சியின் குணம்-விருத்தம்.

கார்காலந்தனிற் பூசக்கருப்பூரசந்தங்
 கஸ்தூரியகிற்கூட்டு காகதியுமுண்டென்பார்
சீர்மேவு சிறப்புண்டாஞ் சீர்த்தியுவந்தெய்துந்
 தேகத்தின்வியர்வகனு மிளைப்போடேட்சரம்போங்
கூர்மேவு காசமிழுப் பிருமலிவைவிலகுங்
 குட்சிவாய்வதுதொலையு நேத்திரமுந்துலங்கு

மர்வமிருக்தாகமுறும வீரியமுமுண்ணு
மறிகநென்று கடகநிடுவர்க்கம புவியின்மீதே.

(இ-ள.)மழைகாலத்தில், பரவைக்கருப்பூரம்கஸ்தூரிஅகில்கூட்டு இதுகளைக்கிரமப்படி நல்லசந்தனதநிற் சேர்த்தரைத்துப் பூச அழகு மேன்மை கீர்த்தி விழிக்குட்பிரகாசம இச்சை சுக்கிலவிருத்தி ஆகிய இவை உண்டாம் விபர்வை அபர்வு உட்சாம இருமல்சுவாசகாசம்வாயி ற்றுவலி தாகம இவைவிலகும இது உஷ்ணம் என்பர். 1453

பனிக்கால மணப்பூச்சின் குணம்-விருத்தம்.

பனிக்காலர் தன்னேதலேதடிக் குங்குமசேரம்
பகருமகில்கஸ்தூரி சாந்துசவ்வாதுடனே
பனிப்பகலச்சமஞ்சேர்த்துப் பனிநீர்குழைத்துப்
பண்புபெறப்பூசியிடி லூக்கமுடைமைய தாஞ்
செனிப்பானதாகமொடு பித்தமறுங்கபமபோம்
தினவுகெடும்வீரியமாஞ் செயமுயருமழகாந்
தனிப்பானசெய்யமலர்ந திருவுமருங்கணே வாள்
சவுரியமுஞ்சேருமிகச் சந்தோடமுறுமே.

(இ-ள்.)பனிக்காலத்தில குங்குமப்பூகிச்சிலிக்கிழங்கு அகிற்சாந் து கஸ்தூரி சந்தனம் சவ்வாது இவைகளை முறைமைப்படிப் பன்னீர் விட்டுக் குழைத்துப்பூசில் சரீரபலம தாதுவிருத்தி மாதர் கூட்டம் வனப்பு லட்சுமிவிலாசம வீரியம களிப்பு இவைகள் உண்டாம தாகம் பயித்தியம சிலேஷ்மதோஷம நமைச்சல் ஆகிய இவைகள் நீங்கும்.

மாலையணிதலின் குணம்-வெண்பா.

முல்லைமுத லீடுமண மொய்த்தலர்க ளொத்தணிவாக்
கில்லேயெனுங் தாதுநட்ட மில்லைமா-ரொல்லைமனத்
தூக்கமொழிஞ் சுகமொழியும பூரிப்பு
மிக்க மொழியவரு மேல.

(இ-ள்.) முல்லைமுதலிய பரிமளவாசனையுள்ளமலர்மாலையைப்புனைப வர்கட்கு சுக்கிலதாதுவிருத்தியும் மங்களவார்த்தையையும் மகிட்சி நிறைவும பலர் புகழ்ச்சியும உண்டாம் மனத்துயரம் போகும். 1455

பன்னீரின் குணம்.

பன்னீர் மிகக்குளிர்ச்சி பாராய் சுகசக்திக்
கீந்நீருண ணேரு மிளைப்புமறுஞ்-சந்திகளும்

வாதபித் தையமொடு மானே வியாகுலமும்
பூதலம் விட்டோடும் புகல்.

(இ-ள்.) பன்னீரை ஔஷத அனுபானங்களிற்கூட்டி அருந்தில் சுகசந்நியும சந்நிபாதங்களும் விஷம தனியேகுடித்தால் ஆயாசமும் திரிதோஷங்களும் பனச்சலகடமூா நீங்கும் பன்னீர்ப்பூ சீதோஷ்ண திரவியம் ஆகலால் இதில் இறங்கிய நீரைக்குளிர்ச்சி என்றார். 1456

# தாம்பூலவகை

## தாம்பூலப்பொதுக்குணம்-விருத்தம்.

தக்கோலந் துவருறைப்பு காரமாமச்
சாரங்கடாயமதிற் சிலதோடம்போ
நிற்சாறு கிருமியுக தாகம்பன்னோய்
நிறைபசியாமாதர்குழா னெருங்குமேனு
மிக்கான சுவையுதாஞ் சுறநியாகும்
விடாய்நீங்கு மடிவெளிருந் தானுமுண்டா
மெக்காலுங் கருமமெய்துஞ் சுளையுஞ்சேரு
மெக்கருமட்குமிஃ தேங்குங்காணே.

(இ-ள்.) தாம்பூலரசத்தினால்கிருமி கபம் தாகம் பல்நோய் விடாய் இவைகள் நீங்கும் பசி ஸ்திரீகளின் உறவு நாவுரிசை மலசுத்தி நுண்ணறிவு சுக்கிலவிருத்தி கருமகுணம் அழகு உண்டாம் அன்றியுமது சுபாசுபங்களுக் குதவும் என்க தக்கோலம்-ஏலம் முதலிய வாசனை திரவியம் துவர்-பாக்கு, உறைப்பு-வெற்றிலை, காரம்-சுண்ணாம்பு.

## கோட்டைப்பாக்கின் குணம்-வெண்பா.

கொட்டைப்பாக் கென்றுரைக்கிற் கோழைமலம் போமூலத்
தட்டைப்பார்க் குங்கிருமி சாமந்தக்-கொட்டைப்பாக்
கொதகசுரத் தீர்க்குமருந் துண்டவாய்க்கும் வெடுத்து
மெத்தவுண்ணிற் சோபைவரும் விள்.

(இ-ள்.) கொட்டைப்பாக்கினால் கோழை மலம் மலப்பையினது அடித்தட்டிலிருக்கும் கிருமி இவை நீங்கும் இது சுரநோயுடையவருக்கும் ஔஷதஞ்சாப்பிட்டவருக்கும் வாயிற்போட்டுக்கொள்ள உதவும் அதிகமாகத்தின்றால் சோபாரோகம் உண்டாகும் என்க.

## இளங்கோட்டைப்பாக்கின் குணம்.

வளங்கட் டிலங்கைநகர் வாசியென வந்த
விளங்கொட்டைப் பாக்குண்பார்க் கொன்றுங்-களங்கட்டும்

வாயுவே காமறவன் வல்லருசி யேகுமகத்
தேயுவாகா மறைவே தோ.

(இ-ள்.) வளப்பம்பொருந்திய இலங்கை நகராகிய குழும்புத் தேசத்தி லுண்டாகின்ற இளங்கொட்டைப் பாக்கைத்தின்பவர்க்கு தற்காலத்தில் தொண்டைக்குள் கோழையடையும் வாதமும் நீங்காக் கபமும் வலிய அருசியும் விலகும், பசிவிலகாது, இது ஒலிப்பல்லஎன்க.

இவ்விதபாக்குகளை நீக்கவேண்டுமெனல்.

அதிபிஞ் சதிமுப் பதிபசுமை மேனி
யதிவீரம பூசகிக ளுள்ளாடலதிசொக்க
வுள்ளவிதப் பாககுகளி லொன்றேனு நேரிலதைத்
தள்ளவிதி முக்காலுந் தள்.

(இ-ள்.) மிகவும் இளம்பிஞ்சு அதி முதிர்ச்சி மிகப்புதிது பச்சை புழுவாடல் சோருதல் ஆகிய இக்குணங்களுள்ள பாக்குகளைத் தின்னாமல் நீக்கவும், என்க. 1460

சொற்றைப்பாக்கின் குணம்.

சொற்றைப் பிளவடித்துத் தோயமதி லூறவிட்டுச்
சத்துவர நூறுவிசை தான்கழுவி-வைத்துலர்த்தி
வாசமமைத் துத்தின்ன மந்தமொடு தோடமறுந்
தேக மழகுமுறுஞ் செப்பு.

(இ-ள்.) சொற்றைப்பாக்குகளை இடிக்கது நல்லஜலத்தில் ஒருநாளூறவைத்து நூறுதரங்கழுவி உலர்த்தி அதில் வாஸனையுள்ள முதலிய வாசனைத் திரவியங்களைக்கலந்து தாம்பூலந் தரித்துக்கொள்ளில் அக்கினிமந்தமும் திரிதோஷகோபங்களும் விலகும், ஒளியும் அழகு முண்டாம்.

களிப்பாக்கின் குணம்.

களிப்பாக்குத் திட்டுறுக்காற் கண்டத்துட் கோழை
பொளிப்பாகக் கட்டு மிகுமுண்மை-களிப்பான
பித்த வரோசகம்போம் பேதிமிக வுண்டாகுஞ்
சித்த மகிழ்ச்சியுறுஞ் செப்பு.

(இ-ள்.) களிப்பாக்கைததின்றால் நெஞ்சிற் கோழையும் அதிசாரமும் மனமகிழ்ச்சியும் உண்டாகும் பித்த அருசி ஒழியும என்க.

வெற்றிலையின் குணம்.

ஐய மறுங்கா ணதன்சாரங் கொண்டாக்காற்
பையச் சத்தியம்போம் பைந்தொடியே-மெய்யின்

கடியின் குணம்போகுங் காரவெற் றிலைக்குப்
படியுமுத் தோடமிதைப் பார்.

(இ-ள்.) காரமுள்ளவெற்றிலையின் இரசத்தைப்பருகில் கபம்சீதளம் காணாக்கடியின் துர்க்குணம் திரிதோஷகோபம் இவைகள்ஒழியும்.

கம்மாறுவெற்றிலையின் குணம்.

எட்டிலொன் றிகட்டினீ ரேற்றஞ் சிரோபார
மாட்டிவிடு சந்நி மாந்தமொடு-நாட்டிற்
பரிபக்குரற் கம்மல்வலி பண்டியுப் பிசம்போ
மாறிய கம்மாறு வெற்றிலை.

(இ-ள்.) கம்மாறுவெற்றிலையால் சலதோஷம் சிரோபாரம் சந்நி மந்தாக்கினி குரற்கம்மல் வயிற்றுவலி உப்பிசம் இவைபோம். 1464

கற்சுண்ணத்தின் குணம்-விருத்தம்.

உண்டவனஞ் சீரணமாஞ் செய்ச்சிக்கேகு
முறில்விந் துவிற் கூக்க முருகசாண்வாயில்
விண்டவெயிறிழுகுமறுந் பேதிவற்றும
வெந்தளித் தநீர்ச்சுறுந் தும விலதுமெய்யை
யண்டுபலவிடமொழியுங் கறைபோமீற்ற
மழலுறுபுண்சிரங்குதினை யழுபுண்ணுறுந்
கண்டவுருவன்மீகந் சிரநோய்சந்நி
களுங்கரங்குங்கற்சுண்ணங் காணுங்காலே.

(இ-ள்.) கற்சுண்ணத்தால் அன்னஞ் சீரணமாவதுங்கவிர குடைற்பிடிக்க செய்ச்சிக்குதேபதி வாதபித்தம் பூரான்கடிமுதலிய பல விஷம் காயங்களாலொழுகின்ற ரத்தம் நெருப்புச்சுட்டபுண் சிரங்கு தினவு அளிந்தவிரணங் களநோய் மண்டைப்புற்று தலைநோய் சந்நி இவைநீங்கும் சுக்கிலந்திறத்தப்பலமுமகற்றங்களுக்குறுதி உண்டாம்.

முத்துச்சுண்ணத்தின் குணம்.

முத்துச் சுண்ணந்தான் முதிர்ந்தவந்தி சாரமையுங்
குத்துக் கிருமியொடு குன்மநோய்-நத்தியதோர்
வாத வரோசகமு மாறிவிடு மலர்ந்த
பேதிலுமை மாதே புகல்.

(இ-ள்.) இலக்குமியனைய பெண்ணே! முத்துச் சுண்ணத்தினால் நீடித்த பேதி கபக்கட்டு மலக்கிருமி வயிற்றுநோய் வாத அரோசகம் ஆகிய இவைபோம் என்க. 1466

### தாம்பூலத்தில் காய்ச்சுக்கட்டி சுக்கு லவங்கம் இவைகள் சேருதலின் குணம்.

காய்ச்சுக் கட்டிக்கிறுகுங் கட்டவிழ்ந்த தந்தமங்கார்
பூச்சிக் குமிழாப் புனலிற்சா-மாசசுக
கிலவங்க மாதிகளா லின்புண்டா மின்னுஞ்
சொலவங்க நோயுமறுஞ் சொல்.

(இ-ள்.) காய்ச்சுக்கட்டிசேர்ந்த தாம்பூலத்தினால் அசைவுற்றபற்கள் இறுகும் அந்தசசாற்றினால் மலக்கிருமிகள்கெடும்; சுக்கு கிராம்பு முதலிய மணமருக்கக்கூடிய தாம்பூலத்தினால் முகக்களிப்புண்டாம்; சரீரத்தைப்பற்றிய சிலரோகம அஜீரணம முதலியவை நீங்கும். ()

### தாம்பூலந்தின்னுங் காலபேதம்.

காலை பிளவதிகக் கட்டுச்சி நீரதி
மாலை யிலையதிக மாயருந்தில்-வேலைதிலக்
காலை மலங்கழியு கட்டுச்சி தீபனமா
மாலை மணங்குலவும் வாய்.

(இ-ள்.) தாம்பூலந் தின்னுவதில் காலையில் பாக்கை யதிகமாகச் சேர்க்கில் சரியாக மலங்கழியும் மத்தியானத்தில் சுண்ணத்தை யதிகப்படுத்த நல்ல பசியுண்டாம மாலையில் வெற்றிலை யதிகப்படுத்த வாயில் மணம்வீசும் என்க. 1468

### இதிலின்னதை முதலிற்றின்னவேண்டு மெனல்.

வெற்றிலை முன்னம் வெறும்பாக்கை வாயிலிட்டாற்
குற்றமுறு முறவோர் கூட்டம்போம்-வெற்றிலையை
முன்னிட்டுப் பாக்கருந்து முதறிவோர் தம்மார்பின்
மன்னிட்டு வாழுமபூ மாது.

(இ-ள்.) தாமபூலந்தரிக்குமிடத்தில் முதலில்வெற்றிலையை யன்றிப் பாக்கைமாத்திரம் போட்டுக்கொண்டால் குற்றமுண்டாகும். பந்துக்களின் உறவுநீங்கும முன்னாதாக வெற்றிலையைத் தின்று பின்பு முறைப்படிக்குப் பாக்கு வெற்றிலைகளைத் தின்னவேண்டும் இவ்வண்ணம் நடத்துகிற விவேகிகளிடத்தில லட்சுமிநிலைபெற்றுவாசஞ்செய்வாளென்க துவர்த்தல் சொக்குதல் மூர்ச்சைப் புழுக்களிருப்பதால் இதைமுதலிற்றின்றால் உடற்கு அபாயமநேரிடும் என்பதைக் கருதிக் குற்றமுறும்என்றும் பந்துக்களின் கூட்டுறவுநீங்குமென்றும் சுண்ணந் தடவாத புனிதமுள்ள ஒரு வெற்றிலையை முதலில் மென்று அந்த

சாற்றை விழுங்கில் நெஞ்சுவரளும் கபக்கட்டும் மேற்கூறிய பாக்கின் தோஷங்களும் விலகுவதால் லட்சுமிவாசஞ் செய்வாளென்றும் கூறினர். 1469

### தாம்பூலத்தில் இன்னவை விலக்கவேண்டுமெனல்.

நீற்றிலையு மூக்கு நெடியநரம் புடனே
நீற்றும புறவரியுந் தின்றகால-மற்றுரை
வெல்லப் போற்செய்யும விறலேனுமோ வாயிடினுஞ்
செல்லப்போய் நிற்குந திரு.

(இ-ள்.) தாம்பூலந்தின்னும்போது சுண்ணாம்பைவைத்து காம்பு நுனி நீண்ட நடுநரம்பு. பிறபுறத்தோல இவைகளை நீக்காத வெற்றிலையைத் தின்னலாகாது தின்றால் அவர்களிடத்தில் லட்சுமிசேராள் என்க.

### தாம்பூலரசத்தின் குணம்.

வாயுமந்தம் பீநச சுவாசகாசம மருசி
யேயுதர தோடமிவை போக்குந்-தூயுடற்குக்
காந்திதரும் புத்திக்குங் கட்குநலஞ் செய்யுமணஞ்
சார்ந்த தாம்பூல ரசம்.

(இ-ள்.) வாசனைவருக்கஞ் சேர்ந்த தாம்பூலச்சாறானது மணவாத் தவாதம அக்கினிமந்தம் நாசிரோகம சுவாசகாசம் அரோசகம் வயிற் றைப்பற்றிய துர்க்குணம ஆகிய இவைகளை நீக்கும் சரீரத்திற்கொளி வையும் அறிவுவிழி இவைக்கு நலத்தையும் விளைக்கும். 1471

### தாம்பூலரசம் விழுங்கும் வகை-விருத்தம்.

அடைக்காய்தின்பதி லூறுமுதனீர்நஞ்சா
மதிபித்தமிரண்டாவ தூறுநீரே
கடையமிர்தமூன்றாவ தூறுநீர் தான்
கனமதுராநான்காவ தூறுமந்நீர்
மடையேனவேயைந்தாறிற் சுரந்துள்ளூறி
வருநீர்களைச்சுவைத்து மனமகிழ்வுண்டாற்
றடையுறுப்பித்தமொடு மந்தநோயுந்
தவிபாண்டுநோயுமுண்டாக தரஞ்சொன்னோமே.

(இ-ள்.) பாக்குவெற்றிலை சுண்ணாம்பு இவைகளை ஒன்றாய்மெல்லும் போது அதில் நின்று ஊறியமுதல்நீர் நஞ்சு 2-வது நீர்மிகுபயித்தியம் 3-வது நீர் அமிர்தம் 4-வது நீர் அதிமினிப்பு 5-வது 6-வது நீர்கள் பித்ததோஷம அக்கினி மந்தம் பாண்டுரோகம் இவைகளை உண்டாக் கும். 1472

# வாகன வகை

### யானையேற்றத்தின் குணம்-வெண்பா.

தாதுவிர்த்தி யும்பசியுங் காமுறுந் தற்பவமுந்
தீதுபித்த முர்வளருந் திண்ணமே-வாதமைய
மேழு கடல்புவியு ளெங்கு நிலையாவாம்
வேழ நடாத்துவர்க்கு மெய்.

(இ-ள்.) யானையேறி நடத்துபவர்கட்கு சுக்கிலம் ஜடராக்கினி பலம் பித்தம் இவை விருத்தியாகும் வாதகபதோஷங்கள் ஒழியும். ()

### குதிரையேற்றத்தின் குணம்.

உடலிறுக்குந் தீபனமு முண்டாகு நாளும்
குடலிரைக்கும் வெப்பாங் குளிரோ-குடிபோம்
பொரியிரமந் போராடும் பூபா துஞ் சார்வாள்
பரிநடத்து வார்தமக்குப் பார்.

(இ-ள்.) குதிரையேறுவதற்கு தேகபிறுகல் பசி குடலண்டம் உஷ்ணம் சிற்றிருமல் லட்சுமி விலாசம் இவையுண்டாம் குளிர்நீங்கு மென்க. 1474

### பல்லக்கேற்றத்தின் குணம்.

வாயுமிக உண்டாகு மாறாக பித்தமறு
மேய பசிகலக்கி மெய்துக்கான்-றீவமதன்
வெல்லற் கரியகலை விர்நெந் சாணைக்கே
பல்லக்கிலர் வையெனிற் பார்.

(இ-ள்.) மதனகலை வின்றமாதே! பல்லக்கிலேறினால் வாதகோபமும் கலக்கிபபசியும் உண்டாகும் ஒழிபாக பித்தகோபம் விலகும்.

### தண்டிகையேற்றத்தின் குணம்.

சண்டெறுளிவு காதபுந்தி காம மெழிலுடனே
பெண்ணொளிருந் காந்தி பிசையுண்டாம்-விண்ணுலகு
ளொண்டிகைப்பு மெச்சு மிளமயிலே மெய்போதுந்
தண்டிகையை யூர்வார் தமக்கு.

(இ-ள்.) இளமயிலனையாளே! தண்டிகையை ஏறுபவர்கட்குதேத் திரப்பிரகாசம் வீரியவிருத்தி சைபோக விருப்பு அழகு ஒளிவு ஆகிய இவையுண்டாகும் என்க. 1476

### ஒயில்வண்டியேற்றத்தின் குணம்.

சரீரமுறு நோய்போக் தணிவாத மேகுங்
கரீசமென வுருபித்தங் காணு-தரிய

வயில்வண் டினந்தானென் றண்டியஞ்சுங் கண்ணே
யொயில்வண்டி யேறுவோர்க்கென் றோர்.

(இ-ள்.) வண்டும்வேலும் அஞ்சுங் கண்ணாளே! ஓயில்வண்டி ஏறு பவர்கட்கு ஆவிருதவாதமும் தனிவாதரோகமும் அதிக பித்த தோஷமும நீங்குமென்க. 1477

பாதுகையிட்ட நடையின் குணம்.

பலபண் பேதத்தாற் படருகின்ற ரோக
குலமேகும் வித்துமெடுங் கூறி-னிலவாரமே
வாதபித்த வையமது மாதரசே காடோறும
பாதுகையை நீயணிந்து பார்.

(இ-ள்.) மாதரசே! மிதியடியிட்டுநடப்பவர்கட்கு மண்மேல் தங்க ளால் வருகின்ற சேற்றுப்புண் முதலிய ரோகங்கள் சக்கிலவிருத்தி திரிதோஷம் இவைவிலகும். 1478

கால்கவசமிட்ட நடையின் குணம்.

தாணிவெப்ப நோயுந் தரையாலா நோயு
மரணிகன் முள்ளா லாமருப்புந்-தாணியடர்
தேட்புழுக்க லாதிகளாற் சேரும் பருவாலுங்
காற்கவசந் தாக்கின்று காண்.

(இ-ள்.) காலிற் கவசமிட்டு நடப்பவர்கட்கு சூரியகிரணம் பட்ட பூமியால் வருநோயும் கட்டை கல முள் இவைகளால் உண்டாகின்ற ரணங்களும தேள்கொட்டு முதலியவற்றாற் றொடராகின்ற இடருமில்லை

சதாபாதநடையின் குணம்.

சதாமிகுந்த பாதநடை தன்னு லொளிவுஞ்
சதாவங்க புட்டியொடு தும்பு-நிதானமுறும்
வீரிய விர்த்தியுமபோ மேனிகெழ மேனிபதாஞ்
சிறியநற் கொங்கையின்னே செப்பு.

(இ-ள்.) சுறப்புற்ற கொங்கைகளையுடையவளே! எப்போதும் அதிநடைநடப்பதால் காந்தியும் சுகசந்தேக புஷ்டியும பலமும் மத்திய மாம் சுக்கிலவட்சீணமும் கிழருபமு முண்டாம். 1480

அதிக ஓட்டம் சதா உட்கார்ந்திருத்தல் நொந்த
சோறுண்ணல், மிதகாற்று விரும்புதல், இவைகளின் குணம்.

ஓட்ட மிகுது முளைக்கார்க் கிருந்திடினுஞ்
சூட்டாவி கொந்தபதக் துய்த்திடினுங்-காட்டிகமாய்க்

காற்றுடறிற் பட்டிடினுங் காரிகையே நோயுடலாஞ்
சாற்றுகின்ற வாதமுறுந் தான.

(இ-ள்.) இசைசகுப்படிஓடுதல் சதாஉட்கார்ந்திருத்தல் சுடுபுகை படும்படி வுலாவல் நொந்தசோறுண்ணல் மிகு காற்றுவிரும்புதல் என்னும்இச்செய்கைகளினுல்முறைபேபக்ஷபட அதினுலம்நேத்திரரோகம் அக்கினிமந்தம் முதலியரோப் பருக்கமும் வாதரோகங்களும் உண்டு.

**ஊன்றுகோலின் குணம்.**

பலமிருந்தாலாம் பயமீனகளு நீக்கு
மூலவுவிழு புத்தியிலைவக் கொக்கும-பலமருளும்
வீறு தயிரியமும வீரிய முண்டாக்குங்
கூறிலயர் வோட்டுக்கைக கோல்.

(இ-ள்.) கையில் பிடிக்கின்றதடி கண்ணுக்கும் அறிவிற்கும் ஒத்திருப்பதன்றி நாய் முதலிய பற்பல மிருகங்களினு லுண்டாகிறபயத்தையும், இளைப்பையும் நீக்கும் வன்மைதிடம பராக்கிரமம்இவைகள்.

---

## சயன வகை

**புஷ்பணையின் குணம்.**

தீபாக்கினி தழையுந் தின்றமருந்தா லெழுந்த
தாபாக்கினி யுஞ்சனியுங் காண்-யாபார
நட்புவரு விந்துவு நாளுமுடலஞ் செழிக்கும்
புட்பவணைக் கொன்றே புகல்.

(இ-ள்.) முல்லைமல்லிகைமுதலிய புஷ்பமெத்தைதயில் துயில்பவர்களுக்கு பசி போகத்திலிஷ்டம சுக்கிலவிருத்தி சரீரம் செழித்தல் இவை உண்டாம மருந்தினுல் உண்டாகிய உஷ்ணந்தீரும்.

**இலவம்பஞ்சு, பருத்திப்பஞ்சு இவ்வணைகளின் குணம்.**

இலவம் பஞ்சுபடுக் கைக்கேகு மனலம்
மலர்பருத்திப் பஞ்சி னணையோ-உலவிரத்தம்
விந்திவைகளைப் பெருக்கு மேல்விரக முண்டாக்குங்
குநது சுரத்தை யழைக்கும்.

(இ-ள்.)இலவம்பஞ்சு மெத்தையிற் படுக்கையால்உட்சூடுநீங்கும் பருத்திமெத்தை ரத்தம் விந்து காமம் சுரம் இவைகளை விருத்தி செய்யுமென்க. 1484

### ரத்தினக்கம்பளத்தின் குணம்-விருத்தம்.

பஞ்சவன்னஞ் சேர்கற்கம் பளத்தாறுஞ் சலவைதோடம்
விந்திடும் பித்தந்தாது விர்த்தியு முண்டாஞ்சீத
மஞ்சிடுக் கோபமைய மலைந்திடும பாண்டுவோடு
நஞ்சக ளெல்லாந்தீர நலம்பெரு முட்குணமாமே.

(இ-ள்.) வெள்ளை சிவப்பு மஞ்சள் பச்சை கறுப்பு என்னும் 5-நிற ரோமங்களால் செய்த ரத்தினக்கம்பளத்திற்கு சீதளதோஷம் குளிர் கபாதிக்கம் பாண்டு வீக்கம் பற்பலவிஷம் இவைகள்நீங்கும் பித்தமும் சுக்கிலதாதுவும அதிகரிக்கும் இதுமிகவும உஷ்ணமாம். 1485

### சகலாத்தின் குணம்-வெண்பா.

குளிர்சுரத்திற் கேற்குங் குளிர்பனியைப் போக்கும்
வளர்பெரும் பாடதனை மாற்று-மளிக
சகலாத் தெரிய லணியளக மினனே
சகலாத் தெனவேநீ சாற்று.

(இ-ள்.) அழகிய கூந்தலையுடையபெண்ணே! சகலாத்தென்கிற ரோமவஸ்திரம் நடுக்கற்சுரத்திற் குபயோகப்படுவதுமன்றி குளிர் பனி அசிர்க்கரோகம் இவைகளை நீக்கும். இது உஷ்ணகுணத்தை யுடையது வர்ன்னச் சேர்க்கையால் அனந்த பேதமுற்றிருப்பினும் எவைகட்கும் அக்குணமே ஆம்; ஆனால் வெண்மை பசுமை நீலம் ஊதா என்னும் நிறங்களுள்ளவைகள் அற்ப உஷ்ணமாம். 1486

### தாழம்பாயின் குணம்.

தாழம்பாய் வாந்தி தலைசுழற்றல் பாண்டுபித்த
மாழஞ்சேர் நீராமை யாம்பிணியும்-வீழுந்தண்
ணீரிழிவு போக்குமிக நேசித்தவர் குலத்திற்
காரிழியுங் கூந்தன்மின்னே காண்.

(இ-ள்.) மேகம்போன்ற கூந்தலாளே! தாழம்பாய் வமனம் தலைச் சுழற்றல் பாண்டுரோகம் பித்ததோஷம் நீராமைக்கட்டி வெகுமூத்திரம் இவைகளை விலக்கும் என்க. 1487

### கோரைப்பாயின் குணம்.

கோரையின்பாய் நற்குணமாங் கூறரிய மதமுறுங்
கூறிய தேகங் குளிர்ச்சியுறும்-வாருலகி
னன்னித் திரைகூடு நாடாது ரூட்சையிலாத
யுன்னிப் புவியி லுரை

(இ-ள்.) நற்குணமுள்ள கோரைப்பாயினால் அக்கினிமந்தமும் சுர வேகமும நீங்கும; தேகக்குளிர்ச்சியும் சுகநித்திரையும் உண்டாகும்.

### சாதிப்பாயின் குணம்.

சாதிப்பாய் சீதளமாஞ் சாருமித னன்மூலம்
பேதிக்குட் சீதம் பிசறுங்காண்-வாதிக்குஞ்
சீதசுரங் காணுஞ் சிரசுமிகக் கனக்கு
மேதமிகு நோயார்க் கிசை.

(இ-ள்.) பிரப்பம்பாயினால், மூலரோகம் சீதமலப்பேதி சீதசுரம் சிரோபாரம் இவையுண்டாம்; இது சீதளமாம், சாதி என்பது-பிறம்பு.

### பேரீச்சோலைப்பாயின் குணம்.

பேரீச்சுப் பாயினிதம பேரா துறங்குவர்க்குப்
பாரித்த குன்மம் பறக்குங்காண-பூரித்த
வீக்கமருந் தீபனமா மெய்யைவெளுப் போடுட்ண
மாக்கிவிடு மென்றே யறி.

(இ-ள்.) பேரீச்சோலைப்பாயில் தூங்குவருக்கு, வாதகுன்மமும், சோபையும் நீங்கும்; பசி பாண்டு உஷ்ணாதிக்கம் இவையுண்டாம்.

### சிற்றீச்சோலைப்பாயின் குணம்.

சிற்றீச்சுப் பாயிற் றினமும் படுப்பவர்க்கு
குற்றிடு மேகாந்த லுடமபுலருஞ்-சுற்றியதோர்
வாயுவுறும் பித்தமறு மற்றுங் கபந்தீருந்
தாயகமா மிக்குணத்தைச் சாற்று.

(இ-ள்.) சிற்றீச்சுப்பாயில் துயில்பவருக்கு உஷ்ணமும் தேகவுல ரலும் உண்டாம்; ஆவிருதவாதம் அதிபித்தம் கபசினம் இவையாம்.

### மூங்கிற்பாயின் குணம்.

நீர்ககடுப்பு மெத்தவுறு நீடுபித்த மும்பெருகு
மார்க்கு மனல மதிகரிக்கும்-பாக்குனுறை
கோங்கி னறியமுகைக் கொங்கை மலர்த்திருவே
மூங்கிலின் பாய்க்கு மொழி.

(இ-ள்.) கோங்கரும்பனைய கொங்கைமின்னே! மூங்கிற்பாய்க்கு மூத்திரகிரிச்சரம் பித்தகோபம் மிகுவுஷ்ணம் ஆகிய இவைகள் விருத் தியடையும் என்க. 1492

தலைக்கணையின் குணம்.

கழுத்திற்குந் தோளிற்குங் கண்ட வுயர்வாய்
வழுத்து நீளத்தில்வைத்த மட்டா-யிழைத்ததறும்
பஞ்சின் றலைக்கணைக்கெப் பானரம்பு நன்குறும்போந்
துஞ்சின் றலைக்குமுச்சிச் சூர்.

(இ-ள்.) கழுத்துக்கும் தோளுக்கும் மத்தியிலிருக்கும் அளவான வுயரமுள்ளதாகவும் நீளம் வேண்டிய மட்டாகவும் இலவம் பஞ்சினால் தைப்பித்த தலைக்கணையின்மேல், சிரசுவைத்துப் படுத்துக்கொண்டால் பாதாதிகேசம் வரைக்கும் உள்ள எத்தப்பக்கத்து நரம்புகளும் பிசகாமல் சமமாகவிருக்கும் அதுவுமல்லாமல் சிரசைப்பற்றிய ஆவர்த்த நோய்களும் நீங்கிவிடும் நாமசொன்னது சந்தேகமாயிருந்தால் அவ்விதமாக இப்போதே நீ நித்திரைசெய்து பரீக்ஷைப் பார்ப்பாயாக. ()

## விசிறி வகை

மயில்விசிரியின் குணம்.

சந்நிவிடங் குன்மம் தலைச்சுழல் பித்தம்விக்க
முன்னு சுவோதம்வாத கோடமுமபோம்-பன்னவதி
னுன்னடியாம் புத்தி யொளிரும் பசுக்கோதகை
யிட்டமயல் விசிறிக் கே.

(இ-ள்.) மயிலிறகினாற்செய்த விசிறிக்கு விஷம் சந்நிபாதம்வயிற்றுவலி தலைச்சுழலல் பித்தகோபம் விக்கல் வியர்வை வாதகோபம் இவை நீங்கும்; அறிவு விளங்கும், இதுவுஷ்ண காரியம். 1494

வெட்டிவேரின் குணம்.

வாசவெட்டி வேர்விசிறி வனபித்த சோமமொடு
வீசு மெரிச்சலையும் வீழ்த்துங்காண்-பேசுங்காற்
றுகமற்றுஞ் சாடும் சகல மனோக்கியமா
மோகமருண் மாதே மொழி.

(இ-ள்.) மோகம் அருள்மாதே மணமுள்ள வெட்டிவேர் விசிறி பைத்தியதோஷம் தோஎரிவு விதாகம் இவைகளை நீக்கும் மனோச்சாகத்தை உண்டாக்கும் என்க. 1495

பனையோலை விசிறியின் குணம்.

பனைவிசிறி தன்னற் பருத்தசொரு வாத
வினையைய நோயும் விலகும்-கனபித்த

நோயு மருகியென்ற நோயுக்குடி யேகுந்
தேயுமிடை மாதே தெளி.

(இ-ள்.) நுண்ணிய யிடையாளே! பனை போலே விசிறியினால் வாத தோஷம் சிலேஷ்மரோகம் பித்தாதிக்கம் அரோசகம் ஆகியவை நீங்கும். 1496

வெண்சாமரையின் குணம்.

வெண்சாமரத்தால் வியர்வையா யாசமொடு
திண்சோபை மூர்ச்சைத் திருகருமறுந்-தண்சாரத்
தாகமறும் வெப்பந் தணியுந் திருவமரும்
போகமுறு மாதே புகல்.

(இ-ள்.) போகமுறுமாதே! வெள்ளைச்சாமரத்தினால் வியர்வை ஆயாசம் மயக்கம் மூர்ச்சையால் வராநின்ற ஞாபகமறதி நாவறட்சி உஷ்ணம் ஆகிய இவைபோம் லட்சுமிவிலாசமும் புணர்ச்சியிச்சையும் உண்டாகும் என்க. 1497

## புணர்ச்சி வகை

இவ்விதமாதர் போகம் கூடாதெனல்-கலித்துறை.

அக்கம்பயமதிக கேசத்திரிமலகதுஞ்சல்வி
வெட்கம்பசிகருப்பந் தாகமூப்புவெறுப்பசுபஞ்
சுட்கமலட்சியக்கோபம் ரூபமெய்கழற்கந்தக்கோண்
முக்கதிதூலமுடைமாதர் போகம் விணைக்குவித்தே.

(இ-ள்.) அயரம் அச்சம் தேகமுழுதும் ரோமம் திரிதோஷகோபம் தூங்கிவிழித்தல் அலித்தன்மை நாணம் பசிகருப்பம் தாகம் தன் வயதுக்கு மேற்பட்டவயது புணர்ச்சியில்வெறுப்பு சுபமின்மை சூசிமுகயோனி ரோகம் அலட்சியம் கோபம் அழகின்மை கற்றாழை நாற்றம் கோள்சொல்லுதல் அதிதூலதேகம் ஆகிய இவைகளையுடைய மாதர்கள் போகம் சகலரோகங்களுக்கும் காரணமாம் என்க. 1498

இதுவுமது-வெண்பா.

தேவ குருவாச தீனதூரத் தையலர்
பாவ வமஙகலமாம் பாவயர்பான-மேவுமின்ப
கண்டாரைச் சாருமுறு கண்ணிடுக்க மின்றியே
விண்டாரைச் சாருமுன் னிவள்.

(இ-ள்.) தேவஸ்திரீ குருபத்தினி இராஜபத்தினி ஏழைஸ்திரீ தூரஸ்திரீ பழிமாது விதவை இவர்களைப் போகிப்பவர்களை தாரித்தி

ரமும் துன்பமும் தொடருமே அல்லது இவர்களைவிட்டு மற்ற யாரைத் தொடரும். 1499

புணர்ச்சிசெய்யும் விதி.

அங்கமுற்றும் பாகியமா யார்வமொன்று யன்பொன்று
யங்கமுற்றும போகமொன்று யாருங்கா-லங்கத்
துரையுஞ் சகசவிர லுற்ற கருவிகை
னறையும் பருவத்த வர்.

(இ-ள்.) சகசபதம் என்கிற பருவமுள்ள ஸ்திரீயும் புருஷனும் சரீரமுழுதும் மறைப்பில்லாமல் இருவருக்கும் ஆசையொன்றாகியும் அன்பொன்றாகியும் போகம் ஒன்றாகியும் கூடுங்காலத்தில் உண்டாகும் கருவானது தாய்தந்தையர்களுக்கு உள்ள பலத்தைக் குறித்து உண்டாகும் ஆசை அன்பு என்பது எப்போதும் உண்டாயிருக்கும் ஆசை.

அரோகசந்தானப் புணர்ச்சியின் குணம்.

பதினாறெனும்வயதுப் பாவையு நாலைந்தெனு
மதியாயுட் காளையுமெய் யொவ்வின-மதியோ
தாமிரவி லுண்டாக் தநுசற்குந் தேகந்
திரமிரவி மஞ்சசூறு கண்டோர்.

(இ-ள்.) பதினாறுவயதுள்ள ஸ்திரீயும் இருபதுவயதுள்ள புருஷனும் மாதத்துக்கு ஒருநாள் இராத்திரிகாலத்தில் சரீரசம்பந்தப்பட்டால் உற்பவிக்குங்குழந்தைகளுக்கும் தேகம் திடமாயிருக்கும் வியாதிவராது வந்தாலும் சூரியனைக்கண்ட பனிப்போல் நீங்கிவிடுமென்க தநுசர்க்கும் என்ற எச்ச உம்மையால் தாய்க்கும் தந்தைக்கும் தேகம் உறுதியாயிருப்பதுமன்றி வியாதியுமணுகா தென்பது கருத்து மேற்சொல்லிய ஸ்திரீக்கு கருப்பையும் சோணிதமுஞ் சுத்தமாயிருக்க வேண்டும் புருஷனுக்கோவென்றால் சுக்கிலமும் வாதமும் இருதயமும் சுத்தமாயிருக்கவேண்டும் இதில் சொன்ன இவ்வாறு இருந்தால் நல்ல கருத்தரிக்கும் முன்சொன்ன முறைப்படி கூடுவது ஸ்திரீக்கு மாதாந்த ருதுகாலமாகிய 12-நாளில் கூடவேண்டும் ஏனெனில் அந்த நாட்களில் சுக்கிலம்போய் தங்குகின்ற கருப்பையினது துவாரம் ராத்திரிகால தாமரைப்பூவைப்போல் மூடிகொள்ளாமலிருப்பதினா லென்று கொள்க ருதுவான முதல் 3-நாளும் அசுத்தநாளாகையால் புருஷன் சேரக்கூடாது அதன் விவரம், கருப்பையின் முகத்துவாரமாகிய யோனித்துவாரம் பிரமாணத்தைத் தப்பி அதிகமாகத் திறந்திருப்பதால் அவ்வழியாகச் சுக்கிலத்தின் பங்கு மிகுதியாகச் செல்லப்படு

கின்றது அப்போது அவ்விடத்துச் சோணிதமும் இதுவும் ஏற்றக் குறைச்சலின்றி சமமாகத் திரண்டு ஆணும்பெண்ணும் அல்லாத அலிப்பிள்ளையாகப் பிறக்கும் இந்த எதுவைப்பற்றியே முதன் 3-நாளுக்கும் அசுத்த காலென்றதும சேரக்கூடாதென்றதுமாம் மற்ற ஒன்பதுநாளுக்குள் இரட்டித்தநாளில் சேர்ந்தால் ஆண் குழந்தையும் ஒற்றைப்பட்ட நாட்களில் சேர்ந்தால் பெண்குழந்தையும் உற்பவிக்கும் அந்த விவரத்தையெல்லாம் சரீரம் என னுமசாத்திரத்தில் முதல் அத்தியாயத்திற் காண்க. இதுவிற்க சில மாதாந்திரத்தில் வசந்தகால முதலிய காலபேதத்தினால் மேற்சொல்லிய முறைதப்பிப் புணரலாமென்று சொல்லப்படுகின்றது ஆயினும் அவ்விதப் புணர்ச்சியினால் பிறக்கும்சிசுவுக்கும் தாய் தந்தைகளுக்கும் மிகுரோக சம்பவமேயாம்.

### தினப்புணர்ச்சியின் குணம்.

அங்கதவித பந்ததத்தோ டல்லும பகலு
மனந்தவிட்டுச் சேர்ந்தா ரக்கண்-கனிநோய்ச்
சதைக்கு மூப்புமிலைச் சார்ந்த மருந்தவர்க
டங்கைக்கு மூப்புமிலைத் தான்.

(இ-ள்.) கொக்கோகநூலிற் சொல்லாநின்ற பலவித லீலைகளுடன் இரவும்பகலும் நித்திரையுமின்றி ஸ்திரீபோகத்தில் அழுந்துபவருக்கு மிகுதியாயுண்டாகும் வியாதிகளின் அளவிற்கு முடிவும் அவைகளை நிவர்த்திசெய்யவந்த மருத்துவர் கைகளுக்கு ஓய்வும் இல்லை என்க.

### சுக்கிலநிரோதனத்தின் குணம்.

விந்துவை மருக்குமகால வீக்கம் பிரமேக
மூந்துவனி கல்லடைப்பு மூலசுரஞ்-சந்துகைகா
லாசனசர் பக்கமிடிப் பலவுழிநோய் மார்புவலி
வீரணனீர்க் கட்டிவையா மே.

(இ-ள்.) விருப்பமிருந்தும் போகிபாமல் சுக்கிலபந்தஞ் செய்வதினால் சோபையும் சீழ்ப்பிரமேகமும அண்டமும அஸ்மரியும் காமசுரமும் கைகால்கள் குதம் நாபாரிசம சகனம் ஆகிய ஸ்தானங்களில் சரிக்கின்ற வியாதிகளும் மார்புநோயும் பித்தகிருச்சரம் உண்டாம்.

### நித்திரைசெய்வதின் குணம்.

ஐந் திரியங்க ளசவுக்கிய மகலு
மைந்தமனத் துச்சாக நண்ணுங்காண்-பைந்தொடியே
மேனீட்டு மாயளுறு மெய்யு ளயர்வொழியுங்
கானீட்டிப் பள்ளிகொள்ளுங் கால்.

(இ-ள்.) முறைப்படி இடதுபக்கமாகப் படுத்துக் காலை நீட்டிக் கொண்டு நித்திரைசெய்தால் பஞ்சேந்திரியங்களின் அயர்வும் சரீர வருத்தமும் தீரும இளைத்தமனத்திற்கு உச்சாகமும் ஆயுசுவிருத் தியுமுண்டு. 1504

இதுவுமது.

முக்காடிட் டங்கமுற்று மூடித் துயிலினிரன்
டகக்கிக்குந் தோட்கு மதிபலமா-மிக்கான
சீதம்வெயில் தூசிபனி சீறிவரு காற்றிவையா
லோதவரு துன்பமில்லை யுன்.

(இ-ள்.) தேகாதிபாதம் வரைக்கும் வஸ்திரத்தினால் மூடிக் கொண்டு நித்திரைசெய்யில் இரண்டு நேத்திரத்துக்கும் இரண்டு புஜங்களுக்கும வன்மையுண்டாம் அன்றியும் குளிர்வாடை வெய்யி லின் வேகம் தூசி பனிகாற்று இவைகளால் குற்றங்களும் விலகும்.

தொக்கணத்தின் குணம்.

தொக்கணத்தி னுலிரத்தந் தோலூ னிவைகட்கு
மிக்கு சவுந்திரியஞ்ச மீரனும்போ-மெய்க்கதிக
புட்டிரக்கம் புணர்ச்சி யிவை கதிக்கும்
பட்ட வலைச்சலறும் பார்.

(இ-ள்.) தொக்கணத்தினால் இரத்தசரும மாமிசதாதுக்களுக்கு மிகவும் போஷணையாமதுக் தவிர தேகபுஷ்டியும் நித்திரையும் புணர்ச் சியிலிச்சையையும அதிகரிக்கும வாதாதிக்கமும உழைப்பினால் வந்த வருத்தமும் நீங்கும் தொக்கணம என்பது கையினால் குத்தி யிதவாக பிடிப்பதாம். 1506

இரவில் நித்திரைப் பங்கத்தின் குணம்.

சித்தம்யக் கஞ்செறியும் ஐம்புலத் தயக்க
மெய்த்தலனுக் கமைந்த மென்மைக-ளித்தமுற
வண்டுஞ்சிலரை நாயாய்ப் பன்னோய் கவ்வுமிராக்
கண்டுஞ் சிலரைநம்பிக் காண்.

(இ-ள்.) இரவில் துயிலாதவர்களைநம்பி, புத்திக்குத் தெளி வின்மை ஐம்புலச் சோர்வுகட்கம் பயம் அக்கினி மந்தம் முதலிய நோய்கள் தினமுஞ் சேருவனவாய் அன்றியும் வேடருடைய நாய்கள் கவ்வுதல்போலப் பலவியாதிகளும் கவ்விக்கொள்ளும் என்க. இரவில் நித்திரை செய்யாதவரை மேற்சொல்லிய ரோகங்கள் வருத்தும் என்பது கருத்து. 1507

### பகல்நித்திரையின் குணம்-விருத்தம்.

தண்டமேட்டாரூய மூருத்கம்பஞ்
சருவாங்கமுக்கிராக் கிரகஞ்சுப்தி
துண்டமுருவனுத்தம்பக் நிதக்குததம்பஞ்
சோணிதமாட்டியப்புருவா டோபகந்தன்
னண்டுகிருத்திசியூர்த் துவஞ்சம்பூக
மவபேதம்வதந்திர மவதானந்தான்
விண்டவிவுர் பதினெண்காற்றும்
வித்தாகும் பலகனந்தன் மேவின்மாதே கா.

(இ-ள்.) பகல நித்திரையான து தண்டம் மேட்டாரட்சியம் ஊத ஸ்தம்பம் சருவாங்கம் உக்கிரக்கிரகம் சுப்தி அனுஷ்தம்பம் திருக்குஸ் ரும்பம் சோணிதம் ஆட்டியும் புருவாடோபகம் சிருத்திரசி ஊர்த்து வம சம்பூகம் அவபேதம் அவதந்திரம் அவதானம் விவுர்தாசிமை என் னும் 18-விக வாதரோகங்களைத் தருதற்கு ஒருவித்தாகும் என்க.

### பத்தியத்தோர் பகற்றுலியின் குணம்-வெண்பா.

அண்டவங்கி யுண்டவுறை பங்கியரும பத்தியத்தா
லண்டவகி மூன்றோ டனந்தலது-கொண்டவங்கி
கூடுங்கா நேத்திரநோய் கூடுமிரத்த பித்த
நீடுங்காண் விந்துவு நீரோம்

(இ-ள்.) பத்தியங்கொண்ட வர்களுக்கு சூரியவெப்பம் ஔஷத வெப்பம் கடும்பத்திய வெப்பம் என்னும் 3-வெப்பத்துடன் பகல்நித் திரைசெய்வதால் பிரிக்கின்ற வெப்பமுங்கூடுமாயின் விழிநோய் உண் டாகும் ரத்தபித்தரோகம் அதிகரிக்கும், விந்துவும் நீர்போலாகிவிடும்

### ரசம்-கெற்பம்-செய்நீர்-குளிர்ந்தநீர இவைகளின் சீரணகாலம்-விருத்தம்.

பாரினின் மாந்தருண்ணும பற்பலபண்டமெல்லாஞ்
சீரணமாகுங்காலந தெளியவேசெப்பக்கேண்மோ
காரணரசமோரேழு கடிகையாங்கற்கஞ்செய்நீர்
வீரணத்தண்ணீர்சாமம் வெந்நீருமிரண்டேயாமம்.

(இ-ள்.) உலகினில் மனிதருக்கும் பலவாகிய பதார்த்தங்களின் சீரணகால அளவை கூறுமிடத்து யாதேனுமொன்றை பிடித்துப்பிழி ந்த ரசம் 7-நாழிகையிலும் அரைத்த மருந்துகள் செய்நீர்கள் குளிர்ந் தநீர் இவைகள் ஒருசாமத்திலும்வெந்நீர் 2-சாமத்திலும் சீரணமாகும்.

காய்ந்தாறியசலம்-கஷாயம்-பழச்சாறு
சோறு-பால்-தேன்-இவைகளின்-சீரணகாலம்.

சாலவேகாய்ச்சியாறுஞ் சலம்பதமூன் றேமுக்காற்
சீலமாங்கடாயமூன் று சேர்பழச்சாறுமாறுஞ்
தாலமாஞ்சோறிரண்டு சாமமாமிருபதாகும்
பாலுதேன்பன்னிரண்டு நாழிகைபகருவாயே.

(இ-ள்.) மிகவும் காய்ச்சாறியசலம் மூன்றேமுக்காநாழிகை; கஷாயம் 3-நாழிகை கனிரசங்கள் 6-நாழிகை அன்னம் 1-சாமம் பால் 20-நாழிகை தேன் 12-நாழிகையிலும் சீரணமாம். 1511

தயிர்சோறு-மோர்சோறு-நீர்ச்சோறு-வெண்ணெய்ச்சோறு
சாராயம்-இவைகளின் சீரணகாலம்.

வார்துவை தயிர்சோறும் வருத்திடிற் பதினொன்றாகு
மோர்விடு பதம்பன்மூன் று மொழிபதம பதினெட்டாகு
மாறுவச் சோறிரண்டு சாமமா மரியவெண்ணெய்ச்
சாருமா பன்னஞ்சாமஞ் சாராயங் கடிகையைந்தாம்.

(இ-ள்.) தயிர் அன்னம் 11-நாழிகை மோர் அன்னம் 13-நாழிகை நீர் அன்னம் 13-நாழிகை வெண்ணெய் அன்னம் 2-சாமம் சாராயம் 1-சாமம் அல்லது 5-நாழிகையிலும் சீரணமாகும். 1512

சூரணம்-தைலம்-லேகியம்-கிருதம்-பஸ்மம்-கறிகள்-பழங்கள்
இவைகளின் சீரணகாலம்.

சூரணந்தலமிலேசங் கிருதஞ்சொற்பனிரெண்டென்னச்
சேருநாழிகையாம்பஸ்பஞ் சீரணமரைச்சாமத்திற்
கூறியகறிகளெல்லாங் கூறிஞுழிகையேயாகுஞ்
சிறியபழங்களெலலாஞ் சீரணஞ்சாமதன்னில்.

(இ-ள்.) சூரணம் தயிலம் லேகியம் கிருதம் இவை 12-நாழிகை பஸ்பம் 3½-நாழிகை நல்ல பதார்த்தங்களெல்லாம் 7-நாழிகைஉயர்ந்த பழவர்க்கங்களெல்லாம் ஏழரைநாழிகையிலும் சீரணமாம். 1513

கருணைமுதலிய கிழங்குகள்-வேந்துபாகமான விதைகள்
பழச்சாறுகள்-பச்சையாய் அல்லது வேந்ததாயுள்ள
ஆறுவகைச்சுவை அவைகளின் சீரணகாலம்.

உரைகருணைக்கிழங்கோ டெக்கிழங்கெல்லாஞ் சாமம்
விரைகளும் பழத்தின்சாறும் வெந்திடிற்சாமமேயாஞ்

பரிசுறுவைகள் பச்சையைதாய்த்தின்றாலுங்
கரைவெந்ததைத்தின்றாலுஞ் கடிகைபைந்ததன்மேலில்லை.

(இ-ள்.) கருணை காராகருணை புளிகருணை நீர்க்கருணை சேனைக் கருணை முதலிய கிழங்குகளெல்லாம் ஏழரை நாழிகை, வித்துக்களும கனிசரக்குளும் ஏழரைநாழிகை, அறுசுவைப் பதார்த்தங்களைப் பச்சையாகஅல்லதுபாகஞ்செய்ததாகஉண்ணில் 5-நாழிகையிலும்சேரணம்

கழுநீர்-காடி-மா-உண்டை-போங்கல்-பசும்பால்
இவைகளின் சீரணகாலம்.

காவிநேர்கண்ணேய்கேளாய் கழுநீர்காடியுமைந்தாரு
மாவுடனுண்டைபொங்கல் வகைகளோடாவினற்பால்
மேவுமோர்தினத்திக்கான்கு விதமுஞ்சேர்த்தருந்துமுண்டி
பூவினிலைக்துநாழி போய்பின்சீரணிக்கும்.

(இ-ள்.) நீலோர்ப்பலம்போன்ற கண்ணுளே! கழுநீர்காடி5-நாழிகையிலும், மா பொரியுண்டை பிளகோதனம் பசுவின்பால்இவைகளையெல்லாம் ஒன்றாகக்கலந்து ஓர் தினத்திலருந்தில் 20-நாழிகையிலும் சீரணமாம் என்க. 1515

கஞ்சிவகை-நல்லவெல்லம்-தேன்-காய்கள்-பச்சரிசி
இவைகளின் சீரணகாலம்.

வர்த்திக்கும்வடித்தகஞ்சி வகையெட்டிற்சீரணங்காண்
தித்திக்குநல்லவெல்லந் தேனிருபது நாழிக்கு
ளுற்றிடுங்காயினங்க ளஈட்டிடு மெண்பதத்துட்
கத்தும்பச்சரிசிநாலைங் கடிகைபுட்சீரணிக்கும்.

(இ-ள்.) தேகத்தைத் தூலிங்கச்செய்கின்ற வடிகஞ்சி முதலியகஞ்சிகள் 9-நாழிகை-நல்லவெல்லம் தேன பச்சரிசி 20-நாழிகை, கக்கரிககாய் முதலியகாய்வருக்கரிக்காய் முதலியகாய்வருக்கங்கள் 8-நாழிகையிலும் சீரணிக்கும், என்க. 1516

இளநீர்-சருக்கரை-பாணக்கம் தயிர்-மோர்களின்மேல் சலம்
வறுத்தமா இவைகளின் சீரணகாலம்.

இளநீர்சக்கரைபாணக்க மேழுநாழிகையிற்செரிக்கும்
வளமுளதயிரின்மேலும் வார்தணுமோரினமேலுந்
தெளிவுறுதண்ணீருண்ணச் செரித்திடுங்கடிகையந்தில்
தெளிநல்வறுமாசீருஞ் செரித்திடுங்கடிகையேழில்.

(இ-ள்.) இளநீர் சருக்கரை பாணக்கம் 7-நாழிகை தயிரன்னமல்லதுமோரன்னம்புசித்து அதன்மேல் தண்ணீர் குடிக்கில 4-நாழிகையாறுத்தமாவைத் தண்ணீரிற் கரைத்துக் குடிக்கில் 7-நாழிகை சீரணம். 1517

கடுநீர்-முக்காற்சுண்டியநீர்-ஆறியநீர்-இவைகளின் சீரணகாலம்.

கட்டநீருண்ணுங்காலை சொல்லியவாறு முக்கான்
மட்டிலேகொதிக்கவெந்நீர் வருகிலேழரையேயாகும்
திட்டமாய்க்குளிர்ந்தநீர்தான் செரிக்குமொன்பதின்மேலென்ன
வட்டிட்டமுலையினாளே வழுத்துநாழிகையைத்தானே.

(இ-ள்.) அடிபரந்ததனங்களையுடையாளே காய்ந்தநீர் 6-நாழிகை முக்காற்கூறு சுண்டியநீர் ஏழரைநாழிகை அருந்தும் பதமாயாற்றிய நீர் 9-நாழிகையிலும் சீரணமாம். 1518

மரம்-பூ-தளிர்-இவைகளின் சீரணகாலம்.

தருசெடிகளினுண்டாங்கே சரங்கள்பூகொழுந்தேயெல்லா
மரிவையேதின்றிடிற்சீ ரணஞ்சாமந்தனிலிவவாறே
திரவியவிசனங்கட்கெலலாஞ் செப்பிடுமேவேதமென்றே
குருபரனடியைப்போற்றுங் குறுமுனியுரைத்தவாரே.

(இ-ள்.) விருக்ஷம செடி கொடி புல் இவற்றுலுண்டாகின்ற கேசரம் புஷ்பம் தளிர் இவைகள் ஏழரைநாழிகையில சீரணமாம, இவ்வண்ணமாகவே சகலதிரவியங்களுக்கும் சீரணகால அளவையை ஆயுள்வேதங்கூறுகின்றதென அகஸ்தியமுனிவர் கூறியவாறும். 1519

நோயணுகாவிதி-வெண்பா.

திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காம-லுண்ணுங்கா
ணீர்சுருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி.

(இ-ள்.)மலசலத்தை அடக்காமலும் விந்துவை அதிகமாக விடாமலும் உண்ணுமிடத்துநீரைக்காய்ச்சி மோரைவிளாவிநெய்யையுருக்கி உண்ணலுமாகிய தன்மையுள்ளவர்கள்பேர் கேட்டாலே பிணிவிலகும்

இதுவுமது-விருத்தம்.

பாலுண்போமெண்ணெய்பெறின் வெந்நீரிற்குளிப்போம்
பகற்புணரோம் பகற்றுயிலோம் பருவமூத்த

வேலஞ்சேர்குழலியரோடிள வெயிலும்விரும்போ
மிரண்டடக்கோ மொன்றவிடோ மிடதுகையிற்படுப்போ
மூலமுஞ்சேர்கறி நுகரோ மூத்ததாயிருண்போ
முசுகுளிற்சமைத்த கறியமுதெனினுமருந்தோம்
ஞாலந்தான் மடைத்திடினும் பசித்தொழியவுண்ணோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே.

இதுவுமது.

உண்பதிருபொழுதொழிய மூன்றுபொழுதுண்ணோ
முறங்குவதிராவொழியப் பகலுரக்கஞ்செய்யோ
மண்பாவுகிழங்குகளிற் கருணையன்றிப்புசியோம்
வாழையிளம்பிஞ்சொழியக் கனியருந்தல்செய்யோம்
பெண்கூடப்மதிகளுக்கோர் காலன்றிமருவோம்
பெருந்தாகமெடுத்திடினும் பெயர்த்துநீருந்தோம்
நண்பெறவுண்டபின்பு குறுநடையுங்கொள்வோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்கு மிடத்தே.

இதுவுமது.

ஆறுதிங்கட்கொருதடவை வமனமருந்தயில்வோ
மடர்நான்குமதிக்கொருகாற் பேதியுறநுகர்வோ
தேறுமதியொன்றறைக்கோர் தரநசியம்பெறுவோந்
திங்களரைக்கிரண்டுதரஞ் சவரமிருப்புறுவோம்
வீறுசதுர்நாட்கொருக்கானெய் முழுக்கைத்தவிரோம்
விருகளுக்கஞ்சன மூன்றுநாட்கொருக்காலிடுவோ
நாறுகந்தப்புட்பமிலை நடுநிசியின்முகரோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே.

இதுவுமது.

பகத்தொழுக்கு மாதாயாங்கந்துடைப்பமிவை தூட்
படநெருங்கோந்தீபமைந்தர் மரநிழலில்வசியோந்
சுகப்புணர்ச்சியன்னசீரணத் தருணஞ்செய்யோந்
துஞ்சலுணவிருமலஞ் சையோகமழுக்காடை
வகுப்பெடுக்கிற்கிந்துகசமிவை மாலைவிடுப்போம்
வற்சலந்தெய்வப்பிதுர் சற்குருவைவிடமாட்டோ
நகச்சலமுமுனைச்சலமுந் தெறிக்குமிடமணுகோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே.

(இ-ள்.) பசுவின்பாலே உண்போம் எண்ணெயிட்டுக் கொள்ளில் வெந்நீரில் ஸ்நானஞ்செய்வோம் பகற்காலத்தில் சையோகமும் நித்திரையுஞ்செய்யோம், தன்வயதுக்கு மேற்பட்ட வயதுள்ள மாதரையும் இளவெயிலையும் இச்சியோம், மலசலங்களையடக்கோம் சுக்கிலத்தை யடுத்தடுத்து விடோம். இளதுகைக் கீழாகப்படுப்போம், மூலரோகத்தையுண்டாக்கும் பதார்த்தவகைகளை யுண்ணோம். புளித்த தயிரையுண்போம், முன்னாளிற் சமைத்தகறி, அமிர்தத்துக்கொப்பானாலும் புசியோம், பசித்தாலல்லது சாப்பிடோம். தினமொன்றுக்கு இரண்டுதரமல்லது மூன்றுதரமுண்ணோம். புசித்தவுடன் உட்கார்ந்திருந்தல் நன்மையென்று ஐபின நூலிற் சொல்லியிருப்பினும், அதையும் பகலிற்செய்வோம், மாதரை மாதத்திற்கோர்தரமே சேர்வோம், மிருந்தாக முண்டாயினும் போஜனமுடிவிலன்றிப் பின்பு ஜலபானஞ் செய்யோம், கருணைக்கிழங்கின்றி மற்றைக் கிழங்குகளைத்தின்னோம், வாழையின் இளங்காயையேயல்லாது பழத்தைத்தின்னேம, புசித்தபின் குறுநடையாக நடப்போம், ஆறுமாதத்திற் கொருதரம் வாந்தியாகும்படியாகவும், நான்குமாதத்திற்கொருதரம், பேதியாகும்படியாகவும், மருந்துண்போம், ஒன்றரை மாதத்திற்கொருதரம் நசியஞ்செய்துக் கொள்வோம், மாதத்திற்கு 4-தரஞ் சவரஞ்செய்துக்கொள்வோம், 4-தினத்துக்கொருதரம் அப்பியங்கஞ் செய்வோம், மூன்றுநாட்கொருதரம் கண்களுக்கு மையிடுவோம் கஸ்தூரி முதலிய வாசனைத் திரவியங்களையும், புட்பங்களையும், நடுராத்திரியில் ஆக்கிராணியோம், தூரஸ்திரீநடக்கும்போது பறக்குந்தூசியும, மேலடிபடும்படி நெருங்கோம் இரவில்தீபத்தினிழல்மனிதர்நிழல்விருக்ஷநிழல்இவைகளிற்றங்கோம் போசனஞ் சீரணிக்குங் காலத்தில் புணர்ச்சிசெய்யோம். நித்திரை போசனம் மலசலம் புணர்ச்சி அழுக்குவஸ்திரம் சீப்பிட்டுச்சீவும்பொழுது சிந்துகின்ற ரோமம் ஆகியவைகளைமாலைக்காலத்தில், கண்டுகூடியபசுவையும் தெய்வத்தையும் பிதுர்க்களையும ஆசிரியரையும்அம் மாலைகாலத்தில் பூசிப்போம், நகச்சலமும் சிகைச்சலமும் தெறிக்குமிடத்தில் நெருங்கோம், ஆதலால் நோயை முன்னிட்டு வரும் இயமனுக்கு நம்மிடத்தி லென்னவேலை யிருக்கிறது ஒன்றுமில்லை என்க.

தீநெறியிழிவுகூறல் விருத்தம்.

சொல்லாருந்தேகபேதங்களினூறிற் கவினாறுகளுரைத்தற்
கில்லாதுமுள்ளதுமாகியபதார்த்தங்களு மறறியலுஞ்சொன்னே
நல்லாறின்நெறிநடப்பார்சிலர்பிறழ்ந்து நடப்பரெனினுமென்செய்வே
பொல்லாவல்லாவுடனேயழுகுமவர் பயனடைவர்புகலுங்காலே.

(இ-ள்.) தேசங்கள்தோறும் உண்ணுகின்ற வுணவுகள் தவிர இக் காட்டிவிருப்பவர்கள் உண்ணத்தக்க குற்றமில்லா தபதார்த்தங்களையும் குற்றமுள்ளபதார்த்தங்களையும அவைகளைப்பாகஞ்செய்து புசிக்கவேண்டிய இலக்கணத்தையும் இதுவரையும் விவரமாகச்சொன்னேம் விவேகிகள் இம்முறையில்நின்றும் வழுவாது நடப்பார்கள் சிலர் இதற்கு மாறி நடப்பார்களேயாகில் நாம் செய்யக்கடவதியாது இதனால் அவர்களடைகின்ற பயனைசொல்லுமிடத்து மகா விஷசர்ப்பத்துடன் நாடோறும் பழகுபவர்கள் அடையும் பயனை யடைவார்கள். 1522

நன்னெறிப் பேதமைகூறல்-வெண்பா.

திரவியமும் நல்லுணர்வே தின்றனுப விப்பார்
பரவியநோய் காணாரப் பால ரிரவியைநேர்
மெய்யங் களித்திடுகோன் மிக்காயுள் பெற்றீரேழ்
வையங் களித்திட வாழ்வார்.

(இ-ள்.) பதார்த்தங்களின் குணங்களையும் அவைகளைப் புசிக்க வேண்டிய காலபேதங்களையும் பகுத்தறிந்து புசித்து அதனால் கிடைக்கிற சுகத்தை அநுபவிப்பவர்கள் பலவாகக்கூறப்பட்ட பிணிகளைக் காணாதவர்களாய்ப் புத்திரர்களையும் மலையைப்போல உறுதியுள்ள சரீரத்தையும் சிருஷ்டிகர்த்தாவைப்போல மிகுந்த ஆயுள்பெற்று14-உலகத்திலிருப்பவர்களுங் கண்டு களிக்கத்தக்கதாக வாழ்வார்கள். 1523

இவ்வாறே தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும் மருந்து என்னும் அதிகாரத்திற் கட்டளையிட்டனர்.

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

(இ-ள்.) ஒருவன் முன்னுண்டது அற்றபடியையறிந்து பின்மிகப் பசித்து உண்ணுமிடத்து மாறுகொள்ளாத உணவுகளைக் குறிக்கிக் குறிக்கிக்கொண்டு உண்ணக்கடவை:—மாறுகொள்ளாமையாவது உண்பவன் சரீரசுபாவத்தோடு மாறுகொள்ளாமையும் கால இயல்போடு மாறுகொள்ளாமையும் மாறுபாடில்லாத வுணவுகளே யானாலும் மனம் வேண்டியமட்டும் உண்ணாமல்பிணிவார் அளவினால் உண்ணவேண்டும் இவ்வாறு உண்பவன் உயிர் பிணிகளால் துன்பமுறாமல் சுகமுறும்.

பதார்த்தகுண சிந்தாமணி மூலமும்-உரையும்

முற்றிற்று.

திருமகள் விலாசம் பிரஸ், சென்னை:—1932.